1928

பட்டினத்தடிகள்

திருப்பாடல் திரட்டும்....

உ

திருச்சிற்றம்பலம்.

---

# பட்டினத்தடிகள்

## திருப்பாடற்றிரட்டும் அருட்புலம்பலும், பத்திரகிரியார் அருளிச்செய்த மெய்ஞ்ஞானப்புலம்பலும் தத்துவார்த்த விளக்க உரையும்

இவை

அ. மஹாதேவ யோகி அவர்களால்

நூதன முறையில் அமைத்தெழுதி

பார்வையிடப்பெற்றன



---

நான்காம்பதிப்பு

---

B. இரத்தின நாயகர் அண்டு சன்ஸ்
திருமகள்விலாச அச்சியந்திரசாலை
சென்னை.

---

ரிஜிஸ்தர் செய்தது.] **1928.** [விலை ரூபா **2.**

# நூலினுட்பிரிவு



பட்டினத்தடிகள்.] [Registered Block.

கவனிப்பு:—இந்நூல் வாங்குபவர் முன்பக்கத்தில் 'திருமகள்விலாச அச்சியந்திரசாலையிற் பதிப்பிக்கப்பெற்றதா' எனப்பார்த்து வாங்கவும்.

உ

சிவமயம்.

# பட்டினத்தடிகள்

# சரித்திர வரலாறு



ஸ்ரீ கைலாசபதியாகிய சிவபெருமான் ஒருகாலத்திற் றமது தோழனான குபேரனது வேண்டுகோளால் தாம் தக்ஷிண தேயங்களிலுள்ள திவ்விய க்ஷேத்திரங்க டோறும் ஆன்மாக்களுய்யுமாறு திருவுலாக்கண்டருளத் திருவுளங் கொண்டு, உமாதேவியாரோடு இடபாரூடராய் விநாயகரும் சுப்பிரமணியரும் குபேரன் முதலான சிவகணங்களும் புடைசூழ்ந்து ஹர! ஹர! வென்று போற்றிவர, திருக்கயிலையினின் றெழுந்தருளி, கேதாரம் பசுபாதீச்சரம் ஸ்ரீகாசி திருப்பருப்பதம் திருக்காளத்தி திருவாலங்காடு திருக்காஞ்சி திருவதிகை முதலாய தலங்களின் விபவங்கண்டருளி, சோழனாட்டிலே ஸ்ரீசிதம்பர க்ஷேத்திரமடைந்து, அங்கே வியாக்கிர பாதரால் சிலபகல் பூசிக்கப்பட்டிருந்து குபேரனது குறைமுடிக்க அவர் விருப்பின்படி யங்குநின் றெழுந்தருளி, சீர்காழி முதலிய திருப்பதிகளைத் திருக்கண் சாத்திக் காவிரி சங்கமத்தையுஞ் * சுவேதாரண்ய க்ஷேத்திர முதலியனவற்றையுமுடைய காவிரிப்பூம் பட்டினத்தை யடைந்தருளினார்.

இக் காவிரிப்பூம் பட்டினமானது தென்னாட்டின்கண்ணே சோழராசாக்களி னிராசதானிக ளைந்தனுள் முதன்மையானதாய்,

---

* சுவேதாரண்யம் = திருவெண்காடு.

சகல ஐஸ்வரியமும் நிறைந்ததாய், சிவாலயம் மடாலயம் முதலிய ஆலயங்களும், கொலுமண்டபம் ஆஸ்தானமண்டபம் வித்தியாமண்டபம் முதலிய மண்டபங்களும், சிவபத்தி அடியார் பத்திகளிற் சிறந்த சீரிய அந்தணர் அரசர் வைசியர் வேளாளர் முதலாயினோர் வசிக்கும் வீதிகளு முடையதாய், மூன்றும் வருணத்தாராகிய வைசியர் வீதிகளில் ஒவ்வொரு மாளிகையும் விசித்திரவேலைக ளமைந்த சந்திரகாந்தக் கற்களினாலும் பளிங்குக் கற்களினாலுங் கட்டப்பட்டு, கனகமயமான கதவுகளையும் பலவடுக்குகளோடுகூடிய உப்பரிகைகளையும் நவரத்தின மழுத்திய சிகரங்களையும் அமைக்கப்பெற்று, சுவர்க்கலோக வாசிகளின் மனதையுங் கிரகிக்கத்தக்கதாய், செல்வத்தினாலு மழகினாலும் தேவலோகத்தினு மேம்பட்டதாய் விளங்கியது. ஆதலால் அப்பட்டணமானது குபேரன் மனத்தை முற்றுங் கவர்ந்து அவ்விடத்தினின்று நீங்க மனமெழாதவண்ணம் பிணித்தது. இதைச் சிவபெருமான் நன்குணர்ந்து குபேரனை நோக்கி "நீ இந்நகரில் வசிக்கக் கருதினை யாதலின் இப் பூவுலகின்கண்ணே பிறக்கக்கடவை" என்று திருவாய் மலர்ந்தருளினார்.

சிவபெருமான் இங்ஙனங் கட்டளையிட் டருளியதைத் தனதன் கேட்டுத் திடுக்கிட்டு "இனி என்செய்வேன்! என்செய்வேன்!" என்று மிக வருந்தி, பரமபதியை வணங்கி நின்று "தேவரீர் எளியேனை ஜனன சாகரத்தி லழுந்தி யுழலாவண்ணம் ஆட்கொண்டருள வேண்டும்" என்று விண்ணப்பிக்க, அச் சிவபெருமான் "அங்ஙனமாகுக" என் றருளப்பெற்றனன். பின்னர்ச் சிவபெருமா னங்குநின்று மெழுந்தருளிச் சிவகணங்களோடு திருக்கயிலைக் கெழுந்தருளினார்.

## குபேரனார் அவதரித்தது

சிவாஞ்ஞைப்படி குபேரன் அக் காவிரிப்பூம்பட்டினத்திலே நற்குணநிறைந்த சிவநெறிச் செல்வரான சிவநேச செட்டியார் என்னும்

வைசியப் பிரபுவின் கற்புடைய மனைவியாராகிய ஞானகலை என்பவர் கருவிலமைந்து, பத்தாந்திங்களி னொரு சுபதினத்தில் ஐந்து கிரகங்க ளுச்சத்தி லிருக்கும் சுபலக்கினத்தி லவதரித்து, சுவேதாரண்யர் என்னுந் திருநாமஞ் சாற்றப்பெற்று, அருமையாக வளர்க்க வளர்ந்து ஐந்தாம்வய தடைந்தனர்; அப்போது தந்தையார் சிவபதமடைய அவருக்குச் செய்யவேண்டிய ஈமக்கடன் முதலியவற்றை விதிப்படி செய்து முடித்தனர்.

## சுவேதாரண்யர் சிவானுக்கிரகம் பெற்றது.

பின்பு சுவேதாரண்யர் நல்லாசிரியரிடத்துச் சகல கலைகளையும் யாவரும் வியக்கும்படி பழுதற வோதியுணர்ந்து, சிவபக்தி அடியார் பக்திகளிற் சிறந்து, ஆறுவயதான இளம்பிராயத்திலேயே அதிதீவிர தர பக்குவராய் பிறவித் துன்பத்தை நினைந்து நினைந்து வருந்தி, அதனைக் கடத்தற்குச் சிவபெருமான் றிருவடியே புணையெனத்தெளிந்து சிந்தித்து நிற்கையில் ஓர்நாள் மிக்க கவலையுற்று உணவை வெறுத் தயர்ந்து துயிலுகையில், பரமதயாளுவாகிய சிவபெருமான் சொப்பனத்திலே விருத்தவேதியராக எழுந்தருளி "நாளைத்தினம் திருவோண நட்சத்திரமும் பிரதோஷமுங் கூடிய சோமவாரமாக விருத்தலால் நீ வழக்கப்படி சூரியோதயத்திற் கைந்துநாழிகைக்கு முன்னர் எழுந்து நித்தியநியம முடித்துப் பூசாதிரவிய முதலானவைகளைக் கைக்கொண்டு சுவேதாரண்ய ராலயமடைந்து சிவபெருமானைத் திருமஞ்சன நைவேத்திய தூப தீபாதிகளா லுபசரிப்பித்துப் பூசித்து வழிபடக்கடவை" எனக் கட்டளையிட்டு மறைந்தருளினர். மறுநாட்காலையில் அங்ஙனமே சுவேதாரண்யர் தானனுமதிபெற்றுப் பூசாதிரவிய முதலானவைகளைக் கைக்கொண்டு ஆலயமடைந்து சிவபெருமானைப் பூசித்து நிற்கையில், கனவில் எழுந்தருளிய பெருமான் நனவிலே ஞானாசாரியராய்த் தம்மைத் தேடிவந்தடைய அவரைக்கண்டு அன்

போடு வணங்கி மகிழ்ந்து, அவராற் சிவதீக்ஷை செய்யப்பெற்று, அவர் தந்தருளிய தங்கப்பெட்டகத்தைத் திறந்து, அதனுட் கண்கள் கூசும் படி ஒளிவுற்றுநின்ற ஸ்படிகலிங்கமூர்த்தியையும் மரகத விநாயகமூர்த்தி யையும் கண்ணாரக்கண்டு, மிகுந்த ஆச்சரியமும் சந்தோஷமும் பெருக ஞானாசாரியரை வணங்கி, அவர் ஆஞ்ஞைப்படி புண்ணியதீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணி, வெண்பட்டாடை யுடுத்துத் திருநீறணிந்து, உருத்தி ராட்ச தாவடமுதலிய சிவசின்னங்கள் பூண்டு, மரகதப்பிள்ளையாரை யும் சிவலிங்கப்பெருமானையும் சிறந்த பீடத்தி லெழுந்தருளச்செய்து, சுவேதாரண்ய மஹேஸ்வரரை அவ்விலிங்கத்தி லாவாஹனஞ்செய்து, விதிப்படி பூசைசெய்து முடித்து, ஆசாரியர் சிவபிராமணர் பந்து மித் திரர்கள் முதலானோரையும் முன் னூண்பித்து, பின் தாயுடனிருந்து தாமுமுண்டு மகிழ்வெய்தினர். அதன்பின்பு தமதிடத்திருந்த செல் வப்பொருள் யாவும் சிவபூசா விஷயத்திலுஞ் சிவனடியார் விஷயத்தி லுஞ் செலவானமையால் அடுத்த குருபூசைக்குப் பொருளின்மைக் கண்டு மாதாவினிடத்து விண்ணப்பித்து வருந்த, இருவரும் மனமயர் ந்து அவ் வாலயத்தி னொருபுறத்துத் துயின்றனர். அப்போது சிவ பெருமான் சுவேதாரண்யர் கனவிற்றோன்றி "நீ வருந்துதலொழிக, நம்மில்லின்கண் வேண்டிய திரவியஞ் சேர்ந்திருக்கின்றது, அதைக் கொண்டு சிவனடியார்களைப் பேணுதி" என்று திருவாய் மலர்ந்து மறைந்தருளினர்.

உடனே சுவேதாரண்யர் விழித்தெழுந்து திருவருளை வியந்து பொழுது புலர்ந்தவுடன் அன்னையோடு இல்லறமெய்திப் பெருநிதி யிருக்கக்கண்டு, பெருமகிழ்ச்சி யெய்தி, அதைக்கொண்டு ஆசாரியரை யும் வேதியர்களையுஞ் சிவனடியார்களையும் உபசரித்து மகிழ்வித்து, ஆசாரியர் தவிர மற்றவர்களை யனுப்பிவிட்டு, குருவின் நியமனப்படி சிவபூசைபுரிந் தொழுகா நிற்கையில், பன்னிரண்டா மாண்டடைய



சிவசருமரும் சுசீலையும் சிவபிரானாகிய குழந்தையைக் காணுதல்.

உபநயனஞ் செய்யப்பெற்றனர். பின் தாயாரும் பந்துமித்திராதியரும் களிக்கப் பதினாருமாண்டில் அக் காவிரிப்பூம் பட்டினத்தில் தம்மரபிற்கொத்த மரபினரான சிவசிதம்பரசெட்டியார் மனைவியாராகிய சிவகாமியம்மையார் தவப்பேருன சிவகலை என்னுங் குணநிதியை மணந்து, சிவபூசை குருபூசை அதிதிபூசை முதலாய வில்லறக் கடன்களை வழுவாதியற்றிக் குலத்தொழிலாகிய பொருளீட்டுதலை மேற்கொண்டொழுகித் தம்மரபினர்க்குள் மேம்பட்டு, தம்மை யாவரும் பட்டினத்துச் சேட்டியார் என்று சிறப்புப்பெயரிட்டுவழங்கவும் வாழ்ந்து வந்தனர். இப்படி வாழுநாளில் சுவேதாரண்யருக்கு வயதுமுப்பதாக அதுகாறும் மகப்பேறின்றி மனம்வருந்தி, தம்மையாளுடையராகிய திருவிடைமருதுாருடையார் சந்நிதியில் விண்ணப்பித்தும், வேதவேதியர் முதலானருக்குப் பல தானங்களளித்தும், விரதங்களியற்றியும் வந்தனர்.

## சிவபெருமான் மகவாக வந்தருளியது

இதுநிற்க, திருவிடைமருதூரிலே மகாலிங்கேஸ்வரரையும் பெருந்தனநாயகியாரையும் தினந்தோறும் உள்ளன்போடு விதிப்படியருச்சித்துவரும் ஆதிசைவராகிய சிவசருமர் தமது செல்வமுழுவதையுஞ் சிவார்ச்சனையிலுஞ் சிவனடியார் பூசையிலு முபயோகித்து, அடுத்த பூசைக்குப் பொருளின்றி வருந்தி சுசீலையாகிய தம்மனையாள் குழந்தைகளுக்காக வைத்திருந்த பண்டத்தைவிற்றுப் பொருள் கொண்டு சிவபெருமானை முறைப்படி பூசித்துத்திரும்புகையில், சிவபெருமான் ஒரு வயோதிகப்பிராமணரா யெழுந்தருளிவந்து பசியால் மிகவருந்துவார்போற் காட்டி நிவேதனவமுதையெல்லாந் தாமொருவரேயுண்டு மறைய, அப்படி யெழுந்தருளிவந்தவர் சிவபெருமானேயென் றறிந்து மகிழ்ந்து தம் மாளிகையிற் சென்று சிவனடியார்கள் பசியால் வருந்தியிருத்தலைக்கண்டு, மனைவியின் திரு

மாங்கிலியங்கொண்டு பண்டந்தேடிச் சமைத்து அடியார்களை யுண்பித்தனர். மறுநாள் மிகுந்திருந்த பண்டங்களைக்கொண்டு சிவபெருமானைப்பூசித்து நிவேதனத்தைப் பரிசாரகர் வீட்டுக்குக் கொண்டு செல்லும்படி யேவித் தாம் ஆலயத்தி னோரிடத்துப் பஞ்சாக்ஷரஜபஞ் செய்து கொண்டிருந்தனர். அவர்கள் அந்நைவேத்தியத்தைத் திருமடப்பள்ளியில் வைத்துவிட்டு மத்தியான்னகடன் முடிக்கும்படி காருண்யாமிர்த தீர்த்தக்கரைக்குப் போயினர். அப்போது மருதவாணர் முன்போல் பசித்திளைத்த வேதியரா யாங்கெழுந்தருள, சிவசருமர் மகிழ்ந்து அவருக்குத் திருமடப்பள்ளியில் வைக்கப்பட்டிருக்கும் நைவேத்தியத்தை யளிக்க, அவ ரவற்றையெல்லா முண்டு ஆங்கோர்பால் எழுந்தருளி யிளைப்பாறுவார்போலிருந்து, சிவசருமரை நோக்கி "ஓய் சிவசருமரே! நும்மில்லின்கண் பசித்திருக்கும் சிவனடியார் வருந்தாவண்ணம் விரைந்து சென்று உபசரிப்பீராக". என்று திருவாய் மலர்ந்தருளி மறைந்தனர். சிவபெருமான் மறைந்தருளவே சிவசருமர் தாயைப் பிரிந்த விளங்கன்றுபோல் வருந்தி மூர்ச்சித்துத் தெளிந்து கவலையோடு மெல்லெலன வில்லநோக்கி நடந்தனர். சிவசருமர் மனைக்கணெய்துமுன் அமுதையெல்லா மமுது செய்தருளிய சிவபெருமான் தாம் சிவசருமராகவும் பிரமத கணத்தலைவர்கள் பரிசாரகர்களாகவும் திருவுருக்கொண்டு சிவப்பிரசாதங்களை வழக்கப்படி யெடுப்பித்துக்கொண்டு செல்வதுபோல அவர் மனைக்கேகிச் சுசீலைகையி லவைகளை யளித்து "சிவனடியார்களுக்குப் பரிகலந்திருத்தி யிடம்பண்ணுக இதோவருகிறேன்" எனப் போக்குக்காட்டி மறைந்தருளினர். பின்புவந்த சிவசருமரைச் சுசீலைகண்டு "பிரசாதங் கொண்டுவந்து வைத்துவிட்டுப்போனவர் இதுகாறுமெங்குற்றீர்? அடியார்கள் பசியால் வருந்தி யிருக்கின்றனரே" என, சிவசருமர் ஆச்சரியமுஞ் சந்தோஷமு மடைந்து, இது எம்பெருமான் திருவிளையாட்டெனத் தெளிந்து, சிவனடியார்களுடனுண்டு மகிழ்ந்

தனர். அப்போது சுசீலை "இவ்வற்புதங்களையெல்லாஞ் செய்யும் எம் பெருமான் பொருள் தரலாகாதா" என மனதுட்கொண்டு வாளா விருந்தனர். அன்று விடியலிற் சிவபெருமான் சிவசருமர் சுசீலை யாகிய இருவர் கனவிலும் விருத்தவேதியராய்த் தோன்றி "நாம் காருண்யாமிர்த தீர்த்தக்கரையின் கீழண்டை வில்வ விருக்ஷத்தடியில் ஒரு மகவுருக்கொண் டிருப்போம், நீங்க ளக்குழவியை யெடுத்துச் சென்று காவிரிப்பூம்பட்டினத்தில் மகவின்மையால் வருந்தி யருந் தவம் புரிந்திருக்கும் நமது மெய்யன்பனை சுவேதாரண்யகுப்தன் என்னும் வைசியகுல திலகனிடத்துக் கொடுமின், அவன் அக் குழவியினெடைப் பொன் தருவன், அதுகொண்டு நுஞ் சிறுமைதீர்ந் தொழுகுவீராக" என, சிவசருமர்கேட்டு "சிவசிவ! பிரமவிட்டுணுக் களும் வேதங்களும் காணுதற்கரிய எம்பெருமானைக் கொடுத்துப் பொருள்பெற்று உயிர்தாங்கி யொழுகுவேன்?" என உள்ளம் தீப் பட்ட புழுப்போல துடிதுடித்து வருந்த சிவபெருமா னவரை நோக்கி "நும்மிருவர் நிலைமையை நாம் நன்குணர்ந்தனம், நீர் வருந் துதலொழிமின், குபேரன் அவ்வைசியனாக அவதரித்திருக்கின்ற னன், அவனைப் பிறவித்துன்பத்தினின்றுய்விக்க நாம் மகவாய்வருவே மென்று வாக்களித்திருக்கின்றனம், அதை நிறைவேற்றவேண்டி யுமக் கிவ்வாறு பணித்தனம்" என, சிவசருமர் அதுகேட் டொரு வாறு தெளிந்து, காலையில் நியமப்படி சிவபூசைமுடித்து, பத்தினி யாருடன் தீர்த்தக்கரையை யடைந்து, சிவபெருமான் ஆஞ்ஞையின் படி நடக்க மனமெழாராகி, தமதில்ல மீளக்கருதிச் செல்லுகையில் நெறிமாறி ஒரு முகூர்த்தகாலத்தில் காவிரிப்பூம் பட்டினத்தோர் சோலைக்கணெய்தி, அங்குத் தழைகளைப் பரப்பி மகவைக்கிடத்திச் சற்றிளைப்பாறி யிருந்தனர்.

---

## சிவபெருமான் சுவேதாரண்யருக்குக் கனவிற் கட்டளையிட்டது.

இதற்கு முந்தியவிரவில் இடைமருதப்பெருமான் சுவேதாரண்யர் சிவகலை இவர்களிருவர் கனவில் சைவ விருத்த வேதியராகத் தோன்றி "நீவி ரினி மகவின்பொருட்டு வருந்துத லொழிமின்; நாளைத்தின முமதுமாளிகையின் புறத்துள்ள சோலையின்கண் சிவசருமர் சுசீலை என்பவர்களாகிய ஆதிசைவ தம்பதிக ளோரிளங்குழந்தையைக் கைக்கொடுவருவர்; அவர்களைத் தக்கபடி யுபசரித்துப் பூசித்துக் களிப்பிக்க அவர்க ளக்குழவியை நுமக்களிப்பர்: அதனை ஒரு துலையிலிட்டு அதற்குச் சரியெடைப் பொன்கொடுத்துக் குழவியைப் பெறுவீராக; அப்புதல்வனை வேறுகருதாது சிவபெருமா னருண்மகவாய்க் கருதி மகிழ்வீராக; அம்மகவே நுங்க ளிம்மை மறுமைப்பேற்றிற்குரிய புதல்வனுவன்; நுங்குலமுறைப்படி திருநாமஞ் சூட்டுக" என்று திருவாய்மலர்ந்தருளி மறைந்தனர்.

## சிவகலையம்மையார் சுசீலையினிடம் குழந்தையைப் பெற்றது.

மறுநாள் சுவேதாரண்யகுப்தர் சிவபெருமான் கனவி லனுக்கிரகித்தவண்ணஞ் சோலைக்கணெய்திச் சிவசருமரையும் சுசீலையையும் பேரன்போடு வணங்கி யழைத்துவந்து ஆசனத்திருத்தி அர்க்கிய பாத்தியாதி ஷோடசோபசாரத்துடன் பூசிக்க, சுசீலை தமது காத்திருந்த மகவைச் சிவகலையார் கையிற்கொடுத்து "எமது ஐயர் இம்மகவைத் தந்து பொருள்பெற விரும்புகின்றனர், நீர் இக்குழவியைப்பெற்று மகிழ்க" என்று தந்தனள். சிவகலையார் அம்மகவை வெகு பிரியத்துடன் வாங்கி மார்புறவணைத் துச்சிமோர்ந்து தந்தனங்களிற்பெருகிய பாலூட்டிச் சீராட்டிமகிழ்ந்தனர்.



சிவசருமர், குழந்தையை துவேதாரண்யரிடத்தில் கொடுத்துக் குழந்தையின் எடையளவு பொன் பெறுதல்.

## சுவேதாரண்யர் சிவசருமருக்கு நிதியளித்தது.

இவ்வாறு பெறுதுபெற்ற மகவைச் சுவேதாரண்யர் ஒருதுலையி ஞேர்தட்டிலேற்றி மற்ருெருதட்டிற் பொன்னைச் செறித்தனர். எத் துணைப்பொன்னைச் செறித்தும் பொற்குவையிட்ட தட்டுமேலேறி நின்றது. இவ்வற்புதத்தைக்கண்ட சிவசருமர் மிகவருந்திச் சிவபெரு மானைத் தியானித்து, "சுவாமீ! தேவரீர் சர்வ சாமர்த்தியகுணத்தை அறிய வல்லேனல்லன்; பொன் விருப்பினனென்று திருவுளங் கொண்டு இங்ஙனம் பரிசோதிப்பது அறனன்றே. இத்தனைப் பொற் றிரளைக்கொண்டு காப்பவர்யார்? இது என்னைப் பந்தத்திலழுத்திப் பிறவிக்கு வித்தாக்கவா?" எனப் பலவாறு வருந்தி முறையிட்டுத் துதித்துநிற்க, விரண்டுதட்டுகளும் சமமாய் நின்றன. பின்பு சுவே தாரண்யகுப்தர் ஆதிசைவ தம்பதிகளைச் சிலநாள்காறும் வைத்துப் பூசித்துத் தமது தேறிலேற்றிப் பொற்பொதிகளுடன் திருவிடை மருதூருக் கனுப்பச் சிவசருமர் தம்மூரையடைந்து சிவபெருமான் தந்த பொருளைக்கொண்டு நித்திய நைமித்தியங்கள் குறைவுபடா தொழுகி சிவனடியார்களுடனுண்டு வாழ்ந்திருந்தனர்.

காவிரிப்பூம்பட்டினத்திலே சுவேதாரண்யகுப்தர் மேலேசொல் லியவாறடைந்த அருமைத் திருமைந்தனுக்குத் திவ்விய ரத்னுபா ணங்க ளணிந்து தொட்டிலிட்டு மருதப்பிரான் என்று திருநாமஞ் சாற்றிப் பந்துமித்திரர் முதலான பலருடன் குதூகலமடைந்து புத்தி ரோற்சவங் கொண்டாடினர்.

## மணிபத்திரன் சாபவிமோசனம்.

பின்பு மருதப்பிரான் தொட்டிலிற் கிடந்தும் தவழ்ந்தும் தளர் நடைபயின்றும் மழலைமொழிந்தும் சிறுவர்களுடன் வீடுகளிலும் மேடைகளிலும் முற்றங்களிலுஞ் சோலைகளிலும் ஓடியாடித் தாய்

தந்தை முதலானோர் மகிழத் திருவிளையாடல் புரிந்துவருநாளில் ஒருநாள் தோழர்களோடு சமுத்திரக்கரையை யடைந்து படகேறிச் சென்று விளையாடாநின்றனர்; அப்போது ஒரு பெரியமீன் வாயைத் திறந்தபடி அவர்களுக்கெதிரே யோடிவந்து படகின் முனையினின்ற சிறுவனொருவனைப்பற்றி விழுங்கியது. இதுகண்ட மற்றைச்சிறுவர்கள் நடுக்குற்று வருந்தினதால் மருதப்பிரான் முன்சென்று அம்மீனைத் தமது சிறிய திருவடியாலுதைக்க அம்மீனிறந்தது. ஆங்கதினின்று சிந்துமுனிவர் சாபத்தால் மீனுருவடைந்திருந்த மணிபத்திரனென்னுங் கந்தருவன் திவ்யதேகத்துடன் மருதப்பிரானை வந்து வணங்கித் துதித்து விடைபெற்றுப் புஷ்பகமேறி முத்தியுலகெய்தினன். பின்பு தம்மவருள் ஒருவன் மீன்வாயிற்பட்டது கண்டுபயந்து சோர்வெய்தி தோழர்களதிசயிக்கும்படி மருதப்பிரான் அச்சிறுவன் செத்துகிடக்கு மீன்வாயின்வழித்தாய்த் தாங்கக்கூடாப் பெரிய இரத்தினப் பொதியொன் றெடுத்துக்கொண்டு மீண்டுவந்து தம்மை யடையும்படி யருள் புரிந்தனர். அதுகண்ட மற்றைச் சிறுவர்கள் களிப்படைந்து மருதப்பிரான் கட்டளையினால் அம் மீன்வாயிற் புகுந்து மணிகளைக் கொண்டுவந்தனர். பின்பு யாவரும்மீண்டு படகைத் திருப்பிக்கொண்டு கடற்கரைசேர்ந்து ஆவலோடும் வருத்தத்தோடு மங்குக் காத்துக்கிடந்த தாய்தந்தை மித்திராதியர்களை யடைந்து மகிழ்வித்துக் களிப்புடன் இல்லமேகினர்.

இவ்வாறு சிலகாலங் கழிந்தபின்பு மருதப்பிரான் நல்லாசிரியன்பால் சிலநாளிலேயே சகலகலைகளையும் பழுதறவோதி யறிந்தனர். ஒருநாள் பள்ளியிலிருந்து வந்தபோது தமது தந்தையர்பால் ஒரு வணிகன் மதிப்பிடும்படித்தந்த பெரிய முத்தொன்றைக்கண்டு யாவருந் திடுக்கிட அம்முத்தின்கணுள்ள குற்றத்தை யெடுத்துக்கூறி, உடனே யதனையுடைத்துக் காட்டி, அதற்கு மதிப்பிட்ட பதினாயிரம் வரா

கனையு நண்பரொருவருக்குச் சீட்டெழுதி யவ்வணிசனுக்குக் கொடுப்பித்தனர்.

## மருதவாணர் வாணிபஞ்செய்ய கப்பலிற்சென்றது

இவ்வாறு பாலியதசையிலேயே பல திருவிளையாடல்களைச் செய்துவருகையில் மருதப்பிரானுக்குப் பதினாறும்வயது நெருங்கியது. சிவசருமருக்கும் சுவேதாரண்யராகப் பிறந்திருக்கும் குபேரனுக்கும் முன்னர்த் திருவாக்களித்தபடி யவர்களை முத்திக்கு வித்தாகக்கருதி மருதப்பிரான் தந்தைதாற்சென்று, "ஐயா! யான் கடலேறித் தீவாந்திரஞ்சென்று வாணிபஞ்செய்து பொருளீட்டிவரக் கருதுகின்றனன்" என, தந்தைகேட்டுத் திடுக்கிட்டு "எம் பிள்ளைகலி தீர்க்க வந்த பெருமானே! உன்னைவிட் டெப்படி யுயிர்வாழ்வேன்? உனக்கென்ன பொருட்குறை?" என்று, இவை முதலான பற்பல நியாயங்களெடுத்துக்காட்டி அவரது வேண்டுகோளைத் தடுக்க முயன்றனர். அதுகேட்டு மருதப்பெருமான் தந்தைக்குத் தக்கபடி விடைபகர்ந்து, அவரைத் தமதெண்ணத்திற் கிணங்குவித்து, வழிச்செலவுக்கும் வியாபாரத்திற்கும் வேண்டும் பலபண்டங்களைக் குறைவற வமைப்பித்துக்கொண்டு, புதியதோர் மரக்கலத்தை மீகாமனுடன் சித்தப்படுத்துவித்து, அதிற் சுபமுகூர்த்தத்திலேறினர். அப்போது அவ்வூர் வணிகமைந்தரும் அவர் தோழருமான பாலியர்யாவரும் வாணிபத்தை முன்னிட்டுக்கொண்டு பலபண்டங்கொண்டு தத்தம் மரக்கலமேறினர்.

இப்படி மரக்கலமேறின பாலியவர்த்தகர் யாவரும் ஒரு தீவடைந்து அங்குத் தத்தம் பண்டங்களை விலைப்படுத்தி மருதப்பிரானொழிய, மற்றையர் இதரதீவுகளை நாடிச் சென்றனர். அவர்கள் போனபின் மருதப்பிரான் அத்தீவிலேயே இருந்துகொண்டு தமது பண்டங்களை

விற்றதனு லீட்டிய பொருளையெல்லாம் கோயில் குளம் மண்டபம் முதலிய அறங்களிலும் வறியவர்களுக் குபசரித்தலிலும் செலவு செய்து புகழை நிறுத்தினர்.

## மருதவாணர் வாணிபஞ்செய்து திரும்பியது

மற்ற வணிகச் சிறுவர்கள் தீவுகடோறுஞ்சென்று தத்தம் பொருளை வெகுவாய் விருத்திசெய்து மீண்டு மித்தீவடைந்து, மருதப்பெருமானிடத்தில் எருமுட்டைகளுந் தவிட்டுப்பொதிகளுந் தவிர வேறொருபண்டமு மில்லாதிருக்கக்கண்டு திடுக்கிட்டு, மருதவாணரைநோக்கி, "ஐய! எம்மனைவருக்குந் தலைவராகவந்த நீவிர் இவ்வாறு பொருளையெல்லாம் பாழாக்கிநிற்பது அடுக்குமோ?" என்பதுபோன்ற பற்பலமொழிகளைக் கூறிநிற்க, மருதப்பிரான் புன்னகையுடன் "அன்பர்களே! என்றந்தையார் உம்மை யென்பொருட்டு வெறுக்கார், நீவி ரெமக்காக வருந்துதலொழிமின்" என வணிகச்சிறுவர்கள் மருதப்பிரான் அறிவிழந்தனன்போலு மெனத் தம் முட் கருதினராய், அங்குச் சிலநாளிருந்து யாவரும் மருதப்பிரானுடன் மீண்டு காவிரிப்பூம்பட்டின மடையக்கருதித் தத்தம்பொருள்களையெல்லாம் மரக்கலங்களிலேற்றிக் காற்றுமுகமாய்த் தோணிகளைச் செலுத்திவருகையில் மருதப்பெருமான் ஒரு திருவிளையாட்டாகத் திடீரெனப் பயங்கரமான இருள்செறிந்த பெரும் புயலைத் தோற்றுவித்துத் தங்கள் மரக்கலங்களைத் திசைதப்பியோடச் செய்தனர். அதனுல் யாவரும் அங்குமிங்கு மலைந்து கரைதுறையொன்று மறியாராகி, அவரவர் கையிலிருந்த வுணவுகளெல்லா மொழிந்து போக, உணவு சிறிதுமிலராய்க் குளிரினுல் மிக நடுக்கமடைந்து வருந்தி மருதப்பிரானை யடைக்கலம் புகுந்தனர். அப்போ தவர்களுக்குத் தம்மிடத்துள்ள தவிட்டையும் எருமுட்டைகளையும் நிறுத்துக் கொடுத்துக் கடன்சீட்டெழுதிவாங்கித் தமது பெட்டியில் வைத்துக்

கொண்டனர். பின்பு மழை நின்றுவிட யாவரும் வருத்தநீங்கி நெறியறிந்து தம்மூர்நோக்கி நாவாய்களை யோட்டித் தாய் தந்தையர் களிப்படையும்படி காவிரிப்பூம் பட்டினமடைந்து தத்தம் பொருள்களுடன் கரைசேர்ந்து இல்லமெய்தினர். மருதப்பிரான் வரவை யெதிர்பார்த்துக்கொண் டேங்கிக் கிடந்த அப்பட்டணத்துச் சீமானாகிய சுவேதாரண்ய குப்தரும் தம்மைந்த னேறிச்சென்ற மரக்கலம் துறைமுகமடைந்த சங்கதி கேட்டுப் பெருமகிழ்ச்சியோடு கடற்றுறையடைந்து, தம் புதல்வ ரேறியிருந்த தோணியை யடைந்து, புத்திரரைக் கண்டு களிப்புற்று, கப்பலில் எருமுட்டைகளும் சில மூட்டைகளு மொழிய வேறே பண்டமொன்று மில்லாதிருப்பதையும் புதல்வன் முகம் சற்று வாட்டமடைந் திருப்பதையுங் கண்டு பிரமித்து, வரும்போ தெதிரிற்கண்ட வணிக மகனொருவன் சொல்லிப்போனபடி நம் புதல்வ னறிவிழந்தனன்போலு மென நினைந்து வருந்தி, மருதப்பிரானை யணைத் துச்சிமோர்ந்து மகிழ்ந்து, உடன் கூட்டிவந் தில்லம்புகுந்து, ஓரழகிய வறையி லிருக்கச்செய்து, மெய்காப்பாளரைக் காவலமைத்து, மீண்டுங் கடற்கரைக்கேகிக் கப்பலிலுள்ள எருமுட்டை தவிட்டுப்பொதி பெட்டி கணக்கு இவைகளையு மெடுப்பித்துவரச்செய்து, புத்திரருடன் தீவாந்தரஞ் சென்றுமீண்ட வணிக மக்களை வரவழைத்து, அவர்கள் முன்பாக வப்பெட்டியைத் திறந்து பார்க்க, முத்திரையோடு கூடிய ஒரு எருமுட்டையும் ஒரு சீட்டு மதனுளிருக்கக்கண் டாச்சரியமடைந்து, கோபாவேசத்தால் வரட்டியை யெடுத்தெறிந்தனர்; அப்போது அஃதுடைந்து இளஞ்சூரியன் போலும் ஒளிமிகுந்த மணிகளைச் சிதறியது. மற்ற வரட்டிகளையுஞ் சோதித்துப்பார்க்க அவைகளும் அங்ஙனமிருக்கவும் தவிட்டு மூட்டையில் பொன்மணல் செறிந்திருக்கவும், சீட்டு அவ்வணிகமக்கள் எருமுட்டையுந் தவிடும் பெற்றதற்காக வெழுதிக்கொடுத்த கடன் பத்திரமாக விருக்கக்கண்டு, தம் புத்திரரது அற்புதச் செய்கையை வியந்து

பெருமகிழ்வெய்தினர். வணிகச்சிறுர்களோ தாம் எருமுட்டைகளின் பெருமையை யறியாது வீணே யெறிந்துவிட்டோமே, மருதப் பிரானையு மறிவிழந்தவனென்று கருதினேமே, யாது செய்வோம் எனக் கலங்கிநின்றனர்.

## மருதவாணரைக்காணது சுவேதாரண்யர் வருந்தியது

இங்ஙனமிருக்கையில் பட்டினத்தார் என்னுஞ் சிறப்புப் பெயர் பெற்ற சுவேதாரண்ய குப்தர் புத்திரனை மீண்டுங் கண்டு களிக்குமாறு வீட்டிற்சென்று பார்க்கையில், மருதப்பிரான் விட்டுப்போன விடத்தி லில்லாமையால் திடுக்கிட்டு, போனவிடந் தெரியாது மயங்கி, மிக மனங்கலங்கி வருத்தமடைந்து அந்தப்புறஞ் சென்று விசாரிக்க, மனைவியார் "இப்போது நம் புதல்வன் வந்து உண்டுபோயினன், அவன் கொடுவந்து கொடுத்த ஆடையாபரணங்க ளிதோ விருக்கின் றன" என்று சொல்லி யவர் கொடுத்த பண்டங்களைக் காட்ட மனக் கிலேசஞ் சற்று நீங்கியும் நீங்காராகிப் புத்திரனை யங்குமிங்கு மோடித்தேடி எங்ஙனந் தேடியும் புத்திரன் காணுததனுல் மனஞ் சோர்வெய்தி வருந்திநின்றனர்.

மருதவாணரோ தாம் சிவசருமருக்குக் கூறிய பதினறுமாண்டு நிறையவே திருவிடைமருதூர்க்கேகித் தம்மைப் பூசித்து நிற்கும் சிவசருமர்முன் சோதிசொரூபமாய்த் தோன்றி அவரைக் குடும்பத் தோடு தம்முள் ஐக்கியஞ் செய்துகொண்டு இடைமருத மகாலிங்கத் திற் புகுந்தருளினர்.

## பட்டினத்தடிகள் திருவருள்பெற்றது

இவ்வாறு சுவேதாரண்யகுப்தர் கிலேசமடைந் துணவு வேண் டாது சிந்தனையுற்றிருக்கையில் அவர் மனைவியார் ஒரு சிறு பெட்டியை யவர்முன் கொண்டுவந்துவைத்து "இதனைத் தாங்கள்



சுவேதாரண்யர் துறவுகோலம் கொண்டமையைப் பார்த்த அடிகளார் தாயாரும் மனைவியாரும் மிக வருந்த, அவர்களுக்கு இதோபதேசஞ் செய்தனுப்புதல்.

வந்தவுடனே கொடுக்கும்படி நம் புதல்வன் தந்து போயினன்" என லும், பட்டினத்தார் போனவுடன் அதனை யெடுத்துத் திறந்து அத னுள் காதற்ற ஊசியும் ஓலைச்சீட்டொன்று மிருக்கக்கண்டு, அவா வுடன் அச்சீட்டை யெடுத்து வாசிக்க "காதற்றவூசியும் வாரா்து காணுங் கடைவழிக்கே" என்று எழுதப்பட்டிருத்தலை நோக்கி, தமது பூர்வ வாசனையினாலும் மருதப்பிரான் திருவருணோக்கத்தாலும் பரிச பாவனையாலும் அதிதீவிர பக்குவமடைந்தவராய்ச் சஞ்சல நீங்கித் தெளிவெய்தி, தாயாரை நோக்கி "அம்மா! உமது தவம் பெரிது, நீர் வருந்தன்மின், யான் குருவினாணைவழி நிற்பவனாயினேன்" என, அன்னை யக்குறிப்பறிந்து "ஐய! எனக் கிறுதினா ணெருங்கியதா லென் னீமக்கடன் கழித்துச் செல்லலாகாதா?" என, "அப்படியே யாகுக" என்று சொல்லி, தமது பொக்கசாதிபதியான * சங்கமர் என்பவரை விளித்துத் தமது பொருள்களையெல்லாம் ஊரிலுள்ளா ர்களைவருஞ் சூறையாடும்படி கட்டளையிட்டு, ஒன்றிலும் பற்றில்லா தவராய்ப் புறப்பட, அப்போ தவர் மனைவியார் வந்துவணங்கி "எனக் கென்ன கதி? யானு முடன்வருவேன்" என, பத்தினியாரை நோக்கி "நீ அடியார் பத்தியிற்சிறந்து எம்பெருமான் திருவடி யடைதி" எனச் சொல்லி நிறுத்திவிட்டு, எதிலர்போற் சென்று ஊர்ப்புறத்தி லுள்ளதோர் பொதுமண்டப மெய்தி யிருந்தனர். அப்போது ஆங்குக் குழுமிய பந்துமித்திரர்களை நோக்கித் தம் முள்ளத்தை முன்னிலையாக்கி,

"மாடுண்டுகன் றுண்டுமக்களுண் டென் றுமகிழ்வதெல்லாங்
கேடுண்டெனும்படிகேட்டுவிட்டோமினிக்கேண்மனமே
ஓடுண்டுகந்தையுண்டுள்ளேயெழுத்தைந்துமோதவுண்டு
தோடுண்டகண்டனடியார்நமக்குத்துணையுமுண்டே."

என்பது முதலான திருப்பாடல்களைச் சொல்லி,

---

* சங்கமர் என்பவர் சேந்தனார்.

"ஊரிருமக்கோருபதேசங்கேளுமுடம்படங்கப்
போரீர்சமணைக்கழுவேற்றுநீற்றைப்புறந்திண்ணையிற்
சாரீரனந்தலைச்சுற்றத்தைநீங்கிச்சகநகைக்க
வேரீருமக்கவர்தாமேதருவரிணையடியே."

என்பது முதலிய திருப்பாடல்களையுஞ் சொல்லி மௌனமெய்தி யிருந்தனர்.

இதனைக் கேட்டவர்க ளனைவரும் இவரைத் தடுப்பது கூடா தென்று வெட்கிச் சென்றனர்.

## அரசன் பட்டினத்தடிகளைக் காண்டல்

இதுநிற்கப் பட்டினத்தார் என்னுஞ் சுவேதாரண்ய வைசிய அதிபர் துறவுபூண்டதையும் அவர் பொருள்கள் சூறைகொள்ளப் பட்டதையும் ஊராளுமரையன் கேள்வியுற்று ஆங்கெய்திக் குடும்பப் பாதுகாப்புக்கு வேண்டியதொழிய மற்றைப் பண்டங்களைத் தமது பண்டாரத்திற் சேர்க்கும்படி கட்டளையிட்டு, மீண்டும் ஸ்திதிகளைக் காட்டும்படி சேந்தனாரை வருத்த, அவர் "வேறுநிதியொன்றுமில்லை" என்னலு மதை நம்பாது அரச னவரை அருஞ்சிறைபிட்டு வருத்தச் செய்து, ஊர்ப் பொதுமண்டபத்தில் சிவநிஷ்டை புரிந்திருக்கும் பட்டினத்தடிகளைக் கண்டு "இக்கோலங் கொண்டதால் நீ ரடைந்த பயன் என்னை?" என்று வினவ, அடிக ளவ்வரையனை நோக்கி "* நீர் நிற்க நாமிருக்க" என்றனர். இவ்வாறு சொல்லக்கேட்டக் கோமகன் வெட்கிச் சென்றனன்.

அரசன் போனபின் பட்டினத்தடிகள் பசிவந்தபோது ஊரிற் சென்று பிச்சையேற்று உண்டு நிலப்பாயல்கொண்டு நிரதிசயானந் தத்து மூழ்கி யிருந்தனர்.

---

* நீர் உலககாரியத்து நிற்க நான் முத்திநிலையி னிற்க இறைவன் ஆணை என்றபடி.



பட்டினத்தடிகளின் தாயார் இறந்துபோக, அவ்வம்மையை மயானத்தில் கொணர்ந்த உறவினர் அடிகளைப் பார்த்து ஒதுங்க, அவர் தம் அன்னையை வேறு சிதையடுக்கித் தீ மூட்டுதல்.

## பட்டினத்தடிகளுக்குத் தமக்கையார் நஞ்சூட்டியது

இவரது நிலையறியாத சுற்றத்தவர் இவரது செய்கை தமது மரபுக் கிழிவைத் தருவதாக வெண்ணி, அவ்வூரில் யாரும் இவர்க்குப் பிச்சையிடாவண்ணம் தடுத்தனர். அப்போது பட்டினத்தடிகள் ஊரிற் புகுந்து வீதியிலும் குப்பைமேட்டின்மேலும் புரண்டுங் கிடந்தும், இடைப்பிள்ளைகளைத் தமது காலிலே புரிகட்டித் தரையில் ஈர்க்கும்படியேவியும், இவன் பித்தன் என யாவருஞ் சொல்லும்படி "குடியிருந்த மனைக்குக் கொள்ளி வைப்பேம்" என்று சொல்லியுந் திரிந்தனர். இதனை இவர் தமக்கையார் பொறாராகி விடங்கலந்த ஒட்டப்பஞ் சமைத்து இவருண்ணக் கொடுப்பித்தனர். அதனைப் பட்டினத்தடிகள் திருவருளாலறிந்து "தன்வினை தன்னைச்சுடும், ஒட்டப்பம் வீட்டைச் சுடும்" என்று அவ் வப்பத்தைத் தமக்கையார் வீட்டிறப்பிற் செருகினர், உடனே அவ்வில்லம் தீப்பற்றி உயிர்ச் சேதமின்றி ஊர்முழுவதையுஞ் சுட்டெரித்தது. அதுகண்ட வூரார் அஞ்சிப் பட்டினத்தடிகளை வந்து வணங்கலும், அடிகள், "தங்களைக்கேட்டுப் பிறந்திறந்திலம்" என்னும் செய்யுளைப்பாடி, தீயினைத்தணித்துப் பின்பு "விளக்கினை வையமுய்ய" என்பது முதலிய திருப்பாடல்களைப் பாடியும் பிச்சை ஏற்றுண்டும் பழையபடி "குடியிருந்த வீட்டிற் கொள்ளியிடுவேம்" என்று சொல்லிக்கொண்டு திரிந்தருளினர்.

## பட்டினத்தடிகள் தாயாருக்குத் தகனக்கிரியை செய்தல்

அங்ஙன மிருக்கையில் தமது அன்னை தேகவியோகமடைய, சுற்றத்தார் சவத்தைத் தகன சமஸ்காரஞ்செய்ப மயானத்துக்குக் கொடுபோயினர். இதனைப் பட்டினத்தடிகள் திருவருளுணர்த்த

வுணர்ந்து, தாய்க்குக்கூறிய உறுதி மொழியை யுணர்ந்து விரைந்து ஆங்கெய்தினர். உறவினர் அடிகளைக்கண் டஞ்சியோடினர். அப்போது பட்டினத்தடிகள் அவர்களடுக்கிய சிதையைத் தள்ளி, பச்சை வாழைமட்டை கொடுவந்து, சிதை யடுக்கி, யதன்மேற் றமதன்னையைக் கிடத்தி,

"ஐயிரண்டு திங்களா வங்கமெலா நொந்துபெற்றுப்
பையலென்ற போதே பரிந்தெடுத்துச்—செய்யவிரு
கைப்புறத்தி லேந்திக் கனகமுலை தந்தாளை
யெப்பிறப்பிற் காண்பே னினி."

என்பதுமுதல்,

"வீற்றிருந்தா ளன்னை வீதிதனி லிருந்தாள்
நேற்றிருந்தா ளின்றுவெந்து நீறானாள்—பாற்றெளிக
வெல்லீரும் வாருங்க ளேதென் றிரங்காம
லெல்லாஞ் சிவமயமே யாம்."

என்னும் திருப்பாட லிறுதியான பாடல்களைப்பாட, அச்சிதை தீப் பற்றி யெரிந்து தகனஞ் செய்தது. பின்பு அங்குநின்று நீங்கித் திருவிடைமருதூரை யடைந்து,

"மென்று விழுங்கி விடாய்கழிக்க நீர்தேட
லென்று விடியுமெனக் கென்கோவே—நன்றி
கருதார் புரமூன்றுங் கட்டழலாற் செற்ற
மருதாவுன் சந்நிதிக்கே வந்து."

என்னும் திருப்பாடலோதி,

"தெய்வத்தாமரைச் செவ்விதின்மலர்ந்து"

என்னும் சொற்றொடர் முதற்கணுடைய மும்மணிக்கோவையைத் திருவாய்மலர்ந்தருளி வழக்கப்படி அவ்வூரி லேற்றுண்டு, சிவயோக சாதனையி லிருந்தனர்.

## பட்டினத்தடிகள் இறந்தவனுயிர்பெற் றெழும்படி செய்தல்

ஆங்குறையுங்கா லோரிரவிற் சிவபெருமான் கனவிற்றோன்றி "நீ நமது திருப்பதிகடோறும் சென்று பாடுக" என, அக்கட்டளை யைச் சிரமேற்கொண்டு, பல தலங்களிலுஞ்சென்று பாடிவருகையில் திருவாரூரடைந்து, அங்கு முன்பு தம்மை வழிபட்டிருந்தவனும் தாய்க்கொரே பிள்ளையாய்த் தமது ஆஞ்ஞையால் இல்லறம் பூண்ட வனுமாகிய ஒரு சிறுவன் சன்னிபாதங்கண்டுயிர் துறந்தனனென்று அவன் தாய் தந்தையர் வந்து முறையிட்டுவருந்தக் கேட்டருளி,

"வடிவந் தானும் வாலிபம் மகளுந் தாயு மாமியும்
படிகொண் டாரு மூரிலே பழிகொண் டாட வீதியோ
குடிவந் தானு மேழையோ குயவன் றானுங் கூழையோ
நடுநின் றானும் வீணனோ நகரஞ் சூறை யானதே."

"மண்ணுமுருகுமாமுருகுமாயையுருகுமாலுருகும்
பெண்ணுமுருகுமாணுருகும்பேதாபேதவகையுருகும்
அண்ணலுருகுமிடத்தமர்ந்தவாத்தளுருகுமரவணையான்
எண்ணியுருகுங்குருநாதனென்பாலுரைத்தவோர்மொழியே."

என்கிற திருப்பாடல்களைப்பாடி அச்சிறுவ னுயிர்பெற் றெழும்படி செய்து, அவ்வூர்விட்டேகி வழியிற்காணுந் திருப்பதிகளைத் தரிசித் துப் பாடிக்கொண்டேசென்று பாண்டியநாடடைந்து, திருவால வாய்ச் சொக்கேசரையும் அங்கயற்கண் ணம்மையாரையும் பன்முறை பணிந்து போற்றி,

"விடப்படு மோவிப் பிரபஞ்ச வாழ்க்கையை விட்டுமனந்
திடப்படு மோநின் னருளின்றி யேதின மேயலையக்

கடப்படு மோவற்பர் வாயிலிற் சென்றுகண் ணீர்த்ததும்பிப்
படப்படு மோசொக்க நாதா சவுந்தர பாண்டியனே."

என்பது முதலாகிய திருப்பாடல்களைப் பாடி, மலைநாடடைந்து திருவஞ்சைக்களம் முதலிய திருப்பதிகளைத் தரிசித்துக்கொண்டு, கொங்குநாடடைந்து அவிநாசி திருமுருகன்பூண்டி முதலாய திருப்பதிகளில் சிவபெருமானைப் பாடித் துதித் தங்கெழுந்தருளி யிருந்தனர்.

## பட்டினத்தடிகள் விநாயகராலயத்தில் நிஷ்டைகூடியிருத்தல்

அங்ஙன மிருக்குநாளில் ஒருநாள் இரவில் பசியால் மிக வருந்தினவராய் ஒரு மூர்க்கன் றலைவாயிலி னின்று கைதட்டினர். அவ் வில்லத்தான் இவரைக் கள்வனோ காமுகனோ என நினைந்து தடி கொண்டு புடைத்தனன். அடிகளோ தம் நிலைபெயராது "சிவசிவ" என்று சொல்லிக்கொண்டு நின்றனர். இதுகண்ட அடுத்த வில்லத்தான் விரைந்தோடிவந்து அம்மூடனைத் தடுத்து அடிகளை யுணவு கொண் டுபசரித் தனுப்பினன். அதுமுதலாக அடிகள்,

"இருக்கு மிடந்தேடி யென்பசிக்கே யன்னம்
உருக்கமுடன் கொண்டுவந்தா லுண்பேன்—பெருக்க
அழைத்தாலும் போகே னரனேயென் றேகம்
இளைத்தாலும் போகே னினி."

என்று இப்பாடலைச்சொல்லி யாம் இனி யெங்குஞ்சென்று பிச்சை யேற்பதில்லையென் றுறுதி செய்துகொண்டு பின்பு அவ்விடம்விட்டு நீங்கித் துளுவநாடடைந்து கோகர்ணம் பணிந்து, உஞ்சேனைமாகாள மடைந்து, மாகாளேசுரரை வணங்கி, ஊர்புறத் தரணியத்திலுள்ள கணபதியாலய மடைந்து ஞானநிஷ்டை கூடியிருந்தனர்.



அரசன்மாளிகையில் களவாடிய விலையேறிய பதக்கமொன்றை திருடர்கள் தங்கள் பிரார்த்தனையின்படி விநாயகருக்குசாத்த அங்குநிஷ்டையிலிருந்த பட்டினத்தடிகள் கழுத்தில் விழுந்தது. 3



சேவகர்கள் பட்டினத்தடிகளைக் கழுமரத்தில் ஏற்றுவதற்காக கொண்டுபோதல்.
அடிகளார் கழுமரத்தையணுகி எம்பெருமானைத் தியானித்தவளவில் கழுமரம்பற்றி
எரிதல்.

## கழுமரமேறிந்ததும் பத்திரகிரியார் திருவருள்பெற்றதும்

இவ்வாறு பட்டினத்தடிகள் யோகமெய்தியிருக்கையில் அவ்வூராள்வோனாகிய பத்திரகிரி மகாராசன் அரண்மனையில் சில கள்வர் புகுந்து ஆபரணாதிகளைக் கவர்ந்து செல்லுநெறியிலுள்ள தங்கள் கோரிக்கை யீடேறச்செய்த காட்டுப்பிள்ளையாருக்கு ஓராபரணம் பூட்டக் கருதி ஓரிரத்தினாபரணத்தை எறிந்து போயினர். அவர்கள் எறிந்த இரத்தினாபரணம் நிட்டைகூடி யிருக்குஞ் சிவயோகியார் கழுத்தில் தவறி விழுந்தது.

பின்பு கள்வரைத்தேடிவந்த அரண்மனைக் காவலாளர் அடிகளின் கழுத்தில் இரத்தினாபரணம் இருக்கக்கண்டு, இவர் கள்வரி னினத்தர் என்றெண்ணி, இவரை ஈர்த்து வருத்தி "நும்மவரைக் காட்டுதி" என்று உறுக்கி யிடுக்கணியற்றினர். அடிகள் எல்லாவற்றிற்கும் "சிவ சிவ" என்றே சொல்லி வாளாவிருந்தனர். இதுகண்ட காவலாளர் "இவர் மஹாயோகியர்போலும்" எனத் துணுக்குற்று வருந்தினர் இவ்வா றிங்கு நிகழுகையில் அக்காவலரு ளொருவன் முன்னரோடி அரசனைக்கண்டு "கள்வரின்றலைவன் காட்டுப்பிள்ளையார் கோயிலி லகப்பட்டனன்; அவனை விரைவிற் கொணர்ந்து தண்டிக்கக் கட்டளை யிடக் கடவீர்; அன்றேல் நமது பண்டங்களெல்லா மிவ்வாறே களவுபோம்" என, அரசன்கேட்டுச் சற்றுயோசித்து நின்றனன். அம்மூர்க்கன் மீண்டும் "அண்ணலே! ஏன் ஆலோசிக்கின்றீர்? எம்மாற் பிடியுண்டவ னுண்மையான கள்வனே; தேவரீ ரொன்றுக்குஞ் சிந்திக்கவேண்டுவதில்லை; இதோபாரும் இவ்வாபரணம் அவனிட மிருக்கக்கண்டோம்'! என்று காட்டி, மீண்டும் தண்டனையைக் கட்டளையிடும்படி வற்புறுத்தினன். அரசன் மயங்கி "அக்கள்வனைக் கழுவேற்றுக" என்றனன். இக்கட்டளையைச் செவியுற்ற மற்றக்

காவலர்கள் அச்சமும் பயமுமடைந்து, அரசன் கட்டளைக் கெதிர் கூறுந்திறமற்றவர்களாய் மிக வருந்தி, கழுமரத்தினிடத்து அடிகளைக் கொண்டுவந்து நிறுத்தினர். அடிகள் புன்னகையோடு அக்கழுமரத்தை நோக்கி,

"என்செயலாவதியாதொன்றுமில்லையினித்தெய்வமே
யுன்செயலேயென்றுணரப்பெற்றேனிந்தவூனெடுத்த
பின்செய்ததீவினையாதொன்றுமில்லைபிறப்பதற்கு
முன்செய்ததீவினையோவிங்ஙனேவந்துமூண்டதுவே."

என்னும் திருப்பாடலைப் பாடினர். உடனே அக்கழுமரம் தீப்பற்றி யெரிந்தது. இதனைச் செவியுற்ற விறைமகன் திடுக்கிட் டொன்றுந் தோன்றாது, பாதசாரியாயோடோடிவந்து, தீயெழாநிற்குங் கழுமரத் தருகிலிருக்கும் தவக்கொழுந்தைக் கண்டு, பதைபதைத்து வருந்தி, அடிகளின் தரிசனமாத்திரத்திலேயே அதிதீவிர பக்குவமடைந்து, உடனே தமது அரசகோலமுற்று நீக்கி அவர்திருவடிகளில் அடியற்ற பனைபோல்வீழ்ந்து, அவைகளை விடாதுபற்றி நின்று, "எம்பெரு மானே! தேவரீருக்குத் தவறிழைத்த இம்மாபாவியை ஆண்டருள வேண்டும்" என மிக்க ஆராமையோடு வேண்டினன். பட்டினத்தடி கள் அரசனது பக்குவமறிந்து திருவருளீக்களித்து, "நீ திருவிடை மருதூருக்குச்செல்க" என்று கட்டளையிட்டருளி, அங்கு நின்று வடதிசைநோக்கிச் சென்று, விந்தம் காசி காந்தாரம் முதலிய தலங் களைத் தரிசித்துக்கொண்டு மீண்டும் திருக்குற்றால மடைந்து,

"காலன் வருமுன்னே கண்பஞ் சடைமுன்னே
பாலுண் கடைவாய் படுமுன்னே—மேல்விழுந்தே
யுற்றா ரழுமுன்னே யூரார் சுடுமுன்னே
குற்றாலத் தானையே கூறு."

என்பது முதலாய திருப்பாடல்களைப் பாடித் துதித்து, இராமேச்சுரம், வேதாரணிய முதலாய திருப்பதிகளைச் சென்று வணங்கி, மீண்டுந் திருவிடைமருதூரை யடைந்து கீழ்க்கோபுரவாயிலில் வீற்றிருந்தனர். அன்றைத்தினமே பத்திரகிரியாரும் பிச்சையேற்றுண்டுகொண்டே பல தலங்களுக்குஞ் சென்று தரிசித்து, குருவின் ஆணைப்படி திருவிடைமருதூரை வந்து சேர்ந்து, குருவைக்கண்டு வணங்கி, அவர் குறிப்பின்படி மேலைக்கோபுரவாயிலி லிருந்து, பிச்சை யேற்றுவந்து குரு நிவேதனஞ்செய்து, சேடத்தைத் தாமுண்டு சிவயோகமெய்தி யிருந்தனர்.

இவ்வாறு நிகழுகையி லொருபகல் பத்திரகிரியார் தமது ஞானாசாரியரது பரிகலசேடப் பிரசாதம் புசியாநிற்புழி ஒரு பெட்டை நாய்க்குட்டி ஆங்கெய்தி வாலைக்குழைத்துப் பசிநோயைக் குறிப்பித்து நின்றது. அதுகண் டிரக்கமெய்தி யதற்குத் தமது சேடப் பிரசாதமளித்தனர். அந் நாய்க்குட்டி யதனை யுண்டு பசியாறி அதுமுதலாக அவரைவிட்டு நீங்கா நிழல்போற் கூடவே யிருந்தது.

இப்பெட்டைநாய் முற்பிறப்பிலே சகல துர்க்குணங்களுநிறைந்த தூர்த்தையாயிருந்து ஒருபகல் தன் விடபுருடனுடனிருந்துண்ட வுச்சிட்டச் சிற்றுண்டிச் சேடத்தைக் குருவாணையினின்றொழுகும் ஒரு பக்குவியின் கையில் பரிகாசமாகக் கொடுக்க, அதனை யவர் பெற்றுக் குருப்பிரீதி பண்ணி யுண்டு பசிதீர்ந்து சென்றனர். பின்பு அத்தூர்த்தை பிணிமுதலிய பல துன்பங்க ளெய்தி, வயது முதிர்ந்து மரித்து நாயாய்ப் பிறந்து, உச்சிட்டத்தினாலேனும் பக்குவியின் பசிதணித்த புண்ணிய விசேஷத்தால் இங்குப் பத்திரகிரியார் உச்சிட்டம் புசிக்கும் பேறுபெற்றுப் பக்குவமடைந்ததைச் சிவபெருமானுணர்ந்து ஒரு சித்தவேட முடையராய்ப் பட்டினத்தடிகளிடஞ் சென்று, "ஐயா! என்பசி தீர்க்கவல்லீரோ?" என, பட்டினத்தடிகள் "யான்

கோவணந் தாங்குவதே பாரமாகவுடையேன், மேற்குக் கோபுரவாயிலி லிருக்கின்றான் சமுசாரி, அவனைக் கேட்டால் உமக் கன்னமிடுவன்" என, இதனை அச் சித்தவேடமுடையார் பத்திரகிரியாருக்குச் சொல்லி "நீரேனும் என் பசி தீர்ப்பீரா?" என்றனர். பத்திரகிரியார், தம்மாசிரியரின் குறிப்பறிந்து "இவ்வோடும் நாய்க்குட்டியுமோ வென்னைச் சமுசாரியாக்கினது?" என்று தாம் பிச்சை யேற்று வரும் பாத்திரத்தை யெடுத்தெரிய, அது நாய்த்தலைமேற் பட்டமையால் மரித்தது. உடனே சித்தவேடரும் மறைந்தருளினர். பின்பு பத்திர கிரியார் திருப்புலம்பல் முதலிய பல தமிழ்க்கண்ணிக ளியற்றியும் சிவயோக மெய்தியு மிருந்தனர்.

இவ்வாறு மரித்த பெட்டைநாய் காசிராஜனுக்கு மகளாய்ப் பிறந்து வளர்ந்து மங்கைப்பருவ மடைந்திருக்கையில், அரச னொரு நாள் புரோகிதரை நோக்கி, "சுவாமி! தேவரீர் பல இராஜசமுக மறிந்தவராகலின் இவ் வழகிய வென் புத்திரிக்குத் தக்க புருடனை யோர்ந் தறிவிப்பீராக" என்ற தந்தை சொற்களைக் கேட்டு நின்ற அப்பெண் திடுக்கிட்டு, "ஐயா! யாவொருவருக்கு முரியளல்லள், தட்சிணத்திலே திருவிடைமருதூரில் மருதவாணப் பெருமான் சந் நிதியின் மேலைக்கோபுரவாயிலில் வீற்றிருக்கும் எமது குருநாதரிடத் தில் என்னை ஒப்புவிப்பீராக" என, அரசன் கேட்டு ஆச்சரிய மடைந்து, உண்மையை விசாரித்தறிந்து மகளைக் கூட்டிச் சென்று பத்திரகிரியார் முன்விட, அவர் சமாதியினின்று கண்விழித் துலகை நோக்கலும், அப்பெண் "எம்பெருமானே! அடி நாய் மீண்டுந் திருவடியை நாடிவந்தது" என, யாவுமறிந்த ஞானியா ரெழுந்துப் பெண்ணின் கரத்தைப் பற்றிக்கொடு சென்று குருவின் சந்நிதி யடைந்து, "எம்பெருமானே! நும்முச்சிட்டமுண்டநாய்க்குமிப் பிறவிநோய் வரலாமோ?" என்று விண்ணப்பஞ்செய்தனர். பட்டினத்

தடிகளும் "அவன்செயலன்றி யாவதொன்றில்லை" என்றருள்புரிந்து திருவருளை நாடினர். அப்போது ஒரு பெருஞ்சோதி தோன்ற அதில் அப்பெண்ணுடன் பத்திரகிரியார் மறையச் சோதியும் மறைந்தது.

அச்சோதி மறையவே பட்டினத்தடிகள் மனங்கலங்கி, எம் பெருமா னின்னு மெம்மை யாட்கொண்டருளும் திருவருள் புரிந் திலரோ என்று ஆறுத்துயரி லழுந்தினர். அதனை யறிந்த வெம்பெரு மான் எழுந்தருளிவந்து பட்டினத்தடிகளுக்குத் தரிசனந்தந்து, "எமதன்பனே! வருந்தேல், நமதன்பர்களாகிய சாம்பன் முதலாய எண்மர் ஒற்றியூரில் கோபாலப்பிள்ளைகளாகப் பிறந்திருக்கின்றனர், நீ ஆங்கெய்தி அவர்களுடன் கூடியிருந்து, சொற்பகாலத்தி லெம்மை வந்தடையக்கடவை" என்று திருவாய்மலர்ந்தருளினர். அவ்வாணையை மேற்கொண்டு பட்டினத்தடிகள் உடனே புறப்பட்டு சுவேதாரண் ணிய மடைந்து சிவபெருமானைப் பணிந்து போற்றி சில்நாளங்கு வசித்திருந்தனர். ஆங்கிருக்கையில் முன் னரசனாணையாற் சிறைப் பட்டிருக்கும் சேந்தனாரை,

"மத்தளை தயிருண்டானுமலர்மிசைமன்னினானும்
நித்தலுந்தேடிக்காணாநிமலனே திருநாங்கூரிற்
செய்த்தலைக்கயல்கள்பாயுஞ்சேந்தனை வேந்தனிட்ட
கைத்தளை நீக்கியென்முன்காட்டுவெண்காட்டுளானே"

என்னும் பாடலாற் சிவபெருமானைத் துதித்துத் தளையினின்று விடு பட்டுவரச்செய்து தில்லைக்குப் போகவிட்டு, தாம் சீர்காழிக் கெழுந் தருளித் திருக்கழுமல மும்மணிக்கோவைபாடி, சிதம்பரமடைந்து கோயினான்மணிமாலை பாடிச் சிவபெருமானை வணங்கி, பசிக்குச் சிவகாமி யம்மையார் பிராமணமாதா வெழுந்தருளிவந்து பிரசாதங் கொடுக்க வுண்டு பசியாறினவுடன் வந்த பார்ப்பனப்பெண் மறைய வந்தவர் உலகமாதா வென்றறிந்து ஆராமையால், "ஒடுமெடுத்து"

என்னும் பாடலால் துதித்து, "சோறிடுநாடு" என்னுஞ் செய்யுளை யோதி, சிலநா ளாங்குகழித்து, அடைக்கலத் திருவகவல்பாடி, அங்கு நின்று போந்து, திருத்தினைநகர் திருப்பாதிரிப்புலியூர் திருவதிகை திருத்துறையூர் திருவாமூர் திருக்கோவலூர் திருவெண்ணெய்நல்லூர் விருத்தாசலம் முதலிய ஸ்தலங்களை யடைந்து தோத்திரித்துப் பணிந்து திருவருணைக்குச் சென்று திருக்கோயிலையும் மலையையும் அங்கப்பிரதக்ஷிணஞ்செய்து, சிவசந்நிதியடைந்து அண்ணாமலையாரை யும் உண்ணாமுலை யம்மையையும் பணிந்து பற்பல திருப்பாடல்களாற் றுதித்துச் சிலகால மங்கெழுந்தருளி யிருந்தனர்.

இவ்வாறுறையுநாளி லொருபகல் ஆன்மாக்களுய்யுமாறு பின் நிகழவேண்டியதை யுணர்ந்த ஞானியா ராங்குற்ற கணிகை மாதொருத்தியைத் திருநோக்கானோக்க அவள் அவரது பெருமை யறியாது பயந் தோடித் தாயை யடைந்து, "அம்மா! கோபுரவாயிலிலிருக்கும் பயித்தியக்காரன் என்னை அழைத்தானடீ" என்று முறையிட்டனள். அது கேட்ட தாய் மிகவருந்தி "அந்தோ கெட்டேன்! தானேவந்த சீதேவியைத் தடிகொண்டு சாடியதுபோல நமக்கெளிதிற் கிடைத்த அரும்பேற்றை யழித்தாயே பாவி" என்று வைது, மகளைக்கூட்டி யோடி வந்து அடிகள் முன்விட்டுப் பணிந்து "இப் பேதையின் குற்றத்தை க்ஷமித்தருளி ஆண்டருளவேண்டும்" என்று பிரார்த்தித்து நின்றனள். பட்டினத்தடிகள் "உன்னை நாடின வனங்குற்றனன்" என்று சொல்லி ஒரு சருகைக்காட்டிச் சும்மா விருந்தருளினர். அச்சருகினை அக்கணிகை மகளுண்டு கருவுற்று அருணகிரிநாதரைப் பெற்றனள்.

---



திருவொற்றியூரில், பட்டினத்தடிகளின் உத்தரவின்படி மாடுமேய்க்கும் சிறுவர்கள் அவரைக் குழிக்குள்மூட எத்தனித்தல்.

## பட்டினத்தடிகள் சிவலிங்கவடிவாக விளங்கியது

பின்பு பட்டினத்தடிகள் திருவருணையினின்று சென்று திருக்காஞ்சிபுர மடைந்து, திருவேகம்பநாதரை வணங்கிக் கச்சித்திருவந்தாதி, திருவேகம்பமாலை, கச்சித்திருவகவல் முதலிய திருப்பாடல்களால் துதித்து, அங்கு நின்றும் போய் திருவாலங்காடு திருப்பாசூர் திருவெண்பாக்கம் முதலிய தலங்களைத் தரிசித்துச் சென்று, திருக்காளத்தியடைந்து "வாளான் மகவரிந்தூட்ட" என்னும் செய்யுளோதி அங்கு நின்றுந் திரும்பி திருவொற்றியூரை யடைந்து, ஒற்றியூரரைப் பலமுறை பணிந்து, திருவொற்றியூர் ஒருபாவொருபஃது பாடித் துதிசெய்து, திரும்பி "ஐந்தொடர்ந்து" என்னும் பாடலோதி, முதல்வன் முறையீடு, அருட்புலம்பல் முதலாய அருட்பாக்களியற்றித் தோத்திரித்தும், சிவபெருமானுணைபடி கோபாலச் சிறுவர்களுடன் கூடி மரமேறிக் குதித்தும், நீரிலழுந்தி விளையாடியும், ஒடி யொளிந்தும் வெளிப்பட்டும், ஆடிப்பாடியும், தெருவிலும் திண்ணையிலும் புரண்டுங் கிடந்தும், எங்குந் திரிந்தும் அலைந்தும் நிற்கையில், தமக்கு முத்தியெய்துங்காலம் நெருங்கிய தறிந்து, அச்சிறுவர்களால் தம்மை இலை சருகு முதலியவற்றால் மூடுவித்து மணற்குன்றின்மேற் றோன்றக்காட்டியும், மணலிற் புதைப்பித்து வெளிப்பட்டு நின்றும், இவ்வாறான பற்பல அற்புதத் திருவிளையாடல் பயின்றுகாட்டி, அவர்கள் களிக்கும்படி சிலநாளொழுகி, ஒருநாள் மறைக்கப்பட்ட தம்முடலை நீத்துச் சிவலிங்கவுருவாகக் காட்டி தாம் திவ்யதேகம் பெற்றுச் சிவகணங்கள் பிரமவிஷ்ணு முதலிய தேவர் சூழ விமானமேறிச் சென்று சிவபெருமான் சந்நிதியடைந்து, அவராஞ்ஞையால் அத்தேகத்தை நீத்துக், குபேரனாகிச் சிவபெருமானைப் பன்முறை பணிந்தெழுந் தவாருகிருந்தனர்.

அப்போதே அவர் மனைவியாராகிய சிவகலையம்மையாரும் பொய்யுடனீத்து அவர் திருவடிநீழ லெய்தினர்.

கோபாலச் சிறுவர்களான சாம்பன் முதலிய எண்மரும் தம்முடன் விளையாட் டயர்ந்த யோகியர்தேகம் சிவலிங்கமான தறிந்து, தத்தம் தேகங்களையு மவ்வாறே நீத்து சிவசாயுச்சிய மடைந்தனர்.

பட்டினத்தடிகள் சரித்திரவரலாறு

முற்றுப்பெற்றது.

---

நேரிசை வெண்பா.

மண்ணாசை பொன்னாசை மாதாசை நீத்தருளை
உண்ணாடி யோற்றி யுயர்பதியில்—பண்ணாது
நாடிலிங்க மாய்ப்பட்டி னத்தடிக ளானதினம்
ஆடியுத்தி ராடநா ளாம்.

---

உ

கணபதி துணை

# பட்டினத்துப்பிள்ளையார்
அருளிச்செய்த

# திருப்பாடற்றிரட்டு மூலமும்,
## தத்துவார்த்தவிளக்க உரையும்

முதலாவது

## கோயிற்றிருவகவல்

திருச்சிற்றம்பலம்.

நிலமண்டிலவாசிரியப்பா

*நினைமின் மனனே! நினைமின் மனனே!*
*சிவபெரு மானைச், செம்பொனம் பலவனை,*
*நினைமின் மனனே! நினைமின் மனனே!*
*அலகைத் தேரி னலமரு காலின்*
*உலகப்பொய் வாழ்க்கையை யுடலையோம் பற்க!*
*பிறந்தன இறக்கும், இறந்தன பிறக்கும்;*
*தோன்றின மறையும், மறைந்தன தோன்றும்;*
*பெருத்தன சிறுக்கும், சிறுத்தன பெருக்கும்;*
*உணர்ந்தன மறக்கும், மறந்தன வுணரும்,*
*புணர்ந்தன பிரியும், பிரிந்தன புணரும்;*

அருந்தின மலமாம், புனைந்தன வழுக்காம்;
உவப்பன வெறுப்பாம், வெறுப்பன வுவப்பாம்;
என்றிவை யனைத்து முணர்ந்தனை; அன்றியும்,
பிறந்தன பிறந்தன பிறவிக டோறும்
கொன்றனை யனைத்தும், அனைத்துநினைக் கொன்றன;
தின்றனை யனைத்தும், அனைத்துநினைத் தின்றன;
பெற்றனை யனைத்தும், அனைத்துநினைப் பெற்றன;
ஓம்பினை யனைத்தும், அனைத்துநினை யோம்பின;
செல்வத்துக் களித்தனை, தரித்திரத் தழுங்கினை;
சுவர்க்கத் திருந்தனை, நரகிற் கிடந்தனை;
இன்பமும் துன்பமு மிருநிலத் தருந்தினை;
ஒன்றொன் றொழியா துற்றனை; அன்றியும்,
புற்புதக் குரம்பை துச்சி லொதுக்கிடம்
என்னநின் றியங்கு மிருவினைக் கூட்டைக்
கல்லினும் வலிதாக் கருதினை; இதனுள்,
பீளையு நீரும் புலப்படு மொருபொறி;
மீளுங் குறும்பி வெளிப்படு மொருபொறி;
சளியு நீருந் தவழு மொருபொறி;
உமிழ்நீர் கோழை யொழுகு மொருபொறி;
வளியு மலமும் வழங்கு மொருவழி;
சலமுஞ் சீயுஞ் சரியு மொருவழி;
உள்ளுறத் தொடங்கி வெளிப்பட நாறுஞ்
சட்டக முடிவிற் சுட்டெலும் பாகும்

உடலூறு வாழ்க்கையை யுள்ளுறத் தேர்ந்து;
கடிமலர்க் கொன்றைச் சடைமுடிக் கடவுளை,
ஒழிவருஞ் சிவபெரும் போகவின் பத்தை,
நிழலெனக் கடவா நீர்மையொடு பொருந்தி;
எனதற-நினைவற-இருவினை மலமற-
வரவொடு செலவற-மருளற-இருளற-
இறவொடு பகலற-இகபர மற-ஒரு
முதல்வனைத், தில்லையுண் முளைத்தெழுஞ் சோதியை,
அம்பலத் தரசனை, ஆனந்தக் கூத்தனை,
நெருப்பினி லரக்கென நெக்குநெக் குருகித்
திருச்சிற் றம்பலத் தொளிருஞ் சிவனை,
நினைமின் மனனே; நினைமின் மனனே!
சிவபெரு மானைச், செம்பொன்னம் பலவனை,
நினைமின் மனனே! நினைமின் மனனே!

(இதன் பொருள்)

'நினைமின் மனனே!' என்பதுமுதல் 'நினைமின் மனனே!' என்பதுவரை.

(1—3 வரிகள்)

(பொழிப்புரை) சிவபெருமானை, மனமே; நீ சிந்தனை செய்வாயாக! மனமே! நீ சிந்தனை செய்வாயாக! செவந்த பொன்னினாகிய சபையிலுள்ளவனை, மனமே! நீ சிந்தனை செய்வாயாக! மனமே! நீ சிந்தனை செய்வாயாக!

'அலகைத்தேரின்' என்பதுமுதல் 'ஓம்பற்க' என்பதுவரை.

(4—5 வரிகள்)

(போ - ரை) பேய்த் தேரினையும் சுழலுகின்ற காற்றினையும் (ஒத்த) பொய்யாகிய உலக வாழ்க்கையையும், உடம்பையும் பாது காவாதிருப்பாயாக !

(வி - ரை) பேய்த்தேர்-கானல்-கால்-காற்று-ஓம்பல்-பாதுகாத்தல்.

'பிறந்தன இறக்கும், இறந்தன பிறக்கும்.'

(6—வது வரி)

(போ - ரை) பூமியிற் பிறந்தன அனைத்தும் (ஒருகாலத்தில்) இறந்துபோய்விடும்; (மற்றொருகாலத்தில்) இறந்தன யாவும் மீண்டும் பிறக்கும்.

'தோன்றின மறையும், மறைந்தன தோன்றும்.'

(7—வது வரி)

(போ - ரை) உலகிற் றோன்றிய பொருள் முழுதும் மறைந் தொழியும்; மறைந்த பொருள்கள் அனைத்தும் மீண்டும் உண்டாம்.

'பெருத்தன சிறுக்கும், சிறுத்தன பெருக்கும்.'

(8—வது வரி)

(போ - ரை) பெருத்த பொருள்கள் முழுதும் சிறுத்த பொருள் களாம்; சிறுத்த பொருள்களனைத்தும் பெருத்த பொருள்களாம்.

'உணர்ந்தன மறக்கும், மறந்தன உணரும்.'

(9—வது வரி)

(போ - ரை) அறிந்தவை யனைத்தும் மறந்துபோம்; மறந்தவை முழுதும் பின்பு உணவிற் றோன்றும்.

'புணர்ந்தன பிரியும், பிரிந்தன புணரும்.'

(10—வது வரி)

(பொ - ரை) சேர்ந்தவையெல்லாம் நீங்காநிற்கும்; பிரிந்த பொருள் முழுதும் மீண்டுஞ்சேரும்.

'அருந்தின' என்பதுமுதல் 'உணர்ந்தனை' என்பதுவரை.

(11—13 வரிகள்)

(பொ - ரை) உண்ணப்பட்டவை யனைத்தும் மலமாய் நீங்கும்; அணியப்பட்டவை யனைத்தும் அழுக்காக விலகும்; களிக்கத்தக்கவை யனைத்தும் வெறுக்கத்தக்கனவாம்; வெறுக்கத்தக்கவை யனைத்தும் களிக்கத்தக்கவையாம்; என்று சொல்லப்படுகின்ற இவையனைத்தும் (மனமே! நீ) பிரத்தியக்ஷமாகத் தெரிந்துகொண்டாய்.

'அன்றியும்,' (13—வது வரி)

(பொ - ரை) இவையல்லாமலும்.

'பிறந்தன' என்பதுமுதல் 'நினைக் கொன்றன.' என்பதுவரை.

(14—15 வரிகள்)

(பொ - ரை) (உலகின்கண்ணே இதுவரையில் அடுத்தடுத்து நீ) பலவாகப் பிறந்த பிறப்புக்களிலெல்லாம் பல உயிர்களையுங் கொன்றாய்; உன்னாற் கொல்லப்பட்ட அவை முழுதும் உன்னைக் கொன்றன.

'தின்றனை அனைத்தும், அனைத்தும் நினைத் தின்றன.'

(16—வது வரி)

(பொ - ரை) எல்லாப் பொருள்களையும் நீ உணவாகத் தின்றாய்; அவை யனைத்தும் உன்னை உணவாகக் கொண்டன.

'பெற்றனை யனைத்தும், அனைத்தும் நினைப் பெற்றன.'

(17—வது வரி)

(பொ - ரை) எல்லாப்பொருள்களுக்கும் நீ பிறப்பிடமாயினை; அப்பெற்ற அனைத்தும் நின்னைப் பெற்றன.

'ஓம்பினை அனைத்தும், அனைத்தும் நினை யோம்பின.'

(18—வது வரி)

(பொ - ரை) எல்லாப் பொருள்களையும் நீ காப்பாற்றினை; அவை யனைத்தும் நின்னைக் காத்தன.

'செல்வத்துக் களித்தனை, தரித்திரத் தழுங்கினை.'

(19—வது வரி)

(பொ - ரை) செல்வம் (உனை) அடைந்த காலத்து (அதனால்நீ) களிப்படைந்திருந்தனை; (அச்செல்வம் நீங்கி) தரித்திரம் உற்ற காலத்து (நீ) வருந்தினாய்.

'சுவர்க்கத் திருந்தனை, நரகிற் கிடந்தனை.'

(20—வது வரி)

(பொ - ரை) (நல்வினையால்) சுவர்க்கத்தின்கண் இன்பந்துய்த்தாய்; பாவத்தால் நரகத்து இடர்ப்பட்டாய்.

'இன்பமும் துன்பமும் இருநிலத் தருந்தினை.'

(21—வது வரி)

(பொ - ரை) இன்ப துன்பங்களாகிய இரண்டினையும் பெரிய பூவுலகின்கண் (நீ) அநுபவித்தாய்.

'ஒன்றொன் றொழியா துற்றனை.'

(22—வது வரி)

(பொ - ரை) மேற்கூறிய ஒவ்வொன்றினையும் நீங்காமல் அனுபவித்தாய்.

'அன்றியும்' (22—வது வரி)

(பொ - ரை) இவையன்றியும்.

'புற்புதக் குரம்பை' என்பதுமுதல் 'கருதினை' என்பதுவரை.
(23—25 வரிகள்)

(பொ - ரை) நீர்க்குமிழினை யொத்த உடம்பு, யாவரு மருவருக்கத்தக்க துச்சிலென்னும் ஒதுக்கிடத்தை யொத்தது என்று கூறும்படி பூமியில் சஞ்சரிக்கின்ற நல்வினை தீவினையாகிய பக்ஷிகள் தங்கும் கூட்டினை மலையைக் காட்டினும் வன்மை கொண்டதாக எண்ணினாய்.

'இதனுள்' (25—வது வரி)

(பொ - ரை) (அவ்வாறு நினைத்த) இந்தக் கூடாகிய உடம்பினுள்,

'பீளையு நீரும் புறப்படும் ஒருபொறி.'
(26—வது வரி)

(பொ - ரை) (கண்ணென்னும்) ஒரு பொறியின் வழியாகப் பீளையும் அதனுடனியைந்த நீரும் வெளிப்படும்.

'மீளுங் குறும்பி வெளிப்படும் ஒருபொறி.'
(27—வது வரி)

(பொ - ரை) வெளிப்படும் குறும்பி (காதென்னும்) ஒரு பொறியின் வழியாக வெளியாகும்.

'சளியு நீரும் தவழும் ஒருபொறி.'
(28—வது வரி)

(பொ - ரை) (மூக்கென்னும்) ஒரு பொறியின் மூலமாகச் சளியும் நீரும் இழியும்.

'உமிழ்நீர் கோழை ஒழுகும் ஒருபொறி.'

(29—வது வரி)

(பொ - ரை) (வாயென்னும்) ஒரு பொறியின் மூலமாக உமிழ் நீரும் சிலேஷ்மமும் (கோழையும்) வெளிப்பட்டொழுகும்.

'வளியு மலமும் வழங்கும் ஒருவழி.'

(30—வது வரி)

(பொ - ரை) (பாயுருவென்னும்) ஒரு வழியாகக் காற்றும் (அபானவாயுவும்) மலமும் வெளிப்படும்.

'சலமும் சீரியும் சரியும் ஒருவழி.'

(31—வது வரி)

(பொ - ரை) (உபத்தமென்னும்) ஒருவழியின் மூலமாக நீரும் சீயும் வெளிப்படும்,

'உள்ளுறத் தொடங்கி' என்பதுமுதல் 'உள்ளுறத் தேர்ந்து' என்பதுவரை.

(32—34 வரிகள்)

(பொ - ரை) (இத்தகைத்தாய்) உள்ளிடந் தொடக்கமாகவெளிப் படாநிற்க நாறுகின்ற உடம்பானது, உயிர் நீங்கிய காலத்துச் சுடப் பட்டு எலும்பாந் தன்மையைப் பெற்ற தேகத்துடன் கூடியிருக்கிற வாழ்க்கையை முழுதும் ஆராய்ந்து (இவ்வுடற்பற்று நீங்கி),

'கடிமலர்' என்பதுமுதல் 'பொருந்தி' என்பதுவரை.

(35—37 வரிகள்)

(பொ - ரை) மணந்தங்கிய கொன்றைமலரைச் சடைமுடிக் கண் அணிந்த சிவபெருமானை, நீங்குதலில்லாத சிவமாம் பெரு

வாழ்வைத் தருகின்ற இன்பத்தினை, (பாசவெயிற்பட்டுக் களைப் புறுவோர்க்கு) நிழலென எண்ணி, அந்நிழலை விட்டு நீங்காத தன்மையுடன் பொருந்தி;

‘எனதற’ என்பதுமுதல் ‘இகபரமற’ என்பதுவரை.

(38—40 வரிகள்)

(பொ - ரை) எனதென்னு (மமகாரம்) புறப்பற்று நீங்க, தற்போத எண்ணம் ஒன்றும் நீங்க, நல்வினை தீவினைகளாலாகும் மலவழுக்குகளாகிய ஆணவம் காமியம் மாயை என்னும் மும்மல நீங்க. (போக்கு வரவுகள்) பிறப்பு இறப்பு நீங்க, மாயாமயக்கம் நீங்க, (ஆணவ) அஞ்ஞான இருள் நீங்க, இரவுடன் பகலும் தோன்றுது நீங்க, இகத்திலும் பரத்திலும் உண்டாகும் வினைகள் நீங்க அதாவது இம்மை மறுமைப் பயன்களின் ஆசையொழிய,

‘ஒருமுதல்வனை’ என்பதுமுதல் ‘நினைமின்மனனே.’ என்பதுவரை.

(40—45 வரிகள்)

(பொ - ரை) ஒப்பற்ற முதற்கடவுளை, (திருக்கோயிலுள்) சிதம்பரத்தில் முளைத்தெழுந்த (சகளீகரித்தெழுந்த) ஜோதியுருக்கொண்டானை, திருச்சிற்றம்பலத்தின்கண் அதாவது பொன்னம்பலத்தில் எழுந்தருளியிருக்கும் தேவராசனை (சபாபதியை), சிவானந்திகள் மனதில் நடிப்பானை (ஆனந்தத்தாண்டவஞ் செய்தருள்பவனை), நெருப்பினிடத்து அரக்கைப்போல மனம் பல்கால் நெகிழ்ச்சியடைந்து, உருகுதலையடைந்து, திருச்சிற்றம்பலம் என்கிற சபையின்கண் பிரகாசிக்கின்ற சிவபெருமானை மனமே! (நீ) சிந்தனை செய்வாயாக! மனமே! (நீ) சிந்தனை செய்வாயாக!

'சிவபெருமானை' என்பதுமுதல் 'நினைமின்மனனே!'

என்பதுவரை.

(46—47 வரிகள்)

(பொ - ரை) சிவபெருமானை, செம்மையாகிய பொன்னம்பலத்தில் திருநடஞ் செய்தருள்பவனை, மனமே! நீ சிந்தனை செய்வாயாக! மனமே! நீ சிந்தனை செய்வாயாக!

(விசேடவுரை) மனமே! இளமை நிலையாது, யாக்கை நிலையாது, செல்வம் நிலையாது என்பதைச் செம்மையுற ஆராய்ந்து, இறைவன் திருவடிநிழலைப் பொருந்தி, யான் எனது அற, நெருப்பினில் அரக்கென நெக்குருகித், திருச்சிற்றம்பலத்து ஒளிரும் ஆநந்தக் கூத்தனை நினைவாயாக! நினைவாயாக என்பது.

## இரண்டாவது
## கோயிற்றிருவகவல்



காதள வோடிய கலகப் பாதகக்
கண்ணியர் மருங்கிற் புண்ணுடை யொடுங்
காதலுங் கருத்துமல் லானின் னிருதாட்
பங்கயஞ் சூடப் பாக்கியஞ் செய்யாச்
சங்கடங் கூர்ந்த தமியேன் பாங்கிருந்
தங்கோ டிங்கோ டலமருங் கள்வர்
ஐவர் கலகமிட் டலைக்குங் கானகம்
சலமலப் பேழை; இருவினைப் பெட்டகம்;

வாதபித் தங்கோழை குடிபுகுஞ் சீறூர்;
ஊத்தைப் புன்றோ லுதிரக் கட்டளை;
நாற்றப் பாண்டம்; நான்முழத் தொன்பது
பீற்றத் துண்டம்; பேய்ச்சுரைத் தோட்டம்;
அடலைப் பெரிய சுடலைத் திடருள்;
ஆசைக் கயிற்றி லாடும் பம்பரம்;
ஓயா நோய்க்கிடம்; ஓடு மரக்கலம்;
மாயா விகாரம்; மரணப் பஞ்சரம்;
சோற்றுத் துருத்தி; தூற்றும் பத்தம்
காற்றிற் பறக்குங் கானப் பட்டம்;
விதிவழித் தருமன் வெட்டுங் கட்டை;
சதுர்முகப் பாணன் றைக்குஞ் சட்டை;
ஈமக் கனலி லிடுசில் விருந்து;
காமக் கனலிற் கருகுஞ் சருகு;
கிருமி கிண்டுங் கிழங்கனு சருமி;
பவக்கொழுந் தேறுங் கவைக்கொழு கொம்பு;
மணமாய் நடக்கும் வடிவின் முடிவிற்
பிணமாய்க் கிடக்கும் பிண்டம்; பிணமேல்
ஊரிற் கிடக்க வொட்டா வுபாதி;
காலெதிர் குவித்த பூளை; காலைக்
கதிரெதிர் பட்ட கடும்பனிக் கூட்டம்;
அந்தரத் தியங்கு மிந்திர சாபம்;
அதிரு மேகத் துருவி னருநிழல்;
நீரிற் குமிழி; நீர்மே லெழுத்து;

கண்டுயில் கனவிற் கண்டகண் காட்சி;
அதனினும் பொல்லா மாயக் களங்கம்;
அமையு மமையும், பிரானே! யமையும்;
இமைய வல்லி வாழியென் றேத்த
ஆனந்தத் தாண்டவங் காட்டி
ஆண்டுகொண் டருள்கைநின் னருளினுக் கழகே.

(இதன் பொருள்)

'காதளவோடிய' என்பது முதல் 'பாங்கிருந்து; என்பதுவரை.

(1—5 வரிகள்)

(பொ - ரை) காதுவரைக்கும் நீண்டிருக்கின்ற பாதகத்தை வாய்க்கும் கலகக் கண்களையுடைய அரிவையரது இடைக்கணுள்ள புண்ணாகிய யோனி வயப்பட்டு சரிக்கின்ற ஆசையும் எண்ணமு மல்லாமல் தேவரீரது இரண்டு திருவடித் தாமரைகளையும் முடிக்கண் அணியப் பாக்கியஞ் செய்யாத துன்பமிருந்த துணையிலியாகிய அடியேனுடனிருந்து,

(வி - ரை) அரிவையர் - பெண்கள். முடி சிரசு.

'அங்கோடிங்கோடு' என்பதுமுதல் 'கானகம்' என்பதுவரை.

(6—7 வரிகள்)

(பொ - ரை) (உடலானது) அங்கும் இங்கும் சுழலுகின்ற பஞ்சேந்திரியங்களாகிய ஐந்து கள்வர்கள் ஒருவரோடொருவர் கலகஞ் செய்து வருத்துகின்ற காடு.

(வி - ரை) கள்வர், காட்டிற் செல்வோரை வருத்தல் போல, இந்திரியங்கள் ஒருவழிச் செல்லவொட்டாது ஆன்மாவைத் துன்புறுத்தலின் 'கள்வர்' என்றார்.

'சலமலப் பேழை.'

(8—வது வரி)

(பொ - ரை) சல முதலிய மலங்கள் தங்கிய பெரிய பெட்டி.

'இருவினைப் பெட்டகம்.'

(8—வது வரி)

(பொ - ரை) நல்வினை தீவினைகளைச் சேர்த்து வைத்தற் கிடமான அல்லது நல்வினை தீவினைகள் நிறைந்த பேழை.

'வாதபித் தங்கோழை குடிபுகுஞ் சீறூர்.'

(9—வது வரி)

(பொ - ரை) வாத பித்த சிலேஷ்மாதிகள் நிலைத்திருக்கின்ற சிற்றூர்.

(வி - ரை) திருவாசகம்:

"பொத்தை யூன்சுவர்ப் புழுப்பொதிந் துளுத்தசும் பொழுகிய [பொய்க்கூறை
யித்தை மெய்யெனக் கருதிநின் றிடர்க்கடற் சுழித்தலைப்படு [வேனை."

என்றதனுற் காண்க.

'ஊத்தைப் புன்றோ லுதிரக் கட்டளை.'

(10—வது வரி)

(பொ - ரை) அழுக்குடனிறைந்த புல்லிய சருமமும் செந்நீரும் (நிறைந்த) நிறை கருவி.

(வி - ரை) 'கட்டளை' என்பது நிறைகருவி; இது கல்லறுக்கும் கருவிக்கும் பெயர்.

'நாற்றப் பாண்டம்.'

(11—வது வரி)

(பொ - ரை) துர்நாற்றத்தையுடைய பாண்டம்.

'நான்முழத் தொன்பது, பீற்றத்துண்டம்.'

(11—12 வரிகள்)

(பொ - ரை) நான்குமுழ நீளமும் ஒன்பது துவாரங்களுமுள்ள கிழிந்த துண்டுத்துணி.

(வி - ரை) பாதமுதல் தலையளவு தேகத்தினளவு நான்குமுழமாதலால் 'நான்முழம்' எனவும், ஒன்பது துவார முள்ளதாதலால் 'ஒன்பது பீறல்' எனவுங் கூறினர். பீறல் - கிழிந்ததுணி.

'பேய்ச்சுரைத் தோட்டம்.'

(12—வது வரி)

(பொ - ரை) (உண்பதற் குதவாத) பேய்ச்சுரைக் கொடிகள் போன்ற உள்ளுறுப்புகள் நிறைந்த தோட்டம்.

(வி - ரை) உடலுள் குடல் முதலிய உறுப்புகளும், இரைப்பை முதலியனவும் சுரையின் கொடிபோன்று பின்னப்பட்டும் சுருண்டுமிருத்தலின் 'பேய்ச்சுரைத் தோட்டம்' என்றார்.

'அடலைப் பெரிய சுடலைத் திடருள்.'

(13—வது வரி)

(பொ - ரை) (உயிர்களைக் கொன்று தின்பது பற்றி) மிக்க சாம்பர் நிறைந்த சுடலையாகிய மேட்டுள்ளிடம்.

'ஆசைக் கயிற்றில் ஆடும் பம்பரம்.'

(14—வது வரி)

(பொ - ரை) ஆசையென்னும் கயிற்றினால் சுழலுகின்ற பம்பரமென்னும் சுழற் கருவி.

'ஓயா நோய்க்கிடம்.'

(15—வது வரி)

(பொ - ரை) நீங்காது என்றும் வந்துகொண்டேயிருக்கும் நோய்களுக்கு இருக்கை.

(வி - ரை) இருக்கை - இடம்.

'ஓடு மரக்கலம்.'

(15—வது வரி)

(பொ - ரை) நீர்மேல் ஓடுகின்ற கப்பல்.

'மாயா விகாரம்.'

(16—வது வரி)

(பொ - ரை) மாயையாகிய விகாரத்தோடுங் கூடியது.

'மரணப் பஞ்சரம்.'

(16—வது வரி)

(பொ - ரை) மரண மடையுங் கூண்டு.

'சோற்றுத் துருத்தி.'

(17—வது வரி)

(பொ - ரை) சோறு நிறைக்கும் தோற்றுருத்தி.

(வி - ரை) 'துருத்தி' என்பது கொல்ல னுலையூதும் தோற் கருவி.

'தூற்றம் பத்தம்.'

(17—வது வரி)

(பொ - ரை) காற்றில் தூற்றுகின்ற கருவி.

(வி - ரை) 'பத்தம்' என்பது நார் முதலியவற்றால் கட்டப் பட்டு பதர் நீக்கக் காற்றில் தூற்றும் ஒருவகை தூற்றும் கருவி.

'காற்றிற் பறக்குங் கானப் பட்டம்.'

(18—வது வரி)

(பொ - ரை) காற்றிற் பறக்கின்ற ஓசையுடன்கூடிய காற்றாடி.

(வி - ரை) கானப்பட்டம் காற்றுத் தன்மீது படுங்காலத்து ஓசையிடுதலின் அதனை யவ்வாறு கூறப்பட்டது.

'விதிவழித் தருமன் வெட்டுங் கட்டை.'

(19—வது வரி)

(பொ - ரை) இறைவன் விதிப்படி அல்லது கன்மத்திற்குத் தக்கவாறு எமன் வெட்டுகின்ற கட்டை.

'சதுர்முகப் பாணன் றைக்குஞ் சட்டை.'

(20—வது வரி)

(பொ - ரை) நான்கு முகங்களையுடைய பிரமனாகிய துன்னு வோன் றைக்கின்ற அங்கி.

(வி - ரை) துன்னுவோன் - தையற்காரன். அங்கி - சட்டை.

'ஈமக் கனலி லிடுசில விருந்து.'

(21—வது வரி)

(பொ - ரை) சுடுகாட்டு நெருப்பில் வைக்கப்பட்ட சிறுவிருந்து.

(வி - ரை) பெருந்தீக்குப் புன்தேகம் எரிக்கப்படும் பொரு ளன்றா மாகலின் 'சிலவிருந்து' என்றார்.

'காமக் கனலிற் கருகுஞ் சருகு.'

(22—வது வரி)

(பொ - ரை) காமமாகிய நெருப்பினால் சாம்பலாகாது கருகிக் கெடும் சாரமில்லாத் தழை.

(வி - ரை) சாரமில்லாத்தழை-உலர்ந்த இலை.

'கிருமி கிண்டும் கிழங்கஞ் சருமி.'

(23—வது வரி)

(போ - ரை) புழுக்களால் கிண்டப்படுகின்ற தோலுடனியைந்த கிழங்கு.

(வி - ரை) கிண்டுதல்-குடைதல்.

'பவக்கொழுந் தேறுங் கவைக்கொழு கொம்பு.'

(24—வது வரி)

(போ - ரை) பிறவியென்னும் இளந்தளிர் அல்லது பாவமாகிய தளிர் ஏறிப் படருதற்கான சிறு கிளைகள் கிளைத்துள்ள கொழு கொம்பு.

(வி - ரை) கொழுகொம்பு - கொடியேறுகொம்பு, நடுக்கொம்பு.

'மணமாய்' என்பதுமுதல் 'பிண்டம்' என்பதுவரை.

(25—26 வரிகள்)

(போ - ரை) (முன்னர்) மணங்கொண்டு நடக்கும் வடிவத்துடன் பொருந்தி (பின்னர்) ஆயுண் முடிவில் பிணமாகி (அசைவின்றிக்) கிடக்கும் பிண்டம்.

(வி - ரை) மணங்கொண்டு நடத்தல் - விவாக கோலத்துடன் சஞ்சரித்தல். ஆயுண் முடிவு-அந்தியகாலம். பிண்டம்-சவ்வுருவம். மணங் கொள்கையில் மாலையுங் கூறையுந் தரித்தல்போல் பிணமாகுங் காலும் தரித்தலின் 'மணமாய் கிடக்கும் பிண்டம்' என்ருர்.

'பிணமேல் ஊரிற் கிடக்க வொட்டா வுபாதி.'

(26—27 வரிகள்)

(பொ - ரை) பிணமானபின் எனிலோ, ஊரினிடத்துச் சிறிது பொழுதுந் தங்க வைக்காதபடி (பலராலும் செய்யப்படுகின்ற) துன்ப முடையது.

(வி - ரை) பிணமானபின் ஊரில் தங்கவொட்டாது விரைவில் ஈமத்திடை வைக்க மற்றவர் புகுதலின் 'ஊரிற் கிடக்க வொட்டா வுபாதி' என்றார்.

'காலெதிர் குவித்த பூளை.'

(28—வது வரி)

(பொ - ரை) காற்றிற் கெதிராகக் குவியலாகச் சேர்த்து வைக் கப்பட்ட பூளை மலர்.

'காலைக், கதிரெதிர் பட்ட கடும்பனிக் கூட்டம்.'

(28—29 வரிகள்)

(பொ - ரை) காலையிலெழும் சூரியனுக்கு எதிர்பட்ட கடிய பனியின் சும்மை.

(வி - ரை) எழுதல்-உதயமாதல். கடியபணி-கொடியபனி, அல் லது நிறைந்த பனி.

'அந்தரத் தியங்கு மிந்திர சாபம்.'

(30—வது வரி)

(பொ - ரை) (மழைக்காலத்து) ஆகாயத்தில் சஞ்சரிக்கும் இந் திரவில்.

(வி - ரை) சஞ்சரித்தல்-தோன்றிமறைதல். இந்திரவில்-வான வில், இந்திரதனுசு.

'அதிரு மேகத் துருவி னருநிழல்.'

(31—வது வரி)

(போ - ரை) சப்திக்கின்ற மேகத்தை யொத்த வுருவினை யுடைய அருகிய நிழல்.

(வி - ரை) அருநிழல்-அரியநிழல் அல்லது நுட்பமாகிய நிழல்.

'நீரிற் குமிழி.'

(32—வது வரி)

(போ - ரை) நீரினிடத்துத் தோன்றி மறைகின்ற நீர்க்குமிழி.

'நீர்மே லெழுத்து.'

(32—வது வரி)

(போ - ரை) நீரின்மேலெழுதப்பட்ட எழுத்து.

'கண்டுயில் கனவிற் கண்ட காட்சி.'

(33—வது வரி)

(போ - ரை) நித்திரை செய்யுங்காலத்தி லுண்டான கனவி னிடம் கண்ட கனத் தோற்றம்.

'அதனினும் பொல்லா மாயக் களங்கம்.'

(34—வது வரி)

(போ - ரை) அந்நிலையற்ற தோற்றரவினும் கொடியதாகிய மாயம் பொருந்திய குற்றமுள்ள பொருள்.

(வி - ரை) தோற்றரவு காக்ஷி.

'அமையும் அமையும்; பிரானே! அமையும்.'

(35—வது வரி)

(போ - ரை) (இச்சரீரத்துடன்) கூடி வாழும் வாழ்க்கை போதும் போதும்; எம் தலைவனே! போதும்.

(வி - ரை) இத்தன்மைவாய்ந்த சரீரம் எனக்கும் வரும் என்பது கருத்து. இவ்வாறு பலவகைப்பட்ட துன்பத்துட னியைந்த தேகத் துடனிருத்தல் பொறுதார் 'அமையும் அமையும்' என்றார்.

'இமையவல்லி' என்பதுமுதல் 'அழகே' என்பதுவரை.

(36—38 வரிகள்)

(போ - ரை) பர்வதராஜ புத்ரியாகிய பார்வதியார் வாழ்த்துச் சொல்லித் துதிக்க, சிவானந்த நடனத்தை அடியேன் தரிசிக்குமாறு திருவருள் புரிந்து (அடியேனை) அடிமை கொண்டருளுதல் நின் திருவருளினுக்கு அழகைத் தருவதாகும்.

### இரண்டாவது திரு அகவலின் மொத்த கருத்து

இறைவ! மனத்தை வசித்துக் கலகத்தைச் செய்யும் கண்ணை யுடைய அரிவையர் மருங்கிலுள்ள புண்ணின்கண் ஆசை வைத்துழ லும் அடியேனுடனிருந்து, உழல்விக்கும் பஞ்சேந்திரியக் கள்வர் கலகமிட்டு வருத்தும் கானகத்தையும், நீர்க்குமிழியையும், நீர்மே லெழுத்தையும் ஒத்த இந்நிலையற்ற தேகத்துடன் கூடிப் புசித்த போகம் அமையும் அமையும். இனி இமயவல்லி வாழி என்று ஏத்த ஆநந்தத்தாண்டவம் தரிசிப்பித்து ஆண்டுகொண் டருள்கை நின் னருளினுக் கழகாம் என்பது.

---

மூன்றாவது

## கோயிற்றிருவகவல்

பாற்கடல் கடையப் படுங்கடு வெண்ணெயைத்
திருமிடற் றடக்கிய சிவனை யடைக்கலம்;
அடங்கலு மடக்கிடுங் கடுங்கொலைக் காலனைக்

காலெடுத் தடக்கிய கடவுள்!நின் னடைக்கலம்
உலகடங் கலும்படைத் துடையவன் றலைபறித்
திடக்கையி லடக்கிய இறைவ!நின் னடைக்கலம்;
செய்யபொன் னம்பலச் செல்வ!நின் னடைக்கலம்;
ஐய!நின் அடைக்கலம்; அடியநின் னடைக்கலம்;
மனவழி யலைத்திடுங் கனவெனும் வாழ்க்கையும்;
விழுப்பொரு ளறியா வழுக்குறு மனனும்;
ஆணவ மலத்துதித் தளைந்ததி னுளைந்திடு
நிணவைப் புழுவென நெளிந்திடு சிந்தையும்;
படிறும் பாவமும், பழிப்புறு நினைப்பும்,
தவறும், அழுக்காறும், இவறுபொய்ச் சாப்பும்,
கவடும், பொய்யும், சுவடும், பெருஞ்சினம்
இகலும், கொலையும், இழிப்புறு புன்மையும்,
பகையும், அச்சமும், துணிவும், பனிப்பும்,
முக்குண மடமையும், ஐம்பொறி மயக்கமும்,
இடும்பையும் பிணியு மிடுக்கிய வாக்கையை;
உயிரெனுங் குருகுவிட் டோடுங் குரம்பையை,
எலும்பொடு நரம்புகொண் டிடையிற் பிணித்துக்
கொழுந்தசை மேய்ந்து மொழுக்குவிழுங் குடிலைச்,
செழும்பெழு வதிரச் சிறுபுழுக் குரம்பையை,
மலவுடற் குடத்தைப், பலவுடற் புட்டிலைத்,
தொலைவிலாச் சோற்றுத் துன்பக் குழியைக்,
கொலைபடைக் கலம்பல கிடக்குங் கூட்டைச்,
சலிப்புறு வினைப்பல சாக்குக் குப்பையைக்,

கோட்சரக் கொழுகும் பீறற் கோணியைக்
கோபத்தீ மூட்டுங் கொல்லன் றுருத்தியை,
ஐம்புலப் பறவை யடையும்பஞ் சரத்தை,
புலராக் கவலை விளைமரப் பொதும்பை,
ஆசைக் கயிற்றி லாடும்பம் பரத்தைக்,
காசிற் பணத்திற் சுழலுங்காற் றாடியை,
மக்கள் வினையின் மயங்குந் திகிரியைக்,
கடுவெளி யுருட்டிய சகடக் காலைப்,
பாவச் சரக்கொடு பவக்கடல் புக்குக்
காமக் காற்றெடுத் தலைப்பக்
கெடுவழிக் கரைசேர் கொடுமரக் கலத்தை,
இருவினை விலங்கொடு மியங்குபுற் கலனை
நடுவன்வந் தழைத்திட நடுங்கிடும் யாக்கையைப்
பிணமெனப் படுத்தியான் புறப்படும் பொழுதுநின்
அடிமலர்க் கமலத்துக் கபயநின் னடைக்கலம்;
வெளியிடை யுருமிடி யிடித்தென வெறித்தெழுங்
கடுநடை வெள்விடைக் கடவுணின் னடைக்கலம்;
இமையா நாட்டத் திறையே! அடைக்கலம்;
அடியார்க் கெளியாய்! அடைக்கல மடைக்கலம்;
மறையவர் தில்லை மன்றுநின் றாடிக்
கருணைமொண் டலையெறி கடலே! அடைக்கலம்,
தேவரு முனிவருஞ் சென்றுநின் றேத்தப்
பாசிழைக் கொடியொடு பரிந்தருள் புரியும்
எம்பெரு மானின் னிணையடிக் கபயம்;
அம்பலத் தரசே! அடைக்கல முனக்கே.

(இதன் பொருள்)

'பாற்கடல்' என்பதுமுதல் 'அடைக்கலம்' என்பதுவரை.

(1—2 வரிகள்)

(பொ - ரை) (தேவர்களும் அசுரர்களும்) திருப்பாற்கடலைக் கடைய (அக்காலத்தில்) அதினின்றும் உண்டான ஆலகால விஷமாகிய வெண்ணெயை அழகிய கண்டத்தின்கண்ணே இருக்கச் செய்த சிவபெருமானே! அடியேன் உன் கையடை.

'அடங்கலும்' என்பதுமுதல் 'அடைக்கலம்' என்பதுவரை.

(3—4 வரிகள்)

(பொ - ரை) எல்லாவற்றையும் (தனது) வல்லமையினால் அடக்குகின்ற கடுமையான கொலைத்தொழிலைச் சுபாவமாகப் புரியும் யமனைத், திருவடியைத் தூக்கியெடுத்து உதைத்து அடக்கிவிட்ட கடவுளே! அடியேன் உன் கையடை.

(வி - ரை) சிவபெருமான் இயமனைத் தமது திருவடியினால் உதைத்தமையை,

"மதத்தான் மிக்கான் மற்றிவன் மைந்த னுயிர்வவ்வப்
பதைத்தா னென்னு வுன்னி வெகுண்டான் பதிமூன்றுஞ்
சிதைத்தான் வாமச் சேவடி தன்னாற் சிறிதுந்தி
யுல்தத்தான் கூற்றன் விண்முகில் போன்வண் ணுறவீழ்ந்தான்"

எனவும்,

"மார்க்கண்டர்க் காக மறலிபட்ட பாட்டையுன்னிப்
பார்க்கினன்பர்க் கென்ன பயங்காண் பராபரமே."

எனவும் வருவனவற்றாற் காண்க.

'உலகடங்கலும்' என்பதுமுதல் 'அடைக்கலம்'
என்பதுவரை.

(5—6 வரிகள்)

(பொ - ரை) உலகமுழுதும் சிருஷ்டித்தவனுகிய பிரமாவின் ஒரு தலையைக் கிள்ளி இடது காத்தில் தரித்துக்கொண்ட இறைவனே! அடியேன் உன் கையடை.

'செய்யபொன் னம்பலச் செல்வ! நின் அடைக்கலம்.'

(7—வது வரி)

(பொ - ரை) செவ்விய பொன்னம்பலத்தி லெழுந்தருளிய செல்வனே! அடியேன் உன் கையடை.

'ஐய! நின் அடைக்கலம்! அடியநின் னடைக்கலம்.'

(8—வது வரி)

(பொ - ரை) ஐயனே! உன் கையடை; அடியேன் உன் அடைக்கலம்.

'மனவழி யலைந்திடுங் கனவெனும் வாழ்க்கையும்.'

(9—வது வரி)

(பொ - ரை) மனத்தின் வழியே அலைக்கப்படுகின்ற சொப்பனத்துக்கு ஒப்பாகிய இப் பிரபஞ்ச வாழ்வும்,

'விழுப்பொரு ளறியா வழுக்குறு மனனும்.'

(10—வது வரி)

(பொ - ரை) (திருவருள் என்னும்) மேன்மையாகிய பொருளை ஆராய்ந்தறியாத அழுக்கடைந்த அல்லது குற்றம் பொருந்திய மனமும்,

'ஆணவமலத்து' என்பதுமுதல் 'சிந்தையும்' என்பதுவரை.

(11—12 வரிகள்)

(பொ - ரை) ஆணவமலத்தின்கண் பிறந்து கலந்து அதிலேயே உழைத்துக்கொண்டிருக்கும் நிணத்திலுண்டாம் புழுவைப்போன்று நெளியாகின்ற அல்லது அசைகின்ற சிந்தனையும்,

'படிறும்' என்பதுமுதல் 'ஆக்கையை' என்பதுவரை.

(13—19 வரிகள்)

(பொ - ரை) வஞ்சகமும், பாவமும், (பலரும்) பழித்தற்குரிய நினைப்பும், குற்றமும் பொறாமையும், மிகுந்த மறதியும், வஞ்சகமும், அசத்தியமும், இவற்றின் தழும்பும், பெருங் கோபத்தில் வல்லபமும், கொலைத்தொழிலும், இழிவு படுத்தற்குரிய இழி தொழில்களும், சத்துருத்துவமும், பயமும், துணிதலும், நடுக்கமும், இராசத-தாமத-சாத்துவீகமாகிய முக்குண வசத்தாலுண்டான அறியாமையும், மெய்-வாய்-கண்-மூக்கு-செவி என்னும் ஐம்பொறியின் இணக்கமும், துன்பமும் வியாதிகளும் (ஆகிய இவற்றைக்) கைக்கொண்டிருக்கின்ற உடம்பை,

(வி - ரை) ஐம்பொறியின் இணக்கமும் - ஐந்து பொறிகளின் வாசல் அல்லது செயல்.

'உயிரெனும் குருகுவிட் டோடும் குரம்பையை.'

(20—வது வரி)

(பொ - ரை) உயிர் என்கிற பறவையானது விட்டு ஓடாநின்ற கூட்டினை,

'எலும்போடு' என்பதுமுதல் 'குடிலை' என்பதுவரை.

(21—22 வரிகள்)

(பொ - ரை) எலும்பையும் நரம்பையுங் கொண்டு இடையிலே கட்டி, கொழுமையாகிய மாமிசத்திஞல் மூடப்பட்டு, மெழுகி யிருக்கும் குடிசையை,

'செழும்பெழு வுதிரச் சிறுபுழுக் குரம்பையை.'

(23—வது வரி)

(பொ - ரை) செழுமையுண்டாகிய உதிரமயமான சிறிய புழுக்கள் பொருந்திய கூட்டை,

'மலவுடற் குடத்தை,'

(24—வது வரி)

(பொ - ரை) மலம் நிறைந்த உடம்பாகிய பாண்டத்தை,

'புலவுடற் புட்டிலை,'

(24—வது வரி)

(பொ - ரை) புலால் சரக்கைக் கொண்டிருக்கும் உடம்பாகிய புட்டியை, அல்லது ஊன் பொதியப்பெற்ற கூடையினை,

'தொலைவிலாச் சோற்றுத் துன்பக் குழியை,'

(25—வது வரி)

(பொ - ரை) நீக்கமில்லாத சோற்றிஞல் தூர்க்கப்பட்ட துன்பமயமாகிய பள்ளத்தை,

'கொலைபடக் கலம்பல கிடக்குங் கூட்டை,'

(26—வது வரி)

(பொ - ரை) கொலை செய்யத்தகுந்த பல ஆயுதங்கள் தங்கியிருக்கின்ற கூட்டினை அல்லது தூணியினை,

'சலிப்புறு வினைப்பல சரக்குக் குப்பையை,'
(27—வது வரி)

(பொ - ரை) (மிகவும்) சலித்தற்குரிய அல்லது வெறுப்படைதற்குரிய வினைகளென்கிற பலவகைப்பட்ட சரக்குகளின் குவியலை,

'கோட்சரக் கொழுகும் பீறற் கோணியை,'
(28—வது வரி)

(பொ - ரை) கோள் சொல்லுதல் அல்லது பழமொழிகளாகிய துன்பச் சரக்குகள் சிந்துகின்ற கிழிச்சற் கோணியை,

'கோபத்தீ மூட்டுங் கொல்லன் துருத்தியை,'
(29—வது வரி)

(பொ - ரை) கோபமாகிய தீயை மூள்விக்கின்ற கொல்லனது (உலைகளத்திலுள்ள துருத்திபோன்ற) துருத்தியை,

'ஐம்புலப் பறவை யடையும்பஞ் சரத்தை,'
(30—வது வரி)

(பொ - ரை) ஐம்புலன்கள் என்கிற பறவைகள் சேர்ந்திருக்கப் பெற்ற கூட்டை,

'புலராக் கவலை விளைமரப் பொதும்பை,'
(31—வது வரி)

(பொ - ரை) அழியாத விசனங்கள் விளைதற் கிடமான மரப் பொந்தை,

'ஆசைக் கயிற்றி லாடும்பம் பரத்தை,'
(32—வது வரி)

(பொ - ரை) ஆசையாகிய கயிற்றினல் ஆட்டப்படுகிற பம்பரத்தை,

'காசிற் பணத்திற் சுழலுங்காற் றாடியை,'

(33—வது வரி)

(பொ - ரை) காசிலும் பணத்திலும் சுழலாநின்ற காற்றாடியை,

'மக்கள் வினையின் மயங்குந் திகிரியை,'

(34—வது வரி)

(பொ - ரை) ஆன்மாக்கள் செய்யும் கன்மத்திற்குத் தக்கபடி மயங்கி (எக்காலமும்) சுழன்றுவரும் சக்கரத்தினை,

'கடுவெளி யுருட்டிய சகடக்காலை,'

(35—வது வரி)

(பொ - ரை) கடுவெளியி லுருட்டின வண்டிச் சக்கரத்தை,

(வி - ரை) கடுவெளி-கொடியவெளி அல்லது (பிரபஞ்சமாகிய) வெட்ட வெளியுமாம்.

'பாவச்சரக்கோடு என்பதுமுதல் மரக்கலத்தை'

என்பதுவரை.

(36—38 வரிகள்)

(பொ - ரை) பாவமாகிய சரக்குகளை யேற்றிக்கொண்டு, பிறவியாகிய கடலிற் புகுந்து காம மென்கிற காற்றானது மோதி அலைத்தலால் கெட்டவழியாகிய கரையினை யடைகின்ற கொடிய மரக்கலத்தை,

(வி - ரை) கெட்டவழி-தீயவழி. 'கெடுமரக்கலத்தை' என்றும் பாடமுண்டு; இதற்கு, 'கெடுகின்ற கப்பலை' என்பது பொருள்.

'இருவினை விலங்கொடு மியங்குபுற் கலனை,'

(39—வது வரி)

(போ - ரை) நல்வினை, தீவினை என்னும் இருவினையாகிய சங்கிலிகளுடன் சஞ்சரிக்கும் உயிரை,

'நடுவன்வந்து' என்பதுமுதல் 'அடைக்கலம்' என்பதுவரை.

(40—42 வரிகள்)

(போ - ரை) யமன் வந்து விளிக்க நடுக்க மெய்துகின்ற (மேற்கூறிய லக்ஷணங்களோடுங் கூடிய) உடலைப் பிணத்தன்மையாக்கி, (ஆன்மாவாகிய) அடியேன் வெளிப்படும்போது தேவரீரது திருவடியென்கிற தாமரைமலருக்கு அபயம், உன் கையடை.

(வி - ரை) பிணத்தன்மை யாக்கி-சவமாகக் கிடத்திவிட்டு.

'வெளியிடை' என்பதுமுதல் 'அடைக்கலம்' என்பதுவரை.

(43—44 வரிகள்)

(போ - ரை) ஆகாயத்திலே இடிஇடித்தாற்போல மதித்தெழாநின்ற வேகமாகிய நடையினையுடைய வெண்மையாகிய இடபத்தின் மீது எழுந்தருளுகின்றகடவுளே! தேவரீருக்கு அடைக்கலம்.

(வி - ரை) மதித்து எழுதல் ஆவேசத்துடன் எழுதல்.

'இமையா நாட்டத் திறையே! அடைக்கலம்,'

(45—வது வரி)

(போ - ரை) இமையாத கண்ணினை யுடைய இறைவனே! அடைக்கலம்.

'அடியார்க் கெளியாய்! அடைக்கலம், அடைக்கலம்,'

(46—வது வரி)

(பொ - ரை) அன்பர்கட்கு எளியவனே! அடைக்கலம் அடைக்கலம்.

'மறைவர்' என்பதுமுதல் 'அடைக்கலம்' என்பதுவரை.

(47—48 வரிகள்)

(பொ - ரை) தீட்சித பிராமணர்களாகிய மூவாயிரவர்கள் வசிக்கின்ற தில்லையம்பதியில் கனகவம்பலத்தி லெழுந்தருளி ஆனந்த நடனஞ் செய்து, கிருபையை முகந்து அலைகளாக வீசுகின்ற இன்ப சமுத்திரமே! அடைக்கலம்.

(வி - ரை) 'கடலே' என்பதற்குப் பதில் 'கடவுளே' என்றும் பாடமுண்டு.

'தேவரு முனிவரு' என்பதுமுதல் 'அபயம்' என்பதுவரை.

(49—51 வரிகள்)

(பொ - ரை) தேவர்களும் முனிவர்களும் சென்றிருந்து துதி செய்ய, பசுமையாகிய பொன்னாபரணங்களை யணிந்த கொடிபோல் பவளாகிய உமாபிராட்டியோடு இரங்கி அருள்புரிகின்ற எம்பிரானே! தேவரீரது திருவடியிணைக்கு அபயம்.

'அம்பலத் தரசே! அடைக்கல முனக்கே.'

(52 வரி)

(பொ - ரை) பொன்னம்பலத்துக்கு இறைவனே! உனக்கே அடியேன் கையடை.

### மூன்றவது திருவகவலின் மொத்த கருத்து

திருப்பாற்கடலி லுதித்த விஷயமாகிய வெண்ணெயைத் திருமிடற்றிலடக்குதல், எல்லா வுயிர்களையும் அடக்கும் ஆற்றலுள்ள யமனைத் திருவடியா லுதைத்தடக்குதல் முதலிய அற்புதச் செயல்களைச் செய்த தில்லையம்பலத் தலைவனே! கனவினையொத்த இப்பொய்வாழ்வினையும் இப்பொய் யுடம்பினையும் விலகி நான் வெளிப்படும்போது உன் திருவடியிணையே எனக்குக் கதியென்பது.

---

நான்காவது

## கச்சித்திருவகவல்

திருமால் பயந்த திசைமுக னமைத்து
வருமேழ் பிறவியு மானுடத் துதித்து
மலைமகள் கோமான் மலரடி யிறைஞ்சிக்
குலவிய சிவபதங் குறுகா தவமே

மாதரை மகிழ்ந்து காதல்கொண்டாடும்
மானிடர்க் கெல்லாம் யானெடுத் துரைப்பேன்
விழிவெளி மாக்க டெளிவுறக் கேண்மின்!
முள்ளுங் கல்லு முயன்று நடக்கும்
உள்ளங் காலைப் பஞ்சென வுரைத்தும்,

வெள்ளெலும் பாலே யேவிய கணைக்கால்
துள்ளும் வராலெனச் சொல்லித் துதித்தும்,
தசையு மெலும்புந் தக்கபுன் குறங்கை

இசையுங் கதலித் தண்டென வியம்பியும்,
நெடுமுட ணுங்கி நின்றிடு மிடையைத்
துடிபிடி யென்று சொல்லித் துதித்தும்,
மலமுஞ் சலமும் வழும்புந் திரையும்
அலையும் வயிற்றை யாலிலை யென்றும்,
சிலந்தி போலக் கிளைத்துமுன் னெழுந்து
திரண்டு விம்மிச் சீப்பாய்ந் தேறி
உகிராற் கீற வுலர்ந்துள் ளுருகி
நகுவார்க் கிடமாய் நான்று வற்றும்
முலையைப் பார்த்து முளரிமொட் டென்றும்,
குலையுங் காமக் குருடர்க் குரைப்பேன்;
நீட்டவு முடக்கவு நெடும்பொருள் வாங்கவும்
ஊட்டவும் பிசையவு முதவியிங் கியற்றும்
அங்கையைப் பார்த்துக் காந்தளென் றுரைத்தும்,
வேர்வையு மழுக்கு மேவிய கழுத்தைப்
பாரினி லினிய கமுகெனப் பகர்ந்தும்,
வெப்பு மூத்தையு மேவிய வாயைத்
துப்பு முருக்கின் றூய்மல ரென்றும்,
அன்னமுங் கறியு மசைவிட் டிறக்கும்
முன்னிய பல்லை முத்தென மொழிந்தும்,
நீருஞ் சளியு நின்றுநின் றொழுகும்
கூரிய மூக்கைக் குமிழெனக் கூறியும்,
தண்ணீர் பீளை தவிரா தொழுகும்
கண்ணைப் பார்த்துக் கழுநீ ரென்றும்,

உள்ளுங் குறும்பி யொழுகுங் காதை
வள்ளைத் தண்டின் வளமென வாழ்த்தியும்,
கையு மெண்ணெயுங் கலவா தொழியில்
வெய்ய வதரும் பேனும் விளையத்
தக்க தலையோட் டின்முளைத் தெழுந்த
சிக்கின் மயிரைத் திரண்முகி லென்றும்,
சொற்பல பேசித் துதித்து நீங்கள்
நச்சிச் செல்லு நரக வாயில்;
தோலு மிறைச்சியுந் துதைந்துசீப் பாயும்
காமப் பாழி; கருவிளை கழனி;
தூமைக் கடவழி; தொளைபெறு வாயில்;
எண்சா ணுடம்பு மிழியும் பெருவழி;
மண்பாற் காமங் கழிக்கு மறைவிடம்;
நச்சிக் காமுக நாய்தா னென்றும்
இச்சித் திருக்கு மிடைகழி வாயில்;
திங்கட் சடையோன் திருவரு ளில்லார்
தங்கித் திரியுஞ் சவலைப் பெருவழி;
புண்ணிது வென்று புடவையை மூடி
உண்ணீர் பாயு மோசைச் செழும்புண்
மால்கொண் டறியா மாந்தர் புகும்வழி;
நோய்கொண் டொழியா நுண்ணியர் போம்வழி;
தருக்கிய காமுகர் சாரும் படுகுழி;
செருக்கிய காமுகர் சேறுஞ் சிறுகுழி;

பெண்ணு மாணும் பிறக்கும் பெருவழி;
மலஞ்சொரிந் திழியும் வாயிற் கருகே
சலஞ்சொரிந் திழியுந் தண்ணீர் வாயில்;
இத்தை நீங்க ளினிதென வேண்டா;
பச்சிலை யிடினும் பத்தர்க் கிரங்கி
மெச்சிச் சிவபத வீடருள் பவனை,
முத்தி நாதனை மூவா முதல்வனை,
அண்ட ரண்டமு மனைத்துள புவனமும்
கண்ட வண்ணலைக், கச்சியிற் கடவுளை,
ஏக நாதனை, இணையடி யிறைஞ்சுமின் !
போக மாதரைப் போற்றுத லொழிந்தே.

(இதன் பொருள்)

'திருமால்பயந்த' என்பது முதல் 'கேண்மின்'!
என்பது வரை.

(1—7 வது வரிகள்)

(பொ - ரை) விஷ்ணுமூர்த்தி பெற்ற சதுர்முகப் பிரமதேவன் சிருஷ்டித்து வருகின்ற எழுவகைப் பிறவிகளினும் மனிதஜனனத்தி லுதித்து, உமாதேவியின் தலைவனாகிய சிவபெருமானது தாமரை மலர்போன்ற பாதங்களைப் பணிந்து, விளங்குகின்ற சிவபதவியை யடையாமல் வீணாகப் பெண்களை இச்சைகொண்டு ஆசையினைப் பாராட்டாநின்ற மாந்தர்கள் யாவருக்கும் (சில உண்மைகள்) அடியே னெடுத்துச் சொல்லுவேன்; புறக்கண்களையுடைய மாந்தர்களே ! நீங்கள் தெளிவடையக் கேளுங்கள்! (அவை எவையென்றால் பெண் களினுடைய),

(வி - ரை) விளிவெளிமாக்கள் என்றும்பாடமுண்டு; சாதலுக்குரிய எளிமையினையுடைய மாந்தர்கள் என்பதுபொருள். ஏழ்பிறவி- தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்பன.

'முள்ளுங்கல்லு' என்பதுமுதல் 'உரைத்தும்' என்பதுவரை.

(8—9 வரிகள்)

(பொ - ரை) முள்ளின்மீதும் கல்லின்மீதும் முயன்று நடக்கின்ற உள்ளங்கால்களைச் செம்பஞ்செனறு சொல்லியும்,

'வெள்ளேலும்பாலே' என்பதுமுதல் 'துதித்தும்' என்பதுவரை.

(10—11 வரிகள்)

(பொ - ரை) வெண்மையாகிய எலும்புகளினாலேயாக்கப்பெற்ற கணைக்காலைத் துள்ளுகின்ற வரால் மீன்களென்று கூறிப் புகழ்ச்சி செய்தும்,

'தசையும்' என்பதுமுதல் 'இயம்பியும்' என்பதுவரை.

(12—13 வரிகள்)

(பொ - ரை) மாமிசமும் எலும்பும் பொருந்திய புல்லிய தொடையைப் பொருந்துகின்ற வாழைத்தண்டு எனக் கூறியும்,

'நெடுமுட்டல்' என்பதுமுதல் 'துதித்தும்' என்பதுவரை.

(14—15 வரிகள்)

(பொ - ரை) நெடிய உடம்பைச் சுமந்துநிற்கும் மருங்குலை உடுக்கைபோன்றதென்றும், பிடியளவானதென்றும் சொல்லிப் புகழ்ந்தும்,

(வி - ரை) மருங்குல் - இடை.

'மலமுஞ் சலமுஞ்' என்பதுமுதல் 'ஆலிலையென்றும்' என்பதுவரை.

(16—17 வரிகள்)

(போ - ரை) மலமும், நீரும், நிணமும், திரைச்சலும் தங்கியசைகின்ற வயிற்றை ஆலிலையெனக் கூறியும்,

(வி - ரை) நிணம் - கொழுப்பு. திரைச்சல் - மடிப்பு.

'சிலந்திபோல்' என்பதுமுதல் 'மொட்டென்றும்' என்பதுவரை.

(18—22 வரிகள்)

(போ - ரை) கொப்புளம்போல இரண்டாகி, முற்பக்கத்தில் தோன்றி, திரட்சிபெற்று, பூரித்து, சீப்பெருகியேறி, நகத்தாற் கிழிக்க உலர்ந்துபோய் மனமுருகி, (சிலகாலத்திற்குப்பின்) தொங்கி வற்றிப்போகிற ஸ்தனங்களைக்கண்டு தாமரை மொக்கென்றும்,

'குலையுங் காமக் குருடர்க் குரைப்பேன்.'

(23—வது வரி)

(போ - ரை) குழறுகின்ற காமாந்தகாரத்தில் முழுகிக்கிடக்கும் குருடருக்குச் சொல்லுவேன்.

'நீட்டவும்' என்பதுமுதல் 'உரைத்தும்' என்பதுவரை.

(24—26 வரிகள்)

(போ - ரை) நீட்டுவதற்கும், முடக்குவதற்கும், பெரிய பொருளை எற்றுக்கொள்ளவும், (உனவு முதலியவற்றை) உண்பிக்க

வும், (யாதாயினு மொன்றைப்) பிசையவும் இவ்விடத்தில் மேற் கூறிய தொழில்புரிகின்ற அழகியகைகளைப் பார்த்துக் காந்தள்மலர் என்று கூறியும்,

'வேர்வையும்' என்பதுமுதல் 'பகர்ந்தும்' என்பதுவரை.

(27—28 வரிகள்)

(பொ - ரை) வெயர்வும் அழுக்கும் பொருந்திய கண்டத்தைப் பூமியில் இனிமையாகிய கமுகென்று கூறியும்,

(வி - ரை) கண்டங் - கழுத்து. கமுகு - பாக்குமரம்.

'வெப்பம். என்பதுமுதல் 'மலரேன்றும்' என்பதுவரை.

(29—30 வரிகள்)

(பொ - ரை) தீநாற்றமும் ஊத்தையும் தங்கிய வாயைப் பவள மென்றும், புநிதமாகிய முருக்கமலர் என்றும் சொல்லியும்,

'அன்னமும்' என்பதுமுதல் 'மொழிந்தும்' என்பதுவரை.

(31—32 வரிகள்)

(பொ - ரை) அன்னத்தையும் கறிகளையும் மென்று (வயிற் றுக்குள்) இறக்குகின்ற முறப்பட்ட பல்லை முத்தென்று கூறியும்,

'நீருஞ் சளியும்' என்பதுமுதல் 'கூறியும்' என்பதுவரை.

(33—34 வரிகள்)

(பொ - ரை) சலமும் சளியும் நின்றுநின் றொழுகுகின்ற கூர்மை பொருந்திய நாசியைக் குமிழம்பூ என்று கூறியும்,

'தண்ணீர்பீளை' என்பதுமுதல்'கழுநீரேன்றும்'என்பதுவரை.

(35—36 வரிகள்)

(பொ - ரை) தண்ணீரும் பீளையும் சிந்துகின்ற கண்களைப் பார்த்துக் கழுநீர்மலர் என்று கூறியும்,

(வி - ரை) கழுநீர்மலர்-செங்கழுநீர்ப் புட்பம்; நீலோற்பலமலர்.

'உள்ளும்குறும்பி' என்பதுமுதல் 'வாழ்த்தியும்' என்பதுவரை.

(37—38 வரிகள்)

(பொ - ரை) உள்ளிடத்துநின்றும் குறும்பி யொழுகுகின்ற காதை வள்ளைத்தண்டின் வளமையுள்ளதென்று புகழ்ந்து கூறியும்,

(வி - ரை) வளம் - அழகு.

'கையும்' என்பதுமுதல் 'முகிலென்றும்' என்பதுவரை.

(39—42 வரிகள்)

(பொ - ரை) கையும் எண்ணெயும் சேராது நீங்கினால், அதாவது, கையினால் எண்ணெயைக் குழப்பித் தடவாதிருக்கின் வெப்பமாகிய நோய்களை உண்டுசெய்யும், (அம்மட்டில் நீங்காது) பேனும் விளைதற்குரிய தலையோட்டின்மேல் முளைத்துத் தோன்றிய சிக்கொடுகூடிய மயிரைத் திரண்ட மேகமென்று கூறியும்,

(வி - ரை) வெய்ய அதர் - கொடிய புழுதியுமாம்.

'சோற்பலபேசி' என்பதுமுதல் 'நரகவாயில்' என்பதுவரை.

(43—44 வரிகள்)

(பொ - ரை) (இவ்வாறு) பல (உவமானச்) சொற்களால் புகழ்ந்து சொல்லி (மானிடர்களாகிய) நீங்கள் விரும்பி யடைகின்ற நரகவாயிலானது, (எத்தன்மைத்தெனில், இயம்புதும்:

'தோலுமிறைச்சி' என்பதுமுதல் 'காமப்பாழி' என்பதுவரை.

(45—46 வரிகள்)

(பொ - ரை) தோலும் சதையும் நெருங்கிச் சீப்பெருகுகின்ற காமக்குகையாம்.

'கருவிளை கழனி.'

(46—வது வரி)

(போ - ரை) பிறவிப்பயிர் விளைகின்ற வயல்.

(வி - ரை) பிறவிப்பயிர்-கரு உற்பத்தி.

'தூமைக் கடவழி.'

(47—வது வரி)

(போ - ரை) சூதகம் அல்லது உதிரம் ஒழுகாநின்ற பெருவழியாம்.

'தொளைபெறு வாயில்.'

(47—வது வரி)

(போ - ரை) தொளைபெற்ற அல்லது துவாரத்தினையுடைய வாயிலாம்.

(வி - ரை) 'தூமைக் கடவழி தொளைபெறு வாயில்' என்றும் பாடம் உண்டு. பொருள்: உதிரம் பெருகி வழியாகின்ற பெரிய துவாரங்கொண்ட வழி' என்னலுமாம்.

'எண்சா ணுடம்பு மிழியும் பெருவழி.'

(48—வது வரி)

(போ - ரை) எட்டுச்சாண் அளவினைக்கொண்ட உடம்பானது இறங்கி வருதற்குரிய பெரிய வழியாம்.

(வி - ரை) இறங்கிவருதல் வெளிப்படுதல், வெளிவருதல்.

'மண்பாற் காமம் கழிக்கு மறைவிடம்.'

(49—வது வரி)

(பொ - ரை) மண்ணுலகத்தா ரிடத்துள்ள காமத்தைக் கழிக்கின்ற அதாவது, ஆண்மாக்களாயுள்ளோரது இந்திரியத்தினை அல்லது தாதுவை ஒழிக்கின்ற மறைவான இடமாம்.

'நச்சிக்காமுக' என்பதுமுதல் 'கழிவாயில்' என்பதுவரை.

(50—51 வரிகள்)

(பொ - ரை) காமுகன் (காமாந்தகாரன்) என்கிற நாயானது எப்போதும் ஆசைப்பட்டு ஆசித்திருக்கிற திட்டிவாசலாம்.

(வி - ரை) திட்டிவாசல்-தேகத்தின் நடுப்பங்கிலுள்ள அதாவது சரீரத்தின் மத்தியிலுள்ள வாசல்.

'திங்கட் சடையோன்' என்பதுமுதல் 'பெருவழி' என்பதுவரை.

(52—53 வரிகள்)

(பொ - ரை) சந்திரனையணிந்த சடாபாரத்தையுடைய சிவபெருமானது திருவருள் சிறிதும் பெற்றில்லாதவர்கள் தங்கித் திரிகின்ற சலையாகிய அல்லது மெலிவாகிய பெரிய வழியாம்.

'புண்ணிதுவென்று' என்பதுமுதல் 'செழும்புண்' என்பதுவரை.

(54—55 வரிகள்)

(பொ - ரை) இது புண்ணுக்குச் சமானமாகுமென் றுணர்ந்து புடவையால் மூடியும் உள்ளேயிருந்து நீர் பெருகுகின்ற ஆடவர்க்கு உவப்பைச் செய்கின்ற செழிய (சிவந்த) புண்ணும்.

(வி - ரை) 'உண்ணீர் பாயும் ஓசைச் செழும்புண்' - 'உள்ளேயிருந்து நீரினை ஊற்றுகின்ற ஓசையோடுங் கூடிய செவந்த புண்ணும்' எனலுமாம்.

'மால்கொண் டறியா மாதர் புகும்வழி.'

(56—வது வரி)

(போ - ரை) காமமயக்கங்கொண்டு அறியாமையுள்ள மானுடர் நுழையும் வழியாம்.

'நோய்கொண் டொழியா நுண்ணியர் போம்வழி.'

(57—வது வரி)

(போ - ரை) ஆசையுற்று (காமநோய்கொண்டு) அது நீங்கப் பெறாத அறியாமையுள்ள மானுடர் நுழையும் வழியாகும்.

'தருக்கிய காமுகர் சாரும் படுகுழி.'

(58—வது வரி)

(போ - ரை) செருக்கடைந்த காமுகர்கள் அடைகின்ற படுகுழியாம்.

(வி - ரை) தருக்கியகாமுகர்-ஆணவங்கொண்டு திரியும் காமுகர்.

'செருக்கிய காமுகர் சேருஞ் சிறுகுழி.'

(59—வது வரி)

(போ - ரை) செருக்கடைந்த காமுகர்கள் அடைகின்ற சிறு பள்ளம்.

'பெண்ணும் ஆணும் பிறக்கும் பெருவழி.'

(60—வது வரி)

(போ - ரை) பெண்களும் ஆண்களும் ஜனித்தற் கேதுவாயுள்ள பெரிய வழியாம்.

(வி - ரை) ஜனித்தல் - பிறத்தல்.

'மலஞ்சோரிந்து' என்பதுமுதல் 'வாயில்' என்பதுவரை.

(61—62 வரிகள்)

(போ - ரை) மலத்தைச் சொரிந்து இழிவடைந்திருக்கிற வாசலுக்கருகில் நீரைச்சொரிந் திழிந்த தண்ணீர் வாசலாம்.

'இத்தை நீங்கள் இனிதென வேண்டா.'

(63—வது வரி)

(போ - ரை) (இவ்வகைய இழிதகைமைகளுக்கு இடமாகிய) நிதம்பத்தினை நீங்கள் இனியதென்று நினைக்கவேண்டாம்.

(வி - ரை) நிதம்பம்-பெண்குறி, காமக்குழி.

'பச்சிலையிடினும்' என்பதுமுதல் 'போற்றுதலொழிந்தே' என்பதுவரை.

(63—70 வரிகள்)

(போ - ரை) பச்சிலையைக் கிள்ளி அருச்சித்தாலும் அடியார்களுக்கு இரக்கமுற்று, கொண்டாடிச் சிவபதமாகிய மோக்ஷத்தை அநுக்கிரகிப்பவனை, முத்திக்குத் தலைவனை, அழியா முதல்வனை (நித்தியமாயுள்ள முதல்வனை), தேவலோகமும், வேருயுள்ள எல்லா லோகங்களும் (ஆகிய இவற்றைப்) படைத்த பெரியோனை, திருக்

கச்சியில் எழுந்தருளியிருக்கும் கடவுளை (ஏகாம்பரநாதனை), தனிமை யாகிய இறைவனை, அநுபவத்திற்குரிய மங்கையர்களைப் பேணுதலை நீங்கி, ஒரு சிவபெருமானது உபயதிருவடியைப் பணியுங்கள்!

(வி - ரை) பட்டினத்தடிகள் அடிக்கடி மாதரை நிந்தித்துக் கூறுவது பொருட்பெண்டிரை. அதாவது பொதுமகளிரைப்பற்றியே யாமென்க. பச்சிலை - வேர், பசியஇலை. அண்டரண்டம் - அண்டபகி ரண்டங்கள். வேறுயுள்ள எல்லாலோகங்கள் - பதினான்கு உலகங்கள். திருக்கச்சி - காஞ்சிமாநகரம். ஏகநாதன் - தன்னந்தனியன்; தனக்குத் தானே தலைவன். அனுபவத்திற்குரிய மங்கையர்கள் - போகத்தைக் கொடுக்கும் பெண்களாகிய பொதுமகளிர்கள். உபயதிருவடி - இரண்டு திருவடிகள். பணிதல் - தொழுதல், வணங்குதல்.

## நான்காவது திரு அகவலின் மொத்தகருத்து.

"மானிடப்பிறவி பெறுதற்கு அரியதாயிருப்பவும் அதனைப் பெற்ற மானிடரே! நீங்கள் மாதருடைய அவயவங்களை விரும்பிப் பலவாறு வர்ணித்துரைத்து மீளாத நரகத்துக்கு ஆளாகின்றீர்களே! இவ்விழி தகைமையை விட்டு, முத்தியை அருள்வோனாகியநித்தியன், திருக்கச்சிச் சிவபெருமான் அவனை வழிபட்டு அவனது திருவடியை வணங்குங்கள்! அவ்வாறு நீங்கள் வணங்குவீர்களானால் அவன் உங்களுக்குப் பிறவா நெறியைக் கொடுப்பான்" என்று அடிகள் தாமுணர்ந்த நலத்தினை அடியார் பலர்க்கும் உபதேசமுறையாகக் கூறி வற்புறுத்தியது காண்க.

---

# திருவேகம்பமாலை

திருக்கச்சியில் திருக்கோயில்கொண்டெழுந்தருளியிருக்கும் ஏகாம்பர நாதரைத் துதித்துக் கூறியபடியால் இப்பெயர் பெற்றது.

அறந்தா னியற்று மவனிலுங் கோடி யதிகமில்லந்
துறந்தான்; அவனிற் சதகோடி யுள்ளத் துறவுடையோன்;
மறந்தா னறக்கற் றறிவோ டிருந்திரு வாதனையற் [பனே.
றிறந்தான் பெருமையை யென்சொல்லு வேன்கச்சி யேகம்

(போ - ரை) (அகந் தூய்மையாய்) இல்லறத்தில் நடக்கவேண்டிய தருமங்களை முறையுறச் செய்து மறுமைக்கண் சுவர்க்காதி பதங்களைப் பெறும் இல்லறத்தானிலும் கிரகத்தாச்சிரமத்தைவிட்டு நீங்கிய புறப்பற்று அற்றவன், ஒருகோடிபாகம் உயர்ந்தவனுவான்; அகப்பற்றற்ற சந்நியாசி, முன்னர்க் கூறிய இல்லத்துறவியிலும், நூறுகோடி பங்கு உயர்ந்தவனுகிறான்; தீவினையாகிய துன்பங்கள் நீங்க, அறிவு நூல்களைக் கற்று, நல்லறிவு தலைப்பட்டு, புண்ணிய பாபங்களின் செயலற்று, உலக வொழுக்கநீங்கித், தவ வொழுக்கங் கைக்கொண்ட மகா துறவியின் சிறப்பினை என்னவென்று கூறுவேன்? திருக்கச்சியின் கண் திருக்கோயில்கொண் டெழுந்தருளியிருக்கும் ஏகாம்பரநாதனே! (எ - று.)

(வி - ரை) அறமாவது - மனுமுதலிய நூல்களில் விதித்தன செய்தலும், விலக்கியன ஒழிதலுமாம், அஃது: ஒழுக்கம், வழக்கு, தண்டம் என மூவகைப்படும். அவற்றுள் ஒழுக்கமாவது - அந்தணர்

முதலிய வருணத்தார் தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரமசரிய முதலிய நிலைகளினின்று அவ்வவற்றிற் கோதிய அறங்களின் வழுவா தொழுகல். வழக்காவது-ஒரு பொருளைத் தனித்தனியே யெனதெனதென்றிருப்பார் அது காரணமாகத் தம்முள் மாறுபட்டு அப்பொருண்மேற் செல்வது; அது, கடன்கோடன்முதற் பதினெட்டுப் பதத்ததாம். தண்டமாவது - அவ்வொழுக்க நெறியினும், வழக்கு நெறியினும்,வழீஇனாரை அந்நெறி நிறுத்தற்பொருட்டு ஒப்ப நாடி அதற்குத் தக வொறுத்தல். இவற்றுள் வழக்குந் தண்டமும் உலகநெறி நிறுத்தும் அரசன் கொண்டாளுதற் பயத்தவன்றி ஒழுக்கம்போல் மக்களுயிர்க்கு உறுதி பயத்தற் சிறப்பில வாகலானும், அவைதாம், நூலானேயன்றி உணர்வு மிகுதியானும் தேய வியற்கையானும் அறியப்படுதலானும், அவற்றை யொழித்து ஈண்டுத் தெய்வப்புலமைத் திருவள்ளுவராற் சிறப்புடைய ஒழுக்கமே யறமெனக் கொள்ளப் பட்டதென, ஆசிரியர் பரிமேலழகராற் கூறப்பட்டது. ஆதலின், அவ்வொழுக்கமே யீண்டு அடிகளாலும் 'அறம்' எனப்பட்டது. அதுதான் நான்கு நிலைத்தாய் வருணங்கடோறும் வேறுபா டுடைமையின் சிறுபான்மையாகிய அச் சிறப்பியல்புக ளொழித்து எல்லார்க்கு மொத்தலிற் பெரும்பான்மை யாகிய பொது வியல்புபற்றி இல்லறந் துறவறம் என இருவகையாற் கூறப்பட்டது. அவற்றுள் இல்லறமாவது - இல்வாழ்க்கை நிலைக்குச் சொல்லுகின்ற நெறிக்கணின்று அதற்குத் துணையாகிய கற்புடை மனைவியோடுஞ் செய்யப்படுவது. துறவறமாவது-புறமாகிய செல்வத்தின்கண்ணும், அகமாகிய யாக்கையின்கண்ணும் உளதாய பற்றினை, அவற்றது நிலையாமை நோக்கி விடுதல். இத்துறவை மேற் கொண்டோன் துறவி. அத்துறவி: குடீசன், பகூதன், ஹம்ஸன், பரமஹம்ஸன் என நால்வகையர். இதனை விரிக்கிற் பெருகும். இதில் 'மறந்தா னறக்கற் றிருவாதனை யற்றவன்' மஹாஞானி; அவனது பெருமை கூறுதல் அருமையாம்.

"கன்றுத லின்றி யாறிக் கழிந்தகா மத்தனாகி
யொன்றவெவ் வுயிருந் தன்னை யொக்கவே யுணரு ஞானி
சென்றதோர் நெறியின் செல்வன் சென்னிமே லவன்காற் றூளி
துன்றுமேற் சுத்த னாவே னெனுமிது துணிவிற் கொண்டே."

என்பதா லறிக. 1

கட்டி யணைத்திடும் பெண்டிரு மக்களுங் காலத்தச்சன்
வெட்டி முறிக்கு மரம்போற் சரீரத்தை வீழ்த்திவிட்டாற்,
கொட்டி முழக்கி யழுவார்; மயானங் குறுகியப்பா
லெட்டி யடிவைப்ப ரோ?யிறை வா!கச்சி யேகம்பனே!

(பொ - ரை) (ஆசை மிகுதியினால்) கட்டி யணைத்துக்கொள்ளும் மனைவியரும், பிள்ளைகளும், யமனாகிய தச்சன் வெட்டி முறித்து விடுகின்ற மரத்தைப்போல், தேகத்தை விழும்படி செய்துவிட்டால், பல பறைகளை யடித்து முழக்கி அழாநிற்பர்; (அவர்கள்) இடுகாட்டினை நெருங்கி, அம் மயானத்தைக் கடந்து தாண்டி தமது கால்களை வைப்பார்களோ? (வையார்): தலைவனே! திருக்கச்சிக்கண் எழுந்தருளியிருக்கும் ஏகாம்பரநாதனே! (எ - று.)

(வி - ரை) 'கட்டி அணைத்திடும்' என்பதனைப் பிரித்துக் கட்டிடும் பெண்டிரும், அணைத்திடும் மக்களும் எனப் பொருள் கொள்ளினுமாம். கட்டி அணைத்திடும் என்பது இருவினை முதலியொருவினை. இம்மைக்கும் மறுமைக்கும் உறுதி பயப்பக் கொள்ளும் மனைவியரும் மக்களும் என்பார் 'கட்டி யணைத்திடும் பெண்டிரு மக்களும்' என்றார். உறுதி யெவ்வாறு பயத்தல் எனின், அறத்தின் வழி நின்று இல்லற நடத்தின் இகத்தில் எல்லா இன்பங்களையு மனுபவித்து மறுமைக்கண் சுவர்க்காதி போகங்களை யடைதலினாலும், மக்கள் இம்மைக்கண்

"மக்கண் மெய்தீண்ட லுடற்கின்ப மற்றவர்
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு."

என்றபடி, இன்பந் தந்து, மறுமைக்கண் புத் என்னும் நரகத்தினின்று நீக்குதலின் என்க. பெண்டீர்-இதனின் ஈர் என்பது ஒருமையினிற் பன்மை வந்த வழுவமைதி; இது உயர்வுபற்றியது. தச்சன் மரங்களைச் செதுக்கு வெவ்வேறு உருக்கள் செய்யுமிடத்து வாள் உளி முதலிய கொண்டு அழித்தலின் 'வெட்டி முறிக்கும்' என்றார். வாழ்நாள் முடிந்த மக்களுயிரைப் பாசத்தாற் கட்டி யீர்க்குமிடத்து உடல் மரம்போல் வீழ்தலின், காலனுக்குத் தச்சனை யுவமை கூறினர். 'வீழ்த்தி விட்டால்' என்பதில் விடு துணிவுப் பொருட்டு. உயிர் நீங்காவுடற்கணீக்கமற நின்ற சீவான்மாவிற்குச் செய்யும் உபசாரமாகச் சவவுடற்கு அபிடேக முதலிய சடங்குகளியற்றிப், பறைமுதலிய முழக்கி யிடுகாட்டிடுதல் வழக்காதலின் 'கொட்டி முழக்கி' என்றார்.

"சென்றே யெறிப வொருகால் சிறுவரை
நின்றே யெறிப பறையினை-நன்றேகாண்
முக்காலைக் கொட்டினுண் மூடித்தீக் கொண்டெழுப
செத்தாரைச் சாவார் சுமந்து."

எனப் பிறரும் இதுபற்றிக் கூறினர் என்க. இவ்வாறு கொட்டு முழக்குடன் சவத்தை யடக்குதல் சிலர்க்கு இன்றெனின், இது பன்மை பற்றிய வழக்கு. 'அழுவார்' என்றதனன், இறந்தார்க்கு மிக்க உறவினராகிய பெண்டிரு மக்களுமே யென்பது பெறப்பட்டது; மற்றவர்க்கு அவரவர்க்குற்ற விருப்பு இன்மையின் என்க. அழுவார் என்பதில் வுகரம் நிகழ்காலப் பொருட்டு, ஸ்மசானம் என்பது 'மயானம்' என நின்றது. ஶவா நாம் ஶயனம் ஸ்மஶானம் என்பதால், ஶவங்களுக்குச் சயனமான இடம் என்பது பொருள். 'குறுகி' என்றதால் சிதையின்மீதிட்ட பின்னர் என்க. 'அப்பால்' என்றது அந்த இடுகாடு கடந்து என்க; அன்றிச் சிதைக்கண் எனினுமாம். எட்டுதல்-ஒருகாலினை வைத்தல். 'அடி' என்பது ஆகுபெயர். 'வைப்பரோ'

என்பதின் ஓகாரம் எதிர்மறைப்பொருட்டு. மக்கள் - நித்திய பகு வசனம். 'கட்டி யணைத்திடும்' என்பதற்கு, கட்டி, அணைத்து, இடும் எனப் பிரித்து, இடும் - அன்னபானாதிகளை யிடுகின்ற எனினுமாம். பெண்டிரு மக்களும் என்பதின் உம்மை எண்ணுப்பொருட்டு. 2

கைப்பிடி நாயகன் றூங்கையி லேயவன் கையையெடுத்
தப்புறந் தன்னி லசையாமன் முன்வைத் தயல்வளவில்
ஒப்புடன் சென்று துயினீத்துப் பின்வந் துறங்குவளை
எப்படி நானம்பு வேன்? இறை வா! கச்சி யேகம்பனே!

(போ - ரை) (கன்னிகைப் பருவத்தில் உற்றாரறிய) பாணிக்கிரகணஞ் செய்துகொண்ட கணவன், (தன்னை மறந்து) நித்திரை செய்கையில், அந்நாயகன் (தன்னை யணைத்து உறங்கும்) கையை லகுவாக எடுத்துத் தன்னை யொழிந்த அப்பக்கத்தில் (அவன் விழிக்காவகை) அசையாமல் வைத்து, அண்டைவீட்டுச் சோரநாயகனிடத்தில் மனச் சம்பந்தத்துடன் கடுகிப்போய்க் கலவி முதலிய முடித்துப் பிறகு (அவனைப் பிரியும் வருத்தத்துடன்) வந்து (பழமைபோல்) நித்திரை கொள்வாளை, அடியேன் எப்படி நம்பி அவளிடம் வாழ்வேன்? தலைவனே! கச்சியில் திருக்கோயில்கொண்டருளிய ஏகாம்பரநாதனே! (எ - று.)

(வி - ரை) கொண்ட கணவனை விட்டுச் சோரநாயகனிடத்தில் அன்புமிக்கு உறங்கிப் பின்வந் துறங்கும் பெண்களை யெப்படி நம்பலாம் என்பது கருத்து. இது பெண்களிடம் அன்பு செய்யாமையும் அவரது வஞ்சனையையும் குறிப்பித்ததாம். ஊருணர நாள்கேட்டுப் பறை கொட்டித்; திக்குப்பாலகர், இறைவன், அருந்ததி, சூர்ய சந்திரர், மற்றைய கிரகங்கள், கிராமத்தார், புரோகிதர், ஏனைய தேவர்களும், மற்ற பந்து மித்திரர்களு மறியப் பாணிக்கிரகணஞ்

செய்தவன் என்பார், 'கைப்பிடி நாயகன்' என்றார். தான் இல்லாளிடத்துக் கலவி செய்த விளையாட்டானும் பிறவாற்றானும் களைகொண்டு தன்னை மறந்துகொள்ளுஞ் சுழுத்திக்கண் என்பார், 'தூங்கையிலே' எனவும் அச்சுழுத்தியில் கரணங்க ளோய்ந்து யாதுசெய்யினும் தெரியாத அந்நிலையில் என்பார், 'அவன் கையை' எனவும், கையை யெடுக்கையில் பரிசவுணர்ச்சியால் உணரினும் உணரும், அங்ஙனம் உணராவகை மெல்லச் சிறிது சிறிதா வொதுக்கமுற நகர்ந்து தன்னை யணைத்த கை நிலத்திலுறத் தாங்கிப் புறத்தில் வைப்பாள் என்பார், 'அப்புறந் தன்னி லசையாமன் முன்வைத்து' எனவும், 'அயல்வளவு' என்றதனானே அது இல்வரை யிகந்ததும், இல்வரை யிகவாததும் என இருவகைத்து. பெரும்பான்மை களவிற் புணர்ச்சிக்குரிய சோரமகளிர், இற்கண் ணெருங்கிப் பகற்சி பயில நோன்பாற்று விடர்க்கண்ணே நேசங் கொள்ளுத லியல்பாதலின், அது பெரும்பான்மை யில்வரை யிகவாததாம். இகந்ததாயின் கவாடந்திறத்தல், அயலவர் விழித்தல் முதலியவற்றால் தான் கொண்ட கருத்து முற்றாது தடைப்படுமாதலி னடிகளீண்டுக் கூறியது இல்வறை யிகவாததேயாம்; சிறுபான்மை அயலவர் அறியாராயின், இல்வரை யிகந்ததுமாம் என்க. 'வளவு' என்பது ஆகுபெயர். தன் கணவன்,

"ஏந்தெழின் மிக்கா னிளையா னிசைவல்லான்
காந்தையர் கண்கவர் நோக்கத்தான்-வாய்ந்த
நயனுடைமின் சொல்லான்கேள் எனினு மாதர்க்
கயலார்மே லாகு மனம்."

என்றபடி இவற்றான் மிக்கானேனும், தன்னால் காமுறப்பட்டான் இவை யிலனாய குரூபியாயினும், அவள் மனமொக்கின், அவனை யிவை யுடையவனாக வெண்ணிச் செல்வாள் என்பார், 'ஒப்புடன்

சென்று' எனவும்; தனதிச்சைப்படி யவனுடன் காமலீலைகள் செய்து இன்புற்றுறங்கி யென்பார், 'துயில்நீத்து' எனவுங் கூறினர். 'துயில்' என்பது ஆகுபெயர். அவனைப் பிரியும் வருத்தத்துடன் கணவனிடங்கொண்ட வெறுப்புடனும் மீள்வாள் என்பார், 'பின் வந்து' எனவும்; அங்ஙனம் வந்தால், அவனுடன் முயங்கும் முயக்கமும், அவள் துயில் கொள்கையும் பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் போல்வதன்றி, மெய்ம்மை யன்றென்பார், 'உறங்குவளை' என்றார். இங்ஙனம் கொண்டானுட னிருந்தும்,

> "அச்சம் பெரிதா லதற்கின்பஞ் சிற்றளவால்
> நிச்ச நினையுங்கால் கோக்கொலையால்-நிச்சலும்
> கும்பிக்கே கூர்த்தவினை."

என்றுணராது சென்று உறங்குவாள்: சோரபுருஷனிடத்துக் கொண்டகாதலால் என்னையும், தன்னிடத்துக் காதல்கொண்ட மைந்தனையும் கொலைமுதலிய பிறசெய்தல்கூடும். அவ்வகைச் செயல் கொண்டாரைக் கண்கூடாகக் கண்ட நான் 'இவர் எமக்குற்றதுணை' எனநம்பி யவர் வழிசெல்லேன் என்பார், 'எப்படி நான் நம்புவேன்?' எனவுங் கூறினர். 'கைப்பிடி' என்பதில் பிடித்தல் இருவர்க்குமுள்ள வினையாதலின் இது இருவினை முதலிதொருவினை. 3

நன்னாரிற் பூட்டிய சூத்திரப் பாவைநன் னார்தப்பினற்
றன்னாலு மாடிச் சலித்திடு மோவந்தத் தன்மையைப்போல்
உன்னா லியானுந் திரிவதல் லான்மற் றுனைப்பிரிந்தால்
என்னாலிங் காவதுண் டோ?இறை வா!கச்சி யேகம்பனே!

(பொ-ரை) நல்ல நாரினால் கட்டிய சூத்திரத்தினைக் கொண்ட பிரதிமை, நல்ல அச்சூத்திரம் அற்றுத் தவறின், (அதுச் சூத்திரிகன் வழியன்றித்) தனக்குத்தானே நடித்து, ஓய்ந்துபோமோ?

அவ்விதம்போல, சூத்திரிகனாய நீ முன்னின்று ஆட்டுவிக்க நான் ஓடியுலாவித் திரிவது அல்லாமல் அங்ஙனம் ஆட்டுவிக்கும் உன்னை ஒரு கணம் பிரிந்து நிற்கின், (பிரிந்துநிற்கும் சூத்திரமொழிந்த பாவையொத்த) என்னால், இவ்வுலகத்தில் ஆகும் செயல் ஒன்று உளதாகுமோ? தலைவனே! திருக்கச்சிக்கண் ணெழுந்தருளியிருக்கும் ஏகாம்பரநாதனே! (எ - று.)

(வி - ரை) இது, இறைவனையன்றி யுயிர்கள் தாமாக இயங்கும் வலியிலவென வுயிர்களின் செயலின்மையும், இறைவனது சர்வ வியாபகமும் கூறியதாம்.

அறுதல், சிக்குறல் முருக்கேறுதல் ஒழிந்து உறுதியுள்ள தென்பார் 'நல் நார்' எனவும்; (நாரில் என்பதில் இல் எனும் ஐந்தனுருபு ஏதுப்பொருளது.) நல் நாரினால் இயக்குதற்குச் சூத்திரிகன் மனக் கோட்பாட்டின்விதம் செய்வித்த பாவையென்பார் 'நன்னாரிற் பூட்டிய சூத்திரப் பாவை' என்றார். அதனை யியக்குவிப்போ னெண்ணப்படி அப்பாவை நடிக்கும். அச் சூத்திர நார் தவறின் செயலற்று இயங்குத லொழிந்து கிடக்கும். அதுபோல், இறைவனே! நீர் இயக்க அடியேன் இயங்குதலன்றி யெனக்குச் சிறிதும் செயலின்று என்பார், 'நன்னார் தப்பினாற் றன்னாலு மாடிச் சலித்திடுமோ?' என்றார் இக்கருத்தானென்றே திருநாவுக்கரசுகளும்,

"ஆட்டுவித்தா லாரொருவர் ஆடாதாரே
யடக்குவித்தா லாரொருவ ரடங்காதாரே
ஓட்டுவித்தா லாரொருவ ரோடாதாரே
யுருகுவித்தா லாரொருவ ருருகாதாரே
பாட்டுவித்தா லாரொருவர் பாடாதாரே
பணிவித்தா லாரொருவர் பணியாதாரே

காட்டுவித்தா லாரொருவர் காணாதாரே
காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக்காலே.''

எனத் திருவாய்மலர்ந்தருளியது. யான் கொண்ட என்பு தோல் போர்த்த வுடம்பு, தானே திரியவற்றோ வெனின், அதி னெவ் வொன்று மேலுள்ள பொருள்களை நோக்கத் தாழ்வடைந்து பொய் படும். அங்ஙனம் பொய்பட்ட புறக்கரணங்க ளொழிய அகக்கரணங்க ளாகிய அந்தக்கரணங்கள் தாம் குணம் பெறுவோ வென்னில, அவை யும், மனதை நோக்கப் புத்தியும், புத்தியை நோக்கச் சித்தமும், சித் தத்தை நோக்க அகங்காரமும், ஒன்றிலொன்று எற்றத்தாழ்வு கொண் டனவாய்ச் சேதனப் பொருளுடன் உவமிக்கத்தக்கவை யன்றாய்க் கெடுமாதலினான், அவன் என்னிடத்து நீக்கமற நிற்கினன்றி என்னா லாவ தொன்றில்லை யென்பார், 'உன்னா லியானுந் திரிவதல்லால்' என்றார். இதனா லன்றே,

''தானாடத் தன் தசையாடும்.''

எனும் பழமொழியும் ஆளப்பட்டு வருவது. ஈண்டுத் தசையென்பது தனுகரணம் பெற்ற ஆன்மவர்க்கங்களையாம். 'சலித்திடுமோ' என்ப தில் ஓகாரம் வினைப்பொருட்டு. சலித்தல், தொழிலிற் றலைப்பட்டான் முயற்சியின்றி நிற்றல். ஈண்டுத் தன்மை குணப்பண்பின் மேல தன்று; தொழிற் பண்பின்மேலது. எனக்கெனச் சுதந்தரமின்று நீயே யெல்லாம் வல்லவன் என்பார், 'உன்னா லியானுந் திரிவது' என்றார். 'யானும்' என்பதின் உம்மை எதிரது மிறந்ததுந் தழுவியதாம். முற்றுப் பிறிதென்னும் பொருளது; அன்றி அசை நிலை யென்னினுமாம். 'இங்கு' என்பது இடப்பொருளுணர்த்தி யிவ்வுலகத்தைச் சுற்றி நின் றது; இதில், கு, இடப்பொரு ளுணர்த்திய விகுதி. 'ஆவதுண்டோ?' என்பதின் எகாரம் எதிர்மறைப்பொருட்டு, பாவை - பிரதிமை யென் பதின் மரூஉ. 4

நல்லா ரிணக்கமும், நின்பூசை நேசமு(ம்) ஞானமுமே
யல்லாது வேறு நிலையுள தோ? அகமும், பொருளும்
இல்லாளும், சுற்றமு(ம்), மைந்தரும், வாழ்வும், எழிலுடம்பும்
எல்லாம் வெளிமயக் கேயிறை வா! கச்சி யேகம்பனே!

(பொ - ரை) நல்லவர்களுடைய நட்பும், தேவரீரைப் பூசித்தலும் அதில் அன்பும், சிவஞானமும் அல்லாமல் வேறு தரிக்கத்தகும் நிலை உண்டோ? (இல்லை); வீடு மனை நில முதலியவும், தனதான்யாதி ஐஸ்வரியங்களும், மனைவியும், உறவினர் முதலாயினரும், புத்ரவர்க்கங்களும், இறுமாப்புடன் வாழும் செல்வவாழ்க்கையும், அழகுகொண்ட தேகமும், மற்றெல்லாமும், புறமயக்கமே. தலைவனே! திருக்கச்சியிலெழுந்தருளியிருக்கும் ஏகாம்பரநாதனே! (எ - று.)

(வி - ரை) ஈண்டு 'நல்லார்' என்பது, நற்குண நற்செய்கை கொண்ட மாந்தரை யன்று; மனத்தூய்மை கொண்ட மாசற்ற சிவ ஞானிகளை யென்க. நல்லார் எனப் பன்மையாற் கூறியதனுன் அவ்வொழுக்கங் கொண்ட பலரைக் குறிப்பித்ததாம். அவரொடு சேர்ந்தொழுகின் பாலொடு அளாவிய நீர் பாலாகுமாறுபோலச், சேர்ந்தானது தீமையைக் கெடுத்து நன்மை பெறச் செய்தலின் 'இணக்கம்' என்றார். இவர் இணக்கத்தைப் பொருள் கொடுத்தும், வழிபட்டும் போற்றின் நலமென நாயனரும்,

"மருவுக மாசற்றார் கேண்மை யொன்றீந்து
மொருவுக வொப்பிலார் நட்பு."

எனத் திருவாய்மலர்ந்தருளினர். பின்னும்,

"ஓடவல் லார்தம ரோடு நடாவுவன்
பாடவல் லாரொலி பார்மிசை வாழ்குவன்

றேடவல் லார்க்கருள் தேவர் பிரானொடுங்
கூடவல் லாரடி கூடுவன் யானே.

என்ற திருமந்திரத்தானு மறிக. உன்னைப் பூசித்தலொன்றில் அமையாது, அங்ஙனம் பூசிக்கினும் நேசமில்லாது பூசிக்கின் பயனில்லையென்பார், 'நின்பூசை நேசமும்' என்றனர். அங்ஙனம் பூசிக்குமிடத்து ஆசை யொன்றே யமையாது சிவஞானமும் கலந்து நிற்கின் ஏற்றமென்பார், 'ஞானமுமே' என்றார். ஞானமெனப் பொதுப்படக் கூறியதனானே அது சிவஞானமென்பது பெறப்பட்டது. அச்சிவஞானம் எல்லாக் கலைஞானங்களிலும் ஏற்றமுள்ள தென்பதை,

"சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை யறமாற்றும் பாங்கினிலோங் கியஞானம்
உவமையிலாக் கலைஞான முணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தா ரந்நிலையில்."

என்ற சேக்கிழார் திருவாக்கா லறிக. இச் சிவஞானம் பிரகாசிக்கின் ஏனைய ஞானங்கள் தலைதூக்காவென்பதை,

"அன்றிய பாச விருளுமஞ் ஞானமும்
சென்றிடுஞானச் சிவப்பிர காசத்தா
லொன்று மிருசுடா ராமரு ளேதயந்
துன்றிரு ணீங்குதல் போலத் தொலைந்ததே."

என்ற திருமூலர் திருமந்திரத்தா னறிக. இதனையன்றி, ஆன்மாக்கள் எவ்வகை யோகநிலைகள் அப்பியசித்து அதில் சித்திமுதலிய அடைந்து நிலைபெற்றிருப்பினும் சிவஞானங் கைவரி னல்லது தரித்த லியலாது என்பார் 'வேறு நிலையுளதோ' என்றார். இல்லும் கிராமாதி, பட்டணங்களும் மாடமாளிகை முதலியவற்றை யடக்கி 'அகம்' எனவும், பொன்மணிமுதலிய லோகத்திரவியங்களை யடக்கிப்

'பொருளும்' எனவும், கற்புடைப் பெண்டிர், காமக்கிழத்தியர் முதலிய வரை யடக்கி 'இல்லாள்' எனவும்; உறவினர், நட்பினர், மற்றோர்களை யும் அடக்கிச் 'சுற்றம்' எனவும்; கற்புடை மனையாளிடத்துப் பிறந் தாரையும் மற்றக் காமக்கிழத்தியரிடத்துப் பிறந்தாரையும் அடக்கி 'மைந்தர்' எனவும்; இப்பெருஞ் செல்வத்தால் சிறிதுங் குறைவின்றி வாழும் பெருவாழ்க்கையினை யடக்கி 'வாழ்வும்' எனவும்; சிறிதும் மனக்கவலை யின்றிப் பக்ஷணாதிகளால் போஷித்தும் நோய்முதலிய வராது அதற்கேற்ற பெற்றிமருந்து முதலியவுண்டு காயகற்பஞ் செய்ய அழகுகொண்ட தேகமென்பார், 'எழில் உடம்பும்' எனவுங் கூறினர். இவை முறையே அடிகள் இச்செய்யுளால் செல்வ நிலையா மையும், யாக்கை நிலையாமையுங் கூறிச் சிவஞானமொன்றே நிலைத் தது என அதனது ஏற்றங் கூறுவார், அவை புறத்தில் கண்டார்க்கு அழகு முதலியவற்றையும் பெருஞ்செல்வ வாழ்க்கையான் எனத் தெரிவிக்குமேயன்றி மனத்தூய்மை செய்து உண்மையாகிய சிவ ஞானப்பேற்றினைத் தாராவென்பார், 'எல்லாம் வெளிமயக்கே' எனவுங் கூறினர். 'நின்பூசை நேசம்' என இறைவனை முன்னிலையொருமை யாற் சுட்டியதனால், அது அவற்கு அன்பென்பதைத் தெரிவித்த தாம். 'நல்லார்' எனப் பொதுப்படக் கூறினும் அது சிவனடியார்கள் எனவும், 'பூசை' எனப் பொதுப்படக் கூறியதனானே இது சிவபூஜை எனவும், 'நேசம்' என்றதனாற் சிவநேசம் எனவும் பெறப்பட்டன. உம்மைகள் எண்ணுப்பொருள். 'ஞானமுமே' என்பதின் ஏகாரம் தேற்றமும் பிரிநிலையுமாம். நிலை, தரித்துநிற்கு நிலைபேற்றினை யுணர்த்தி ஆகுபெய ராயிற்று. 'உளதோ' என்பதில் ஓகாரம் எதிர் மறைப்பொருட்டு. 5

பொல்லா தவ(ன்),நெறி நில்லா தவன்,ஐம் புலன்கடமை
வெல்லா தவன்,கல்வி கல்லா தவன்,மெய் யடியவர்பாற்

செல்லாதவன், உண்மை சொல்லாதவ(ன்), நின் றிருவடிக்கன்
பில்லா தவன், மண்ணி லேன்பிறந் தேன்கச்சி யேகம்பனே!

(போ - ரை) நற்குண நற்செய்கை யில்லாதவன், சிவாகமத்திற் கூறிய கட்டளைப்படி நில்லாதவன், பஞ்சேந்திரியங்களாகிய பகைமையை வெற்றிகொள்ளாதவன், பல நூல்களைக் கற்று வல்லவனுகாதவன், உண்மையாகிய சிவனடியவர்களிடத்துப் போகாதவன், வாய்மையென்னுஞ் சத்தியத்தைப் பேசாதவன், தேவரீருடைய அழகிய திருப்பதங்களில் (நீங்காத) பேரன்பினை அடையாதவன், இப்பூமியில் எதுக்காகப் பிறந்தேன்? தலைவனே! திருக்கச்சிக்கண் எழுந்தருளியிருக்கும் திரு ஏகம்பநாதனே! (எ - று.)

(வி - ரை) எடுத்த ஜநநங்கடோறும் தாய்மாருதரத்திற் பட்ட கொடுமையும், பிறந்து பல்லுயிர் செகுத்தும் பெரியாரைத் துணைக்கொண் டொழுகாம லுயிரோம்பி வாணள் வீணள் கழித்தமையும் தோன்றப் 'பொல்லாதவன்' எனவும்; இருபத்தெட்டுச்சிவாகமங்களில் உத்தமோத்தமாகிய காமிகாதி ஆகமங்களின் வழிநின்று ஒழுகினேனல்லன் என்பார், 'நெறிநில்லாதவன்' எனவும்; இவ்வகையுடையனுயினும் தன்னிடத்ததாகியஐம்புலன்கள் தமைப்போக்கேன்என்பார், 'வெல்லாதவன்' எனவும்; கல்வி,

"இம்மை பயக்குமா லீயக் குறைவின்றால்
தம்மை விளக்குமால் தாமுளராக் கேடின்றால்
எம்மை யுலகத்தும் யாங்காணேங் கல்விபோன்
மம்ம ரறக்கு மருந்து."

எனவும்,

"எழுத்தறியத் தீரு மிழிதகைமை தீர்ந்தான்
மொழித்திறத்தின் முட்டறுப்பா னுகு - மொழித்திறத்தின்

முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும்."

எனவும்,

"ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து."

எனவும் கூறியவாற்றாற் கல்வி இம்மைக்கண் வேண்டிய கொடுத்து, மறுமைக்கண் இறைவனது திருவடிக்கண் உறும் பேரன்பினைத் தருதலின், 'கல்வி கல்லாதவன்' எனவும்,

"கலைதலை சூலங் கடுங்கனல் கண்டைகட் டங்கங்கொடி
சிலையிவை யேந்திய வெண்டோட் சிவற்கு மனஞ்சொற் செய்கை
நிலைபிழை யாதுகுற் றேவல்செய் தார்குன்ற மேருவென்னு
மலைபிழை யாரென்ப ராலறிந் தோர்களிம் மாநிலத்தே."

எனவும்,

"மாயனன் மாமணி கண்டன் வளர்சடை யாற்கடிமை
யாயின தொண்டர் துறக்கம் பெறுவது சொல்லுடைத்தே
காய்சின வானை வளருங் கனக மலையருகே
போயின காக்கையு மன்றே படைத்தது பொன்வண்ணமே."

எனவும் கூறியவாற்றான் சிவனடியார்க் கன்புசெய்து, அவர் திருக்குறிப்பின் வழிநின்று ஒழுகின் அவரடையும் பேற்றினை யொழுகினுமடைதல் திண்ணமாதலின், 'மெய்யடியவர்பால் செல்லாதவன்' எனவும், உண்மைப்பொருளா யுலப்பில் காலம் நிற்பது சிவமாதலின் அது 'மெய்' எனவும், அதனைப் பொருளெனக் கொண்டு புகலானோர் 'மெய்யடியவர்' எனவும் கூறப்பட்டது. பல அறங்களையு மேற்கொண்டொழுகி யவ்வவற்றிற்குக் கூறிய பயனை யடைதற்கருமையால் சில தவறிற் குற்றப்படுதலின், அவை யெல்லாவற்றின் பயனையுந் தானே

தாவல்லதாதலின் அதனைக் கடைப்பிடித்தான் உண்மைப்பொருளாகிய சிவத்தினையுங் கைக்கொண்டுவாழ்வன் என்பார், 'உண்மைசொல்லாதவன்' என்றார். இக்கருத்தேபற்றி தேவரும்,

"பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற
செய்யாமை செய்யாமை நன்றி."

எனவும்,

"பொய்யாமை யன்ன புகழில்லை யெய்யாமை
யெல்லா வறமுந் தரும்."

எனவும் கூறியவாற்று னறிக.

"சொல்லா தனகொழு நாவல்ல சோதியுட் சோதிதன்பேர்
செல்லாச் செவிமறந் தேறித் தொழாதகை மண்டிணிந்த
கல்லா நினையா மனம்வணங் காத தலையும்பொறையா
மல்லா மவையவந் தானு மனிதர்க் கசேதனமே."

"ஓதவ னுமை முறையவன் பல்குண முன்னைவிட்டேன்
போதவன் பின்னே பொருந்தவன் வாழ்க்கை திருந்தச்சென்று
மாதவ மாகிடு மாதவ மாவளா புன்சடையான்
யாதவன் சொன்னு னதுகொண் டொழியினி யாரணங்கே."

என்று அருளியபடி சிவ மூர்த்தியின் திருவடிக்கண் அன்பிலா மனத்தாலும், மற்றைய வுறுப்பாலும் பயனின்மையின் 'நின் திருவடிக்கு அன்பு இல்லாதவன்' எனக்கூறினர். சிவன்றன் திருவுருவைக்காணுத கண்முதலிய அங்கங்களால் பயனின்மை கூறப்பட்டிருத்தலால் அக்கண் முதலியவற்றைக் கொண்ட தேகமும் பயனின்று என்பார், 'மண்ணிலேன் பிறந்தேன்' என்றார். 6

பிறக்கும் பொழுது கொடுவந்த தில்லை; பிறந்துமண்மே
லிறக்கும் பொழுது கொடுபோவ தில்லை; யிடைநடுவிற்

குறிக்குமிச் செல்வஞ் சிவன்றந்த தென்று கொடுக்கறியா
திறக்குங்குலாமருக் கென்சொல்லு வேன்கச்சி யேகம்பனே!

(பொ - ரை) அடியேன் பூமியில் பிறக்குங் காலத்தும் கொண்டு வந்ததாகிய பொருள் வேறொன்றுங் கிடையாது; பூமியில் தோன்றி சாங்காலத்திலும் கொண்டுபோகும் பொருள் இல்லையாம். இப் பிறப்பிற்கும் இறப்பிற்கும் நடுவணதாகிய வாழ்க்கைக்கண் தோன்றியதாக எண்ணப்படும் இந்த நிலையிலாச் செல்வம் (எல்லாம் வல்லவனாகிய) சிவமூர்த்தி (ஆன்மாக்களின் கர்மங்களுக் கீடாகக்) கொடுக்கப்பட்டதென்று (எண்ணி) இரப்பார்க்குக் கொடுக்க அறியாது, வீணாக உயிரைவிடும் கீழ்மக்களுக்கு நான் எது சொல்லுவேன்? திருக்கச்சியைத் திருக்கோயிலாகக்கொண் டெழுந்தருளியிருக்கும் ஏகாம்பரநாதனே! (எ - று.)

(வி - ரை) ஆன்மா, கன்மவயத்தால் ஒரு தேகத்தை நீங்கி மற்றொரு தேகத்தைச் சேருமிடத்து மண், பொன், பெண் முதலிய சகல பொருள்களையும் விட்டுப் புரியட்டகத்துட னடைகையில் அவை உடன் செல்லாது நிற்றலின், 'பிறக்கும்பொழுது கொடுவந்ததில்லை' எனவும்; அங்ஙனம் பூமியிற் பிறந்து தனதான்யாதிகளை யார்ச்சித்து அனுபவித்து அத் தேகத்தை நீங்குமிடத்தும் அவ்வான்மா தான் தம் முறவினர்க்குந் தனக்கு முறுதியெனக் கொண்ட அப் பொருள்களைக் கொள்ளாது நீங்குதலின், 'இறக்கும்பொழுது கொடு போவதில்லை' எனவும்; பிறக்கும்பொழுது எனப் பொதுபடக் கூறியதனானே சநநங்க ளனைத்தையுங் கொள்க. தோற்றக் கேடுகளின் உடன் கொணரப்பட்டதும் உடன்கொண்டுபோகப்பட்டது மேன்மை கூறியதனானே, அச்செல்வம், இடையில் ஆன்மா பூர்வசன்மத்திலார்ச்சித்த புண்ணியபாவத்தினளவு இடையிற்பட்ட தென்பார், 'இடைநடுவிற் குறிக்கு மிச்செல்வம்' என்றார். இச்செல்வம், சடமாத

லின் தாமே குறித்த இடத்திற் செல்லா அன்றிக் கன்மஞ் செல்லுமாயின் அவை வாசனுமாத்திரமாய் ஆன்மாவைப் பின்பற்றிச் சிவசத்தியேவலால் புண்ணியபாவங்களை விளைக்குமன்றி அவற்றிற்கு வலியிலவென்பார், 'சிவன் தந்தது' என்றார். இறைவன் புண்ணியத்திற் கீடாகத் தந்ததாதலின் அச்செல்வந் தோன்றியபோது,

"என்னு மொன்றுதங் கையுறப் பெற்றக்காற்
பின்னுவ தென்று பிடித்திரா—முன்னே
கொடுத்தா ருயப்போவர்."

எனவும்,

"நின்றன நின்றன நில்லா வெனவுணர்ந்
தொன்றின வொன்றின வல்லே—செயிற்செய்க
சென்றன சென்றன வாழ்நாள் செறுத்துடன்
வந்தது வந்தது கூற்று."

என்றபடி உடனே சிவனடியார்க்குக் கொடுத்தல் நலம் என்பார், 'சிவன் தந்த தென்று கொடுக்கறியா திறக்கும்' எனவும்; இங்ஙனமிறைவன் றந்த அறிவு பெற்றிருந்துஞ் செல்வஞ் சேகரிக்க அதைப் பயன்படுத்திச் செல்வம் பெற்றதாற் பெறும் பெரும்பயனை யடையஅதனைப் பயன்படுத்தாது அறிவிலரா யிருத்தலின், அப்பெற்றிகொண்டாரைக் 'குலாமர்' என்றார். இச்செல்வம் நிலையாமையையும் அதைக்கொண்டு அநுபவிக்கும் யாக்கை நிலையாமையையும் கண்கூடாகக்கண்டும், சுருதிபுராணங்களாலும், நல்லோராலும் உணர்ந்தும் அறியாதிருந்த அடியேன் கூறினும் அறியார் என்பார், அங்ஙனம் கொடாது முன்பிறப்பிற் செய்த புண்ணியத்தை யிழந்து இனி மறுமைக்கு மிச்செல்வத்துடனிருக்கப் புண்ணியத்தைப் புரியாது வாளாவிறக்கும் பயனின் மாந்தரைக் கண்டு இரக்கமுற்று அடிகள் 'என் சொல்லு

வேன்' எனவும் கூறினர். இச்செய்யுள், செல்வம் இடையில் தோன்றியதெனவும், அது தோன்றியபொழுதே அறஞ்செய்து புண்ணியங்கொண்டு பிழையுங்கள் எனவும், அங்ஙனங் கொடாதொழியின் பயனின்று வாணுள் வீணுளாமெனத் தம்மையொத்த மனிதரைக்கண்டிரங்கிக் கூறியதாமென்க. பொழுது என்பது இறப்பு பிறப்புக்களின் காலத்திற்கு ஆகுபெயராய் நின்றது. கொண்டுவந்ததென்பது 'கொடுவந்தது' என நின்றமையால் மரூஉ; கொடுவந்தது - ஒரு சொல்லின் றன்மைத்தாய்ப் பொருளை யுணர்த்தி நின்றது. 'கொடுபோவது' என்பதும் அது. 'கொடுக்க அறியார்' என்பதில் அகரம் தொகுத்தல். 7

அன்ன விசார மதுவே விசார மதுவொழிந்தாற்
சொன்ன விசாரந் தொலையாவிசார நற் றோகையரைப்
பன்ன விசாரம் பலகால் விசாரமிப் பாவிநெஞ்சுக்
கென்ன விசாரம்வைத் தாயிறை வா!கச்சி யேகம்பனே!

(பொ - ரை) பொய்யாகிய தேகத்தினைப் போஷித்தற் பொருட்டுத் தேடும் அன்னத்தின் விசாரம் அதுவே எனக்குப் பெரு விசாரமாம்; அவ்விசாரம் எவ்வகையேனும் நீங்கின் பொருள்தேடி யின்புறச் செய்யும் விசாரம் நீங்காத விசாரமாம்; (அது வொழிந்தால்) அழகு வாய்ந்த மயில்போலுஞ் சாயலையுடைய பெண்களைப் புகழ்ந்து பேசும் அந்த விசாரம் பலகாலத்தும் விசாரமாம்; சித்த சாந்தம் அடையாத இந்தப் பாவியின் மனதிற்கு என்ன விசாரத்தினை வைத்தாய்? இறைவனே! திருக்கச்சிநகர்க்க ணெழுந்தருளிய ஏகம்பனே! (எ - று.)

(வி - ரை)

"சேவித்துஞ் சென்றிரந்துந் தெண்ணீர்க் கடல்கடந்தும்
பாவித்தும் பாராண்டும் பாட்டிசைத்தும்.''

பிறரிடத்து இச்சகம் முதலிய பேசியும் சம்பாதித்தல், நாழி யரிசி கொண்ட வுதரபோஷண நிமித்தமாதலின் 'அன்னவிசாரம்......விசாரம்' என்றார். இங்ஙனம் பல்வகையி னுத்யோகித்து அன்னவிசாரம் ஒழிந்தோன் அதன்மேல் பொருள் தேடுதற்கும் அவ்வீட்டிய பொருளைக், கள்ளர் முதலியோர் கவராது காத்தற்பொருட்டும், அதனைப் பல்வகையில் விருத்திசெய்து அதி லோபமின்றி லாபம் பெறச்செய்யும் விசாரம் அதினு மிக்கதாதலின், 'சொன்ன விசாரம்......விசாரம்' என்றார். இதனை,

"இன்னறரும் பொருளை யீட்டுதலுந் துன்பமே
பின்னதனைப் பேணுதலுந் துன்பமே யன்ன
தழித்தலுந் துன்பமே! யந்தோ பிறர்பால்
இழத்தலுந் துன்பமே யாம்."

என்று பிறர் கூறியதனுணறிக. பெண்களிடம் அவர்தமைப் புகழ்ந்து அவர் விருப்புத் தம்மேல் வர இவற்கும் அவளிடத்து மத முண்டாம். இதனை,

"கல்லிற் பிறக்குங் கதிர்மணி காதலி
சொல்லிற் பிறக்கு முயர்மதம்."

என்றதா லறிக. அங்ஙன மதமுண்டாகவே அவன் பன்னாள் வருந்திச் செய்த தவங் குறையும்; அத்தவங் குறைந்த அடைவே அது குறைந்த இடத்து அவம் வந்து தங்கும்; அது வந்து அவ்வேல்லையிலதனை யடுத்தே பாவம் வந்து கூடும், இஃதொன்றோ? அப்பெண்களைப் பல்காற் புணர்தலால், அவன் உறுதியாகப் பன்னாள் அநுபவிக்கக் கொண்டிருந்த வுடம்பி லடங்கியிருந்த நோய்கள் மேற்றோன்றி யழிவைத் தரும்; ஆதலின், 'நற்றோகையரைப் பன்...பலகால் விசாரம்' என்றார். இதனை,

"அருப்புப் போன்முலை யாரல்லல் வாழ்க்கைமேல்
விருப்புச் சேர்நிலை விட்டுநல் லிட்டமாய்த்
திருப்புத் தூரனைச் சிந்தை செயச்செயக்
கருப்புச் சாற்றினு மண்ணிக்குங் காண்மினே."

என்ற திருவாக்கானறிக. மேற்கூறிய ஈஷணாத்திரயங்கள் மூன்றில் மனத்தை யழுத்தினேன் பாவம் மேலிட்டுப் பாழ்ங் கும்பிக்கே யிறையாதல் திண்ணமாதலின், 'பாவிநெஞ்சு' என்றார். இவை யொழிந்து உன் திருவடிமாட்டு அன்பாம் விசாரத்தைபாக்கி மற்றதையொழிப்பா யிறைவனே யென்றிரங்குவார், 'என்னவிசாரம் வைத்தா யிறைவா!' என்றார். 8

கல்லாப் பிழையுங், கருதாப் பிழையுங், கசிந்துருகி
நில்லாப் பிழையு, நினையாப் பிழையு,நின் னஞ்செழுத்தைச்
சொல்லாப் பிழையுந்,துதியாப் பிழையுந்,தொழாப்பிழையு
மெல்லாப் பிழையும் பொருத்தருள் வாய்கச்சி யேகம்பனே!

(பொ - ரை) நீர் அருளிச்செய்த வேத சிவாகமங்களைக் கற்காத பிழையும், அதன்கணுள்ள அருமைகளை மனக்கண் கொள்ளாப் பிழையும், மனம் உருகி உன் திருவடிபற்றாக நிற்காத தவறும், தேவரீர் திருவடியை நினையாத தவறும், உனது மந்திரத் திருமேனியை யுணர்த்தும் மந்திரமாதாவாகிய ஐந்தெழுத்தினை வாயாரச்சொல்லிச் செபிக்காத பிழையும், உன்னை வணங்காத பிழையும், இவையொழிந்த மற்றெல்லாப் பிழையும், பொறுத்துக்கொண்டு அருள்புரிவாய்! திருக்கச்சியில் எழுந்தருளியிருக்கும் ஏகம்பனே! (எ - று.)

(வி - ரை) கற்கவேண்டுழி சிவகதை யன்றி யவக்கதை யொன்றையும் அறிவுளார் கல்லாராதலினாலும், ஏனைய ரமன்கதை நளன்

கதை அரிச்சந்திரன் கண்ணன் முதலியோர் கதைகள் இம்மையில் சிற்றின்ப மாத்திரையே யன்றிச் சிவகதைபோல மனமெய் முதலிய வற்றை யுருக்கி இம்மை மறுமைப் பயன்களைத் தரா ஆதலினுன், இஃதொன்றே நெஞ்சை யுருக்கி மெல்லென ஆணவத்தின் வலி யடக்கி யருமை முத்தி தரவல்லதாதலின், 'கல்லாப்பிழையும்' எனவும்; கற்று வல்லனாய் அக்கல்விச் செருக்கால் தம்மையொத்தாரிடஞ் சென்று வியாகரணந் தருக்க முதலியவற்றி லவர்களுடன் வாதிட்டு வெற்றிபெறும் நோக்கங்கொண்டு திரிந்து வாணாள் வீணாள் போக்கி னேனன்றி நன்னூற்களாகிய வேதசிவாகமங்களைக்கற்று, அவற்றினைச் சிந்தித்தல் முதலிய செய்யேன் என்பார், 'கருதாப் பிழையும்' எனவும்; அம்முனைவன் கண்ட முதனூல் கற்றல் சிந்தித்தல் செய்தான் மன மொழி மெய்முதலிய வருகித் தன்னையுந் தலைவனையு மறியும் நோக்கங்கொண்டு முதல்வன் றிருவடி பற்றுக்கொண்டு நிற்ப னாதலின், 'கசிந்துருகி நில்லாப்பிழையும்' எனவும்; அங்ஙனம் பன்னூலாய்ந்தோய்ந்து ஆராய்தல் சிந்தித்தல் முதலிய செய்யானாயினும் அரைக்கணமேனும் திருவடிக் கன்புபூண்டு நினைப்பனாயினும் மேற்கூறிய செயல்களைச் செய்து முத்தி புகுவார் புகுமிடம் அவனு மடைவனாதலின் அதுவும் அடியேன் செய்திலன் என்பார், 'நினையாப் பிழையும்' எனவும்; இவையனைத்துங் கூடிலனாயினும் மந்திரமாதாவாகிய ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை: உபாம்சு, வாசிகம் மானதம் ஆகிய மூவிதங்களாலாயினும் ஜெபித்திலேன் என்பார், 'அஞ்செழுத்தைச் சொல்லாப் பிழையும்' எனவும்; ஐந்தெழுத்தால் துதித்திலனாயினும் உன் பல்லாயிர நாமங்களில் ஒன்றையும் கூறியப்பேறு அடைகிலேன் என்பார், 'துதியாப் பிழையும்' எனவும்; இவையனைத்து மில்லேனாயினும் கைகுவித்தேனும் உன் திருக்கோயிலைத் துதியேன் என்பார், 'தொழாப் பிழையும்' எனவும்; இவ்வாறு பல பிழைகளும் பெற்றுளேனாயினும் தேவரீர் திருச்சந்நிதானத்து நான் செய்த

தவறுகளைப் பொறுத்துக் காத்தருள்செய்க என்பார், 'எல்லாப் பிழையும் பொறுத்தருள்வாய்' என்றார்.

9

'மாயநட் போரையு, மாயா மலமெனு மாதரையும்,
வீயவிட் டோட்டி, வெளியே புறப்பட்டு, மெய்யருளாந்
தாயுடன் சென்றுபின் தாதையைக் கூடிப்,பின் றாயைமறந்
தேயும தேநிட்டை, யென்றா னெழிற்கச்சி யேகம்பனே!

(போ - ரை) 'வஞ்சனைகளைச் செய்து மயக்கும் நட்பினரையும், அழியாத மலமே வடிவுகொண்ட பெண்களையும் அழிவடையவிடுத்து, அவை தன்னிடம் நிலைக்காது கெடுத்து, (சர்வசங்க பரித்தியாகஞ் செய்து) துறவியாய் வெளிப்பட்டு, உண்மையாகிய சிவசத்தியாகும் தாயைப் பின்பற்றிப், பிறகு தந்தையாகிய இறைவனை யணைந்து, தான் தந்தையை யணைதற்குப் பற்றுக்கோடாகிய தாயை மறந்து, பொருந்தியிருக்கும் அத்தன்மையே நிட்டையென் றருளிச்செய்தான்' அழகு தங்கிய திருக்கச்சியின்கண் எழுந்தருளிய ஏகம்பனே! (எ - று.)

(வி - ரை) பொய், களவு, கவறுமுதலிய பயின்று அவற்றின் வழி புக்கு இன்பமடைந்து, பொருள் நாடு மனைவி புத்திரர் முதலியோரை விடுத்தோம், தனியே பரதேசிபோல் வசித்துளோமெனும் வஞ்சகர் செய்கை பலரால் கேட்கப்படுதலின், அவ்வகை பயில்வோர் பலருடன் நட்புச்செய்தல் தீதென்பார்,'மாயநட்போரையும்' எனவும்; மலமே தன்னை மயக்க பெண்ணுருக்கொண்டு முன்வந்து இறைவன் மாட்டுள்ள அன்பினைக் கெடுத்துத் தன்னைத் தன்வசப்படுத்திக் கெடுத்தலின் அதனை மலமாக உருவப்படுத்தி, 'மாயாமலம் எனும் மாதரையும்' என்றார். இவற்றை முதலறக் கெடுத்தல் வேண்டுமென்பார் 'வீயவிட்டோட்டி' என்றார். கெடுத்ததுணையானே அவை

மீண்டும் வந்து தம்மை யணையாவாறு துறவும் கொள்ளல்வேண்டு மென்பார், 'வெளியேபுறப்பட்டு' என்றார். ஆன்மாக்கள் தாம் பூமியிற் பிறக்குந்தோறும் ஜனனவலைப்பட்டு அழுந்தாவாறு (தாய் பிள்ளையின் மாட்டு மிக்க கவலையுடனிருந்து அப்பிள்ளைக்குத் தீமை நேரிடாவாறு காத்தல்போல்) காத்தலின் இறைவியை 'மெய்யருளாந் தாயுடன் சென்று' எனவும், இங்ஙனம் சத்திநிபாத மடைந்தான் சிவத்துடன் கூடிப் பேரின்பமாகிய முத்தியினை யநுபவிப்பான் என்பார், 'தந்தையைக் கூடி' என்றார். இங்ஙனமன்றித் தன்னுடன் அநாதியே நெல்லுக்கு உமி தவிடு முதலியனபோல் விட்டு நீங்காதிருக்கு மாயை கன்மங்களை 'மாயநட்போர்' என்றார் எனினுமாம்; அவ்விரண்டையும் நீங்கினவாறே மலத்தினையும் அவ்வகை நீங்கிச் சிவசத்திபதிய இறைவனை யணையவேண்டு முபாயங் கூறினார் என்னலுமாம். 10

வரிக்கோல வேல்விழி யாரனு ராக மயக்கிற்சென்று,
சரிக்கோது வேனெழுத் தஞ்சுஞ் சொலேன்; தமியேனுடல்
நரிக்கோ?கழுகு பருந்தினுக் கோ?வெய்ய நாய்தனக்கோ?.
எரிக்கோ விரையெதுக் கோவிறை வாகச்சி யேகம்பனே!

(பொ - ரை) செவ்வரிகளையுடைய அழகிய வேலையொத்த கண்களையுடைய பெண்களின் காமமயக்கத்தில் போய், அவருடன் நட்புக்கொண்டுலாவுதற்கு அதற்கு வேண்டிய காமநூல்களை யோதுவேன்; பஞ்சாக்ஷரங்களைந்தினையும் செபியேன்; (ஆதலால்) அடியேனது தேகம் நரிகளுக்கோ? கழுக்கள் பருந்துகள் முதலியவற்றிற்கோ? கொடிய நாய்களுக்கோ நெருப்பினுக்கோ? வேறெதற்கோ இரையாவது அறியேன்; திருக்கச்சிக்கண் எழுந்தருளிய ஏகம்பனே! (எ - று.)

(வி - ரை) அனைத்தையுந் துறந்துவிட்ட துறவியையும் வேல்போல் தைத்துருவி அவர்களைத் தம் வயப்படுத்த வல்லது கண்ணாகலின் அதனை 'வரிக்கோல வேல்விழி' என்றார். அவர் அநுராகத்தில் மயக்கமுற்று, அவர்க்கு வேண்டிய நூல்களைக் கற்பதற்குக் காமநூல் பழகி வாணாள் வீணிற்கழிப்பேனாதலின், 'சரிக்கோதுவேன்' எனவும்; அவ்வாறு சரிக்கும் நான் இவற்றைப் பற்றாகக்கொண்ட நாட்கள் வீணாளாம் எனத் தேறி யெழுத்தைந்தும் ஓதேன் என்பார், 'எழுத்தைந்துஞ் சொலேன்' என்றார். இவ்வகை காசாணாதிகளும், தலைமுதலிய வுறுப்புக்களும், புறக்கரண அந்தக்கரணங்களும், அவன் திறத்திற் பணிசெய்யாது கெடுதலின், அவ்வகை யழிந்தவுடல் உயிர் நீங்கிய பின் நாய் நரி முதலிய உண்ணப் பயனாறுமே யன்றி வேறாகாது என்பார், 'இரையெதுக்கோ' என்றார். 11

காதென்று மூக்கென்று கண்ணென்று காட்டிபென் கண்ணெதிரே, மாதென்று சொல்லி வருமாயை தன்னை மறலிவிட்ட, தூதென்றெண்ணயற் சுகமென்று நாடுமித் துற்புத்தியை, யேதென் றெடுத்துரைப் பேன்? இறை வா! கச்சியேகம்பனே!

(போ - ரை) காதினழகையும், மூக்கினழகினையும், கண்ணின் அழகினையும், எனக்கு முன்னே தெரிவித்து, எனது கண்ணுக்கெதிரில் பெண்ணெனப் பேர்கொண்டு, மதமுண்டாம் வார்த்தைகளைக் கூறி வருகின்ற மாயாவுருக்கொண்ட பெண்ணை, யமன் என்னுயிரைக் கொலைபுரிய ஏவிய தூதாகவந்தவள் என்று நினையாமல் 'இதுவே சுகப்பேறு' என்று ஆராயும் இத் தீமதிகொண்டானை ஏதென்று எடுத்துச் சொல்லுவேன்? தலைவனே! திருக்கச்சிக்கண் எழுந்தருளிய ஏகம்பநாதனே! (எ - று.)

(வி - ரை) பெண்ணினைக் கண்ட காலத்து முதற்கண் தோன்றுவது முகமாதலின் அதிற் சிறந்த வுறுப்புகளைக் கூறிடுவார் காது முதலியவற்றைக் கூறினர். இங்ஙனங் கூறவே, காண்பானுக்குக் காது வெள்ளைத்தண்டினையும், மூக்கு எள்ளின்போதினையும், கண் வேலினையும் ஒத்து வருத்தஞ் செய்தலின் 'காட்டி' என்றார். இவை கொண்டாஷ் பெண்ணயின் பெண்ணுக்குரிய மடமையாதி குணங்களிருத்தல்வேண்டும்; அங்ஙனமில்லாது துயரஞ் செய்தலின் 'மாதென்று சொல்லி' எனவும்; இவ்வகை நல்வழி செல்லவொட்டாது என்னைத் தடுத்துத் தன்வழி யொழுகச்செய்தலி னிதை மாயை யென்பார், 'மாயை தன்னை' எனவும்; இவ்வாறு அப் பெண்வழி யொழுகினுன் அடையவேண்டிய பேரின்பத்திற் குரிய முயற்சியினைச் செய்யாது, இம்மையிற் சுகம் நிலை பேறுடையதாக்கொண்டு அதின்வழி யொழுகி யமன்தூதரால் தண்டிக்கப்பட்டு நிரயத்தில் வீழ்ந்து இறைவன் திருவடியை மறத்தலின் 'மறலிவிட்ட தூது' என்றும்; இவ்வகை யொழுகுங்காலத்துச் சிறிதும் நல்லறிவால் சிந்தித்திலேன் என்பார், 'எண்ணமல்' எனவும்; சுகமல்லா இதனைச் சுகமாக எண்ணினேன், இது நல்லோரால் மதிக்கத்தக்கதன்று என்பார், 'துற்புத்தி' எனவும்; இப்புத்தி யுலகப்பொருள்களில் ஒன்ருகக் கொள்ளத்தக்கதன்று என்பார், 'ஏதென்று எடுத்துரைப்பேன்' எனவுங் கூறினர். மாயாவருக் கொண்ட பெண்ணினை 'மாயை' எனவும், துற்புத்தியை யுடையானைத் 'துற்புத்தி' எனவும் ஆகுபெயராற் கூறினர். 12

ஊருஞ் சதமல்ல; உற்ருர் சதமல்ல; உற்றுப்பெற்ற
பேருஞ் சதமல்ல; பெண்டிர் சதமல்ல; பிள்ளைகளுஞ்
சீருஞ் சதமல்ல; செல்வஞ் சதமல்ல; தேசத்திலே
யாருஞ் சதமல்ல; நின்றுள் சதங்கச்சி யேகம்பனே!

(போ - ரை) (ஒருவருக்குத் தம்முன்னோராலுந் தன்னாலும் வந்த) கிராமாதிகளும் நெடுநாள் அனுபவிக்கப்படும் பொருள்களாகா; (உடன்பிறந்தார் மனைவிமக்கள் முதலிய) உறவினரும், 'நெடுநாளாகச் சூழ்ந்து உறுதி கூறத்தக்கவராகார்; (புத்திரப்பேறு வேண்டி விரத முதலிய செய்து) கவலையடைந்து பெற்றோராகிய தாய்தந்தையர்களும், எக்காலத்து மிருந்து நமக்குறுதியாகார்; (பல்லாரறியப் பறையறைந்து நாள்கேட்டுத் தன் தேகரக்ஷணார்த்தம் கொண்ட) மனைவியரும், சாங் காலத்து உறுதியைத் தரார்; தாம் தவஞ்செய்துபெற்றபுத்திரர்களும், அத் தந்தையருக்கு இறுதிக்காலத்துத் துணையாகார்; தனது புகழாகிய சீர்மையும் உறுதியைத் தராது; தான் உடம்பு வருந்தச் சேகரித்த செல்வமும் சதமாகாது; இப்பூமியில் யாவரும் உறுதியாகார்; தேவரீர் திருவடிகளே இம்மை மறுமை யிரண்டிற்கு முறுதி தரத்தக்கவையாம். தலைவனே! திருக்கச்சிக்கண் எழுந்தருளிய ஏகம்பநாதனே! (எ - று.)

(வி - ரை) உலகத்துத் தோன்றிய வொருவன் தன் வாழ்நாட்களில் தன் குடும்பத்துடன் ஜீவிக்கவேண்டியதற்குத் தேடிக்கொள்வது நாடு முதலியவை யாதலின், முதலில் தேடிக்கொள்ளு மதனை 'ஊரும்' எனவும், அங்ஙனமன்றி யிடவாகு பெயராய் ஊரில் தனக்கு நட்பாகவுள்ளாருமென்னினுமாம். இங்ஙனம் தனக்கு உதவியாகப் பெற்ற வூரும் ஊராரும் அநுபவிக்கு மாத்திரையே யன்றித் தன்னைப் பின்பற்றுவனவாகக் கொள்ளப்படுவனவன்று என்பார், 'சதமல்ல' எனவுங் கூறினர். தன்னைப்பற்றித் தனக்கு இடுக்கண் நேர்ந்த ஆங்குச் சென்றுதவும் உண்மைச் சுற்றத்தவரும் இம்மைக்கண் கைப்பொருள் நீங்கிய காலத்து அகல நிற்பர்; அவ்வகை யகலாராயினும் உடல் நீங்கும் மரணகாலத்து ஒருபோதும் பின்பற்றாராதலின் அவ்வகைச் சுற்றத்தினரும் உறுதியென வெண்ணப்படார் என்பார், 'உற்றார் சதம் அல்ல' எனவும்; பத்துமாதஞ் சுமந்து வருந்தி யீன்று, பிணி

முதலியவற்றிற்கு அஞ்சிக் காத்துக் குருவி பறவாமற் கோதாட்டிய தாயும், தனக்குறுதியெனப் பல பண்டங்களை யருந்திக் கல்வி முதலிய பயில்வித்துக் காத்த முதுகுரவர் இருவரும் காலன் வந்து உயிர் கொள்ளு மக்காலத்து எனைக் காத்துத் தடுக்க வல்லரல்ல ராதலின் அவர்களு முறுதியல்லர் என்பார், 'உற்றுப் பெற்றபேருஞ் சதமல்ல' எனவும்; எனக் குறுதியென நான் பல்லணிபூட்டிப் பல்லாரறியப் பறையறைந்து நாள் கேட்டுக்கொண்ட மனைவியும் வெம்புவாள், விழுவாள், மேல்விழுந் தழுவாள், 'சாகிறேன்' என்று என்னுடன் கூறி யான் இறக்குந்தருணத்து என்னுடன்வந் துதவாளாதலின் 'பெண்டீர் சதமல்ல' எனவும்; என்னு லூட்டப்பட்டு வளர்ந்து கல்விமுதலிய கற்று வல்லராய் நன்னிலை யடைந்த புத்திரரும் யானுண்ணாது தேனீப்போல் வைத்த பொருளைக் கொண்டு இன்ப மனுபவிப்பரே யன்றி யான்படு மரணத்துயரைக் கண்டு அதனை விலக்கார், நானிறந்து செல்லுமிடத்திற்கு மென்னைப் பின்பற்றார் என்பார், 'பிள்ளைகளுஞ் சதமல்ல' எனவும்; நான் பன்னாள் பலர்க்குச் செய்த வுதவியாலும் கொடையாலுமடைந்த கீர்த்திமுதலியனவும்,வருந்திப்பெற்ற பெருஞ் செல்வமும் என்னுடன்வந் தெனக்குறுதி பயவா என்பார், 'சீருஞ் சதமல்ல செல்வஞ் சதமல்ல' எனவும்; இவையே யன்றி உயர்திணை யஃறிணையாகிய உலகத்துப்பொருண்முழுதும் போக்கியப்பொருளே யன்றி யென்னுடன் சென்று எனக்குற்ற மரணத் துயரத்தைப் போக்கிச் செம்மைதர வல்லன அன்றென்பார் உயர்திணையையு முடன்படுத்தி, 'யாருஞ் சதமல்ல' என்றார். இவை யனைத்தும் தேவரீரது திருவடிகளை அடைவதற்குரிய உபகரணங்களாகமாட்டாது நிலையில் பொருள்களா யொழிதலின், அங்ஙனமன்றித் தம்மை யடைந்தோர்க்குப் பெறுதற்கரிய பேருய் இம்மை மறுமைக்குத் துணையாய் அந்தமிலின்பத்தழிவில் வீட்டினை அளிக்க வல்லதாய் விளங்குவது

தேவரீர் திருவடிகளே யென்பார் 'நின்றாள் சதங்கச்சி யேகம்பனே' என்று கூறினர். 13

சீறும் வினையது பெண்ணுரு வாகித் திரண்டுருண்டு
கூறு முலையு மிறைச்சியு மாகிக் கொடுமையினாற்
பீறு மலமு முதிரமுஞ் சாயும் பெருங்குழிவிட்
டேறுங் கரைகண்டி லேனிறை வா!கச்சி யேகம்பனே!

(பொ - ரை) (ஆன்மாக்களை) வருத்துகின்ற வினையானது பெண்வடிவாகித், திரண்டுருண்டு (யாவராலும் புகழ்ந்து) சொல்லப் பட்ட தனங்களும் மாமிசமுமாகிக், கொடுமையால் கிழித்து வெளிப் படுகின்ற மலமும் இரத்தமும் ஊற்றெடுக்கின்ற பெரும்பள்ளமாகிய நிதம்பத்தை யொழித்து ஏறுதற்குரிய (முத்தியாகிய) கரையைக் கண்டேனில்லை. தலைவனே! திருக்கச்சியின்கண் எழுந்தருளியஏகம்ப நாதனே! (எ - று.)

(வி - ரை) இருவினைச் சம்பந்தத்தால் தேகமும், தேக சம்பந் தத்தால் ஊழ்வினையும், ஊழ்வினையால் பல்வகை யிடுக்கணும் முறையே தோன்றுமாப்போல், மாதரைக் காண்டல் - சிந்தித்தல் - அவர் சொற்கேட்டல் முதலியன பல்வகைத் துயரிற்கும் ஆதார மாதலின் 'சீறும்வினையது பெண்ணுருவாகி' எனவும், மானுட அவயவ முப்பத்திரண்டனுள் நீண்டும் பரந்தும் தடித்தும் மாமிசம் பெற்றும் திரண்டும் உருண்டும் இருக்கவேண்டிய அவ்வவ் வவயவங்கட்குரிய சாமுத்திரிக இலக்கணப்படி அழகு நிரம்பப்பெற்றவ ரென்பார், 'திரண்டுருண்டு, கூறு முலையும் இறைச்சியுமாகி' எனவும்; மானுட தேகத்திலுள்ள நவத்துவாரங்களுள் மலமுறுமாப்போலக் கடிதடம் மலமேயன்றி, உதிரமும் பாயு மியல்பினதாகலின் 'பீறுமலமும் உதிர மும் சாயும்' எனவும்; மாதர்களே மடசுவரூபமெனவும், அவருடைய

விழிகள் பாசமெனவும், அல்குல் நரகமெனவுங் கூறி, ஏனைய நரகங்கள் தம்மிடத்து வீழ்ந்தோரை ஒரோ காலங்களில் வெளிவிட்டுவிடுமியல்பினவாதல்போலன்றி, எக்காலத்தும் நீங்காது துன்புறுத்துமியற்கையினதாகலின், 'பெருங்குழி விட்டேறுங் கரைகண்டிலேன்' என்வும் கூறினர். இதனை,

"மாதர்யம னுமவர்தம்மை விழியே வன்பாசம்
பீதிதரு மல்குல் பெருநரகம் · ஓதிலதில்
வீழ்ந்தோர்க்கு மேற விதியில்லை போரூரைத்
தாழ்ந்தோர்க்கு மில்லை தவறு."

எனவும்,

"ஓரிரண்டுவாழைக் கிடையிருந்த வாளரவின் வாய்படார்
பீழைக் கிடைவருந்தார் பின்."

எனவும் வரும் திருப்போரூர்ச் சந்நிதிமுறையா னுணர்க.

'சீறும் வினையது'என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி 'திரண்டுருண்டு' ஒரு சொன்னீர்மைத்து. 'பெருங்குழி' என்றது நிதம்பத்தை.

'பவக்கடல் கடந்து முத்தியங் கரையிற் படர்பவர்'

என்று பெரியார் கூறியதனுல், 'கரை' என்பதற்கு 'முத்தியாகிய கரை' எனப் பொருள் கூறலாயிற்று. 14

பொருளுடை யோரைச் செயலினும் வீரரைப் போர்க்களத்துந்,தெருளுடை யோரை முகத்தினுந் தேர்ந்துதெளிவதுபோ, லருளுடை யோரைத் தவத்திற் குணத்திலருளிலன்பி, லிருவறு சொல்லினுங் காணத் தகுங்கச்சி யேகம்பனே!

(பொ - ள) பொருட்செல்வ முடையவரை அவரது தொழிலாலும், போர்வீரரைப் போர்க்களத்து (அவர் செய்யும் போரா

லும்), கல்வித் தேர்ச்சியுடையவரை அவரது முகத்தாலும், ஆராய்ந்து உணர்வதுபோல; தேவரீருடைய திருவருளுடையாரை (அவர் செய்யும்) தவத்தாலும், அவரது குணத்தாலும், (அவருக்குப் பிறவுயிர்களிடத்துள்ள) கிருபையினாலும், (அவருக்குத் தம் தொடர்புடையாரிடத்துள்ள) அன்பினாலும், (கேட்பவருடைய அஞ்ஞானமென்கிற) அந்தகாரம் அறுதற்குக் காரணமாகிய அவரது சொற்களாலும் உணரலாகும். திருக்கச்சியின்கண் எழுந்தருளிய ஏகம்பனே!

(வி - ரை) தமக்குச் செல்வம் உள்ளபொழுது யாசிப்பவர்கட்குக் கொடுத்துவருவாராதலால், 'பொருளுடையோரைச் செயலினும்' என்றார். இதனை,

"அற்றா ரழிபசி தீர்த்த லஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி."

என்பதனாலறிக. போர்செய்துமென்று எண்ணி மறத்தைக்கொண்டிருக்கும் வீரர் தம் மார்பிலே தைத்துநின்ற வேலைப் பறித்து, தம்மோடெதிர்த்த யானையின் மருப்பிடை யிட்டு அது விண்ணிடங்கொள்ளவும், அவ்வேலுக்கு உண்டான வளைவைத் தம் மார்பின்கண்ணுள்ள புண்ணிலேயே நுழைத்து நிமிர்த்துக்கொள்ளவும், போர்க்களத்திற் போரைச் செய்தவராதலால், 'வீரரைப் போர்க்களத்தும்' என்றார். இதனை,

"கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்."

என்றதனாலறிக. கற்றோர்சொற்பொருள்களின் சுவையை யனுபவித்தலாலும், புகழ் பொருள் பூசை பெறுதலாலும், அறம் வீடு அடைதலாலும், மிக்காரோடு கூடி அறிந்தனவெல்லாம் அறிந்தமையாலும், யோகநூல் முதலியவற்றைச் சான்றோர்பால் கற்றதனால் வயதும் பலவாக நரையும் திரையும் இல்லாமையாலும், முகமலர்ச்சியோ

டிருப்பராதலா லதனை யாராய்ந்துணரவேண்டு மென்பார், 'தெருளுடையோரை முகத்தினுந் தேர்ந்து தெளிவது' எனவும்; தவத்தோர் முன்செய்த தவப் பழக்கத்தால் அறிவும், ஆற்றலும், ஞானயோகங்களின் முதிர்ச்சியும், காம வெகுளி மயக்கமின்மையும், தொடர்புடையார் மாட்டும் பிறர்மாட்டும் விருப்பமுடைமையும், தமக்கும் பிறர்க்கும் தீமைபயவாத சொற்களைச் சொல்லுதலுமுடையராதலால் அவற்றை அவர் செய்யுந் தொழில் முதலியவற்றால் காணத்தகும் என்பார், 'அருளுடை யோரைத் தவத்திற் குணத்திலருளி லன்பி, லிருளறு சொல்லினுங் காணத்தகும்' எனவும் கூறினர். 15

பருத்திப் பொதியினைப் போலே வயிறு பருக்கத்தங்கள்
டுருத்திக் கறுசுவை போடுகின் றார்;துறந் தோர்தமக்கு
வருத்தி யமுதிட மாட்டார், அவரையிம் மாநிலத்தி
லிருத்திக்கொண் டேனிருந் தாயிறை வா;கச்சியேகம்பனே!

(பொ - ரை) பருத்திமூட்டையைப்போல வயிறு பருக்கும்படி தங்கள் தோற்பையாகிய வயிற்றினுக்கு அறுசுவையோடு கூடிய உணவுகளை நிரப்புகின்றார்கள்; துறவினர்க்கு, வரவழைத்து உணவளிக்கமாட்டார்கள்; அப்படிப்பட்டவர்களை இப்பெரிய பூமியில் இருக்கும்படி செய்துகொண்டு யாது காரணத்தாலிருந்தனை? தலைவரே! திருக்கச்சியின்கண் எழுந்தருளிய ஏகம்பனே! (எ - று.)

(வி - ரை) யாக்கைக்கு வரைந்தநாள் கழியுங்காலத்து, உரையா வண்ணம் நாவையடக்கி விக்குள் எழ, உயிர் ஒருகணப்பொழுதாயினும் நில்லாது, புள்ளுப் பருவம் வந்துழிக் குடம்பையினின்றும் பறக்குமாப்போல நீங்கி, 'நேற்றிருந்தா னின்றில்லை' என்று உலகஞ் சொல்ல, உறங்குந்தன்மைபோலக் கிடக்குஞ் சரீரத்தை நிலையதென்று கருதி, அதற்கு அறுசுவையோடு கூடிய வுணவையிட்டு,

தீயினுக்கு எதிர்த்து நிற்காத பருத்திப் பொதியைப்போலப் பருக்கும்படி வளர்க்கின்றார் என்பார், 'பருத்திப் பொதியினைப் போலே வயிறு பருக்கத் தங்க, டுருத்திக் கறுசுவை போடுகின்றார்' எனவும்; முன் செய்த நல்வினைப் பயனாற் செல்வம் பெற்றோர் மாதவர்க்கு அமுது செய்வித்துப் பொழுதுபோக்க வேண்டுமாதலான் அங்ஙனஞ் செய்யாது கள்ளுக்குஞ் சூதுக்கும் பொருள் செலவிட்டு, வாணாளைக் கழித்து, யாதொரு பயனையும் அடையாது, இந்நிலவுலகத்திற்குப் பாரமாய் இருத்தலேயன்றி அவர்களால் யாதொரு பயனுமில்லை என்பார், 'அறந்தோர்தமக்கு, வருந்தி யமுதிடமாட்டா ரவரையிம் மாநிலத்தி, லிருத்திக்கொண் டேனிருந்தாய்' எனவும் கூறினார். 16

பொல்லா விருளகற் றுங்கதிர் கூகையென் புட்கண்ணினுக்
கல்லா யிருந்திடு மாறொக்கு மேயறி வோருளத்தில்
வல்லா ரறிவா ரறியார் தமக்கு மயக்கங்கண்டாய்!
எல்லாம் விழிமயக் கேயிறை வா!கச்சி யேகம்பனே!

(போ - ரை) ஞானத்தால் (விடயஞான ஆராய்ச்சியை) உணர்தற்குரிய மனக்கிளர்ச்சியில் வல்லவர்களாகிய ஞானிகள் (உண்மைப் பொருளை) உள்ளபடி தமது ஞானக்கண்ணால் காண்பார்கள்; அப்படிப் பார்த்தற்குரிய ஞானக்கண் இல்லாதவர்க்கு (அவ்வுண்மைப் பொருள் உணர்ச்சி) மயக்கமேயாம்; (அது எதுபோல எனின்) கொடிய இருளை யொழிக்கும் சூரியகிரணம், கூகை யென்கிற பறவையின் கண்ணுக்கு இருளாய் இருக்கும் தன்மையை ஒத்திருக்கும்; (ஆதலால்) யாவும் கண்ணாலாகிய தவறேயாம். தலைவனே! திருக்கச்சியின்கண் எழுந்தருளிய ஏகம்பநாதனே! (எ - று.)

(வி - ரை) நண்பகலில் எவ்வகைப்பட்ட இருளையும் ஒழிக்கும் சூரியகிரணங்களாலே கண்கள் ஒளிமயங்கிக் கிடக்கின்ற கூகையை

வலியற்ற காக்கை வெல்லுதலால், அக்கூகையின் கண்ணுக்குச் சூரிய கிரணங்கள் இருளாய்த் தோன்றிடும் என்பார், 'பொல்லா விருளகற் றுங்கதிர் கூகையென் புட்கண்ணினுக், கல்லா யிருந்திடும்' எனவும்; சராசரமாகிய பொருள்களிலெல்லாம் உலகத்தார் கற்பித்துக்கொண்டு வழங்குகின்ற கற்பனைகளைக் கழித்து நின்ற வுண்மையைக் காண்பது அறிவுடையோருடைய தன்மையாதலால், 'அறிவோருளத்தில் வல்லா ரறிவார்' எனவும்; தொன்றுதொட்டுள்ள அவிச்சையென்னும் அஞ் ஞானமும், அவ்வஞ்ஞானம்பற்றி யானென மதிக்கும் அகங்காரமும், அவ் வகங்காரம்பற்றி எனக்கு இது வேண்டுமென்னும் விருப்பும், அவ் விருப்புப்பற்றி அப்பொருளிடத்தே செல்லும் ஆசையும், அவ் வாசைப்பற்றி அப்பொருளிற்கு எதிராயிருப்பதில் செல்லும் கோபமு முடையவர்கள் ஊனக்கண்களன்றி ஞானக்கண்களால் மெய்ப்பொருள் காணப்படாமல் மயங்குவராதலால், 'அறியார் தமக்கு மயக்கங்கண்டா யெல்லாம் விழிமயக்கே' எனவும் கூறினர். ஞானிகள் மனத்துக்குப் பரம்பொருள் தோன்றும், அஞ்ஞானிகள் மனத்துக்குத் தோன்று தென்க. அஞ்ஞானிகள் மனத்துக்குத் தோன்றுமைக்குக் காரணம் அவர்கள் மனக்குற்றமென்க. 17

வாதுக்குச் சண்டைக்குப் போவார்; வருவார்; வழக்குரைப்
தீதுக் குதவியுஞ் செய்திடு வார்; தினந் தேடியொன் று[பார்;
யாதுக் களித்து மயங்கிடு வார்விதி மாளுமட்டும்;
ஏதுக் கிவர்பிறந் தார்? இறை வா! கச்சி யேகம்பனே!

(பொ - ரை) வீண்வாதத்துக்கும் வீண் சண்டைக்கும் போவார்; மீண்டு வருவார்; தமது வழக்கை மற்றவர் கேட்கச் சொல்வார்கள்; தீமைக்குத் துணையும் செய்வார்; தமது ஆயுள் முடியுமளவும் ஒப்பற்ற தாகிய பொருளை நாள்தோறும் சம்பாதித்துவைத்துத் (தம்மால்

விரும்பப்பட்ட) பெண்ணுக்குக் கொடுத்து மயங்குவார்கள்; இத் தன்மையான குணங்களையுடைய இவர் என்ன காரணத்தின்பொருட் டுப் பிறந்தார்களோ! தலைவனே திருக்கச்சியின்கண் எழுந்தருளிய ஏகம்பனே! (எ - று.)

(வி - ரை) தீவினையுடையார் இம்மை மறுமை வீடுகட்குரிய புகழ் அறஞானங்களைத் தேடாது, தம்மைச் செய்தாரை யிருளிற் சேர்க்கும் பழிமுதலியவற்றைத் தேடும்பொருட்டு,

"வாதுக்குச் சண்டைக்குப் போவார் வருவார் வழக்குரைப்பார்
தீதுக் குதவியுஞ் செய்திடுவார்."

எனவும் தாம் தேடிய பொருள்களைப் பிறர்க்கீதலும் துய்த்தலும் செய்யாமல் அப்பொருளை நாள்தோறும் தாம் விரும்பிய மாதர்க்குக் கொடுத்து, அப்பயனை அவர் நுகருந்தோறும் ஆண்பாலர்களாலும் நாணத்தக்கதோர் நாணைப்பெற்று அறிவழிந்து ஆயுள்காறும் மயங் கிடுவர் என்பார், 'தினந்தேடி யொன்று, மாதுக் களித்து மயங்கிடு வார்விதி மாளுமட்டும்' எனவும்; தாம் பிறந்தும் இம்மை மறுமைக் குரிய பயனை யடையாமையால், 'ஏதுக்கிவர் பிறந்தார்' எனவும் கூறினர். 18

ஓயாமற் பொய்சொல்வர்; நல்லோரை நிந்திப்பர்; உற்றுப்
தாயாரை வைவர்; சதியாயிரஞ்செய்வர்; சாத்திரங்கள் [பெற்ற
ஆயார்; பிறர்க்குப காரஞ்செய் யார்; தமை யண்டினர்க்கொன்
றீயா ரிருந்தென்ன போயென்ன? காண்கச்சி யேகம்பனே!

(போ - ரை) ஒழியாமல் பொய் பேசுவார்கள்; நல்லவர்களைப் பழிப்பார்கள்; கருப்பநோய் முதலியவற்றை அடைந்து ஈன்ற அன் னையைப் பழிப்பார்கள்; பல வஞ்சனைகளைச் செய்வார்கள்; ஞான சாஸ்திரங்களை ஆராயார்; அன்னியர்க்கு உதவியும் செய்யார்; (தம்மை

நெருங்கினவர்கட்கு ஒரு பொருளையும்) கொடுக்கமாட்டார்; (இத்தன்மையான இவர்) உலகிலிருந்தால் என்ன பயன்? இறந்தொழிந்தால் யாது கெடுதி? திருக்கச்சியின்கண் எழுந்தருளிய ஏகம்பனே! (எ-று.)

(வி - ரை) உயர்ந்தோர் இழிந்தோர் என்று கருதாமல் பொருள் கொடுப்பார் யாவராயினும் அவரைக் கூடி முயங்குதல் பொருட்பெண்டிர்க்கு இயல்பாதலால் அப்பெண்டிரைத் தாமும் கூடி முயங்கவும் அதற்குப் பொருள் தேடவும் வேண்டுதலின், 'ஓயாமற் பொய் சொல்வர்' எனவும்; நகுடனென்பான் இந்திரபதவிபெற்றுச் சிவிகையேறிச் செல்கின்ற காலத்துத் தான் பெற்ற களிப்பு மிகுதியால் அகத்தியமுனிவர் வெகுள்வதோர் தவறு செய்ய, அதனால் அவன் சாபமெய்தி அப்பதத்தை இடையே இழக்கப்பெற்றான் என்பதனைத் தாம் கருதாமையால் 'நல்லோரை நிந்திப்பர்' எனவும்; ஈரைந்து திங்கள் சுமந்து பெற்றதையும், ''அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்'' என்பதையும், ''தாயோ டறுசுவைபோம்'' என்பதையும் உணராமையால் 'உற்றுப்பெற்ற, தாயாரை வைவர்' எனவும்; பிறர்க்குரிய பொருளை எண்ணி அதனை வஞ்சித்துக்கொள்ளுவதற்கு, அப்பொருளுடையாரது சோர்வு பார்க்கும் மயக்கமுடையவராதலால் 'சதியா யிரஞ்செய்வர்' எனவும்; இம்மை மறுமைப்பயனைத் தரும் சிவ சரித்திரங்களை யாராயாது இருளிற் சேர்க்கும் காமநூல் முதலியவற்றை யாராய்ந்து தம் வாணாளைக் கழிப்பராதலால், 'சாத்திரங்களாயார்' எனவும்; பிறர்க்குதவாதார் ஈட்டிய பொருளைத் தாம் உண்டற் பொருட்டன்றியே பிறர்க்குதவி செய்யாமல் இம்மை மறுமைப் பேற்றை அடையாராதலால், 'பிறர்க் குபகாரஞ் செய்யார்' எனவும்; தம்மை அடைக்கலம் புகுந்த புறவினைக் காத்த சிபிச்சக்கிரவர்த்தி போல் தொடர்புடையாரையும் பிறரையும் ஆதரவு செய்யாதார் நிலவுலகில் உயிரோ டிருந்தாலும் இறந்தாலும் பயனில்லை யாதலின்,

'தமை யண்டினர்க்கொன், நீயாரிருந்தென்ன போயென்ன காண்'
எனவும் கூறினர். 19

அப்பென்றும் வெண்மைய தாயினு மாங்கந் நிலத்தியல்பா.
தப்பின்றி யேகுண வேற்றுமை தான்பல சார்தலினூற்[ய்த்
செப்பி லபக்குவம் பக்குவ மாயுள்ள சீவரினு
மிப்படி யேநிற்ப னெந்தைபி ரான்கச்சி யேகம்பனே!

(பொ - ரை) நீரானது எப்பொழுதும் வெண்ணிற முடைய தானாலும் அது மேகத்தினின்றும் வீழ்ந்தகாலத்து அப்பூமியின் தன்மையை யுடையதாகிக் குற்றமில்லாமலே தன்னியற்கைக் குணத்தினின்றும் பலவேறுபட்ட குணங்களையடைதலால், சொல்லுமிடத்து அபக்குவமாயும் பக்குவமாயு மிருக்கிற சீவர்களிலும், எமது தந்தையாகிய சிவபிரான் இவ்விதமாகவே (பக்குவ அபக்குவானுகுணமாக வேறுபாட்டையடைந்து) நிற்பன், திருக்கச்சியின்கண் எழுந்தருளிய ஏகம்பநாதனே! (எ - று.)

(வி - ரை) மேகத்தின்கண் எஞ்ஞான்றும் வெண்மையதாய்த் தங்கிய நீருக்கு நிலத்தோடு சேர்ந்தகாலத்தில், நிறம் சுவை முதலிய குணங்கள் வேறுபடுமென்பார், 'அப்பென்றும் வெண்மைய தாயினு மாங்கந் நிலத்தியல்பாய்த், தப்பின்றி யேகுண வேற்றுமை தான்பல சார்தல்' என்றார். இதனை,

"நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகு மாந்தர்க்
கினத்தியல்ப தாகு மறிவு."

என்றதனு லுணர்க. ஐம்புலன்வழியே சென்று அழியும் பகுதியவாய விஷயங்களை மெய்யென்று கருதாமல், அவற்றைப் பொய்யென்று களைந்து சிவனே மெய்யென்று கருதும் விஞ்ஞானகலர்க்கு உள்ளந்தோறும் அறிவுக்கறிவாய்த் தங்கி ஒருமலம் அகற்றிச் சிவானந்தத்

தேனை யூற்றுதலும், பிரளயாகலர்க்கு மான் மழு சதுர்ப்புச காலகண்ட திரிநேத்திரங்களோடு இடபவாகனனாய்த் தன்னியற்கை வடிவே குருவடிவாகக்காட்டி இருமலம் அகற்றிக் காட்சிதந்தருளுதலும், அவிச்சை வயத்தராயுள்ள சகலர்க்கு ஸ்ரீபஞ்சாக்கர நடனத்தால் திரிபதார்த்த ஞானத்தை விளக்கி மும்மலமும் தீர்த்துத் திருவடி சூட்டி யாளுதலும் இறைவனது முறைமையாதலால், 'செப்பி லபக்கு வம் பக்குவமாயுள்ள சீவரிலு, மிப்படி யேநிற்ப னெந்தைபிரான்' என்றார். இதனை,

> "நன்னெறிவிஞ் ஞானகலர் நாடுமல மொன்றினையு
> மந்நிலையே யுண்ணின் றதுத்தருளிப்-பின்னன்பு
> மேவா விளங்கும் பிரளயா கலருக்குத்
> தேவாய் மலகன்மந் தீர்த்தருளிப்-பூவலயந்
> தன்னின்று நீங்காச் சகலர்க் கவர்போல
> முன்னின்று மும்மலந்தீர்த் தாட்கொள்கை—யன்னவனுக்
> காதிகுணம்."

என்னும் போற்றிப்பஃறொடையா னுணர்க. 20

நாயாய்ப் பிறந்திடி னல்லவேட்டை யாடி நயம்புரியும்;
தாயார் வயிற்றி னரராய்ப் பிறந்து பின் சம்பன்னராய்க்,
'காயா மரமும் வறளாங் குளமும் கல்லாவுமென்ன'
ஈயா மனிதரை யேன்படைத் தாய்?கச்சி யேகம்பனே;

(பொ - ரை) நாயாகிப் பிறந்தாலும் நல்ல வேட்டையாடித் (தன்னை வளர்ப்பவனுக்கு) பிரயோசனத்தைச் செய்யும்; தாய் வயிற்றில் மனிதராய்ப் பிறந்து, பின் செல்வமுள்ளவர்களாய்க், 'காயாத மரத்தையும், நீர் வற்றிப்போன தடாகத்தையும், கற்பசுவையும்போல' (ஒருவர்க்கும் ஒன்றனையும்) கொடாத மனிதரை (இப்பூமியில்) யாது

காரியத்துக்குப் படைத்தனை? திருக்கச்சியின்கண் எழுந்தருளிய ஏகம்பநாதனே! (எ - று.)

(வி - ரை) உலகில் நன்றி புரியாதும், பிறர் தமக்குப் புரிந்த நன்றியைக் கருதாது முள்ளார் மக்கட் பிறப்பாய்ப் பிறத்தலினும் நன்றியறியும் பிராணியுள் தலைமையாயும், தன்னை வளர்ப்பவனுக்குப் பயனைச் செய்வதாயுமுள்ள நாயாய்ப் பிறந்திடின் பயனுண்டென்பார், 'நாயாய்ப் பிறந்திடி னல்வேட்டை யாடி நயம்புரியும்' என்றும்; வீட்டை யடைதற்குரிய மானுடப்பிறவி யெடுத்தலும், அப்பிறவி யெடுத்தகாலத்துப் பொருள் கல்வி ஞானம் கைகூடுதலும், அவை கூடியகாலத்து அவற்றை நீங்காது வாழ்தலும், முன்செய்த தவப் பயனால் நிகழவேண்டுதலான், 'தாயார் வயிற்றி னராய்ப் பிறந்து பின் சம்பன்னராய்' என்றும்; நடுவூரின்கணிருந்தும், மரமெனப் பெயர்பெற்றும், பறவை முதலியவைகட்குப் பயன்படாமையானும், குளமெனப் பெயர்பெற்றும் நுகரப்படுவதாகிய நீரின்மையானும், ஆவெனப் பெயர்பெற்றும் பால் சுரத்தற்குரிய பண்பின்மையானும், அவற்றால் உலகினருக்கு யாதொரு பயனின்மையால் ஈயா மனிதர்க்கு உவமை கூறுவான், 'காயா மரமும் வறளாங் குளமுங் கல்லாவு மென்ன' என்றும்; அநுபவியாதவராகி, அதன்மேலும் தகுதியுடையவருக்கு அவர் வேண்டியதொன்றனையுங் கொடுக்குந்தன்மை யில்லாதவர் தாம்பெற்ற செய்வத்திற்கு ஓர் நோயாதலால், அவரைப்படைத்ததனால் உலகினுக்கு யாதொரு பயனுமில்லையென்பார், 'ஈயா மனிதரை யேன்படைத்தாய்' என்றுங் கூறினர்.

காயாத மரமும், நீர் வற்றிய குளமும், கல்லாவும் பிறர்க்குப்பயன்படாதனபோல, ஈகையில்லாத மனிதரும் பிறர்க்குப் பயன்படார் என்பது கருத்து.

21

ஆற்றிற்கரைத்த புளியாக்கி டாமலென் னன்பை யெல்லாம்,
போற்றித் திருவுளம் பற்றுமை யாபுர மூன்றெரித்துக்

கூற்றைப்பணிகொளுந்தாளுடையாய்!குன்றவில்லுடையாய்
ஏற்றுக் கொடியுடை யாய்!இறை வா!கச்சி யேகம்பனே!

(போ - ரை) ஐயனே! திரிபுரங்களைத் தகித்து, யமனை அடிமை கொண்ட திருவடியுடையவனே! மகாமேருமலையாகிய வில்லுடைய வனே! இருஷபக்கொடியுடையவனே! என் அன்பு முழுமையும் நதியில் கரைத்துவிட்ட புளியாகச் செய்யாமல் (என் அன்பு வடிவம் கெடாவண்ணம் பாதுகாத்து மனம் பற்றவேண்டும்; தலைவனே! திருக்கச்சியின்கண் எழுந்தருளிய ஏகம்பனே! (எ - று.)

(வி - ரை) நுமது திருவடியிற் செலுத்தும் அன்பு முழுதும் கண்ணப்பர் முதலியோர் செலுத்திய மெய்யன்போடு ஒப்பாகாமை யால் நிஷேதப்பொருளென்று கருதி, கமரிற் சிந்திய அமுது பயன் படாவாறுபோல அவ்வன்பு முழுதும் பயன்படாவண்ணம் செய் யாது பாதுகாக்கத் திருவுளம் வைக்கவேண்டுமென்பார், 'ஆற்றிற் கரைத்த புளியாக்கி டாமலென் னன்பையெல்லாம், போற்றித் திரு வுளம் பற்றுமையா' என்றும், இருப்பினாலும் வெள்ளியினாலும் பொன்னினாலும் இயன்ற மதில்களையுடையராய் மூவுலகினுக்கும் துன்பஞ் செய்த அசுரர்களுள் தாரகன் கமலாக்கன் வித்துன்மாலி ஆகிய மூவர் நீங்க ஏனைய அசுரர்களை யழித்துத் தேவர் முதலியவர் களைக் காத்தருளினமையும் ஊழ்வினையாற் பதினாறாண்டு பெற்ற மிருகண்டு புத்திரராகிய மார்கண்டேய ரென்பவர், கூற்றுவன் வந்து காலபாசத்தாற் கட்டியிழுக்குங் காலத்துச் சரண்மடைய, அக் கூற்றுவனைக் காலா லுதைத்தழித்து அம்முனிவர்க்கு என்றும் பதினாறாண்டு கொடுத்தருளினமையும், நுமது திருவடிச் செயலும் வரதாபயமாகிய திருக்கரங்களின் செயலும் என்பார், 'புரமூன் றெரித்துக் கூற்றைப் பணிகொளுந் தாளுடையாய்' என்றும், திரி

புரதகனஞ் செய்தஞான்று மேருவை வில்லாகவும், திருமாலாகிய ஏற்றைக் கொடியாகவும் கொண்டமையால் 'குன்றவில் லுடையா, யேற்றுக் கொடியுடையாய்' என்றுங் கூறினர். 22.

பெண்ணாகி வந்தொரு மாயப்பி சாசம் பிடித்திட்டென்னைக்
கண்ணால் வெருட்டி முலையான் மயக்கிக் கடுதடத்துப்
புண்ணாங் குழியிடைத் தள்ளி,என் போதப்பொருள்பறிக்க
எண்ணா துனைமறந் தேனிறை வா!கச்சி யேகம்பனே!

(போ - ரை) பெண்வடிவுகொண்டு வந்த ஒரு மாயப்பேயானது என்னைத் தொடர்ந்து, கண்களால் வெருட்டி, தனங்களால் என்னறிவு மயங்கச்செய்து, அல்குலிடத்ததாகிய புண் என்கிற பள்ளத்தில் தள்ளி, என் ஞானமாகிய பொருளைக் கைப்பற்றிக்கொள்ளுதலால் தேவரீரை நினையாமல் மறந்துவிட்டேன், தலைவனே! திருக்கச்சியின் கண் எழுந்தருளிய ஏகம்பனே! (எ - று.)

(வி - ரை) பெண்களிடத்து வைத்த ஆசையா லுண்டான மயக்க மிகுதியினால் நெஞ்சிலே கண்ணாகிய வேலை யேற்றும், அவர்க்குப் பொருள் கொடுத்தற்குக் களவு செய்து கழுவேறியும், அவரைக் களவு செய்து யானைக்காலில் மிதிக்கப்பட்டும் துன்பக்கடலி லழுந்தினர் பலராயினு மென்பதை யறிந்திருந்தும், அவரையே பெண்ணே; அமுதோ! எனப்புகழ மயக்கித் தம் வசப்படும்படி செய்தமையாலே, 'பெண்ணாகி வந்தொரு மாயப்பி சாசம் பிடித்திட்டு' என்றும்; அவரது முகத்திலுள்ளது, கண்ணோ, வேலோ, வாளோ, அம்போ, விடமோ என்று புனைந்துரைத்து, இன்புற்று மயங்கிக் கண்வலையி லகப்பட்டேனை வெருட்டுதல் எளிதென்பார், 'என்னைக் கண்ணால் வெருட்டி' என்றும்; காமவேள் என்னும் பகைஞனுக்குப் புறங்கொடுத்து மின்னார் முலை யென்னும் வெற்பில் ஓடி யொளித்துக்கொள்ள அவரது மார்பிலுள்ளது முலையோ, சூதோ, சிமிழோ, வெற்போ என்று

புகழ்ந்து மயங்கித் திரிந்தமையால், 'மூலையான் மயக்கி' என்றும்; அவர் வசப்பட்டேனாதலின் சற்றுங் கருணைசெய்யாது மீளாநரகிற் கேதுவாகிய மலமும் புண்ணும் நிறைந்த அல்குலாகிய பள்ளத்திற் றள்ளி வருத்தி யென்னறிவு கெடுப்பார் என்பார், 'கடிதடத்துப் புண்ணுங் குழியிடைத் தள்ளியென் போதப் பொருள்பறிக்க' என்றும்; அறிவைக் கெடுத்ததினாலே யுள்ளீடற்றுத் தேவரீரை நினையாது மறந்துவிட்டே னென்பார், 'எண்ணுதுனை மறந்தேன்' என்றுங் கூறினார். 23

நாவார வேண்டு மிதஞ்சொல்லு வார்,உனை நான்பிரிந் தாற், சாவேனென் றேயிருந் தொக்கவுண் பார்கள்கை தான்வறண்டாற், போய்வாரு மென்று நடுத்தலைக் கேகுட் டும் பூவையருக், கீவார் தலைவிதி யோ,இறை வா!கச்சி யேகம்பனே!

(போ - ரை) நா நிரம்ப, வேண்டிய பிரிய வசனங்களைச் சொல்லுவார்கள்; 'உன்னை நான் நீங்குவேனாயின் இறந்துவிடுவேன்' என்று சொல்லாநின்றே கூட இருந்து புசிப்பார்கள்; கையிற் பொருள் அற்றுப்போனால் 'போய்வாரும்' என்று வாயாற் சொல்லி நடுத்தலையில் கையால் மோதி யனுப்புகின்ற வேசையருக்குத் (தம் பொருள் முதலியவற்றைக்) கொடுப்பார்கள் அறிவீனர்கள்; (இங்ஙனம் இவர்கள் செய்தற்குக் காரணம் இவர்களது) தலையில் பிரமன எழுதிய ஊழின் நியதியோ? தலைவனே! திருக்கச்சியின்கண் எழுந்தருளிய ஏகம்பனே! (எ - று.)

(வி - ரை) அன்பு காரணமாக விரும்பாராகிப் பொருள் காரணமாக விரும்பி அப்பொருள் கைவருமளவும், அப்பொழுதைக்கு இனிது போன்று பின் வறுமை பயக்கு மினிய சொற்களைச் சொல்லுதல்

தமக்கியல்பாதலால் 'நாவார வேண்டுமிதஞ்சொல்லுவார்' என்றும்; அக்கினி சான்ருக மணந்த மனைவியர் நாயக னிறந்த காலத்து உடன் கட்டையேறி இறத்தல்போலவும், நாயகன் உண்டபின் மிச்சிலை யுண்ணுதல்போலவும், பொருள் நிமித்தமாகத் தாமும் சாவேனென்று கூறுதலும், ஒருங்கே யுண்ணலும் தமக்கியல்பென்பார், 'உனை நீரின் பிரிந்தாற், சாவேனென் றேயிருந் தொக்கவுண்பார்கள்' என்றும்; உள்ள பொருளை யளந்தறிந்து அப்பொருள் கிடைக்குமளவும் தமது குணமுடைமையைச் சொல்லும் குணமில்லாதாரது நடக்கையை யாராய்ந்தறிந்து நீங்காதாரைப் பொருள் வற்றியகாலத்து நிந்தித்தும் தலையிற் குட்டியும் துரத்தும் பெண்களுக்கே பொருளைத் தேடிக் கொடுக்க முயலுமிவர் இங்ஙனஞ் செய்வது பிரமன் இவர் தலையில் எழுதிய எழுத்தோ என்பார், 'கைதான் வறண்டாற், போய்வாரு மென்று நடுத்தலைக் கேகுட்டும் பூவையருக் கீவார் தலைவிதியோ' என்றுங் கூறினர். 24

கல்லார் சிவகதை; நல்லோர் தமக்குக் கனவிலுமெய்
சொல்லார்; பசித்தவர்க் கன்னங் கொடார்; குருசொன்னபடி
நில்லார்; அறத்தை நினையார்; நின் னாம நினைவிற்சற்று
மில்லா ரிருந்தென்? இறந்தென்? புகல்! கச்சி யேகம்பனே!

(பொ - ரை) சிவகதைகளைப் படியார்; நல்லவர்களுக்குக் கனவிலும் உண்மை பேசார்கள்; பசித்து வந்தவர்களுக்குச் சோறு பகிர்ந்து கொடார்; ஆசாரியன் உபதேசித்தபடி நிற்கமாட்டார்கள்; தருமத்தைச் (செய்ய மனத்திலும்) நினைக்கமாட்டார்கள்; தேவரீரது திருநாமம் நினைப்பில் சிறிதும் உடையரல்லாதவர்களாகிய இவர்கள், பூமியில் உயிரோடுகூடி இருந்தால் யாது பயன்? இறந்தால் யாது கெடுதி? சொல்வாய்! திருக்கச்சியின்கண் எழுந்தருளிய ஏகம்பனே! (எ - று.)

(வி - ரை) பாற்கடலுட் பிறந்து அதனுள் வாழு மீன்கள் அப்பாலை விரும்பாது வேறு பலவற்றை விரும்புதல்போலச், சைவசமயத்துட் பிறந்தும் சிவசரிதங்களைக் கற்காது புறச்சமய நூல்களைக் கற்றுப் பொழுதுபோக்குவர் என்பார், 'கல்லார் சிவகதை' எனவும்; தம் செல்வக் களிப்பால் அருந்தவரிடத்துப் பொய்கூறல் முதலிய பிழை செய்வாராஞல், அச்செல்வம் அவர் கோபத்தீயால் ஒரு கணத்துள்ளே அழிந்துவிடும் என்பதை யுணராமையால், 'நல்லோர் தமக்குக் கனவிலு மெய்சொல்லார்' எனவும்; தேகத்தை வளர்த்தலானும், தேகம் நிலைபெற்றுச் செய்யவேண்டிய அறங்களை யெல்லாஞ் செய்வித்தலானும், முனிவர் தேவர் முதலியோர் உண்ணக் கருதலானும், பசித்தவர்க்கு உணவை யெவ்வகையானும் அளித்திடுதல் மேலாகு மென்பதை யுணராமையால், 'பசித்தவர்க் கன்னங்கொடார்' எனவும்; ஞானோபதேசம் பெற்றவர் ஓர் காலத்துத் தம்மைப் பழைய மலந் தாக்குதலால் உபதேசமொழியை மறந்து தம் மனம் போனவாறு நிற்பர் என்பார், 'குருசொன்னபடி நில்லார்' எனவும்; ஞானசாரியன் உபதேசித்த மொழியை மறந்தோராதலின் தீவினை வயத்தராகிப் பாவத் தொழில்களையே மேன்மேலும் செய்ய நினைப்பாராதலால், 'அறத்தை நினையார்' எனவும்,

> "இயமன் றூதரு மஞ்சுவ ரின்சொலா
> னயம்வந் தோதவல் லார்தமை நண்ணினல்."

என்பதை யுணராமையால் தேவரீரது திருநாமத்தை நினையாதார் இவ்வுலகில் உயிரோடிருந்தும் யாதொரு பயனை யடையாமையால் இறந்தலோடொக்கு மென்பார், 'நின்னை நினைவிற்சற்று, மில்லா ரிருந்தென் னிறந்தென்' எனவும் கூறினர். 25

'வானமு தத்தின் சுவையறி யாதவர் வண்கனியின்
றேனமு தத்தின் சுவையெண்ணல் போலத்' தனித்தனியே

றேனமு தத்தின் றெளிவாய ஞானஞ் சிறிதுமில்லார்க்
கீனமு தச்சுவை நன்றல்ல வோகச்சி யேகம்பனே!

(பொ - ரை) தேவலோகத்திலுள்ள அமிர்தத்தின் உருசியைத் தெரியாதவர் வளமாகிய பழங்களின் இரசங்களின் சுவையை நினைத்தல்போல, தனித்தனியாகவே தேனும் அமுதமுமாகிய இவற்றின் தெளிவையொத்த ஞானத்தைச் சற்றுமுடையரல்லாதவர்க்குக் குற்றமாகிய (விடயமாகிய) அமுதத்தின் சுவையானது நன்மையல்லவோ? திருக்கச்சியின்கண் எழுந்தருளிய ஏகம்பனே! (எ - று.)

(வி - ரை) கண்ணுக்கினிமையும் உண்ணுந்தோறும் புதிது புதிதாகவுள்ள சுவையினையுமுடைய அமுதத்தின் சுவையை யறியாதவர், மிக முதிர்ந்து இன்பஞ்செய்யாது அழியுந் தன்மையினையுடைய கனிகளை யெண்ணுதல் அவரது இயற்கையென்பார், 'வானமு தத்தின் சுவையறியாதவர் வண்கனியின், ருனமுதத்தின் சுவையெண்ணல் போல்' எனவும்; ஞானயோகங்களின் முதிர்ச்சி யில்லாதவர்கட்கு விஷய ஞானங்களின் சுவையே நன்றென்பார், 'தேனமுதத்தின் றெளிவாய ஞானஞ் சிறிதுமில்லார்க், கீனமுதச்சுவை நன்றல்லவோ' எனவும் கூறினர்.

தேவலோகத்திலுள்ள அமிர்தத்தின் சுவையை அறியாதவர் பழங்களின் சுவையை மதித்தல்போல, ஞானமாகிய அமிர்தத்தின் சுவை சிறிதும் அறியாதவர் விஷயமாகிய அமிர்தத்தின் சுவையை நன்மையதாகக் கருதுவர் என்பதாம். வானமுதம் - தேவாமிர்தம். வண்கனியாவன - வாழை, பலா, மா என்பன. தெளிவு - வடிதல் அல்லவோ என்பதில் ஓகாரம் எதிர்மறைப்பொருளது. 26

ஊற்றைச் சரீரத்தை யாபாசக் கொட்டிலை யூன்பொதிந்த
பீற்றற் றுருத்தியைச் சோறிடுந் தோற்பையைப் பேசரிய

காற்றிற் பொதிந்த நிலையற்றபாண்டத்தைக்காதல்செய்தே
யேற்றுத் திரிந்துவிட் டேனிறை வா!கச்சி யேகம்பனே!

(பொ - ரை) அழுக்குடம்பை, நிந்தனைகளாகிய சரக்குகளைச் சேர்த்து வைத்திருக்கும் ஒதுக்கிடத்தை, தசை பொருந்திய பல துவாரங்களையுடைய துருத்தியை, அன்னத்தை யிட்டு நிரப்பின தோலாற் செய்யப்பட்ட பையை, சொல்லுதற்கு அருமையான காற்றைச் சேர்த்துவைத்த நிலையற்றதாகிய மட்பாத்திரத்தை, விருப்பங் கொண்டு அதைத்தாங்கித் திரிந்துவிட்டேன்; தலைவனே! திருக்கச்சியின்கண் எழுந்தருளிய ஏகம்பனே! (எ - று.)

(வி - ரை) 'ஊற்றைச் சரீரத்தை யாபாசக் கொட்டிலை யூன்பொதிந்த பீற்றற் றுருத்தியை' என்றதை,

"மூன்றரைக் கோடி நாடியவ் வளவே
முற்றிய மயிரெயி றெண்ணான்
கான்றகை யடியி னுகிரிரு பதுவீ
ரியமாழாக் குடற்பித்த முழக்கு
மான்றுறு மிடற்றுக் கபமுரி யுடனு
ழுழிவண் ணிணத்தொடி யைந்நான்
கேன்றமே தைக்குத் தொடிகளோ ரைஞ்ஞூ
றீண்டுமூன் றொடியொரு நூறே."

எனவும்,

"இளகுநெய்த் தோரு மிறுகுநெய்த் தோரு
மியம்புறிற் றொடியொரு மூன்றும்
வளமலி மூளை பன்னிரு தொடியா
மயிர்முத லனைத்தையும் தொகுத்திட்
டளவிடி லாக்கை யாயிரந் தொடியா
மருவருப் புறுமியக் கங்கட்

களவிலே யிந்தப் புலையுடற் பொறையைப்
பொருளென மதிப்பரோ வறிந்தோர்."

எனவுங் கூறியவாற்று னுணர்க. இவ்வுடல் அன்னமயத்தால் நிற்ற லாலே, 'சோறிடுந் தோற்பை' எனவும்; அது பிராணவாயு முதலிய வாயுக்களாலும், நிலையற்றதாயும் இருத்தலாலே, 'காற்றிற் பொதிந்த நிலையற்ற பாண்டத்தை' எனவும்; ஒரு கணப்பொழுதாயினும் விரும் பத்தகாததைப் பன்னுளும் விரும்பிச் சுமந்து திரிந்தேனென்பார். 'காதல்செய் தேயேற்றுத் திரிந்துவிட்டேன்' எனவும் கூறினர்.

அழுக்குடம்பும் நிந்திக்கத்தக்க ஒதுக்கிடமும், தசையோடு கூடி, பல துவாரங்களையுடைய துருத்தியும், சோறிடுந் தோற்பையும், காற்றுப்பொருந்திய நிலையற்ற மட்பாத்திரமுமாகிய சரீரத்தை விரும்பி அதைத்தாங்கித் திரிந்துவிட்டேன் என்பதாம். 27

சொல்லால் வருங்குற்றஞ் சிந்தனை யால்வருந்தோடஞ்செய்
பொல்லாத தீவினை பார்வையிற் பாவங்கள் புண்ணியநூ [த
லல்லாத கேள்வியைக் கேட்டிடுந் தீங்குக ளாயவுமற்
றெல்லாப் பிழையும் பொறுத்தருள் வாய்கச்சி யேகம்பனே!

(பொ - ரை.) சொற்களா லுண்டாகும் பிழையும், நினைப்பினு லுண்டாகும் தோஷமும், செய்த கொடிய தீச்செயல்களும், பார்த்த லினுலுண்டாகும் பாவங்களும், புண்ணிய சாத்திரங்க ளல்லாதன வாகிய கேள்விகளை (என் செவிகள்) கேட்கும் தீமைகளானவையும், மற்றெல்லாத் தவறுகளையும் பொறுத்தருளல் வேண்டும்; திருக்கச்சி யின்கண் எழுந்தருளிய ஏகம்பனே! (எ - று.)

(வி - ரை) அறத்தினை அறிந்தவராது வாய்ச்சொற்கள் அன் போடுகலந்து வஞ்சனை யில்லனவாயிருக்கும்; அங்ஙனமன்றி என் வாய்ச்சொற்களால் பெருங் குற்ற முண்டாகுமென்பார், 'சொல்லால்

வருங்குற்றம்' என்றும்; மனத்தின் குற்றமாகிய அழுக்காறுமை வெஃகாமை முதலியன உடையரல்லாத அறிவுடையோரது மனம் போலாது என் மனத்தில் தோஷமே யுண்டாகுமென்பார், 'சிந்தனையால் வருந்தோடம்' என்றும்; வேறொருகாலத்திலும் வேறோரிடத்திலும் வேறோருடம்பிலும் போய்ச் சுடுதலாகிய காடிய தீவினைக்கு அஞ்சாது முன்னேதொடங்கி அதனைச்செய்து பழகிவந்ததென்பார், 'செய்த பொல்லாத தீவினை' என்றும்; புறப்பகைகளை யடக்குதலேயன்றி யுட்பகையாகிய காமத்தையும் அடக்காது அதனால் நிகழும் பிறனில் விழைந்துகாண்டல் முதலிய குற்றமுடையோனாதலின், 'பார்வையிற் பாவங்கள்' என்றும்; புண்ணிய சரிதங்களைக் கேளாத என் செவிகள் தோற்செவி மாச்செவி நரப்புச்செவிகள்போல் யாதொரு பயனுமில்லாத வீண் சரிதங்களைக் கேட்கும் என்பார், 'புண்ணிய நூலல்லாத கேள்வியைக் கேட்டிடும்' என்றும்; இத்தீங்குகள் பிராயச்சித்த மில்லாததோர் தீங்காதலின் இவற்றைத் தேவரீரே பொறுத்தருளல் வேண்டுமென்பார், 'தீங்குக ளாயவுமற், றெல்லாப் பிழையும் பொறுத்தருள்வாய்' என்றும் கூறினார்.

வாய்ச்சொற்களா லுண்டாகும் பிழையும், நினைத்தலா லுண்டாகும் பிழையும், செய்த கொடிய தீச்செயல்களும், பார்த்தலினாலுண்டாகும் பாவங்களும் சிவசரிதங்களல்லாத நூற்கேள்விகளை என் செவிகள் கேட்டலும், அதனா லுண்டாகும் தீமைகளாகிய எல்லாப் பிழைகளையும் பொறுத்தருளல் வேண்டும் என்பதாம். 28

முட்டற்ற மஞ்சளை யெண்ணெயிற் கூட்டி முகமினுக்கி
மெட்டிட்டுப்பொட்டிட்டுப் பித்தளை யோலை விளக்கியிட்டுப்
பட்டப் பகலில் வெளிமயக் கேசெயும் பாவையர்மே
லிட்டத்தை நீதவிர்ப் பாயிறை வா!கச்சி யேகம்பனே!

(போ - ரை) பிழையில்லாத மஞ்சளை எண்ணெயிற் சேர்த்து, (அதைத் தடவி) முகத்தை மினுக்கி, காலாழி இட்டு, திலகமிட்டு, பித்தளை யோலையைத் துலக்கித் தரித்து, நடுப்பகலில் வெளிமயக்கஞ் செய்கின்ற பெண்கள்மேலுள்ள இஷ்டத்தைத் தேவரீர் ஒழித்தருள வேண்டும். தலைவனே! திருக்கச்சியின்கண் எழுந்தருளிய ஏகம் பனே! (எ - று.)

(வி - ரை) பெண்களானோர் இயற்கையழகோடு செயற்கையழகு முண்டாக மஞ்சட்சுண்ணத்தை யெண்ணெயிற் கலந்து முகத்துக்குப் பூசி மினுக்குவது பண்டைக்காலந்தொட்டு வழக்காதலின், 'முட்டற்ற மஞ்சளை யெண்ணெயிற் கூட்டி முகமினுக்கி' எனவும்; விரல்களில் மெட்டும் - முகத்திற் றிலகமும் - கழுத்திற் காரையென்னும் ஓரணி யும் தரித்தல் அவர்க்கியல்பென்பார், 'மெட்டிட்டுப் பொட்டிட்டுப் பித்தளை யோலை விளக்கியிட்டு' எனவும்; இவையெல்லாம் கானலில் நீர்போலவும், சிப்பியில் வெள்ளிபோலவும் தோன்றி யாதொரு பயனுமில்லாமல் மயக்குமென்பார், 'பட்டப்பகலில் வெளிமயக்கே செய்யும்' எனவும்; தேவரீர் அம்மகளிர்பால் என் மனத்தைச் செலு த்துவிக்காது நும்பால் செலுத்துவிக்கவேண்டு மென்பார், 'பாவையர் மே லிட்டதை நீ தவிர்ப்பாய்' என்றுங் கூறினார்.

திருக்கச்சியின்கண் எழுந்தருளிய ஏகம்பனே! குற்றமில்லாத மஞ்சளை யெண்ணெயிற் சேர்த்து அதைத் தடவி முகத்தை மினுக் கிக், காலாழியிட்டுப், பொட்டிட்டுப், பித்தளையோலையைத் துலக்கித் தரித்து, நடுப்பகலில் வெளிமயக்கஞ் செய்கின்ற பெண்கள்மீதுள்ள விருப்பத்தைத் தேவரீர் ஒழித்தருளல் வேண்டும் என்பதாம்.

பிறந்துமண் மீதிற் பிணியே குடிகொண்டு பேரின்பத்தை
மறந்துசிற் றின்பத்தின் மேன்மய லாகிப்புன் மாதருக்குட்
பறந்துழன் றேதடு மாறிப்பொன் றேடியப் பாவையர்க்கீந்
திறந்திட வோபணித் தாயிறை வா!கச்சி யேகம்பனே!

(பொ - ரை) இவ்வுலகத்தில் தோன்றி, நோய்களே வாழிடமாகத் தங்கப்பெற்று, பேரின்பத்தை மறந்து, சிற்றின்பத்தின்மீது ஆசைகொண்டு, புல்லிய ஒழுக்கத்தையுடைய பெண்கள் நடுவில் (பட்சிபோலப்) பறந்து திரிந்து தடுமாற்றமடைந்து, பொருளைச் சம்பாதித்து அப்பெண்களுக்குக் கொடுத்து இறந்துபோகவோ அடியேனை யேற்படுத்தினாய்? தலைவனே! திருக்கச்சியின்கண் எழுந்தருளிய ஏகம்பனே! (எ - று.)

(வி - ரை)

"நாலிருகண் டத்தோரும் விண்ணுளோரு
நரகினரு மவ்விடத்தி னண்ணி வைகி
மேலையிரு வினையாற்றி யவற்றிற் கேற்ற
வினைபயன்க டுய்ப்பரென விளம்பு மாற்றாற்
சீலமிகு பாரதமாங் கண்ட மொன்றே
தீவினைநல் வினையாகுஞ் செயற்கைக் கெல்லா
மூலமொரு குறைபெறினே வந்து தேவர்
முனிவர்களுந் தவம்பூசை முயல்வா ரங்கண்."

என்றதனால், புண்ணிய பாவங்களைப் புரிதற்கும், அவற்றை யனுபவித்தற்கும், அவ்விரண்டையும் நிவாரணித்துக் கொள்வதற்கும் தகுதியுடையது இப் பாரதகண்டமொன்றே யாதலால் அதிற் பிறப்பது நல்வினைப்பயனா லாகுமென்பார், 'பிறந்து மண்மீதில்' எனவும்;

"ஈங்குரைத்த விருநான்கு கண்டத்து ளெல்லோர்க்கு
மோங்கியிடுங் கிருதயுகம் போலொழிந்த யுகமெல்லாம்
நீங்கரிய நன்மையினை நிறுத்தியீடு நிறையறிவு
தாங்கிடுவ ரவருடலி னுரமாதி தன்னையுமே."

என்றதனால், அவ்வெட்டுக் கண்டங்களிலும் வசிக்குந் தன்மை யுடையவர்கள் துயரமும், நோயும், நரையும், திரையும், மூப்பும் அடைய மாட்டாதவர்களாக, அங்ஙனமன்றி இப் பாதகண்டத்தில் வசிக்கும் தன்மை யுடையவர்களே அத்துயர முதலியவற்றை யுடைமையால், 'பிணியே குடிகொண்டு' எனவும் கூறினர். இதனை,

"கருவின் மழவிற் கற்குங் காலையிற் பருவ மாயிற்
பெருகிய பொழுதி னேயிற் பிரிவினிற் பகையி னீட்டும் [ன்
பொருள்வயின் வேட்ட தெய்தாப் புன்மையின் முதுமைதன்னி
மருவிய திழப்பிற் சாவின் வன்றுயர் மனிதர்க் குண்டே."

என்பதனு லுணர்க. என்ஞான்றும் ஒரே தன்மைத்தாகிய பேரின்பத்தை மறந்து, கணப்பொழுது தோன்றி யழியும் சிற்றின்பத்தைக் காமுற்று, வருந்தி யீட்டிய பொருண்முழுதும் அம் மாதர்க்குக் கொடுத்து, மண்மீது வாளா விருந்திடுவார் தமக்கும் பிறர்க்கும் யாதொரு பயனுமில்லை யென்பார், 'பேரின்பத்தை, மறந்துசிற் றின்பத்தின் மேன்மய லாகிப்புன் மாதருக்குட், பறந்துழன் றேதடுமொறிப் பொன் றேடியப் பாவையர்க்கீந், திறந்திட வோபணித்தாய்' என்றுங் கூறினர். இதனை,

"இருவகை யிக்கங் கழிப்புழி யுண்டா
மின்பமெவ் வளவையத் துணைத்தே
கருவிழிச் செவ்வாய் மகளிரைக் கலந்து
கழிப்புறு மின்பமு மதற்கே

யருவருப் பெவரு மெய்துறும் பவ்வீக்
கடர்ந்தெழும் வன்றிநாய் போலத்
தெருள்கிலா ரெல்லா மிவர்ந்திரு பயனுஞ்
சிதைத்தரும் பழிச்சுமை தரிப்பார்."

என்பதனா லுணர்க.

இவ்வுலகத்திற் றோன்றி நோய்களே வாழிடமாகத் தங்கப் பெற்று, பேரின்பத்தை மறந்து, சிற்றின்பத்தின்மீது ஆசைகொண்டு, பெண்கள் நடுவிற் பட்சிபோலப் பறந்து திரிந்து தடுமாற்ற மடைந்து, பொருளைச் சம்பாதித்து அப்பெண்களுக்குக் கொடுத்து இறந்து போகவோ அடியேனை நியமித்தனை என்பதாம். 30

பூதங்க ளற்றுப் பொறியற்றுச் சாரைம் புலன்களற்றுப்
பேதங் குணமற்றுப் பேராசை தானற்றுப் பின்முனற்றுக்
காதங் கரணங் களுமற்ற வானந்தக் காட்சியிலே
யேதங் களைந்திருப் பேனிறை வா!கச்சி யேகம்பனே!

(பொ - ரை) (நிலம், நீர், தீ, காற்று, விசும்பு என்று சொல்லப் பட்ட) பூதங்கள் ஒழிந்து, (மெய், வாய், கண், மூக்கு, செவி என்று சொல்லப்பட்ட) பொறிகள் ஒழிந்து, அவைகளைச் சார்ந்த (சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றமென்று சொல்லப்பட்ட) ஐம்புலன்கள் ஒழிந்து, ஒன்றற்கொன்று மாறுபாடுள்ள குணங்கள் ஒழிந்து, பெரிய ஆசை ஒழிந்து, பின்னும் முன்னும் ஒழிந்து, வருத்துகின்ற அழகிய அந்தக்கரணங்களும் ஒழிந்த இன்பப்பார்வையில் குற்றம் ஒழிந்திருப் பேன், தலைவனே! திருக்கச்சியின்கண் எழுந்தருளிய ஏகம்பநாதனே!

(வி - ரை) பஞ்சபூதங்கள் முதலியவை யொழிந்து, ஈசமென் கின்ற எட்டிதழினையும், வைராக்கிய மென்கின்ற பொகுட்டினையும்,

வாமை முதலிய சத்திகளென்கின்ற மகரந்தங்களையுமுடைய அநாகத மாகிய தாமரையில் எழுந்தருளிய இறைவனைத் தரிசிக்கவேண்டு மென்பார், 'ஆநந்தக் காட்சியில் ஏதம் களைந்திருப்பேன்' என்றார்.

பஞ்சபூதங்களும், பஞ்சேந்திரியங்களும், அவைகளைச் சார்ந்த ஐம்புலன்களும், ஒன்றற்கொன்று மாறுபாடுள்ள குணங்களும், அவாவு மாகிய இவையெல்லாம் ஒழிந்து, வருத்துகின்ற அந்தக்கரணங்களும் ஒழிந்த இன்பநோக்கத்தில் குற்றம் ஒழிந்திருப்பேன் என்பதாம். 31

நல்லா யெனக்கு மனுவொன்று தந்தருள்! ஞானமிலாப்
பொல்லா வெனைக்கொன்று போடும் பொழுதியல் பூசைசெ
சொல்லார்நற் கோயினியமம் பலவகைத் தோத்திரமு [பஞ்
மெல்லா முடிந்தபின் கொல்லுகண் டாய்கச்சி யேகம்பனே.

(போ - ரை) நன்மையுடையோய்! அடியேனுக்கு விண்ணப் பம் ஒன்றுளது; (அதனை) அநுக்கிரகித்தல் வேண்டும்; (யாதெனில்,) ஞானமில்லாத, பொல்லாமையாகிய என்னைக் கொல்லுஞ் சமயத்து, எம்மால் செய்யக்கூடிய பூசையும், ஜபமும், புகழ் நிறைந்த நல்ல சிவாலயதரிசனமுதலிய நியமங்களும், பலவகையாகிய துதிகளுமாகிய யாவும் முடிவுபெற்றபின் கொல்லுவாய்! திருக்கச்சியின்கண் எழுந் தருளிய ஏகம்பனே! (எ - று.)

(வி - ரை) இம்மானுடப் பிறவி யெடுத்து உழன்று திரியுங்கால் சரியை கிரியை யோக ஞானங்களைக் குறைவறமுடித்து நுமது திருவடியை யடைய அடியேனுக்கு ஓர் விண்ணப்பம் செய்தருளல் வேண்டுமென்பார், 'நல்லா யெனக்கு மனுவொன்று தந்தருள்' என் றும்; அறிவிலியாகிய யான் மரணவேதனை யுறுங்கால் மெய்யறிவு

கலங்கி நும் திருவடியை மறப்பது திண்ணமாதலின், அங்ஙனம் நிகழ்வதற்கு முன்னமே, பூசை செபம் கோயில் நியமம் முதலியவற்றை முடித்தபின்னர் அடியேனை ஆட்கொள்ளவேண்டு மென்பார், 'ஞானமிலாப், பொல்லா வெனைக்கொன்று போடும் பொழுதியல் பூஞ்சசெபஞ், சொல்லார்நற் கோயி னியமம் பலவகைத் தோத்திரமு, மெல்லா முடிந்தபின் கொல்லுகண்டாய்' என்றுங் கூறினர்.

நல்லோய்! அடியேனுக்கு விண்ணப்பம் ஒன்று செய்தருளல் வேண்டும். யாதெனின், ஞானமில்லாத கொடியேனாகிய என்னைக் கொல்லுஞ் சமயத்து எம்மால் செய்யக்கூடிய பூசையும், ஜபமும், சிவாலயதரிசன முதலிய நியமங்களும், பலவகைத் துதிகளும் யாவும் முடிவு பெற்றபின் கொல்லுவை என்பதாம். 32

சடக்கடத் துக்கிரை தேடிப் பலவுயிர் தம்மைக்கொன்று
விடக்கடித் துக்கொண் டிறுமாந் திருந்து மிகமெலிந்து
படக்கடித் தின்றுழல் வார்க டமைக்கரம பற்றிநம
னிடக்கடிக் கும்பொழு தேதுசெய் வார்கச்சி யேகம்பனே!

(பொ - ரை) சடவடிவாகிய சரீரத்தின் பாதுகாப்பின் பொருட்டு ஆகாரத்தைத் தேடி, பல வுயிர்களைக்கொன்று (அவற்றின்) மாமிசத்தைப் பிடுங்கிக்கொண்டு, செருக்கடைந்திருந்து, மிகவும் மெலிவடைந்து வருந்தக் கடித்துத் தின்று உழல்வோர்களை யமன், கையினால் பிடித்துக்கொண்டு வருத்தப் படுத்தும்பொழுது யாது செய்வார்கள்? திருக்கச்சியின்கண் எழுந்தருளிய ஏகம்பனே! (எ - று.)

(வி - ரை)

"கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாண்மேற்
செல்லா துயிருண்ணுங் கூற்று."

என ஆன்றோர் கூறியதை யுணராது, தோன்றி யழியும் சரீரத்தைப் பாதுகாத்தற்பொருட்டுப் பல உயிர்களைக் கொன்று, அவற்றின் மாமிசத்தைப் புசித்து இறுமாந்திருப்பார் என்பார், 'சடக்கடத்துக் கிரை தேடிப் பலவுயிர் தம்மைக்கொன்று, விடக்கடித் துக்கொண் டிறுமாந் திருந்தும்' எனவும்; அவ்வுயிர்களைப் பிறர் கொல்லாது தாமே வருத்திக் கொன்று தின்பார் என்பார், 'மிகமெலிந்து, படக்கடித்தின்று' எனவும்; அத்தன்மையோரை யமன் காலபாசத்தினால் கட்டிக் கைப் பற்றி யிழுத்துக்கொண்டுபோய் வருத்துகையில், அவர் அவன் கையி னின்று முய்யும்வகை இல்லாமையினால் வாளா விழிப்பார் என்பார், 'உழல்வார்கடம்மை...எது செய்வார்' எனவும் கூறினார்.

இச் செய்யுளால் ஊன் உண்பவர் யமனிடத்து அகப்பட்டு வருந்துவது நிச்சயம் என்பது ஸ்தாபிக்கப்பட்டது. சடரூபமாகிய சரீரத்தின் பாதுகாப்பின்பொருட்டு உணவைத் தேடிப் பலவுயிர் களைக்கொன்று அவற்றின் மாமிசத்தைப் பிடுங்கிக்கொண்டு, செருக் கடைந்திருந்து, மிகவு மெலிவடைந்து அலைவ வருந்தக் கடிந்துத் தின்று உழல்வோர்களை யமன் கையினால் பிடித்துக்கொண்டு வருத்தப் படுத்தும்பொழுது அவர்கள் யாது செய்வார்கள்? என்பதாம். 33

நாறு முடலை, நரிப்பொதி சோற்றினை, நான்றினமுஞ்
சோறுங் கறியு நிரப்பிய பாண்டத்தைத், தோலகபர்தங்
கூறு மலமு மிரத்தமுஞ் சோருங் குழியில்விழா
தேறும் படியருள் வாயிறை வா!கச்சி யேகம்பனே!

(போ - ரை) நாறுகின்ற தேகத்தை, நரிகட்குப் பொதிசோறா யிருப்பதொரு பொருளை, அடியேன் நாள்தோறும் சோற்றையும் கறியையும் நிறைத்துவைத்த மட்பாத்திரத்தைப், பெண்களது (இழித்துச்) சொல்லப்படுகின்ற மலமும் உதிரமும் ஒழுகாநின்ற

(அல்குலாகிய) பள்ளத்தில் விழுத்தாமல் முத்தியாகிய கரையேறும்படி கருணைபுரிவாய்! திருக்கச்சியின்கண் எழுந்தருளிய ஏகம்பனே! (எ - று.)

(வி - ரை) இச் சரீரம் அருவருக்கும்படியான நீர் ஒழுகுகின்ற பல துவாரங்களோடு கூடி மேலே ஒரு தோல் போர்த்து அதனாலே கண்ணுக்கு இனியதாகத் தோன்றுகின்றதேயன்றி உண்மையாகப் பார்த்தால், மலமூத்திரங்கள் பொதிந்து, தீநாற்றத்தை யுடைமையால், 'நாறுமுடலை' எனவும்; "நாய்நமதென" என்று ஆன்றோர் கூறியதனால், இவ்வுடல் அழிந்த ஞான்று நரிக்குக் கட்டுச்சோறா யிருப்பதால், 'நரிப்பொதி சோற்றினை' எனவும்; அடியேன் இவ்வுடல் பருக்க நாடோறும் சோறும் கறியுமிட்டு வளர்க்கின்றமையால், 'நான்றினமுஞ், சோறுங் கறியு நிரப்பிய பாண்டத்தை' எனவும்; இங்ஙனமாகிய வுடலை ஞானசொரூபமாகிய தேவரீரது திருவடியிற் சேர்க்காது, பெண்களது மலமு மூதிரமு மொழுகாநின்ற அல்குலாகிய பள்ளத்திற் சேர்ப்பது தேவரீரது பெருங்கருணைக்குத் தகுதியன்மையின் அருளல்வேண்டு மென்பார், 'தோகையர்தம், கூறுமலமுமிரத்தமுஞ் சோருங் குழியில்விழா, தேறும்படி யருள்வாய்' எனவும் கூறினார். 'விழாது' என்னும் எச்சம் ஈண்டுப் பிறவினை மேற்று. பொதிசோறு கட்டுச்சோறு.

நாறுகின்ற தேகமும், நரிகட்குப் பொதிசோறா யிருப்பதொரு பொருளும், அடியேன் நாள்தோறும் சோற்றையும் கறியையும் நிறைத்துவைத்த மட்பாத்திரமு மாகிய சரீரத்தைப், பெண்களுடைய இழித்துச் சொல்லப்படும் மலமு மூதிரமும் ஒழுகாநின்ற அல்குலாகிய பள்ளத்தில் விழுத்தாமல் முத்தியாகிய கரையேறும்படி கிருபைசெய்வாய் என்பதாம்.

சொக்கிட் டரண்மனைப் புக்குட் டிருடிய துட்டர்வந்து
திக்குற்ற மன்னரைக் கேட்பது போற்,சிவ நிந்தைசெய்து,
மிக்குக் குருலிங்க சங்கம நிந்தித்து, வீடிச்சிக்கு [னே!
மெச்குப் பெருத்தவர்க் கென்சொல்லு வேன்கச்சி யேகம்ப

(போ - ரை) (பிறரை மயக்குகின்ற) மாயப்பொடி தூவி, அரண்மனையி னுள்ளே புகுந்து களவுசெய்த துட்டர்கள், (இராஜ சேவகர்களால் அரசர்க்கெதிரில்) கொண்டுவரப்பட்டு, திக்குக டோறும் புகழ் பொருந்திய அவ்வரசரை, (தம்மைத் தண்டனை செய்யாது விடும்படி) கேட்டுக்கொள்ளுவதுபோல, சிவதூஷணஞ் செய்து, மிகுதியாகக் குருலிங்க சங்கமங்களைத் தூஷணஞ்செய்து, முத்தியடைய விரும்புகின்ற தீமையில் மேம்பட்டார்க்கு யாது சொல்லுவேன்? திருக்கச்சியின்கண் எழுந்தருளிய ஏகம்பனே! (எ- று.)

(வி - ரை) செருப்பைக் காலிற் கோத்து, அரையிற் கச்சைக் கட்டி, நூலேணியைச் சுற்றி உளியை யெடுத்து வாளைப் பிடித்துத் திரியுங் கள்வர், பேரணிகலங்களை நச்சுதலாலே அவற்றைக் களவாடுதற்குரிய அரண்மனையிற் பதினைந்து நாழிகையை முடிவாகக் கொண்ட கங்குற்போதிற் புகுந்து, மாயப்பொடி தூவிக் களவாடுதலியல்பென்பர், 'சொக்கிட் டரண்மனை புக்குட் டிருடிய கள்வர்' எனவும்; வலிய யானையை யிரையாகப் பார்க்கும் வலிய புலியைப் போல, உளவைப் பார்க்கையினாலே துயில்கொள்ளாத கண்களும், களவிற் றொழிலை யறிந்தவர்களாலே புகழப்பட்ட களவிற்றொழிலையாளுந் தன்மையும், ஊரைக் காத்தற்றொழிலு முடையராய ஊர்காப்பாளர் காவலிற் றவறுதவராய்ச் சென்று உலாவுகையினாலே அக்கள்வர் அவர் கையில் சிக்குண்டு, புகழ்பெற்ற அரசன்முன் கொணரப்பட்டுத், தம்மைத் தண்டனை செய்யாவண்ணம் அவ்வரசனைக் கேட்பது இயல்பாதலின், 'வந்து, திக்குற்ற மன்னரைக் கேட்பதுபோல்'

எனவும்; காமிகமுதலிய நூல்கள் ஏனைய தவறு செய்தவர்க்குப் பிராயச்சித்தம் கூறியுளவேனும், சிவநிந்தை, குருலிங்க சங்கம நிந்தைகள் செய்தோர்க்குப் பிராயச்சித்தங் கூறாமையினால் மோட்சத்தை விரும்பிய அக் கொடியோர்க்குக் கூறுவது ஒன்றுமில்லை என்பார், 'சிவநிந்தை செய்து, மிக்குக் குருலிங்க சங்கம நிந்தித்து வீடிச்சிக்கு, மெக்குப் பெருத்தவர்க் கென்சொல்லுவேன்' எனவும் கூறினார். குரு லிங்க சங்கமங்களைப் பூசிப்பார் அடையும் பயனை,

"எங்கு மீசனைப் பூசைசெய் திகபர மடைவா
ரெங்கு மன்பரைப் பூசைசெய் தெழுபிறப் பறுப்பா
ரெங்கு மாகமஞ் செவிமடுத் தெதிர்வினை தடுப்பா
ரெங்கு நாயகன் வடிவுணர்ந் திருண்மலங் களைவார்."

எனும் ஆன்றோர் திருவாக்கா னுணர்க.

பிறரை மயக்குகின்ற மாயப்பொடி தூவி அரண்மனையினுள்ளே புகுந்து களவாடிய துட்டர்கள், இராஜ சேவகர்களால் கொண்டுவரப் பட்டுத், திக்குகடோறும் புகழ் பொருந்திய அவ்வரசரைத் தம்மைத் தண்டனை செய்யாது விடும்படி கேட்டுக்கொள்வதுபோலச் சிவநிந்தை செய்தும், மிகுதியாகக் குரு லிங்க சங்கமங்களை நிந்தித்தும் முத்தி யடைய விரும்பும் தீமையில் மேம்பட்டார்க்கு யாது சொல்லுவேன் என்பதாம். 35

விருந்தாக வந்தவர் தங்களுக் கன்ன மிகக்கொடுக்கப்
பொருந்தார் வளம்பெற வாழ்வார்நின் னூமத்தைப் போற்றி
அருந்தா முலைப்பங்க ரென்னுதை பாதக ரப்புவியில் [நித்தம்
விருந்தாவ தேது?கண் டாயிறை வா!கச்சி யேகம்பனே!

(போ - ரை) (பண்டு அறிவுண்மையிற் குறித்தும் அஃதின்மை யிற் குறியாதும்) விருந்தினராய் வந்தவர்களுக்கு உணவை மிகத்

தர வாய்க்காதவர் செல்வம் பெற வாழ்வாராகித் தினந்தோறும் தேவரீரது திருநாமத்தைத் துதித்து, உண்ணாமுலையம்மையை ஒருபாகத்திலுடையவரே! என்று சொல்லாத பாவிகள் பூமியில் இருந்ததனால் இவ்வுலகினுக்கு அவர்களால் நேர்வதாகிய பயன் யாது? திருக்கச்சியின்கண் எழுந்தருளிய ஏகம்பனே! (எ - று.)

(வி - ரை) தம்மை நோக்கியும் நோக்காதும் வந்த விருந்தினரை எஞ்ஞான்றும் உபசரித்து வருவாரது இல் வாழ்க்கையானது வறுமையால் கெடுதலில்லையாத லுண்மையின், அங்ஙனஞ் செய்யாதாரும் செல்வம் பெற்றிருத்தல் முன் செய்த நல்வினைப் பயனாதலேயன்றி, மறுமைக்குத் தங்கட்கு யாதொரு பயனுமில்லை என்பார், 'விருந்தாக வந்தவர் தங்களுக் கன்ன மிகக்கொடுக்கப், பொருந்தார் வளம்பெற வாழ்வார்' எனவும்; மனத்தை மூடிய ஆணவவிருளையொழித்தற்குத் தேவரீரது திருநாமங்கள் பலவற்றுள்ளும் உண்ணாமுலைப்பங்கர் என்னுந் திருநாமமே சிறப்புடைத்தாதலால் அதனை நாள்தோறும் போற்றித் துதியாதார் இவ்வுலகத்தில் இருந்ததனால் தமக்கும் பிறர்க்கும் யாதொரு பயனுமில்லை என்பார், 'நின்னாமத்தைப் போற்றி நித்த, மருந்தா முலைப்பங்க ரென்னாத பாதக ரம்புவியி, லிருந்தாவ தேதுகண்டாய்' எனவும் கூறினார். இதனை,

"புரியுநின் னருளா லுயர்ந்தவ ரனேகர்
 புரவுபூண் டெட்டுரு வெடுத்தோய்,
வரிவிழி யுமையாண் மணந்தபே ரின்ப
 வடிவமே யிடும்பைநோ யறுக்கும்."

என்பதனு னுணர்க.

அறிமுகத்தால் எண்ணியும், அறிமுக மில்லாம லெண்ணியும், வந்த விருந்தினர்களுக்கு அன்னம் மிகக் கொடுக்கப் பொருந்தாதவரும் செல்வம் பெற வாழ்வாராகி, நாள்தோறும் தேவரீரது திரு

நாமத்தைத் துதித்து 'உண்ணாமுலை யம்மையை ஒருபாகத்திலுடைய வரே!' என்று சொல்லாத பாவிகள் பூமியில் இருந்ததனால் இவ்வுலகினுக்கு அவர்களால் உண்டாவதாகிய பயன் யாது என்பதாம். 26

எல்லா மறிந்து படித்தே யிருந்தெமக் குள்ளபடி
வல்லா னறிந்துள னென்றுண ராது மதிமயங்கிச்
சொல்லான் மலைந்துறு சூழ்விதி யின்படி துக்கித்துப்பி
னெல்லாஞ் சிவன்செய லேயென்பர் காண்கச்சி யேகம்பனே!

(பொ - ரை) எல்லாச் செயல்களையும் காட்சிப்பிரமாணமாகக் கண்டறிந்தும் ஒலிப்பிரமாணமாக வாசித்திருந்தும், எமக்கு உள்ள தன்மையை முத்தொழிலும் வல்லவனாகிய இறைவன் தெரிந்திருக்கின்றானென்று தெரியாமல், அறிவு கலங்கி பிறர் சொல்லும் சொற்களால் மலைவடைந்து (தம்மை வந்து) சூழ்ந்துகொண்ட ஊழின்படி வருத்தமடைந்து, பிறகு யாவும் சிவன் செயலே என்று கூறி ஒருவாறு மனந்தெளிவார்கள்; திருக்கச்சியின்கண் எழுந்தருளிய ஏகம்பனே! (எ - று.)

(வி - ரை) பல சாஸ்திரங்களைப் படித்தும், சைவாகமத்திற் கூறும் எண் குணங்களையு முடையான் சிவபெருமானே என்று தெரிந்தும், அவரே தமது செயலெல்லா முணரத்தக்கவ ரென்றறிந்தும், ஆணவவயத்தராய்ப் பிறர் கூறும் பொய்ம்மொழிகளை மெய்ம்மொழிகளாகக் கருதி மயங்கினர் என்பார், 'எல்லா மறிந்து படித்தே யிருந்தெமக்கு...........சொல்லான் மலைந்து' எனவும்; தாம் இடுக்கணுற்று வருந்துகையில் நல்வினைப் பயனால் அறிவு தோன்றி, இவ்விடுக்கண் தம்மைச் சூழ்ந்துகொண்ட ஊழின்படி நிகழ்ந்ததெனவும், சிவன்செய லெனவும் தெளிகின்றமையின், 'உறு சூழ்விதி யின்படி துக்கித்துப்பி, னெல்லாஞ் சிவன்செய லேயென்

பர்' எனவும் கூறினர். எல்லா நூல்களையும் படித்துணர்ந்தவரும் ஒரு தீங்கு மேலிட்டபோது இது இறைவன் செயலென் றுணராமல் மதிமயங்கி வருந்திப் பிறகு, 'இறைவன் செயலே' என்று தெளிவது இயற்கையாமென்க.

எல்லாச் செயல்களையும் கண்டறிந்தும், வாசித்திருந்தும், 'எமக்கு உள்ள தன்மையை முத்தொழிலும் வல்லவனாகிய இறைவன் அறிந்திருக்கின்றான்' என்று அறியாமல், அறிவு கலங்கிப், பிறர் சொல்லும் சொற்களால் மலைவடைந்து, தம்மை வந்து சூழ்ந்து கொண்ட ஊழின்படி வருத்தமடைந்து, பிறகு 'யாவும் சிவன் செயலே' என்று கூறி ஒருவாறு மனந்தெளிவார்கள் என்பதாம். 37

பொன்னை நினைந்து வெகுவாகத் தேடுவர்; பூவையன்ன
டன்னை நினைந்து வெகுவா யுருகுவர்; தாரணியி
லுன்னை நினைந்திங் குனைப்பூசி யாத வுலுத்தரெல்லா
மென்னை யிருந்து கண்டாயிறை வா! கச்சி யேகம்பனே!

(பொ - ரை) பொருளைச் சேகரிக்க எண்ணி மிகுதியாகத் தேடுவார்கள்; நாகணவாய்ப்புள் போல்வாளாகிய மாதைத்தழுவ எண்ணி மிகுதியாய் மனம் நைவார்கள்; பூமியில் தேவரீரை எண்ணி இப்பொழுது தேவரீரைப் பூசிக்காத உலோபிக ளெல்லோரும், உயிரோடிருந்து என்ன பயன்? தலைவனே! திருக்கச்சியின்கண் எழுந்தருளிய ஏகம்பனே! (எ - று.)

(வி - ரை) மறுமை யின்பமடைய முயற்சிசெய்யாது இம்மை யின்பத்தை யடையப் பொருளினையே தேட மிக முயல்வார் என்பார், 'பொன்னை நினைந்து வெகுவாகத் தேடுவர்' எனவும்; அங்ஙனந் தேடிய பொருளைச் சிவபுண்ணிய முதலியவற்றைச் செய்யாது மாதரைத் தழுவ எண்ணி அவர்களுக்கு அதனைக் கொடுத்து, அப்பொருள் வறண்டஞான்று அம்மாதர் தம்மோடு சேர இணங்காமை

யால் அவரை நினைந்து உருகுவர் என்பார், 'பூவையன்னு, டன்னை நினைந்து வெகுவா யுருகுவர்' எனவும்; இவ்வுலகத்தில் தேவரீரை நினைந்துப் பூசியாத உலுத்தர்கட்கு நரகமே உறைவிடமாதலின், அவர் உயிர்பெற்று ஈண்டு இருத்தலின் தமக்கு யாதொரு பயனுமில்லை என்பார், 'தாரணியிலுன்னை நினைந்திங் குனைப்பூசி யாத வுலுத்தரெல்லா, மென்னையிருந்து' எனவும் கூறினர். பொருளைத் தேட எண்ணி மிகுதியாய்த் தேடுவார்களும், பெண்களைத் தழுவ எண்ணி மிகுதியாய் மனம் நைவார்களுமாகிப், பூமியில் தேவரீரை எண்ணி யிப்பொழுது பூசிக்காத உலோபிகளெல்லோரும் உயிரோடிருந்து யாது பயன்? என்பதாம். 38

கடுஞ்சொலின் வம்பரை யீனரைக் குண்டரைக் காமுகரைக்
கொடும்பவ மேசெயு நிர்மூடர் தம்மைக் குவலயத்து
நெடும்பனை போல வளர்ந்துநல் லோர்த நெறியறியா
விடும்பரை யேன்வகுத் தாயிறை வா!கச்சி யேகம்பனே!

(பொ - ரை) (பாவம் பயக்கும்) கடுஞ் சொற்களையுடைய வீணர்களையும், இழிந்தார்களையும், வியபசாரி புத்திரர்களையும், விடர்களையும், கொடிய பாவத்தையே செய்கின்ற நிர்மூடர்களையும், பூமியில் நெடிய பனைமரம்போல வளர்ந்திருந்தும் ஞானியர்களுடைய மார்க்கத்தை யறியாத இக்கொடியோர்களையும், யாது காரணமாகப் படைத்தாய்? தலைவனே! திருக்கச்சியின்கண் எழுந்தருளிய ஏகம்பனே! (எ - று.)

(வி - ரை) இனிமையும் மெய்ம்மையு முதலிய சொற் குணங்கள் பயவாது பாவம் பயக்கும் கடுஞ்சொற்களை யெந்நாளு முடையார் என்பார், 'கடுஞ்சொல் வம்பரை' எனவும்; புகழ் முதலிய ஒழித்துப் பழி முதலிய செய்யாநின்றும்,யாதுங் கவலையுடையவ ரல்லராகலின்,

'ஈனரை' எனவும்; கொண்ட கணவரைப் பிழைத்துப் பெற்ற மக்களாதலின், 'குண்டரை' எனவம்; பிறர் மனைவியிடத்து நெறிகடந்து செல்வோர்க்குப் பகையும் அச்சமும் குடிப்பழிப்பு முண்டாதற்குக் காரணமாகிய காமங் குடிகொண்டிருத்தலின், 'காமுகரை' எனவும்; பிறரிடத்துச் செய்த தீவினைகள் தம்மிடத்துத் துன்பம்பயத்தலை யாராயாது மேன்மேலும் அவற்றையே செய்வராதலின், 'கொடும் பவமே செயு நிர்மூடர் தம்மை' எனவும்; பனைமரம் ஒருவர் நிற்கவும் நிழலாகாததுபோல், இப்பூமியில் ஞானமார்க்கங்களை யாராய்ந்து, ஞானிகளைப் பற்றுக்கோடாகக் கொள்ளாதார் யாதொரு பயனுமடையாமையால், 'குவலயத்து, நெடும் பனைபோ...........யேன் வகுத்தாய்' எனவும் கூறினர்.

பாவம் பயக்கும் கடுஞ் சொற்களையுடைய வீணர்களையும், இழிந்தார்களையும், வியபசாரி புத்திரர்களையும், விடர்களையும், கொடிய பாவத்தையே செய்கின்ற நிர்மூடர்களையும், பூமியில் நெடிய பனைமரம்போல வளர்ந்திருந்தும் ஞானியர்களுடைய மார்க்கத்தையறியாத கொடியோர்களையும், யாதுகாரணமாகப் படைத்தாய்? என்பதாம். 39

கொன்றே னனேக முயிரையெல் லாம்பின்பு கொன்று கொன்று, தின்றே னதன்றியுந் தீங்குசெய் தேனது தீர்க வென்றே, நின்றேனின் சன்னிதிக் கேயத னாற்குற்ற நீ பொறுப்பா, யென்றே யுனைநம்பி னேனிறை வா!கச்சி யே கம்பனே!

(பொ - ரை) அனேகமான பிராணிகளை யெல்லாம் கொலை புரிந்தேன்; பிறகு, கொலைசெய்து கொலைசெய்து உண்டேன்; அதுவல்லாமலும், மற்றும் பல தீமைகள் செய்தேன்; அவைகள் நீங்குக

வென்றே தேவரீரது சன்னிதியிலே நின்றேன்; ஆதலால், என் குற்றங்களையெல்லாம் தேவரீர்பொருத்தருளுவை என்றே தேவரீரை நம்பியிருக்கின்றேன். தலைவனே! திருக்கச்சியின்கண் எழுந்தருளிய ஏகம்பனே! (எ - று.)

(வி - ரை) உயிர்க்குறுதியானவற்றைச் செய்யாது தீத்தொழிலினையே செய்தேனென்பார், 'கொன்றே னனேக முயிரையெல்லாம்' எனவும், நீரிற் குமிழிபோ லழியும் இவ்வுடம்பைப் போற்றுதற்பொருட்டு அவ்வுயிர்களைப் புசித்தேன் என்பார், 'பின்பு கொன்று கொன்று, தின்றேன்' எனவும்; அதன்மேலும் கழுவாயில்லாப் பல தீங்குகளைச் செய்துளே னாதலின், அவற்றை யொழித்துக்கொள்ள தேவரீரது திருவருளைப் பெறவேண்டு மென்பார், 'அது தீர்க வென்றே, நின்றேனின் சன்னிதிக்கே' எனவும்; விருப்பு வெறுப்பு இல்லாததோர் குணமுடையோராதலின் அடியேனையும் ஆட்கொள்வது உண்மையென்று நம்பியுளேன் என்பார், 'அதனாற் குற்றநீ பொறுப்பாயென்றே யுனைநம்பினேன்' எனவும் கூறினார்.

அனேக உயிர்களையெல்லாம் கொலைபுரிந்தும், பிறகு கொலை செய்தும் உள்ளேன்; கொலைசெய்து உண்டும், அதுவல்லாமலும் மற்றும் பல தீமைகள் செய்து அவைகள் ஒழிகவென்றே தேவரீரது சந்நிதியிலே நின்றேன்; ஆதலால், என் குற்றங்களை யெல்லாம் நீர் பொருத்தருளுவீரென்றே தேவரீரை நம்பியிருக்கின்றேன் என்பதாம்.

## திருவேகம்ப விருத்தம்

அன்னை யெத்தனை யெத்தனை யன்னையோ?
அப்ப னெத்தனை யெத்தனை யப்பனோ?
பின்னை யெத்தனை யெத்தனை பெண்டீரோ?
பிள்ளை யெத்தனை யெத்தனை பிள்ளையோ?

முன்னை யெத்தனை யெத்தனை சன்மமோ?
மூடனாயடி யேனு மறிந்திலேன்;
இன்ன மெத்தனை யெத்தனை சன்மமோ?
என்செய் வேன்? கச்சி யேகம்ப நாதனே!

(போ - ரை) தாயென்றால் எத்தனை எத்தனைத் தாய்மார்களோ? பிதாவென்றால் எத்தனை எத்தனைப் பிதாக்களோ? பின்பு எத்தனை எத்தனை மனைவிகளோ? புத்திரரென்றால், எத்தனை எத்தனைப் புத்திரர்களோ? பூர்வத்தில் எத்தனை எத்தனைப் பிறப்புக்களோ? அறிவிலியாகிய அடியேனும் உணர்ந்திலேன்; இன்னமும் எத்தனை எத்தனைப் பிறப்புக்களோ? (இவைகளின் நீக்கத்தின் நிமித்தம் நான்) யாது செய்பக்கடவேன்? திருக்கச்சியின்கண் எழுந்தருளிய ஏகம்ப நாதனே! (எ - று.)

(வி - ரை)

"ஊர்வ பதினொன்று மொன்பது மானுட
நீர்ப்பறவை நாற்காலோர் பப்பத்தாஞ்—சீரிய
பந்தமாந் தேவர் பதினா லயன்படைத்த
வந்தமில்சீர்த் தாவரநா லைந்து."

என்றபடி, உயிர்கள் பிறவி யெடுக்குந்தோறும் அப் பிறவிகட்குத் தாயரும் தந்தையரும் பலராதலின், 'அன்னை யெத்தனை யெத்தனை யன்னையோ? அப்ப னெத்தனை யெத்தனை யப்பனோ' எனவும்; அவற்றுள் ஒன்பது மானுடம் எனக் கூறினமையால், அம் மானுட தேக மெடுத்துப் பதினாறிட்டைப் பிராயத்தராய காலந்தோறும் மணப்பதும் பலமாதராதலின், 'பின்னை யெத்தனை யெத்தனை பெண்டிரோ' எனவும்; மணாளனும் மணாட்டியுமாய்க் கூடி வாழுங் கால் பெறும் மக்களும் பலராதலின் 'பிள்ளை யெத்தனை யெத்தனை

பிள்ளையோ' எனவும்; வினைக்கீடாய்ப் பெறுஞ் சன்மங்களும் பல வாதலின், 'முன்னை யெத்தனை யெத்தனை சன்மமோ' எனவும், அறிவிலியாகிய யான் அப்பிறவிகளி னுண்மையை யறிந்தேனில்லை யென்பார், 'மூடனாயடி யேனு மறிந்திலேன்' எனவும்; இனி எவ் வகைப் பிறவிகளைப் பெற்றுய்வேனோ யான் அறிந்திலேன்; அஃ தன்றி, அவற்றைப் போக்கிக்கொள்வதோ ருபாயமுந் தேடி கொண்டேனில்லை என்பார், 'இன்ன மெத்தனை யெத்தனை சன் மமோ வென்செய்வேன்' எனவும் கூறினார். முன்ன மெத்தனை யெத்தனை சன்மம் என்றதை,

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்த்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்து
ளெல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தே னெம்பெருமான்."

என்று திருவாய்மலர்ந்தருளிய மணிவாசகப் பெருமான் திருவாக்கா னுணர்க.

தாயென்றால் எத்தனை எத்தனைத் தாய்மார்களோ? பிதாவென் றால் எத்தனை எத்தனைப் பிதாக்களோ? பின்பு எத்தனை எத்தனை மனைவிகளோ? புத்திர ரென்றால் எத்தனை எத்தனைப் புத்திரர்களோ? பூர்வத்தில் எத்தனை எத்தனைப் பிறப்புக்களோ? அறிவிலியாகிய அடியேனும் உணர்ந்திலேன்; இன்னமும் எத்தனை எத்தனைப் பிறப் புக்களோ? இவைகளை யொழித்துக்கொள்ளும்பொருட்டு நான் யாது செய்யக்கடவேன்? என்பதாம். இதுகாறும் யான் எடுத்த ஜன்மங்கள் எத்தனையோ? இனிமேல் யான் எடுக்கும் ஜன்மங்கள் எத்தனையோ? அறியேன் என்க.

## திருத்தில்லை



காம்பிணங் கும்பணைத் தோளார்க்கும் பொன்னுக்குங் காசினிக்குந், தாம்பிணங் கும்பல வாசையும் விட்டுத் தனித் துச்செத்துப், போம்பிணந் தன்னைத் திரளாகக் கூடிப் புரண்டினிமேற், சாம்பிணங் கத்துதை யோவென்செய் வேன்தில்லைச் சங்கரனே!

(பொ - ரை) திருத்தில்லையின்கண் எழுந்தருளிய சிவபெரு மானே! மூங்கிலை யொத்த பருமையாகிய தோள்களையுடைய பெண் கள் நிமித்தமாகவும், பொருள் நிமித்தமாகவும், பூமியின் நிமித்தமாகவும் தாம் வருத்தமடைதற்குரிய பலவாகிய ஆசையும் ஒழித்து, தனிமை யாகிச் செத்துப்போகின்ற பிணங்களினிமித்தம் இனிச் சாகப் போகின்ற பிணங்கள் கூட்டமாகச் சேர்ந்து (பூமியில் வீழ்ந்து) புரண்டு கூச்சலிடாநின்றன; ஐயோ! அந்தோ! இவரது அறியா மையை நோக்கி யாது செய்கேன்? (எ - று.)

(வி - ரை) மனக்கருத்து, விருப்பம், இன்பமுதலியவை ஒரு காலத்திலே ஒத்து அனுபவித்தற்குரிய மகளிரும் - அதற்கேற்ற இட மும்-காலமும்-உபகரணங்களும் பெற்று அனுபவித்தற்குத் துணையா யுள்ளது பொருளாதலால், அப்பொருளை யீட்டுதற்கு மிக்க வருத்த முடைமையாலே அப்பொருள் முதலியவற்றிலுண்டான பல ஆசையை ஒழித்து, எண்ணியதொன்றையும் உடன்கொண்டு போகாமல் இறக்கின்றார் என்பார், 'காம்பிணங் கும்பணைத் தோளார்க்கும் பொன்னுக்குங் காசினிக்குந், தாம்பிணங் கும்பல வாசையும் விட்டுத் தனித்துச்செத்துப், போம்பிணந்தன்னை' என வும்; உலகில் இறந்தாரைத் தம் உறவினர் கூட்டமாகக் கூடிச்

சூழ்ந்து தரையில் வீழ்ந்து புரண்டு அழுது கூச்சலிடுதல் இயற்கையாதலால், 'திரளாகக் கூடிப் புரண்டினிமேற், சாம்பிணங் கத்துது' எனவும்; உலகினர் தாம் இறத்தலைக் கண்கூடாகக் கண்டிருந்தும் அதற்கு வருந்தாது, பிறர் இறத்தலை நோக்கி வருந்துகின்ற அறியாமையைச் சுவாமிகள் எண்ணி யிரங்கி யவர்களைத் தம் வழித்திருத்தற்கு முடியாமையால், 'ஐயோ! என் செய்வேன்?' எனவும் கூறினார். 'இனிமேற் சாம்பிணம்' என்றது உயிர் வாழ்ந்திருக்கும் மாநுடரை. சங்கரன் என்பதற்குச் சுகத்தைச் செய்பவன் என்பது பொருள்; (சம்-சுகம், கரம்-செய்பவன்.)

ஈஷணைத்திரயங்களை விரும்பி முயன்றும் அவை கைகூடாமையால் அவற்றி னாசையை யொழித்துச் சாகும் பிணங்களைக் குறித்து இனிச் சாம்பிணங்கள் கத்துகின்றன. இவரது அறியாமையைக் குறித்து யாது செய்வேன்? என்பதாம். 1

சோறிடு நாடு துணிதருங் குப்பைதொண் டன்பரைக்கண்
டேறிடுங் கைக ளிறங்கிடுந் தீவினை யெப்பொழுது
நீறிடு மேனியர் சிற்றம் பலவர் நிருத்தங்கண்டால்
ஊறிடுங் கண்க ளுருகிடு நெஞ்சமென் னுள்ளமே.

(பொ - ரை) தேயமானது உணவைத் தராநிற்கும். குப்பைமேடுகள் துணியைக் கொடாநின்றன. சிவத்தொண்டு செய்கின்ற அடியவரைத் தரிசித்து என் கைகள் சிரமேல் ஏறாநின்றன. ('அங்ஙனஞ் செய்தலால் என்னைத் தொடர்ந்த) தீவினைகள் இறங்காநின்றன. எக்காலத்தும் திருவெண்ணீறு பூசிய திருமேனியை யுடையவரும், திருச்சிற்றம்பலத்தை யுடையவருமாகிய நடேசப்பெருமானது திருநடனத்தைத் தரிசித்தால், என் கண்கள் ஆனந்தநீரைச் சுரவாநின்றன; என் மார்பும் என் மனமும் உருகாநின்றன. (எ - று.)

(வி - ரை) உழவருடைமையாலும், மிக விளைதலாலும், மிக்க பசியடையாத நாட்டைச் சிவனடியார்கள் அடைவார்களாயின் அவர்கட்கு வேண்டிய வுணவைத் தாங்க ளிருந்தவிடத்திலேயே அந்நாட்டார் உணவு கொணர்ந்து அளிப்பார் என்பார், 'சோறிடு நாடு' எனவும்; சிவனடியார்கள் கிடைத்தற்கரிய உயர்ந்த செம்பட்டாடை முதலியவற்றை விரும்பி யுடுக்காமல் குப்பையின்கண்ணுள்ள கந்தை முதலியவற்றையே விரும்பி அணிந்துகொள்வாராதலால், அக்கந்தை முதலியவற்றைப் பெறுதல் எளிதென்பார், 'துணிதருங் குப்பை' எனவும்; சிவனடியார்களைக் கண்டு வணங்கக் கருதவேண்டுவதில்லை, கண்டமாத்திரத்தில் கைகள் தாமே சிரமேற் கூப்பிநின்றமையால் தமக்குரிய தீவினைகள் தாமே யொழியு மென்பார், 'தொண்டன் பரைகண், டேறிடுங் கைக ளிறங்கிடுந் தீவினை' எனவும்; உயிர் கட்கெல்லாம் புண்ணியம் வளர்க்கும் வைதிகநீறு சைவநீறுபோலாது' விண்ணவர் உடல்முழுதையும் பொடித்தவெண்ணீற்றை யெப்பொழுதும் அணிந்தனர் என்பார், 'எப்பொழுது, நீறிடு மேனியர் எனவும்; வியாக்கிரபாத முனிவர் முதலியோர்பொருட்டுத் தில்லையின்கண் செய்தருளிய திருநடனத்தை தரிசித்தால் கண்கள் ஆனந்த நீர் சொரிந்து, நெஞ்சம் நெகுதலடைந்து மனம் உருகிடும் என்பார், 'சிற்றம் பலவர் நிருத்தங்கண்டால், ஊறிடுங் கண்க ளுருகிடு நெஞ்சமென் னுள்ளமுமே' எனவும் கூறினர்.

சோற்றினுக்கும் கூறைக்கும் முயலவேண்டுவதில்லை; அன்பரைத் தரிசித்தலும் சிவபெருமானது நிருத்தத்தைக் காண்டலுமே இன்றியமையாதன என்பதாம். 2

அழலுக்குள் வெண்ணெ யெனவே யுருகிப்பொன் னம்பலத்
நிழலுக்கு ணின்று தவமுஞற் றுமனிட் டூரமின்னார் [தார்

குழலுக் கிசைந்த வகைமாலை கொண்டுகுற் றேவல்செய்து
விழலுக்கு முத்துலை யிட்டிறைத் தேனென் விதிவசமே.

(பொ - ரை) தீயிலிட்ட வெண்ணெய்போல மனமுருகி, பொற்சபையையுடையாரது திருவடி நிழலில் நிற்கத் தவஞ் செய்யாமல், கொடுஞ் சொற்களையுடைய மின்னலையொத்த பெண்களது கூந்தலுக்குப் பொருத்தமான வகைப்பட்ட பூமாலைகளை யேந்திக்கொண்டு குற்றேவல்களைச் செய்து, (அதனால்) விழற்புல்லைப் பயிர் செய்த னிமித்தம் மூன்று துலைபோட்டுத் தண்ணீர் இறைத்தவனானேன்; (இது) என் ஊழ்வசப்பட்டமையே (வேறன்று); )எ - று.)

(வி - ரை) மகளிரிடத்துக் கொண்ட மயக்கத்தால் புழுங்கப்படும் என் மனம் தீயிற்பட்ட வெண்ணெய்போ லுருகிப் பொன்னம்பலத்தின்கண் திருநடனஞ்செய்தருளிய நடேசப் பெருமானது திருவடிநிழலில் தங்குந் தவத்தைச் செய்யவில்லை என்பார், 'அழலுக்குள் வெண்ணெ யெனவே யுருகிப்பொன் னம்பலத்தார், நிழலுக்கு னின்று தவமுனுற் றாமல்' எனவும்; யாவரும் பழிக்கத்தகும் மகளிரது கூந்தலென்னும் காட்டிற்குக் கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ என்னும் நால்வகை மலர்களால் மாலைகளைக் கட்டியணிந்து, அவர்கள் ஏவிய குற்றேவற் றொழில்களைச் செய்து, வாணாளை வீணாளாகக் கழித்து, முளிபுல்லுக்கு நீர் வார்த்து வளர்ப்பதுபோல யாதொரு பயனுமில்லாம லாயினேன் என்பார், ''நிட்டூர மின்னார், குழலுக் கிசைந்த வகைமாலை கொண்டு குற்றேவல் செய்து, விழலுக்கு முத்துலை யிட்டிறைத்தேன்' எனவும்; சிவபெருமானது திருவடித்தொண்டு செய்யும்படியான வழிதேடாது மகளிர்பால் திரிந்து அலைந்தது என் தீவினைப்பயன் என்பார், 'என் விதிவசமே' எனவும் கூறினார்.

சிவபெருமானது திருவடி நிழலையடைய முயலாமல் மாதரது குற்றேவலாகிய வெப்பத்தை யடைய முயன்றது என் தீவினைப் பயனாகும் என்பதாம். 3.

ஓடாமற் பாழுக் குழையாம லோர முரைப்பவர்பாற்
கூடாம னல்லவர் கூட்டம்வி டாமல்வெங் கோபநெஞ்சில்
நாடாம னன்மை வழுவாம லின்றைக்கு நாளைக்கென்று
தேடாமற் செல்வந் தருவாய்! சிதம்பர தேசிகனே!

(பொ - ரை) திருத்தில்லையின்கண் எழுந்தருளிய பரமாசாரியனே! (ஒவ்வொரு விடயமாக) ஓடாதிருக்கவும், வீணுக்கு உழையாதிருக்கவும், (பகை நொதுமல் நண்பென்னும் மூன்று பகுதியினும்) பக்ஷபாதமாய்ப் பேசுவோரிடத்துச் சேராதிருக்கவும், ஞானிகளது இனத்தை நீங்காதிருக்கவும், (என்) மனத்தில் கொடிய கோபம் தலையெடாதிருக்கவும், நன்மை என்னை விட்டு நீங்காதிருக்கவும், இன்றைக்கு வேண்டும் நாளைக்கு வேண்டும் என்று பொருள் முதலியவற்றைத் தேடாதிருக்கவும், தேவரீரது திருவடியாகிய செல்வத்தை அடியேனுக்குக் கொடுத்தருள்வாயாக! (எ - று.)

(வி - ரை) மறுபிறப்பும் இருவினைப் பயனும் கடவுளு மில்லையெனவும், மற்று மித்தன்மையவும் சொல்லும் மயக்கநூல் வழக்குகளை மெய்ந்நூல் வழக்கெனத் துணிந்து, அந்நூல்களை யாராய்ந்து அச்சமயக் கோட்பாடுகளை யுடையாரிடத்துச் செல்லாதிருக்க வேண்டு மென்பார், 'ஓடாமல்' எனவும்; காம வெகுளி மயக்கங்களென்னும் முக்குற்றங்களைக் கடிந்து, இயமம்-நியமம்-இருப்பு-உயிர்நிலை-மனவொழுக்கம்-தாரணை-தியானம் - சமாதியென்று சொல்லப்படும் யோக நெறிகளிலே எஞ்ஞான்றும் உழைக்கவேண்டுமேயல்லாமல் பிறவிஷயங்களி லுழைக்கலாகாதென்பார், 'பாழுக்குழையாமல்' எனவும்; ஓரஞ் சொல்லாதிருத்தலை யொழிந்து சொல்ல

நினைப்பினும் அந்நினைவு தாம்கெடும் உற்பாதமாதலால் அத்தன்மை யோரைச் சேர்ந்தோர்களும் கெடுவராதலால், அவரோடு சேராம லிருக்கவேண்டு மென்பார், 'ஓர முறைப்பவர்பாற், கூடாமல்' என வும்; நீதியும் அறமுமுடைய பண்புடையோரைச் சேர்ந்தோரும் அந்நீதியும் அறமுமடைவர்; அப்பண்பில்லோரை யடைந்தோர் ஓர் சார்புமின்றி மண்ணின்கட் புக்கு மாய்வராதலால் நல்லவரினத்தை நீங்கலாகா தென்பார், 'நல்லவர் கூட்டம் விடாமல்' எனவும்; உல கத்து நெருப்புச் சுடுவது தான் சேர்ந்த விடத்தையே, சினமென் னும் நெருப்போ தான் சேர்ந்த விடமேயன்றி முற்றத் துறந்து தவ ஞானங்களாற் பெரியராய்க் கேட்டார்க்கு உறுதிமொழிகளை இனிய வாகச் சொல்லுவாரையும் சுடுமாதலால், அக்கோபத்தை யனத்தில் கொள்ளலாகா தென்பார், 'நெஞ்சில்வெம் கோபம் நாடாமல்' என வும்; இன்பத்தின் காரணமாகச் செய்யும் தீவினைகள் அஃதொழி ந்து துன்பமே இடமாய்ப் பிறிதொரு காலத்தும், பிறிதொரு தேசத்தும், பிறிதோ ருடம்பினும் சென்று தாக்குதலால், அவற் றைச் செய்யாது, ஒருவருக்குச் செய்த நன்மையை யெழுவகைப் பிறப்பினுள்ளும் நினைப்பாராதலால் அந் நன்மையினைச் செய்ய வேண்டுமென்பார், 'நன்மை வழுவாமல்' எனவும்; தாம் ஈட்டிய இரு வினைக் கீடாக எடுத்த உடலுக்கு முன்னரே யமைந்து கிடக்கும் பொருள் முதலியவற்றையே தேடுகின்றார், அவற்றைத் தேட வேண்டுவதில்லை யென்பார், 'இன்றைக்கு நாளைக்கென்று, தேடா மல்' எனவும்; இருவினைகளால் அடையப்படாத தேவரீரது திரு வடிச் செல்வத்தை யடையவேண்டு மென்பார், 'செல்வந் தருவாய்' எனவும் கூறினார்.

தோன்றி யழியும் பொருள் முதலியவற்றைத் தேடாமல் தேவரீ ரது திருவடியாகிய செல்வத்தைத் தேடக் கருணை புரியவேண்டும் என்பதாம். 4

பாராம லேற்பவர்க் கில்லையென் னுமற், பழுதுசொல்லி
வாராமற், பாவங்கள் வந்தணு காமல், மனமயர்ந்து
பேராமற், சேவை பிரியாம, லன்புபெ ருதவரைச்
சேராமற், செல்வந் தருவாய்! சிதம்பர தேசிகனே!

(பொ - ரை) திருத்தில்லையின்கண் எழுந்தருளிய பரமாசாரியனே! தமது பழைய நிலைமை கருதாது யாசிப்பவர்கட்கு 'யான் இப்பொழுது பொருளுடையனல்லேன்' என்று சொல்லாமலிருக்கவும், (இரப்பவர்மீது) குற்றங்களையே எடுத்துக்கூறி வாராமலிருக்கவும், பாவங்கள் வந்து (என்னை) யடையாமலிருக்கவும், மனஞ் சோர்ந்து (முன்னின்ற நிலைமையினின்றும்) நீங்காமலிருக்கவும், தேவரீரது தரிசனம் என்னைவிட்டு நீங்காமலிருக்கவும், தேவரீரிடத்து ஆசை வையாதவரை அடையாமலிருக்கவும், தேவரீரது திருவடியாகிய செல்வத்தைக் கொடுத்தருள்வாய்! (எ - று.)

(வி - ரை) இரப்பவர் சொல்லும் இளிவரவைத் தமக்குச் சொல்லுவதற்கு முன்னே அவர் குறிப்பறிந்து கொடுத்தலும், அவ்விளிவரவைப் பின்னும் மற்றொருவர்பால் அவர் சொல்லாவண்ணம் கொடுத்தலும், யாம் இப்பொழுது பொருளுடையமல்லேம் எனக் கரப்பார் சொல்லும் இளிவரவைச் சொல்லாது கொடுத்தலுமாகிய இவை ஈகை யுடையார்க்குரிய குணங்களாதலால் அவற்றைப் பெற வேண்டுமென்பார், 'பாராம லேற்பவர்க் கில்லையென் னுமல்' எனவும்; பிறர்மேற் குற்றங்களை யெடுத்துக் கூறுவார்க்கு யாவரும் பகையாவராதலால், அவற்றைக் கூறுமலிருக்கவேண்டு மென்பார், 'பழுது சொல்லி வாராமல்' எனவும்; ஏதிலரைப் புறங்கூறுதவர்க்கு வரும் பிறவிகளினும் பாவங்கள் வந்தணுகா வாதலால் அவ்வணுகாமையைப் பெறவேண்டுமென்பார், 'பாவங்கள் வந்தணுகாமல்' எனவும்; வீடெய்துவார்க்குச் செவிமுதலாகிய ஐம்பொறிகளுக்குரிய

ஓசை முதலாகிய ஐம்புலன்களையும் கெடுத்தல்வேண்டும்; அங்ஙனஞ் செய்யாத ஐம்புலன்கள் மனத்தைத் துன்பத்தினாலும், பாவத்தினாலும் தேடப்படும் பொருள்களின்மே லல்லாமல் முத்திவழியாகிய யோக ஞானங்களிற் செல்லவொட்டாமற் செய்யுமாதலால், அவற்றிற்குச் சலியாமலிருக்கவேண்டு மென்பார், 'மனமயர்ந்து போமல்' எனவும்; சோமநாதர் முதலியோர் தேவரீரைத் தரிசித்து முத்திப் பேற்றை யடைந்தமையால், அச் சேவையையென் கண்களும் என்றும் தேவரீரது அன்பு பிரியாமலிருக்கவேண்டு மென்பார், 'சேவை பிரியாமல்' எனவும்; பெருதவரைச் சேர்தலால் இருளில் புகுவதே யல்லாமல் ஞானத்தை யடைத லில்லாமையால், அவரைச் சேராதிருக்கவேண்டு மென்பார், 'அன்பு பெருதவரைச் சேராமல்' எனவும்; தேவரீரது திருவடிச் செல்வம் இம்மை மறுமைப் பயனைத்தரும் செல்வம்போலாது நிரதிசயானந்தத்தைத் தருதலால் அதனையே தரவேண்டு மென்பார், 'செல்வந் தருவாய்' எனவும் கூறினார்.

யாசிப்பவர்கட்குப் பொருள் முதலியவற்றைக் கொடுத்துப் புண்ணியத்தைப் பெற்றுத் தேவரீரது திருவடியை யடைய அருளல் வேண்டு மென்பதாம். 5

கொல்லாமற், கொன்றதைத் தின்னமற், குத்திரங் கோள்களவு-கல்லாமற், கைதவ ரோடிணங் காமற், கனவினும்பொய்-சொல்லாமற், சொற்களைக் கேளாமற், றோகையர் மாயையிலே-செல்லாமற், செல்வந் தருவாய்! சிதம்பர தேசிகனே!

(போ - ரை) (ஒருயிரையும்) கொல்லாமலிருக்கவும், கொன்றவுயிரைப் புசியாமலிருக்கவும், வஞ்சகத்தையும் - கோட்சொல்லையும் - திருட்டுத்தனத்தையும் கற்காமலிருக்கவும், வஞ்சகரோடு சேராம

விருக்கவும், சொப்பனத்திலும் பொய்ச்சொற்களைச் சொல்லாம விருக்கவும், துன்பம் விளைக்குஞ் சொற்களைக் கேளாமலிருக்கவும் பெண்கள்மீது மயக்கத்தை யடையாமலிருக்கவும், தேவரீரது திருவடி யாகிய செல்வத்தைக் கொடுத்தருள்வாய்! (எ - று.)

(வி - ரை) ஒருயிரையும் கொல்லாமையும், கொன்றதைத் தின்னுமையுமாகிய இரண்டறமும் ஒருங்கே யுடையவர்கட்கல்லா மல் ஒன்றே யுடையவர்கட்கு அதனால் யாதொரு பிரயோசனமு மில்லை யென்பார், 'கொல்லாமற் கொன்றதைத் தின்னுமல்' என வும்; துறந்தார்க்குப் புறத்திலே போகாமல் மடங்கி ஓரிடத்தை யுற்று உயிரை நோக்கவேண்டியதாகிய அவரது மனம், வஞ்சனை யால் அதைவிட்டுப் புறத்திலே போய்ப் பலவிடத்தை யுற்று உடம் பின் பொருட்டுப் பொருளை நோக்குதலே யல்லாமல் அப்பொருளை வஞ்சித்துக்கொள்ள நினைத்தலும் அவருக்குப் பெரியதோர் குற்ற மாதலாலும், காணுதவிடத்தே தம்மைக்குறித்து மற்றொருவராலே சொல்லப்பட்ட கோட்சொல்லைக் கேட்டவர், சொன்னவர் மிகவும் வருந்தும்படி அதிகமாகிய பழிகளை ஆராய்ந்து எதிரே சொல்லுவ ராதலானும், ஒருவர்க்குக் களவு பிறர்பொருளை வஞ்சித்துக்கொள் ளும் ஆசையை யுண்டாக்கிப் பாவமும் பழியும் முண்டாக்குதலானும் அம்மூன்றையும் கல்லாதிருக்கவேண்டு மென்பார், 'குத்திரங் கோள் களவு கல்லாமல்' எனவும்; ஒருவர்க்கு நல்லினம் அறியாமையை யொழித்துத் துணையாய் நிற்கும், தீயினம் அங்ஙனமாகாது அறிவை யொழித்துத் துயரப்படச் செய்யுமாதலால் தீயினஞ் சேராமலிருக்க வேண்டு மென்பார், 'கைதவரோ டிணங்காமல்' எனவும்; பொய் பேசுவாராயின் அதனை அறிந்த தமது மனமானது அப்பாவத்திற் குச் சாக்ஷியாய் நின்று தம்மையழிக்குமாதலின் கனவினும் பொய் பேசல்காதென்பார், 'கனவினும்பொய்சொல்லாமல்' எனவும்; பிறர் க்குத் துன்பஞ் செய்யாத இனிய சொற்கள் ஒருவர்க்கு இம்மை

மறுமையினும் இன்பம் உண்டாகாநிற்கும்; அங்ஙனமாகாது தமக்கும் பிறர்க்கும் துன்பம் விளைவிக்கும் சொற்களைக் கூறுதலேயன்றிக் கேட்டலு மாகாதென்பார், 'சொற்களைக் கேளாமல்' எனவும்; இன்பங் காரணமாகப் பெண்களை விரும்பி அவர் வழி நடப்பாராயின், தமக்குத் துணையாகிய அறத்தை யடையாராகி யழிவைப் பெறுவராதலின், 'தோகையர் மாயையிலே செல்லாமல்' எனவும்; மயங்கியவழிப்பேய்த் தேரிற் புனல்போலத் தோன்றி மெய்யுணர்ந்தவழி கயிற்றிலரவு போலக் கெடுதலாகிய பொருட்செல்வம் போலாது, தேவரீரது திருவடிச்செல்வம் இந்திரன் முதலிய இறையவர் பதங்களும் அந்தமில் இன்பத்து அழிவில் வீடும் தருதலால் அதனையே தரல்வேண்டும்என்பார், 'செல்வந் தருவாய்' எனவும் கூறினர்.

கொலை முதலியவற்றைச் செய்யாது தேவரீரது திருவடிச் செல்வத்தை யடையக் கிருபை செய்யவேண்டும் என்பதாம். 6

முடிசார்ந்த மன்னரு மற்றுமுள் ளோரு முடிவிலொரு
பிடிசாம்ப ராய்வெந்து மண்ணாவ துங்கண்டு பின்னுமிந்தப்
படிசார்ந்த வாழ்வை நினைப்பதல் லாற்பொன்னி னம்பலவ
ரடிசார்ந்து நாமுய்ய வேண்டுமென் றேயறி வாரில்லையே.

(போ - ரை) முடி தாங்கிய அரசரும், மற்றுமுள்ளவரும் அழிவுகாலத்தில் ஒரு பிடி சாம்பலாக வெந்து மண்ணுருவாவதைப் பார்த்தும், மேலும் இவ்வுலகத்தை யடைந்த நிலையற்ற வாழ்க்கையை அடைய எண்ணுவதே யல்லாமல், பொன்னம்பலவாணரது திருவடிச் சரணடைந்து நாம் பிழைக்கவேண்டுமென்று உணர்வோர் இவ்வுலகத்தில் ஒருவருமில்லை. (எ - று.)

(வி - ரை) பகையரசர்களை வென்று அவர்களது நாடு முதலியவற்றைக் கவர்ந்து வித்துவான்களையும் பாணர்களையும் வரவழைத்து

அவர்கட்கு யானைமுதலியவற்றைக் கொடுத்துச் சுற்றமொடு விளங்கி வாழ்ந்த முடிமன்னர் முதலியோர், தம் பிறப்பொழித்துக்கொள்ள முயலாது பயனின்றிக் கழிந்து முடிவில் சாம்பராய்ப் போதலை யறிந்தும் இவ்வுலக வாழ்வினையே நினைக்கின்றார் என்பார், 'முடி சார்ந்த மன்னரு மற்றுமுள் ளோரும்.........படிசார்ந்த வாழ்வை நினைப்பதல்லால்' எனவும்; அழியா வின்பத்தைத் தரும் தேவரீரது திருவடி வாழ்வையடைந்து உய்யவேண்டு மென்பதை நினைந்திலர் என்பார், 'பொன்னினம்பலவர்.........அறிவாரில்லை' எனவும் கூறினார்.

உலகில் முடிமன்னர்கள் அழிந்ததை யறிந்திருந்தும் நிலையற்ற வாழ்வை நினைந்து பாழ்போகாது தேவரீரது திருவடிகளைச் சரணடைந் துய்யவேண்டும் என்பதாம். 7

காலை யுபாதி மலஞ்சல மாமன்றிக் கட்டுச்சியிற்
சாலவுபாதி பசிதாக மாகுமுற் சஞ்சிதமா
மாலை யுபாதி துயில்காம மாமிவை மாற்றிவிட்டே
யால முகந்தரு ளம்பல வா!என்னை யாண்டருளே!

(பொ - ரை) காலையிலுண்டாகும் துன்பம் மல ஜல விஸர்ஜனங்களாகும்; அதுவுமல்லாமல், கடும்பகலில் உண்டாகின்ற மிக்க துன்பம் பசிதாகங்களாகும்; முன்னே சேகரித்ததாகிய மாலைக்காலத்தில் உண்டாகின்ற துன்பம் உறக்கமும் காமமும் ஆகும்; இத்துன்பங்களை யொழித்துவிட்டு விஷத்தை யமிர்தமாக ஏற்றருளிய பொன்னம்பலவனே! என்னை யாட்கொண்டருளவேண்டும். (எ - று.)

(வி - ரை)

"இருவகை யியக்கங் கழிப்புழியுண்டா மின்பம்,"

என்றபடி, அவை கழியாமுன்னர் உண்டாதல் துன்பமே என்பார், 'காலையுபாதி மலஞ்சலமாம்' என்றும்,

"பிணிபல வற்றுண் மேலாம் பிணிபசி யதன்பா லான
பிணிநறுந் தெண்ணீர் வேட்கை பிணியிவை யுயிர்கட் கெல்லாந்
தணிமருந் தன்னந் தெண்ணீர் சார்பசி யொழிவி னுண்டாந்
தணிவில்பல் வேட்கை நீக்கு மவையெலாந் தமக்குப் பின்னும்."

என்றபடி அவ்விருவகை யின்பமேயல்லாமல் நண்பகலில் பெருந் துன்பமாக உண்டாவது பசியும் நீர்வேட்கையு மாதலின், 'அன்றிக் கட்டுச்சியில், சால வுபாதி பசிதாகமாகும்' என்றும்,

"விதித்தன வாண்டு நூறு மேவரி தாண்டு சில்ல
கதித்திடு மிளமை தின்னுங் காமநோய் சில்ல தின்னும்."

என்றபடி, தூக்கமும் காமமும் அனுதியாக வுள்ளனவாய் அவை மாலையில் துன்பத்தையே தருதலின், 'முற் சஞ்சிதமாம், மாலை யுபாதி துயில்காமமாம்' அவற்றைத் தேவரீர் போக்கி யாட்கொள்ள வேண்டுமென்பார், 'இவைமாற்றி.........என்னை யாண்டருள்' என்றுங் கூறினர்.

சஞ்சித முதலிய வினைகளை யொழித்து தில்லையம்பலவாணர் ஆட்கொள்வர் என்பதாம். 8

ஆயும் புகழ்த்தில்லை யம்பல வாண ரருகிற்சென்றாற்
பாயு மிடபங், கடிக்கு மரவம்,பின் பற்றிச்சென்றாற்
பேயுங் கணமும் பெருந்தலைப் பூதமும் பின்றொடரும்;
போயென்செய் வாய்?மன மே!பிணக் காடவர் போமிடமே!

(பொ - ரை) அறிஞரால் ஆராயப்படுகின்ற புகழையுடைய தில்லையம்பலவாணருக்குச் சமீபத்திற் போனல் இருஷபம் பாயும்; பாம்பு கடிக்கும்; பின்தொடர்ந்து போனல் பேய்களும், பூதகணங்களும், பெருந்தலையையுடைய பூதங்களும் பின்தொடர்ந்து வரும்;

மனமே! அவர் போகுமிடம் பிணக்காடாம்; (அவ்விடத்தில்) நீபோய் யாது செய்வாய்? (எ - று.)

(வி - ரை) சிவபெருமானுக்குத் தருமதேவதையும் திருமாலும் இடபவாகனமாக விருத்தலை,

"அத்தகு முடிவொன் றெய்தலு முலக
மழிவுநோக் கியவறக் கடவு
ளித்தகு முடிவிங் கெய்துமே நமக்கு
மென்றுளம் விரும்பியேற் றுருக்கொண்
டுத்தமற் பணிய வுரன்முத லருளி
யூர்தியாக் கினன்விறன் மாலும்
வித்தகன் புரங்கொள் ஞான்றருள் பெருவான்
விடையெனத் தாங்கின னறிதி."

என்பதனானுணர்க. சிவபெருமான் போமிடம் பிணக்காடென்பதை,

"கட்டிட்ட தலைகை யேந்திக் கனலெரி யாடிச் சீறிச்
சுட்டிட்ட நீறு பூசிச் சுடுபிணக் காட ராகி
விட்டிட்ட வேட்கை யார்க்கு வேறிருந் தருள்கள் செய்து
பட்டிட்ட வுடைய ராகிப் பருப்பத நோக்கி னாரே."

என்பதனா னுணர்க.

மனமே! தில்லை யம்பலவாணரது திருவடியை யடைய எவ்வகைப்பட்ட துன்ப மடைந்தபோதிலும் அதனை விடாமற் பற்ற வேண்டு மென்பதாம். 9

ஓடு மெடுத்தத னாடையுஞ் சுற்றி, யுலாவிமெள்ள
வீடுக டோறும் பலிவாங்கி யே,விதி யற்றவர்போ
லாடு மருட்கொண்டிங் கம்பலத் தே நிற்கு மாண்டிதன்னைத்
தேடுங் கணக்கென்ன காண்!சிவ காம சவுந்தரியே!

(பொ - ரை) பலிபாத்திரத்தையும் ஏந்திக்கொண்டு, தோலாடையும் அரையிற் சுற்றி, மெல்லத் திரிந்து, வீடுகள்தோறும் பிச்சையேற்று, குணநீங்கினவர்போல் தலைசுற்றி யாடுகின்ற மருட்சியைக் கொண்டு இந்த அம்பலத்தில் நிற்கும் ஆண்டியைத் தேடுங் காரணம் யாது? சிவகாமசௌந்தரி யம்மையே! (எ - று.)

(வி - ரை) பிரமனது அகந்தை கெட நடுத்தலையைக் கிள்ளி அதனைக் கபாலமாகக்கொண்டு திருமால் முதலியோரிடத்து உதிரப் பலியேற்க எடுத்தமையின் 'ஓடுமெடுத்து' எனவும்; தாருகவனமுனிவர் சிவபெருமானைக் கொல்லும்பொருட்டு அபிசாரயாகமொன்று செய்து, அவ் யாகத்திற் றோன்றிய புலியினை அப் பெருமான்மீது செலுத்த, அதனை யுணர்ந்து தன்மீது பாயும் புலியினைத் தான் கொன்று அதன் தோலை யாடையாக வுடுத்தமையின், 'அதளாடை சுற்றி' எனவும்; தாருகமுனிவர் மகளிருடைய இறுமாப்புக் கெடும்படி பிக்ஷாடன கோலங்கொண்டு அம் மகளிர் கற்புக்கெட அகங்கடோறும் பலியேற்றுத் திரிந்தமையின், 'உலாவி மெள்ள, வீடுகடோறும் பலிவாங்கி' எனவும்; பித்தங்கொண்டவர்போல் அம்பலத்து ஆடும் ஆண்டியைச் சிவகாமசவுந்தரியே! நீ விரும்புதல் தகாதென்பார், 'விதியற்றவர்போல்....................சிவகாம சவுந்தரியே' எனவும் கூறினர். இக்கருத்தினை,

"படங்கொணாகஞ் சென்னி சேர்த்திப் பாய்பு லித்தோ லரையில் வீக்
யடங்க லாரு ரரியச் சீறி யன்று மூவர்க் கருள் புரிந்தீர் [கி
மடங்க லானைச் செற்று கந்தீர் மனைக டோறுந் தலைகை யேந்தி
விடங்க ராகித் திரிவ தென்னே வேலை சூழ்வெண் காட னீரே."

என்பதனா னுணர்க. இது தில்லையில், பசி மிகுதியால், "பன்னக வாடகப் பொற்பாதம்" என்று பாடுதலும், உலகமாதாவாகிய சிவகாமியம்மையார் வேதியப்பெண்ணுருவாய் உச்சி நிவேதனம் பிரசா

தத்தை வட்டகையினின்றும் கொடுத்தருள, உண்டு பசியாறின வுடன் மறைந்தருளலும் பிராட்டியாரென்றுணர்ந்து ஆராமை மிகுதியால் பாடப்பட்டது.

சிவகாம சவுந்தரியே; ஓடெடுத்து தோலாடை சுற்றி வீடு தோறும் பிச்சையேற்கும் ஆண்டி தன்னைத் தேடுவது யாது காரணம்? என்பதாம். இது நிந்தா ஸ்துதி. 10

ஊட்டுவிப் பானு முறங்குவிப் பானு மிங்கொன்றொடொன்
மூட்டுவிப் பானு முயங்குவிப் பானு முயன்றவினை [றை
காட்டுவிப் பானு மிருவினைப் பாசக் கயிற்றின்வழி
யாட்டுவிப் பானு மொருவனுண் டேதில்லை யம்பலத்தே.

(போ - ரை) உண்ணச் செய்பவனும், உறங்கச் செய்பவனும், இவ்விடத்தில் ஒருபொருளோ டொருபொருளை மூட்டிவிடுவோனும், சேரச்செய்பவனும், நல்வினை தீவினை யென்கிற பாசமாகிய கயிற்றின் வழியாய் அசையச்செய்பவனுமாகிய ஒருவன் தில்லை யம்பலத்தின்கண்ணே யுளன். (எ - று.)

(வி - ரை) காத்தல் அழித்தல் முதலியன சிவன்செயலேயென்பார், 'ஊட்டுவிப் பானு முறங்குவிப் பானும்' எனவும்; உயிர்களை யுறவும் பகையும் செய்வித்தற்கு முரியனென்பார், 'இங்கொன்றொ டொன்றை, மூட்டுவிப் பானும்' எனவும்; ஆணோடு பெண்ணைச் சேர்ப்பவனும் தானேயென்பார், 'முயங்குவிப்பானும்' எனவும், உயிர்கட்கு இருவினைப்பயனை யுண்பிப்பவனுந்தானே யென்பார், 'முயன்றவினை, காட்டுவிப்பானும்' எனவும்; உயிர்களை நல்வினை தீவினை என்கின்ற பாசக் கயிற்றினால் ஆட்டுவிப்பவனும் தானே யென்பார், 'இருவினைப் பாசக் கயிற்றின்வழி, யாட்டுவிப்பானு மொருவனுண்டே' எனவும் கூறினார். இதனை,

"வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி
யூனாகி யுயிராகி யுண்மையுமா யின்மையுமாய்க்
கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை யென்சொல்லி வாழ்த்துவனே."

என்பதனா னுணர்க.

தில்லையம்பலத்தின்கண்ணுள்ள நடேசப்பெருமான் உயிர்களை உண்பித்தல் முதலிய செய்கைகளைச்செய்து, இருவினைப்பாசமென்கின்ற கயிற்றினால் ஆட்டுவிப்பார் என்பதாம். 11

அடியார்க் கெளியவ ரம்பல வாண ரடிபணிந்தால்
மடியாமற் செல்வ வரம்பெற லாம்,வைய மேழளந்த
நெடியோனும் வேதனுங் காணாத நித்த நிமலனருட்
குடிகாணு நாங்க ளவர்காணு மெங்கள் குலதெய்வமே.

(பொ - ரை) தன்னடியார்க்கு எளிமையாயிருப்பவர், பொன்னம்பலத்தில் வாழ்பவர், (அவரது) திருவடியை வணங்கினால், இறவாமல் முத்திச்செல்வத்தைப் பெறுதற்குரிய வரத்தை அடையலாம். ஏழுலகங்களையும் அளந்த திரிவிக்கிரமனும், பிரமனும் பார்த்தறியாத சாசுவதனும், நிர்மலனுமாகிய சிவபெருமானுக்கு, நாங்கள் அருட்குடிகளாவோம்; அக்கடவுள் எங்கள் குலத்திற்குத் தெய்வமாவார். (எ - று.)

(வி - ரை) அடியார்க்கு எளியவர் அம்பலவாணர் என்பதனை

"காரானை யீருரிவைப் போர்வையானைக்
காமருபூங் கச்சியே கம்பன்றன்னை
யாரேனு மடியவர்கட் கணியான்றன்னை
யமரர்களுக் கறிவரிய வளவிலானைப்

பாரோரும் விண்ணோரும் பணியநட்டம்
பயில்கின்ற பரஞ்சுடரைப் பரனையெண்ணில்
பேரானைப் பெரும்பற்றப் புலியூரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவாநாளே."

என்பதனு னுணர்க. அம்பலவாணரது திருவடியை வணங்கினால் முத்தியாகிய செல்வத்தைப் பெறலாம் என்பதனை,

"பிறவிதனை யறமாற்றிப் பிணிமூப்பென் றிவையிரண்டு
முறவினொடு மொழியச்சென் றுலகுடைய வொருமுதலைச்
செறிபொழில்சூழ் தில்லைநகர்த் திருச்சிற்றம் பலமன்னி
மறையவரும் வானவரும் வணங்கிடநான் கண்டேனே."

என்பதனு னுணர்க. தாமரையாகிய திருவடியைத் தேடவேண்டுவது அன்னமும், சடையாகிய காட்டைத்தேடவேண்டுவது பன்றியுமாதலான், அங்ஙனம் தேடப்புகாது, திருமாலும் பிரமனும் பன்றியு மன்னமுமாக வுருக்கொண்டு மாறுபட்டுப் பன்றி தாமரையும், அன்னம் காடுமாகப் படர்ந்து தேடுதலால் கண்டிலர் என்பார், 'வையமே ழளந்தநெடியோனும் வேதனுங் காணாத நித்த நிமலன்' எனக் கூறினார். இதனை,

"கோணா கணையானுங் குளிர்தா மரையானுங்
காணார் கழலேத்தக் கனலா யோங்கினான்
சேணார் வாழ்தில்லைச் சிற்றம் பலமேத்த
மாணா நோயெல்லாம் வாளா மாயுமே."

என்பதனு னுணர்க.

எம் குலதெய்வமாகிய நடேசப்பெருமானை வணங்கினால் முத்திச்செல்வத்தை யடையலாம் என்பதாம். 12

தெய்வச் சிதம்பர தேவா!உன் சித்தந் திரும்பிவிட்டாற்
பொய்வைத்த சொப்பனமா மன்னர் வாழ்வும் புவியுமெங்கே

மெய்வைத்த செல்வமெங் கே?மண்ட லீகர்தம் மேடையெங்
கைவைத்த நாடக சாலையெங் கே?யிது கண்மயக்கே. [கே?

(பொ - ரை) தெய்வீகமான சிதாகாயத்தில் நடிக்கின்ற தேவனே! தேவரீரது திருவுள்ளம்மீது பதிந்துவிட்டால், அரசரது வாழ்வும், பொய்த்தன்மையுள்ள கனவை யொக்கும் பூமியும் எவ்விடத்தது? மெய்த்தன்மை யமைத்து வைக்கப்பட்ட செல்வம் எவ்விடத்தது? அலங்காரஞ்செய்த நாடகசாலை எவ்விடத்தது? இது கண் மயக்கமேயாம். (எ - று.)

(வி - ரை) சிவபெருமானது திருவருள் அடியவரிடத்துப் பதிந்துவிடின் யாவும் பொய்யெனத் தோன்று மென்பதை,

"இந்திரசா லங்கனவு கானலினீ ரெனவுலக மெமக்குத் தோன்றச், சந்ததமுஞ் சிற்பரத்தா லழியாத தற்பரத்தைச் சார்ந்து வாழ்க, புந்திமகி ழுறநாளுந் தடையறவா னந்தவெள்ளம் பொலிகவென்றே, வந்தருளுங் குருமௌனி மலர்த்தாளை யனுதினமும் வழுத்தல் செய்வாம்."

என்பதனு லுணர்க. சித்தம் திரும்பிவிடல்-திருவருள் பதிந்துவிடல்.

சிதம்பரதேலனே! தேவரீரது திருவுள்ளம் பதிந்துவிடின் மெய்யாகக் கருதிய அரசச்செல்வம் முதலியன பொய்யாகத் தோன்று மென்பதாம்.

14

உடுப்பானும், பாலன் னமுண்பானு, முய்வித் தொருவர் தம்மைக்-கெடுப்பானு, மேதென்று கேள்விசெய் வானுங், கெதியடங்கக்,-கொடுப்பானுந், தேகியென் றேற்பானும், ஏற்கக் கொடாமனின்று,-தடுப்பானு, நீயல்லை யோ? தில்லை யானந்தத் தாண்டவனே!

(பொ - ரை) ஆடை முதலியவற்றைத் தரிப்பவனும், பாற் சோற்றைப் புசிப்பவனும், ஒருவரை வாழ்வித்து (ஒருவரைக்) கெடுப்பவனும், யாதென்று கேட்பவனும், வறுமை யொழியக் கொடுப்பவனும், கொடு என்று இரப்பவனும், அங்ஙன மேற்கக் (கொடுப்பவரைக்) கொடாதவண்ணம் உறுதியாய் நின்று தடுப்பவ னும், தேவரீரன்றோ? திருத்தில்லையின்கண் எழுந்தருளி ஆனந்த நிருத்தஞ் செய்பவனே! (எ - று.)

(வி - ரை) உயிர்கடோறும் ஊனுயும் உயிராயு முள்ளவராதலின் அவ்வுயிர்கள் உடுத்தலும் உண்ணலும் நும்செயலே யென்பார், 'உடுப் பானும் பாலனமுண்பானும்' எனவும்; சாபானுக்கிரகஞ் செய்வதும் நும்செயலே யென்பார், 'உய்வித் தொருவர்தம்மைக் கெடுப்பானும்' எனவும்; உயிர்கள் படுந் துன்பத்தைக் கண்டு யாதென்று கேட்கச் செய்வதும் நும்செயலே யென்பார், 'ஏதென்று கேள்விசெய்வானும்' எனவும்; இரப்பவர்கள் மீட்டுமோரிடத்துச் சென்று இரக்காது கொடுக்கச் செய்வதும் நும்செயலே யென்பார், 'கெதியடங்கக் கொடுப்பானும்' எனவும்; தானீட்டிய செல்வங்களையெல்லாம் தீவினை யினு விழந்து ஒருவன்பாற்சென்று யாசிக்கும் நிலைமையை யுண் டாக்குவதும் நும்செயலேயென்பார், 'தேகியென் றேற்பானும்' எனவும்; அங்ஙனம் எற்றும் கொடாமற் செய்வதும் நும்செயலே யென்பார், 'ஏற்கக் கொடாமனின்று, றடுப்பானு நீ யல்லையோ' எனவுங் கூறினுர், யாவும் சிவன் செய லென்பதனை,

"சிவன்செய லாலே யாதும் வருமெனத் தேறே ஞரு
மவந்தரு நினைவை யெல்லா மகற்றிலே னுசை வெள்ளங்
கவர்ந்துகொண் டிழுப்ப வந்தக் கட்டிலே யகப்பட் டையோ
பவந்தனை யீட்டி யீட்டிப் பதைக்கின்றேன் பாவியேனே."

என்பதனு லுணர்க.

தில்லையில் ஆனந்தத்தாண்டவஞ் செய்பவனே! உயிர்கள் செய்யும் தொழில்களெல்லாந் தேவரீரது தொழிலே என்பதாம். 14

வித்தாரம் பேசினுஞ், சோங்கேறி னுங், கம்ப மீதிருந்து
தத்தாவென் றோதிப் பவுரிகொண் டாடினுந், தம்முன்றம்பி
யொத்தாசை பேசினு, மாவதுண் டோ? தில்லை யுண்ணிறை
கத்தாவின் சொற்படி யல்லாது வேறில்லை கன்மங்களே. [ந்த

(பொ - ரை) விஸ்தாரமாகப் பேசினாலும், மரக்கலமேறிப் போனாலும், கம்பத்தின்மீதேறி யிருந்து தத்தாவென்று சொல்லிப் பவுரிக்கூத்தாடினாலும், தமையனும் தம்பியும் உதவியாகப் பேசினாலும், ஆவதொரு காரியமுண்டோ? தில்லையிலிருந்தாலும் சர்வ வியாபகனாய் எவ்விடமும் நிறைந்திருக்கின்ற, கர்த்தனது சொற்படியேயல்லாமல் உலகத்தில் நிகழும்தொழில்கள் வேறில்லையாம். (எ-று.)

(வி - ரை) பிறர் மயங்கும்படி அணிமா முதலிய அட்டமாசித்திகளை யுடையேனென்று விரிவாகப் பேசினாலும் யாதொரு பயனுமில்லை என்பார், 'வித்தாரம் பேசினும்' என்றும்; ஆகூழில்லையாயின் மரக்கலமேறிப் பொருள் தேட முயன்றாலுஞ் சிறிதும் கைகூடாதென்பார், 'சோங்கேறினும்' என்றும்; மூங்கிலின் மீதிருந்து கழைக்கூத்தாடினும் அடைவதொரு பயனுமில்லை என்பார், 'கம்பமீதிருந்து தத்தாவென் றோதிப் பவுரிகொண் டாடினும்' என்றும்; தனக்குத் துணையாகத் தமையனும் தம்பியுமாகப் பேசினாலும் யாதொரு காரியமு மாகாதென்பார். 'தம்முன் தம்பி' யொத்தாசை பேசினு மாவதுண்டோ?' என்றும்; உலகத்தில் நிகழுந் தொழில்களெல்லாம் சிவபெருமானது சொற்படியன்றி நிகழாதென்பார், 'தில்லை யுண்ணிறைந்த கத்தாவின் சொற்படி யல்லாது வேறில்லை கன்மங்களே' என்றுங் கூறினார். வித்தாரம் பேசுதலை,

"மட்டறு கடற்புவி யனைத்துமோ ரிமைப்பினின்
மறைத்துடன் விடுத்திடுவன்மற்
றெட்டுவரை யைக்கடலை முட்டியு ளடக்கிடுவன்."

என்பதனு லுணர்க.

திருத்தில்லையின்கணுள்ள சிவபெருமானது சொற்படியன்றி ஓர் காரியமும் நடவா தென்பதாம். 15

பிறவா திருக்க வரம்பெறல் வேண்டும்; பிறந்துவிட்டா
லிறவா திருக்க மருந்துண்டு காணிது வெப்படியோ
அறமார் புகழ்த்தில்லை யம்பல வாண ரடிக்கமல
மறவா திருமன மே!யது காணன் மருந்துனக்கே.

(பொ - ரை) நெஞ்சே! (இவ்வுலகத்தில்) பிறவாதிருக்கும்படி வரம் பெறுதலே தகுதி; பிறந்துவிடின் இறவாமலிருக்கும்படி மருந்துளது; இது எப்படி என்றாலோ? தருமமார்க்கம் நிறைந்திருக்கின்ற புகழையுடைய தில்லையம்பலவாணரது திருவடியாகிய தாமரையை மறவாமலிரு! (அவ்வாறு) மறவாதிருத்தலே உனக்குச் சாகாமைக் கேதுவாகிய நல்ல மருந்தாகும். (எ - று.)

(வி - ரை).

"இப்பிறவி யென்னுமோ ரிருட்கடலின் மூழ்கிநா
னென்னுமொரு மகரவாய்ப்பட்
டிருவினை யெனுந்திரையி னெற்றுண்டு புற்புத
மெனக்கொங்கை வரிசைகாட்டுந்
துப்பிதழ் மடந்தையர் மயற்சண்ட மாருதச்
சுழல்வந்து வந்தடிப்பச்
சோராத வாசையாங் காறுறு வானதி
சுரந்தலைதன மேலுமார்ப்பக்

கைப்பரிசு காரர்போ லறிவான வங்கமுங்
கைவிட்டு மதிமயங்கிக்
கள்ளவங் கக்காலர் வருவரென் றஞ்சியே
கண்ணருவி காட்டுமெளியேன்."

எனவும்,

"காக மோடுகழு கலகை நாய்நரிகள்
சுற்று சோறிடு துருத்தியைக்
காலி ரண்டுநவ வாசல் பெற்றுவளர்
காமவே ணடன சாலையை
மோக வாசைமுறி யிட்ட பெட்டியையு
மலமிகுந் தொழுகு கேணியை
மொய்த்து வெங்கிருமி தத்து கும்பியை
முடங்க லார்கிடை சரக்கினை
மாக விந்த்ரதனு மின்னை யொத்திலக
வேத மோதிய குலாலனார்
வனைய வெய்தடி காரனான யமன்
வந்த டிக்குமொரு மட்கலத்
தேக மானபொயை மெய்யெனக் கருதி
யைய வையமிசை வாடவோ."

எனவும்,

"ஊன்மிசை யுதிரக் குப்பை யொருப்பொரு ளிலாத மாய
மான்மறித் தனைய நோக்க மடைந்தைமார் மதிக்கு மிந்த
மானிடப் பிறவி வாழ்வு வாழ்வதோர் வாழ்வு வேண்டே
னனல்வெள் ளேற்ற வாரூ ரப்பனே யஞ்சினேனே.

எனவும், ஆன்றோர் கூறியபடி பிறவி யெடுக்குந்தோறும் துன்பமும் பலவுள வாதலின், அப்பிறவி யெடுக்காமலிருக்கக் கருணைபுரிய வேண்டு மென்பார், 'பிறவாதிருக்க வரம்பெறல் வேண்டும்' என்றும்;

"காரணங்க ளெல்லாங் கடந்துநின்ற கறைமிடற்றன்
சரணங்க ளேசென்று சார்தலுமே தானெனக்கு
மரணம் பிறப்பென் றிவையிரண்டின் மயக்கறுத்த
கருணைக் கடலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ."

என்றபடி, பிறவி யெடுத்தபின் அப் பிறவியைப் போக்கிக்கொள்வ தற்குத் தேவரீரது திருவடி மருந்தன்றி வேறில்லை யென்பார், 'தில்லை யம்பல வாண ரடிக்கமல, மறவாதிரு.........நன் மருந் துனக்கே' என்றுங் கூறினர். அம்பலவாணரது திருவடியை நினைப் பவர்கட்குப் பிறப்பொழியும் என்பதை,

"முன்னை வினையிரண்டும் வேரறுத்து முன்னின்றான்
பின்னைப் பிறப்பறுக்கும் பேராளன்—றென்னன்
பெருந்துறையின் மேய பெருங்கருணை யாளன்
வருந்துயரந் தீர்க்கு மருந்து."

எனவும்,

"கறங்கோலை போல்வதோர் காயப், பிறப்போ டிறப்பென்னு
மறம்பாவ மென்றிரண் டச்சந் தவிர்த்தென்னை யாண்டுகொண்
மறந்தேயுந் தன்கழற்ன் மறவாவண்ண நல்கியவத் [டான்
திறம்பாடல் பாடிநாந் தெள்ளேணங் கொட்டோமோ."

எனவும் கூறியவாற்று னுணர்க.

தில்லையம்பலவாணரது திருவடியை நினைத்தல் முத்திக்குக் காரணமாகிய மருந்தாகும். 16

தவியா திரு!நெஞ்ச மேதில்லை மேவிய சங்கரனைப்,
புவியார்ந் திருக்கின்ற ஞான கரனைப், புராந்தகனை [த்தாற்
அவியா விளக்கைப்,பொன் னம்பலத் தாடியை, யைந்தெழு
செவியாம னீசெவித் தாற்பிற வாமுத்தி சித்திக்குமே.

(போ - ரை) மனமே! இளைக்காமலிரு; தில்லையின்கண் எழுந்தருளிய சிவபெருமானை, உலகமுழுமையும் நிறைந் திருக்கின்ற ஞானத்துக்குப் பிறப்பிடமா யிருப்பவனை, திரிபுராந்தகனை, அவியாத தீபத்தை, பொற்சபையில் நடிப்பவனை, ஸ்ரீ பஞ்சாட்சரத்தைக் கொண்டு நீ செபிக்காமல் செபித்தால் பிறவாமைக்குக் காரணமாகிய முத்தி யுண்டாகும்; (எ - று.)

(வி - ரை) மனம் ஒருவழி நில்லாது பல வழியிற் சென்று இளைக்குமாதலின் அதனை நோக்கி யொருவழி நிற்கவேண்டு மென்பார், 'தவியாதிரு நெஞ்சமே' எனவும்; ஆன்மாக்க ளுய்யவும், பஞ்சகிருத்திய நடனஞ் செய்யவும் தில்லையின்கண் எழுந்தருளி யிருப்போனாதலின், 'தில்லை மேவிய சங்கரனை' எனவும்; உலக மெங்கு நிறைந்திருப்போனும், ஞானமே திருமேனியாக வுடைய வனுமாதலின், 'புவியார்ந்திருக்கின்ற ஞானகரனை' எனவும்; தேவர்களைக் காக்கும்பொருட்டுத் திரிபுரத்தை யெரித்தோனாதலின், 'புராந்தகனை' எனவும்; அகத்திற் கொளுத்துந் தகளி நெய் திரியோடு கூடிய விளக்குப்போலாது உலகுக்கோர் தூண்டாவிளக்கா யுள்ளானாதலின், 'அவியா விளக்கை' எனவும்; திருநடனஞ் செய்தற்குப் பொன்னம்பலமே யிடமாகக் கொண்டுள்ளா னென்பார், 'பொன்னம்பலத்தாடியை' எனவும், நியம முதலிய யோகங்களைச் செய்யாது ஸ்ரீ பஞ்சாட்சரத்தை யிடைவிடாமற் செபித்தலே முத்தியைத் தரும் என்பார், 'ஐந்தெழுத்தாற், செவித்தாற் பிறவாமுத்தி சித்திக்குமே' எனவும் கூறினர். மனம் ஒருவழி நில்லாதென்பதனை,

"சாடுங் கரையு மனக்குரங்கு கால்விட் டோட வதன்பிறகே
யோடுந் தொழிலாற் பயனுளதோ?"

என்பதனு லுணர்க. சிவபெருமா னுலகமெங்கு நிறைந்திருத்தலை,

"வானுதி பூதமா யகிலாண்ட கோடியாய் மலையாகி வளைகடலுமாய்
மதியாகி யிரவியாய் மற்றுள வெலாமாகி"

என்பதனு லுணர்க.

பொன்னம்பலத்தில் நடிப்பவராகிய சிவபெருமானை ஸ்ரீ பஞ் சாட்சரத்தால் இடைவிடாமல் செபித்தால் முத்தி யடையலாம் என்பதாம். 17.

நாலின் மறைப்பொரு ளம்பல வாணரை நம்பியவர்
பாலி லொருதரஞ் சேவிக்கொ ணாதிருப் பார்க்கருங்கல்
மேலி லெடுத்தவர் கைவிலங் கைத்தைப்பர்; மீண்டுமொரு
காலி னிறுத்துவர்; கிட்டியுந் தாம்வந்து கட்டுவரே.

(பொ - ரை) நான்கு வேதங்களின் பொருளாயுள்ள அம்பல வாணரை யுறுதியாக எண்ணி, அவர் பக்கத்தில் ஒருதடவைத் தரிசிக்கப் பெருதவர்களை (யமபடர்) கருங்கல்லினை (உடல்) மீதில் ஏற்றி அவர் கையில் விலங்கைப் பூட்டுவர்; மீளவும், ஒருகாலாலே நிற்கச்செய்வர், தாம் நெருங்கியும் வந்து கட்டுவர்; (எ - று.)

(வி - ரை)

"அரியானை யந்தணர்தஞ் சிந்தையானை
யருமறையி னகத்தானை."

என்றபடி வேதப்பொருளாயிருப்பினும் அடியவர்கள் எளிதிற் றரிசித்து உய்யும்படி அம்பலத்தின்கண் எழுந்தருளியிருக்கின்ருர் என்பார், 'நாலின் மறைப்பொரு ளம்பல வாணரை' எனவும்; செல்வழி யாதொரு துன்பமு மடையாது எளிதிற் சென்று தரிசிக்கும் மன்றினைத் தரிசித்தால் முத்திபேற்றினை யடையலா மென்பதனைக் கருதாதார்க்கு யமதண்டனை யன்றி வேறில்லை யென்பார், 'நம்பியவர், பாலி லொருதரஞ் சேவிக்கொ ணாதிருப் பார்க்கருங்கல் மேலி லெடுத்தவர்...வந்து கட்டுவரே' எனவும் கூறினுர். தம்மைத் தரிசித்த தொண்டர்கட்கு யமதண்டனை நேரிடா தென்பதனை,

"மடித்தாடு மடிமைக்க ணன்றியே
மனமே! நீ வாழுநாளுந்
தடுத்தாட்டித் தருமனார் தமர்செக்கி
லிடும்போது தடுத்தாட்கொள்வான்
தடுத்தாடுங் கரதலத்திற் றமரகமு
மெரியகலுங் கரியபாம்பும்
பிடித்தாடிப் புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
பெருமானைப் பெற்றாமன்றே."

எனவும்,

"கருமையார் தருமனார் தமர் நம்மைக்
கட்டியகட் டலுப்பிப்பானை."

எனவும், பெரியோரும் பணித்தவற்றா லுணர்க.

அம்பலவாணரைச் சேவிக்காதிருப்பாரை யமபடர் விலங்கு பூட்டுதல், ஒருகாலில் நிறுத்துதல் முதலிய கொடிய செய்கைகளைச் செய்வார் என்பதாம். 18

ஆற்றோடு தும்பை யணிந்தாடு மம்பல வாணர்தமைப்
போற்றா தவர்க்கடை யாளமுண் டேயிந்தப் பூதலத்திற்
சோற்றாவி யற்றுச், சுகமற்றுச், சுற்றத் துணியுமற்றே,
ஏற்றாலும் பிச்சை கிடையாம லேக்கற் றிருப்பர்களே.

(பொ - ரை) கங்கை நதியோடு தும்பை மலரையுந் தரித்து நிருத்தஞ் செய்கின்ற அம்பலவாணரைத் துதியாதவர்க்கு அடையாள முளது; (யாதெனில்) இப்பூமியில் சோற்று வாசனை யொழிந்து, சுகமொழிந்து, (அரையில்) உடுக்க ஆடையுமொழிந்து, யாசித்தாலும் பிச்சை யகப்படாமல் ஏக்க மடைந்திருப்பார்கள்; (எ - று.)

(வி - ரை) ஒருகாலத்துக் கைலைமலையின் சோலையில் உமாதேவி யார் சிவபெருமானது இரண்டு கண்களையும் மூடினமாத்திரத்தில் புவனம் யாவும் இருள் பரந்தது. அதனைக் கண்டு சிவபெருமான் தமது நெற்றிக்கண்ணாலே அவ்விருளையொழித்துச் சிறந்த பேரொளி யை யீந்தனர். அவ்வொளியைக் கண்ணுற்ற உமாதேவியா ரச்ச மெய்தி மூடிய கையை விரைவாக எடுத்தமாத்திரத்தில் அவ்விரல்களி னின்றும் பத்து நதிகளாய்த் தோன்றிய வெள்ளம் உலகமழியப் பரவலும், அவ்வெள்ளத்தைக் கண்ணுற்ற திருமால் முதலியோர் சிவபெருமானைச் சரணமடைய, அப்பெருமான் அவர்களைக் காக்கும் பொருட்டு அவ்வெள்ளத்தையும்,

"செங்களத்து மறங்கருதிப், பைந்தும்பை தலைமலைந்தன்று" என்றபடி, திரிபுரமழிக்கவும், காலனை யுதைக்கவும், வில்விசையனோடு போர்புரியவும், தும்பைமாலையினையும் தரித்தமையால், ஆற்றோடு தும்பை யணிந்தாடு மம்பலவாணர்' எனவும்; அவரைத் துதியாதார் ஆகூழிருந்தும் உணவாதிகளற்றிருப்பார் என்பார், தம்மைப்போற்றா தவர்.........எக்கற் றிருப்பர்களே' எனவும் கூறினர்.

கங்கை யணிந்ததை:—

"என்றலு நதிக டோற்ற மியம்பியெவ் வுலகுஞ் சூழ்போய்
நின்றவந் நீத்தந் தன்னை நினைத்தவ ணழைத்து நாத
னென்றுதன் வேணி மேலோ ருரோமத்தி னும்ப ருய்ப்ப
மன்றலங் கமலத் தோனு மாலுமிந் திரனுஞ் சொல்வார்."

என்பதனு லறிக. போர்க்குரியோர் தும்பை சூடுவதை,

"கார்கருதி நின்றதிருங் களவைவழுப் பணையான்
சோர்குருதி சூழநில னனைப்பப் போர்கருதித்

துப்புடைத் தும்பை மலைந்தான் துகளறுசீர்
வெப்புடைத் தானையெம் வேந்து.''

என்பதனு லறிக.

அம்பலவாணரைத் துதியாதார், சோறும்சுகமும் உடுக்க ஆடையு மற்று வாழ்வார் என்பதாம்.

19

அத்தனை, முப்பத்து முக்கோடி தேவர்க் கதிபதியை,
நித்தனை, அம்மை சிவகாம சுந்தரி நேசனை,யெங்
கத்தனைப், பொன்னம் பலத்தாடு மையனைக், காணக்கண்க
ளெத்தனை கோடி யுகமோ தவஞ்செய் திருக்கின்றனவே.

(போ - ரை) யாவர்க்கும் தந்தையை, முப்பத்து முக்கோடி தேவர்களுக்கும் அதிபதியாயுள்ளவனை, சாசுவதனை, எமது தாயாகிய சிவகாமசுந்தரிக்கு நேசனை, எமது கர்த்தனை, பொற்சபையின்கண் நிருத்தஞ் செய்கின்ற தலைவனைத் தரிசிக்கும்பொருட்டு விழிகள் எவ்வளவு கோடியுகங்களோ தவத்தைச் செய்திருக்கின்றன; (எ-று.)

(வி - ரை) திருமால் முதலிய யாவரையும் பெற்று அவர்க்குப் பிதாவாயிருத்தலின் 'அத்தனை' எனவும்; தன்னை முப்பத்துமுக்கோடி தேவர்கள் வழிபட்டு உய்ந்தமையின், 'முப்பத்து முக்கோடி தேவர்க் கதிபதியை' எனவும்; சர்வசங்கார காலத்தில் யாவரும் அழிந்துந் தான்மாத்திரம் யழியாது நிற்றலால், 'நித்தனை' எனவும்; தன்னை நீங்காதிருந்து சராசரங்களைப் பெற்றுத் தன் நடனத்தைக் கண்டு களிப்பவளாதலின், 'அம்மை சிவகாம சுந்தரி நேசனை' எனவும்; திருமால் முதலியோரை யாட்கொண்டதுபோலத் தன்னையும்ஆட்கொண்டமையின், 'எம் கத்தனை' எனவும்; வெள்ளியம்பலமுதலிய அம்பலமிருப்பினும் அவற்றை விரும்பாது இதனையே விரும்பி யாடுகின்றார் என்பார்; 'பொன்னம்பலத்தாடு மையனை' எனவும்; கண்கள்

அந் நடத்தைக் காண முன் தவஞ்செய்திருக்கின்றமையின், 'காணக் கண்களெத்தனை கோடி யுகமோ தவஞ்செய்கின்றனவே' எனவும் கூறினர்.

பொன்னம்பலத்தில் நிருத்தஞ் செய்யும் நடேசப் பெருமானைத் தரிசிக்க கண்கள் எத்தனை கோடி யுகமோ தவஞ்செய்திருக்கின்றன என்பதாம். 20

## திருச்செங்காடு

நெருப்பான மேனியர் செங்காட்டி லாத்தி நிழலருகே
யிருப்பார் திருவுள மெப்படி யோவின்ன மென்னையன்னைக்
கருப்பா சயக்குழிக் கேதள்ளு மோகண்ணன் காணரிய
திருப்பாத மேதரு மோதெரி யாது சிவன்செயலே.

(பொ - ரை) தீப்போலுந் திருமேனியுடையவர், திருச்செங்காட்டில் ஆத்திமரத்தி னிழலில் வீற்றிருப்பவர், (அவரது) திருவுளப் பாங்கு எவ்வாறுளதோ? இன்னமும் அடியேனைத் தாயினது கருப்பா சயக் குழியின்கண்ணே கொண்டுபோய் வீழ்த்துமோ? (அல்லது) திருமால் காணுதற்கரிய தன் திருவடிகளைக் கொடுக்குமோ? சிவபெருமானது செய்கை இன்னதென்று தெரியாது; (எ - று.)

(வி - ரை) சிவபெருமான் பவளம்போலுஞ் செந்நிறம் வாய்ந்த திருமேனி யுடையவராதலின், 'நெருப்பான மேனியர்' எனவும்; அவர் திருச்செங்காட்டில் ஆத்திவிருட்சத்தையே யிடமாகக்கொண்டிருப்போராதலின், 'செங்காட்டிலாத்தி நிழலருகே, யிருப்பார்' எனவும்; தம்மிடத்து அன்பு செய்வாருடைய மனத்திற்குத் தக்கபடி தாமும் மனமுடைமையின், 'திருவுளமெப்படியோ' எனவும்; பல்பிறவி யெடுத்துப் பையு ளடைந்துள்ளேனை மீட்டுங் கருப்பக்குழியிற்

றள்ளுமோ, அல்லது திருமால் முதலியோர் காண்டற்கரிய திருவடி தந்து ஆட்கொள்ளுமோ அவற்றுள் சிவன் செயல் யாதென்று தேற கிலேன் என்பார், 'இன்னமென்னையன்னை...தெரியாது சிவன் செயலே' எனவும் கூறினர்.

தீப்போலுந் திருமேனி யுடையவரும், திருச்செங்காட்டில் ஆத்திமரத்தி னிழலில் வீற்றிருப்பவருமாகிய சிவபெருமானது திருவுளப்பாங்கு எவ்வாறுளதோ? இன்னமும் அடியேனைத் தாயினது கருப்பாசயக் குழியின்கண்ணே கொண்டுபோய் வீழ்த்துமோ? அல்லது, திருமால் காணுதற் கருமையாகிய தன் திருவடிகளைக் கொடுக்குமோ? (ஆதலால்), அவரது செயல் இன்னதென்று தெரியாது என்பதாம். 1

## திருவொற்றியூர்



ஐயுந் தொடர்ந்து, விழியுஞ் செருகி, யறிவழிந்து, [யான்
மெய்யும்பொய் யாகி விடுகின்ற போதொன்று வேண்டுவல்
செய்யுந் திருவொற்றி யூருடை யீர்! திரு நீறுமிட்டுக்
கையுந் தொழப்பண்ணி யைந்தெழுத் தோதவுங் கற்பியுமே.

(பொ - ரை) கோழையும் தொடர்ந்து,கண்களும் பஞ்சடைந்து, உணர்வு கெட்டு, சரீரமும் பொய்யாகிவிடுங் காலத்து, அடியேன் ஒன்றை விரும்புகின்றேன்; (யாதெனில்), (அலங்காரங்கள்)' செய் தமைந்த திருவொற்றி யூருடையீரே! விபூதியினையும் தரித்து, கைகளால் அஞ்சலிசெய்யவும் செய்து, ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை யுச்சரிக்கவும் கற்பித்தருள்வீராக! (எ - று.)

(வி - ரை) மரணகாலத்தில் வாத பித்த சிலேத்தும மென்னு மூன்றும் ஒன்றினின்று மொன்று அதிகரித்து முடிவில் சிலேத்தும

சம்பந்தமாகிய கோழையொன்றே பற்றி நிற்குமாதலின், 'ஐயுந் தொடர்ந்து' எனவும்; இறக்குஞ் சமயத்துக் கண்கள் ஒளி மழுங்கிக் கருமணிப்பாவை யுடைந்து செருகுமாதலின், 'விழியுஞ் செருகி' எனவும்; அக்காலத்தில் மெய்யுணர்வு அழியுமாதலின், 'அறிவழிந்து' எனவும்; மெய்யெனப் பெயர் வாய்ந்ததற் கேற்ப நிலைபெற்றிராது ஒருகணப்பொழுதிற் றோன்றி யழியுந் தன்மையுடைமையால், 'மெய்யும் பொய்யாகி விடுகின்றபோது' எனவும்; அப்போது யான் விரும்புவது பலவாதலின் அங்ஙனம் விரும்பாது ஒன்றையே விரும்பவேண்டுமென்பார், 'ஒன்றுவேண்டுவல் யான்' எனவும்; முத்திக்கேதுவாகிய திருநீறு பூசுதல், தேவரீரைப் பணிதல், பஞ்சாக்ஷரத்தை யுச்சரித்தல் முதலிய செயல்களைத் தேவரீர் கற்பித்தருள வேண்டுமென்பார், 'செய்யுந் திருவொற்றி யூருடையீர்.........ஐந்தெழுத் தோதவுங் கற்பியுமே' என்றும் கூறினார்.

அலங்காரங்கள் செய்தமைந்த திருவொற்றியூருடையீரே! கோழையுந் தொடர்ந்து, கண்களும் பஞ்சடைந்து, அறிவு கெட்டுத், தேகமும் பொய்யாகி விடுங்காலத்தில் அடியேன் ஒன்றை விரும்புகின்றேன்; யாதெனில், விபூதியினையும் தரித்து, கைகளால் அஞ்சலி செய்யவும் செய்து, ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை யுச்சரிக்கவும் கற்பித்தருள்வீராக! என்பதாம். 1

சுடப்படு வாரறி யார்புர மூன்றையுஞ் சுட்டபிரான்
றிடப்படு மாமதிற் றென்னொற்றி யூரன் றெருப்பரப்பி
னடப்பவர் பொற்பத நந்தலை மேற்பட நன்குருண்டு
கிடப்பது காண்மன மே!விதி யேட்டைக் கிழிப்பதுவே.

(போ - ரை) மனமே! முப்புரங்களையும் எரித்த பெருமானும், உறுதிப்பட்ட பெரிய மதில் சூழ்ந்த தென்னொற்றியூரின்கண்

ணெழுந்தருளினவனுமாகிய சிவபெருமானது வீதிப்பரப்பில் நடப்பவாது திருவடிகள் நமது தலையின்மீது பொருந்தும்படி நன்று யுருண்டு கிடத்தலே பிரமனது எட்டைக் கிழித்தலாகும்; (இதனை) (இறந்து சுற்றத்தாரால்) சுடப்படுவோராகிய அஞ்ஞானிகள் தெரியார்கள்; ( எ- று.)

(வி - ஃர) இறந்து உறவினராலே தூல்தேகத்தைச் சுடப்படுவாராகிய அஞ்ஞானிகளுக்கு உண்மை விளங்காதென்பார், 'சுடப்படுவாரறியார்' எனவும்; பாதலத்தும் பூதலத்தும் மீதலத்துந் திரியும் இரும்பும் வெள்ளியும் பொன்னுமாகிய சாதி வேறுபாடுடைய புரமூன்றையும் ஒருங்கே யழித்துத் தேவர்களைக் காத்தமையின், 'புரமூன்றையுஞ் சுட்டபிரான்' எனவும்; பகைவரை யழிக்கப் புகுவார் முன்னர் மதிலினை வகுத்து அதன்க ணழிந்தே அப்பகைவரை வெல்லுத லியல்பாதலின், 'திடப்படு மாமதிற் றென்னொற்றி யூரன்' எனவும்; பிறவியை யொழித்துக் கொள்வதோ ருபாயந்தேடாமலே திருவொற்றியூரின்கண் நடப்பவாது பாதம் நந்தலையிற்படின் எளிதிற் பிறவியை யொழித்துக்கொள்ளலா மென்பார், 'தெருப்பரப்பில் நடப்பவர்.........விதியேட்டைக் கிழிப்பதுவே' எனவும் கூறினர். தென் ஒற்றியூர் - அழகிய ஒற்றியூர் அல்லது, தெற்குத் திக்கின் கண்ணுள்ள ஒற்றியூர். விதி-பிரமன். பொற்பாதம்-அழகிய பாதம் எனவும், பொன் போலும் அருமையான பாதம் எனவுமாம். காண்-அசை.

திருவொற்றியூர்த் தெருவில் நடப்பவாது பொன்னடிகள் நமது தலைமேற் படின் பிரம னெழுத்தை அழிக்கலா மென்க.

மனமே! முப்புரங்களையும் எரித்த பெருமானும், உறுதிப்பட்ட பெரிய மதில் சூழ்ந்த அழகிய ஒற்றியூரின்கண் ணெழுந்தருளினவனுமாகிய சிவபெருமானது வீதிப்பரப்பில் நடப்பவாது திருவடிகள் நமது தலையின்மீது பொருந்தும்படி நன்று யுருண்டு

கிடத்தலே பிரமனது எட்டைக் கிழித்தலாகும். இதனை இறந்து சுற்றத்தாரால் சுடப்படுவோராகிய அஞ்ஞானிகள் தெரியார்கள் என்பதாம். 2

## திருவிடைமருதூர்



காடே திரிந்தென்ன? காற்றே புசித்தென்ன? கந்தைசுற்றி
யோடே யெடுத்தென்ன? உள்ளன்பி லாதவ ரோங்குவிண்
நாடே யிடைமரு தீசர்க்கு மெய்யன்பர் நாரியர்பால்[ணோர்
வீடே யிருப்பினு மெய்ஞ்ஞான வீட்டின்ப மேவுவரே.

(போ - ரை) மனத்தின்கண் அன்பில்லாதவர்கள், காட்டிலே திரிந்தால் யாது பயன்? வாயு பக்ஷணஞ் செய்தால் யாது பயன்? கந்தைத் துணியை யரையிற் சுற்றி ஓட்டையே கையிலேந்தினல் யாது பயன்? உயர்ந்த தேவ ருலகத்தை நிகர்த்த திருவிடைமருதூர்ச் சிவபெருமானுக்கு உண்மை யன்பராயினோர், மாதரிடத்து இல் வாழ்க்கைக்கண்ணே யிருந்தாலும், மெய்ஞ்ஞானத்தால் அடைதற் குரிய மோக்ஷசுகத்தைப் பொருந்துவார்கள்; (எ - று.)

(வி - ரை) திருவிடைமருதூரின்கண் எழுந்தருளிய சிவபெருமானைக் குறித்து உள்ளன்பில்லாதவர், வனத்திற் சென்று நீரின் முழுகினும், பஞ்சாக்கினி மத்தியிற் றவஞ் செய்யினும், வாயுவினையே உணவாகக் கொண்டு புசிக்கினும், மரவுரி முதலியவற்றை நீக்கிக் கந்தைத்துணியை யரையிற் றரிக்கினும், கமண்டல முதலியவற்றை யொழித்து மட்பாத்திரத்தையே கையிலெடுக்கினும் யாதொரு பயனுமில்லை யென்பார், 'காடே திரிந்தென்ன......... உள்ளன்பில்லாதவர்' எனவும்; மருதீசரிடத்து உண்மை யன்புடையவர் பெண்களோடு கூடிச் சிற்றின்ப நுகரினும் மறுமையில் இரு

ளிற் புகாது நிரதிசயானந்தத்தையே யடையவர் என்பார், 'இடைமரு தீசர்க்கு மெய்யன்பர்...........வீட்டின்ப மேவுவரே' எனவும் கூறி னார். இதனை,

"உள்ளே ரிருந்துந்தம் முள்ளமறப் பெற்றாரேற்
கள்ளவிழ் சோலையாங் காட்டுளார்—காட்டுள்ளும்
உள்ள மறப்பெறு கல்லாரே! நாட்டுள்ளும்
நண்ணி நடுவூரு ளார்."

என் வருஞ் செய்யுளா லுணர்க.

மனத்தின்கண் அன்பில்லாதவர்கள் காட்டிலே திரிந்தால் என்ன பிரயோசனம்? கந்தைத்துணியை யரையிற் சுற்றி யோட்டையே கையிலேந்தினல் என்ன பிரயோசனம்? உயர்ந்த தேவருலகத்தை நிகர்த்த திருவிடைமருதூர்ச் சிவபெருமானுக்கு மெய்யன்பரா யினோர், மாதரிடத்து இல்வாழ்க்கைக்கண்ணே யிருந்தாலும், மெய்ஞ்ஞானத்தா லடைதற்குரிய மோக்ஷசுகத்தைப் பொருந்துவார்கள் என்பதாம். 1

தாயும் பகை;கொண்ட பெண்டீர் பெரும்பகை; தன்னுடைய
சேயும் பகை,யுற வோரும் பகை;யிச் செகமும்பகை;
ஆயும் பொழுதி லருஞ்செல்வ நீங்கிலிங் காதலினாற்,
றோயுநெஞ் சே!மரு தீசர்பொற் பாதஞ் சுதந்திரமே.

(பொ - ரை) என்னோடு ஒற்றுமையாகப் பொருந்திய மனமே! இவ்வுலகத்தில் அருமையாகிய செல்வம் நீங்கிவிட்டால், பெற்ற தாயும் பகையாவள்; கொண்ட மனைவியரும் பெரும்பகைவராவர்; தன்னுடைய பிள்ளையும்பகையாவன்; சுற்றத்தாரும் பகையாவர்; இவ்வுலகமும் பகையாகும்; ஆதலால், மருதீசரது பொன்னடிகளே நமக்குச் சுதந்திரப் பொருள் ஆகும். (எ - று.)

(வி - ரை)

"இல்லாரை யெல்லாரு மெள்ளுவர்; செல்வரை
யெல்லாருஞ் செய்வர் சிறப்பு."

என்றபடி எல்லார்க்கும் எஞ்ஞான்றும் இன்றியமையாததாய அரும் பொருளைப் பெறுதானைப் பத்துத்திங்கட் சுமந்து பெற்ற தாயும் இவனால் தனக்கு யாதொரு பயனு மின்மையின் இகழுமாதலின், 'தாயும்பகை' எனவும்;

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை."

என்றபடி, கற்புடையவளாயினும் நாயகன் செல்வமுடையவ னல்லனாயின், நுகரவேண்டுவனவற்றை நுகருதற் கியலாமையா லவன் பால் ஒரு கணப்பொழுதாயினும் பகைகொள்ளு மாதலின், 'கொண்ட பெண்டிரும் பகை' எனவும்;

"தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
முந்தி யிருப்பச் செயல்."

என்றபடி, தன் தந்தை தன்னை யின்பத்தையே பயக்கும் கல்வி யுடையவனாகச் செய்யினும் அந் நன்றியைக் கருதாது, அவன் துன்பம் பயக்கும் பொருளிலனாயின் அவனிடத்துப் பகைகொள்வன் என்பார், 'தன்னுடைய சேயும் பகை' எனவும்;

"இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை யியல்பாகச்
செப்பமு நாணு மொருங்கு."

என்றபடி, எக்காலத்துந் திரிபில்லாத குடியிற் பிறந்தானுக்குத் தாய் மரபும் தந்தைமரபும் யாதொரு பழியிலவாயினும், பொருளிலனேல் அவன்மீது உறவினர் பழியேற்றுப் பகை கொள்வராதலான், 'உற வோரும் பகை' எனவும்;

"பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள்."

என்றபடி, அறிவுடையாரும் உயர்குலத்தாரும் பொருளிலராயின், அவரை அறிவிலாதாராயும் இழிகுலத்தாராயும் மதிக்கப்பட்டு, அவரிடத்து நட்புக்கொள்ளாது பகைகொள்வராதலின், 'இச்செகமும் பகை, யாயுங் பொழுதி லருஞ்செல்வ நீங்கி லிங்கு' எனவும்; மருதீசரது திருவடியே யன்றி மற்றையொன்றும் சுதந்தர மாகாதென்பார், 'ஆதலினல் தோயுநெஞ்சே.........சுதந்திரமே' எனவும் கூறினர்.

என்னேடு ஒற்றுமையாகப் பொருந்திய மனமே! இவ்வுலகத்தில் அருமையாகிய செல்வம் நீங்கிவிட்டால் பெற்ற தாயும் பகையாவள்; கொண்ட மனைவியரும் பெரும்பகைவராவர்; தன்னுடைய புதல்வனும் பகையாவன்; சுற்றத்தாரும் பகையாவர்; இவ்வுலகமும் பகையாகும். ஆகையால், மருதீசரது பொன்னடிகளே நமக்குச் சுதந்திரப் பொருள் ஆகும் என்பதாம்.

வறுமை வந்தகாலத்து, தாய்முதலிய எல்லோரும் பகையாவர்; ஆதலின், மருதீசர் பொன்னடி யொன்றே நமக்கு அழியாப்பொருளாய்ப் பற்றுதற்குரியது என்க. 2

## திருக்கழுக்குன்றம்

காடோ? செடியோ? கடற்புற மோ?கன மேமிகுந்த
நாடோ? நகரோ? நகர்நடு வோ?நல மேமிகுந்த
வீடோ? புறந்திண்ணை யோ?தமி யேனுடல் வீழுமிடம்;
நீடோய் கழுக்குன்றி லீசா! உயிர்த்துணை நின்பதமே.

(பொ - ரை) நீட்சி பொருந்திய திருக்கழுக்குன்றின்கண் எழுந்தருளிய கடவுளே! தமியேனுடைய சரீரம் விழுகின்ற

இடம், காட்டிடமோ? மரத்தடியோ? சமுத்திரக்கரையோ? சிறப்புப் பொருந்திய தேசமோ? ஊர்தானோ? ஊரினடுவிடமோ? நன்மை மிகுந்த வீடோ? வெளித்திண்ணையோ? (யான் அறியேன் ஆதலால்) தேவரீருடைய திருவடிகளே உயிர்க்குத் துணையாம்; (எ - று.)

(வி - ரை)

"படுமழை மொக்குளிற் பல்காலுந் தோன்றிக்
கெடுமிதோர் யாக்கையென் றெண்ணித் தடுமாற்றம்
தீர்ப்பேம்யா மென்றுணருந் திண்ணறி வாளரை
நேர்ப்பார்யார் நீணிலத்தின் மேல்."

எனவும்,

"புன்னுனிமே னீர்போ னிலையாமை யென்றெண்ணி
இன்னினியே செய்க வறவினை-இன்னினியே
நின்றா னிருந்தான் கிடந்தான் றன்கேளலறச்
சென்றா னெனப்படுத லான்."

எனவும் கூறியபடி யாக்கை நிலையாமை யுண்மையின் அவ் யாக்கை யழியுமிடம், இன்னவிடமென்று பகுத்தறிய முடியாமையால் 'காடோ செடியோ......... தமியேனுடல் வீழுமிடம்' எனவும்; உடலழியுங் காலத்துத் தேவரீரது திருவடியன்றி வேறொன்றுந் துணையாகா தென்பார், 'நீடோய் கழுக்குன்றி லீசா வுயிர்த்துணை நின் பதமே' எனவும் கூறினர். இனி விளைவதை யறியேன் என்பதை,

"மலங்கி னேன்கண்ணி னீரைமாற்றி
மலங்கெடுத்த பெருந்துறை
விலங்கி னேன்வினைக் கேடனேனினி
மேல்விளைவ தறிந்திலே
னிலங்கு கின்றநின் சேவடிகளி
ரண்டும் வைப்பிட மின்றியே

கலங்கி னேன்கலங் காமலே வந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே."

என வரும் மணிவாசகப்பிரான் திருவாக்கா னுணர்க.

திருக்கழுக்குன்றத்தில் எழுந்தருளிய ஈசனே! தமியேனது சரீரம் விழுமிடம் காடுதானோ? செடிதானோ? கடற்கரையோ? தேசமோ? நகரமோ? நகரி னடுவிடமோ? வீடோ? வெளித் திண்ணையோ? யானறிகிலேன். ஆதலான், தேவரீரது திருவடிகளே என் னுயிர்த் துணையாம் என்பதாம். 1

## திருக்காளத்தி

பத்தும் புகுந்து பிறந்து வளர்ந்துபட் டாடைசுற்றி,
முத்தும் பவளமும் பூண்டோடி யாடி முடிந்தபின்பு,
செத்துக் கிடக்கும் பிணத்தரு கேயினிச் சாம்பிணங்கள்
கத்தும் கணக்கென்ன? காண்கயி லாபுரிக் காளத்தியே!

(பொ - ரை) தென் கயிலாயமென்னுங் காளத்திக் கடவுளே! தாய் வயிற்றிற் பத்துத் திங்கள் கழிந்து சனித்து விருத்தியாகி, பட்டுவஸ்திரத்தைத் தரித்து, முத்து மாலைகளையும் பவள மாலைகளையும் அணிந்து, ஓடி விளையாடி, ஆயுண் முடிவுபெற்ற பிறகு இறந்து கிடக்கின்ற பிணத்தின் சமீபத்தே இனி யிறக்கும் பிணங்கள் கூச்சலிடும் நியாயம் யாது? (எ - று.)

(வி - ரை)

"உயிர்படு கருவோர் கையிற் குன்றி
யுலுமைந்திற் புற்புத மொக்கும்
பயிலிள வூனுமேழிலீ ரேழிற்
பாந்துசெம் புனறிர ளேனும்

வயமுறு பீச மையைந்திற் சிறிது
வருஞ்சிரங் களுஞ்சிறு புறமே
வியன்முது கென்பென் றுரைத்திடு நான்கும்
விளங்குறு முப்பது நாளில்."

"தாளடி நிதம்பந் தடங்கர மருங்கு
சார்தரு மிருமதி வரையிற்
கோளுறு வடிவிற் சந்திகண் மூன்றிற்
கொழுவிர லுன்கிலம் மதியில்
வாளுகிர் நாசி முகங்குய்யங் கன்னம்
வாலெயிற்று றெழுங் காறி
னீளுறு கன்னத் துளையெழு மதியி
னிகழ்குறி விளங்குறத் தோன்றும்."

"திங்களோ ரெட்டிற் குதமுந்தி யேனைச்
செறிதரு மங்கமா திகளுந்
தங்குறும் பிராணன் முதல்வளி யைந்துந்
தசையுமுந் தியின்வழி யன்னை
நுங்குண விரதம் வயிற்றுறு மின்ப
துன்புமு மனுதியா னுகரு
மங்கண்முன் னிகழ்ச்சி கனவெனத் தோன்ற
வளாவிய மோகம்விட் டகலும்."

"இறப்பொடு பிறப்பிற் பன்முறை யிதுகா
றிடருழந் தனமினிப் பிறந்தாங்
கறப்பெருங் கடவுள் பூசனைப் பேற்று
லவற்றினை யறுத்துமென் றெண்ணிச்
சிறப்புற விருக்கு முயிர் கருப்பையுஞ்
செறிவமுக் குதகமு மற்று

முறப்பெரி தழிந்து மோகன்காக மிளர்ப்ப
வுணர்விழந் தரிதின்மண் சாரும்."

என்றபடி தாய்வயிற்றிற் பத்துத்திங்களிருந்து பின் பிறப்பது இயல்பென்பார், 'பத்தும் புகுந்து பிறந்து' என்றும்; பிறந்த பின்னர் முலையூட்டிச் சீராட்டித் தாராட்டி வளர்ப்பது திண்ணமாதலின், 'வளர்ந்து' என்றும்; ஐந்தாட்டையராய காலத்துப் பட்டாடை முதலியவற்றைத் தரித்துக் கலைபயிலப் பள்ளியிற் புகுந்து, கலைபயின்று பதினாறாட்டையராய காலத்து நன்மணம் புணர்ந்து, இல்வாழ்க்கையை மேற்கொண்டு, புதல்வரைப் பெற்று, முதுமையடைந்து வாழ்நாளைக் கழிப்பாராதலால், 'பட்டாடைசுற்றி............பிணத்தருகே' என்றும், அங்ஙனம் கிடக்கும் பிணத்தருகு இனிச் சாம் பிணங்கள் கத்துதல் அறியாமை என்பார், 'இனிச்சாம்பிணங்கள் கத்துங் கணக்கென்ன காண்' என்றுங் கூறினார்.

தென்கயிலாய மென்னுங் காளத்திக் கடவுளே! தாய் வயிற்றிற் பத்துத் திங்கள் கழிந்து பிறந்து விருத்தியாகிப், பட்டு வஸ்திரத்தைத் தரித்து முத்து மாலைகளையும் பவள மாலைகளையும் அணிந்து, ஓடி விளையாடி, ஆயுண் முடிவுபெற்ற பிறகு இறந்து கிடக்கும் பிணத்தருகே இனிச் சாம்பிணங்கள் கூச்சலிடும் நியாயம்யாது? என்பதாம். 1

பொன்னாற் பிரயோசனம் பொன்படைத்தாற் குண்டு
பொன்படைத்தோன், றன்னாற் பிரயோசனம் பொன்னுக்
கங் கேதுண்டத் தன்மையைப்போ, லுன்னாற்பிர யோச
னம் வேணதெல் லாமுண் டுனைப்பணியு, மென்னாற்பிர
யோசன மேதுண்டு? காளத்தி யீச்சுரனே!

(போ - ரை.) காளத்திக் கடவுளே! பொன்னாலாவதோர் பயன் பொன்பெற்றவனுக் குண்டு; பொன் பெற்றவனால் அப்பொன்னுக் காவதோர் பயன் அவ்விடத்தே யாதுண்டு? அத்தன்மைபோல உன்னா லாவதாம் பயன் எனக்கு வேண்டிய தெல்லாமுண்டு; உன்னை வணங்குகின்ற என்னாற் பயன் யாது உனக்குண்டு? (எ - று.)

(வி - ரை) பொன்னானது தன்னை யடைந்தவனுக்குப் பயன் படுமேயன்றி யவனா லதற்கொரு பயனு மில்லாவாறுபோல, திருக் காளத்தி யீசரே! தேவரீரா லடியேனுக்கு எல்லா நற்பயனு முண் டாகின்றனவேயன்றித் தேவரீருக்கு அடியேனா லொரு பயனு மில்லை யென்றார். மக்கள் விழைந்து கொண்டுள்ளது பொன்னா தலி லதனை நன்கு தெரிந்துகொள்ளக் கருதிப் பொன்னை யுவமை கூறினா ரென்க. அடிகள் எல்லாரு மெளிதி லுணருமாறு எளிய நடையில் யாப்பமைத்தாங்கு உவமையையும் விளக்கமாக வுரைத்தார்.

வாளான் மகவரிந் தூட்டவல் லேனல்லன்; மாதுசொன்ன
சூளா லிளமை துறக்கவல் லேனல்லன்; தொண்டுசெய்து
நாளாறிற் கண்ணிடந் தப்பவல் லேனல்ல, னானினிச்சென்
றாளாவ தெப்படி யோ? திருக் காளத்தி யப்பனுக்கே.

(போ - ரை) வாட்படையினால் இளங் குழந்தையை அறுத்து ஸ்ரீகாளத்தீசருக்கு நிவேதனமாக அளிக்க ஆற்றலுடையவனல் லேன்; மனைவி உரைத்த சபத மொழியால் யௌவனசுகத்தை விட்டுவிடுவதற்குச் சாமர்த்திய முடையவனல்லேன்; ஊழியங்களைச் செய்யாநின்று, ஆறாவது தினத்தில் நயனத்தைத் தோண்டி இறை வன் திருக்கண்ணில் அழுத்தத் துணிவுடையனல்லேன், இத்தகைய

அடியேன் இனிப்போய் (காளத்தியப்பருக்கு) அடியவனாக ஆவது எவ்வாறோ? அறிகின்றேனில்லை. (எ - று.)

(வி - ரை) சீராளதேவரை யையாட்டச் சிறுவனென விளக்க 'மகவு' என்றார். 'திருநீலகண்டம்' என்னுந் திருமந்திரம் இறையவனாணையாதலிலதனைச் 'சூள்' என்றனர். பன்றிமுதலிய விலங்குகளினூன்களையும் நிவேதனமாகவும், வாய்நீரைத் திருமஞ்சனமாகவும், தங்குடுமையிற் றரித்த பூவினைச் சாத்தும் பூவாகவும், தம் வாயுனின்று மன்பு ததும்பிப் போதரும் சொற்களைத் துதியாகவுங் கொண்டு ஐந்திரவு கண்ணுறங்காது நின்றதே இறைவர்க்குக் காவலாகவும் நிலையுறச் செய்தவைகளை விளக்குவான் 'தொண்டு' என்றார்.

இப்பாசுரத்தில் முறையே: சிறுத்தொண்ட நாயனார், திருநீலகண்ட நாயனார், கண்ணப்பநாயனார் ஆகிய மூவர்களின் அரிய செயல்களை விலக்கி இருத்தல் காண்க. 3

முப்போது மன்னம் புசிக்கவுந், தூங்கவு, மோகத்தினாற்
செப்போ திளமுலை யாருடன் சேரவுஞ், சீவன்விடு
மப்போது கண்கலக் கப்பட வும்மைத் தாயையனே!
எப்போது காணவல் லேன்? திருக் காளத்தி யீச்சுரனே!

(போ - ரை) (காலை, உச்சி, இரவு என்னும்) மூன்று காலத்திலும் சோற்றை உண்ணவும், நித்திரை செய்யவும், காம மயக்கத்தால் செப்பினை இணை கூறுகின்ற இளமைவாய்ந்த தனங்களையுடைய மாதர்களுடன் புணரவும், உயிர் நீங்குகின்ற அந்தச் சமயத்தில் துன்பப்படவும் வகுத்தனை; அனைவர்க்குந் தலைவனே! திருக்காளத்தி யீசரே! எந்தக்காலத்தில் தேவரீர் திருவடிகளைத் தெரிசிக்கத் தக்கவனாவேன்? (எ - று.)

(வி - ரை) முக்காலத்தினும் உண்ணுதலிலும், இராக்காலத்தில் மாதர் போகத்துடன் தூங்குவதனிலும் காலம் வாளா கழிதற்கிரங்கி 'எப்போது காணவல்லேன்?' என்றனர். 4

இரைக்கே யிரவும் பகலுந் திரிந்திங் கிளைத்துமின்னு
ரரைக்கே யவலக் குழிபரு கேயசும் பார்ந்தொழுகும்
புரைக்கே யுழலுந் தமியேனை யாண்டருள்! பொன்முகலிக்
கரைக்கேகல் லால நிழற்கீ ழமர்ந்தருள் காளத்தியே!

(போ - ரை) சொன்னமுகியென்னும் பெயரமைந்த யாற்றின் கரையில், வடவிருட்சத்தின் நிழலில் எழுந்தருளியிருக்கின்ற திருக்காளத்திநாதரே! உணவிற்கே அகோராத்திரம் சுற்றி, இவ்வுலகின் மெலிந்து மாதரின் கடிதடப்பிரதேசத்தில் அக்கரூபமான பள்ளமாய், வழுவழுப்பு நீர் பொருந்தி கசிகின்ற துவாரத்திற்கே சுற்றுகின்ற அடியேனை ஆட்கொண் டருளவேண்டுகின்றேன். (எ - று.)

(வி - ரை) இரவும் பகலும் உணவிற்கும் போகத்திற்கும் அலைந்து திரிவேனைத் தேவரீரே தேக போக மோகங்களை நீக்கி யுண்மைஞானந் தந்தாளவேண்டுமெனவும், தானாகப் பந்த நிவர்த்தி யடையவியலாதெனவும், "அவனருளாலே யவன்றாள் வணங்கி" என்னுஞ் சுருதிவசன வுட்கோளுடையராய்த் 'தமியேனை யாண்டருள்' என்றும்; 'கல்லாலநிழற்கீழமர்ந்தருள் காளத்தியே!' எனவும் அருளிச் செய்தனரென்க. 5

நாறுங் குருதிச் சலதாரை, தோற்புரை, நாடோறுஞ்சீ
யூறு மலக்குழி, காமத்து வார, மொளித்திடும்புண்,
தேறுந் தசைப்பிளப் பந்தரங் கத்துள சிற்றின்பம்விட்
டேறும் பதந்தரு வாய்திருக் காளத்தி யீச்சுரனே!

(பொ - ரை) திருக்காளத்தி யீசரெனத் திருநாமந் தாங்கி விளங்கும் ஆண்டவரே! துர்மணம் வீசுகின்ற இரத்தம் வடிகின்ற தூம்பு, தோலா லமைந்த புண் குழி, பிரதிதினமும் சீழ் ததும்பும் புலமை நிறைந்த பள்ளம், இச்சாரந்திரம், மறைத்து வைக்கின்ற இர்ணம், காமிகளா லிவ்விடமேயெனத் துணியப்படுகின்ற ஊனின் கீறல், வேறு கூறிய இரகசிய விடத்திலுள்ள சிறிய இன்பத்தினை நீக்கி,உயர்ந்ததிருவடிநிழலாகியபேரின்பத்தைஅருளுவீராக! (எ - று.)

(வி - ரை) மாதர் அந்தரங்கம் இவ்வளவு இழிவமைந்தனவாயி னும் பழக்கவாதனையானது அவ்விடத்திலேயே இழுத்துச் சேறல் உண்மையெனவும், அதனை வெறுக்கப் புரிவது இறைவனுலன்றிப் பிறரா லாகாதெனவும் விளக்குவதற்கு 'ஏறும் பதந்தருவாய்' என் றனர். 6

## கைலாயம்



கான்சாயும் வெள்ளி மலைக்கர சே!நின் கழனம்பினேன்;
ஊன்சாயுஞ் சென்ம மொழித்திடு வாய்!கர வூர னுக்காய்
மான்சாயச் செங்கை மழுவலஞ் சாய வனைந்தகொன்றைத்
தேன்சாய நல்ல திருமேனி சாய்த்த சிவக்கொழுந்தே!

(பொ - ரை) வாசனை நாற்புறமும் வீசுகின்ற கைலாயத்திற் குத் தலைவரே! இறைச்சி புண்முதலியவாகிக் கசிந்தொழுகின்ற பௌதிகவுடல் தாங்கும் பிறப்பினை நீக்கியருளுவீராக! காவூரனென் பர் நிமித்தம் திருக்கரத்தி லேந்திய மிருகஞ் சாயவும், செவ்விய மற் றொரு திருக்கரத்திலுள்ள பாசு என்னும் ஆயுதம் வலப்புறத்திற் சாய வும், திருமுடியி லணிந்த கொன்றைமலரின் மது ஒழுக அருட்டிரு வுருவை வளைத்த சிவக்கொழுந்தென்னுந் திருநாமத்தோடு விளங்

கும் இறைவரே! தேவரீருடைய ஸ்ரீபாதங்களையே உறுதியாக நம்பியுள்ளேன்; (எ - று.)

(வி - ரை) காவூருக்குத் திருமேனி சாய்த்த தேவரீர் திருவடிகளை நம்பினேன் என்றார். கரனென்னும் இராக்ஷதனால் பூசிக்கப்பட்டதனால் காவூரென்றும், விரிஞ்சனால் பூசிக்கப்பெற்றதனால் திரிவிரிஞ்சீபுரம் என்றும் வழங்குகிற அத்தலத்தி லொரு பிராமணச் சிறுவன் திருமஞ்சனம் செய்கையில், திருமுடி யெட்டாததுபற்றி வருந்தியதைக் கண்டு சிவபெருமான் தமது திருமுடியை வளைத்தருளினார். இச்சரித்திரத்தை திருவிரிஞ்சைத் தலபுராணத்தில் பாலனுக்குத் திருமுடி வளைத்த சருக்கத்தா னுணர்க. 1

இல்லந் துறந்து, பசிவந்த போதங் கிரந்துதின்று
பல்லுங் கறையற்று,வெள்வாயு மா,யொன்றிற் பற்றுமின்றி
சொல்லும் பொருளு மிழந்துசு கானந்தத் தூக்கத்திலே[ச்
யல்லும் பகலு மிருப்பதென் றோ?கயி லாயத்தனே!

(பொ - ரை) மனைவி மக்கள் சுற்றம் பொருளென்னும் இவைகளா லுண்டாகும் பந்தத்திற் கிடமான வீட்டை விட்டுத் துறவறந் தாங்கிப், பசிவந்த காலத்தில் சென்றவிடத்தில் பிச்சை வாங்கிப் புசித்து, தந்தங்களும் தாம்பூல வழுக்கின்றி, வெள்ளிய வாயுமுடையேனாய், முதலிலனுபவித்த விஷயங்களெவற்றினும் ஆசையுமில்லாமல், சொற்களையும், அவைகளின் பொருள்களையும் பயனில்லாதனவெனத் தள்ளி, திருவடியின்பமாகிய துரியநிலையில் இரவும் பகலும் இருப்பது எக்காலமோ? கைலாயபதியே! (எ - று.)

(வி - ரை) துறவறமடைந்து சகல கேவலத் தாக்கற்றுச் சதானந்த நித்திரை எந்நாட் பெறுவேனென்றார். அதாவது, தூங்காமல் தூங்கும் நனவிற் சுழுத்தி யானந்தத்திலிருக்க எக்காலத்தில் வாய்க்குமோ? என்பதாம். 2

சினந்தனை யற்றுப், பிரியமுந் தானற்றுச், செய்கையற்று,
நினைந்தது மற்று, நினையா மையுமற்று, நிற்சிந்தனைய்த்,
தனந்தனி யேயிருந் தானந்த நித்திரை தங்குகின்ற
வனந்தலி லென்றிருப் பேனத்த னே!கயி லாயத்தனே!

(போ - ரை) உமாதேவிக்கு ஒரு புறமளித்த இறைவரே! கைலாயபதியே! கோபத்தை அறவொழித்து, மன மொழி மெய்க ளின் தொழில்களையு மறவொழித்து, எவ்விஷயத்துக்காகவும் எவரி டத்தும் விருப்பமில்லாமையும் உடையேனாகி, யோகபாவனையில் மூர்த்திகளைப் படைத்து நினைந்ததையும் விடுத்து, நினையாதிருக்கின் றோமென்னும் நினைவையும் இல்லாதேனாகி, சிந்தையின்றொழிலற் றேனாகி, தத்துவமெலாங் கழன்று யானொருவனாகி, அருணிலையி லிருந்து, சிவானந்தமாகிய தூக்கம் பொருந்துகின்ற நித்திரையில் எக் காலத்தில் அடியே னிராநிற்பேன்? (எ - று.)

(வி - ரை) இறைவன் அடியார் விரும்பியவைகளை யளிக்குங் கருணையுடையரென்பார் 'அத்தனே' என்றார். நிட்டைகூடவேண் டுவா ரடையவேண்டியவைகளை இதனுள் நன்கு விளக்கியிருத்தல் காண்க. தேகபாவத்தை நீக்கி, சங்கற்பங்களையு மொழித்து, ஞான ஸ்புரிப்புமற்று, சிந்தனா ரகிதனாய் நிலைபெற்று விளங்குகின்ற சகச னந்தத்தில் என்பதாம். 3

கையார வேற்றுநின், றங்ஙனந் தின்று, கரித்துணியைத்
தையா துடுத்து,நின் சந்நிதிக்கே வந்து சந்ததமு
மெய்யார நிற்பணிந், துள்ளே யுரோமம் விதிர்விதிர்ப்ப
வையாவென் றோல மிடுவதென் றோ?கயி லாயத்தனே!

(போ - ரை) கை நிறைய பிறரிடம் பிச்சையை வாங்கி, (இருத் தலின்றி) நின்று, கிடைத்தவண்ணமே புசித்து, பிறருடுத்து

நைந்த பின்னர் குப்பையி லெறியும் அழுக்குக் கந்தையைத் தைக் காமற் றரித்து, அனவரதமும் தேவரீருடைய சன்னிதியையே யடைந்து, உண்மை யன்புடன் தேவரீரை வணங்கு முறையில் வணங்கி, அந்தரங்கத் தியானஞ்செய்து, உரோமங்கள் புளகங் கொள்ள, ஐயனே! என முறையிடுவது எக்காலத்தில். (எ - று.)

(வி - ரை) ஆடையு முணவு முதலிய எவையும் விரும்பாது, நினது திருக்கோயிலையன்றி வேறு இடமில்லாதேனுய்க், கைலாயத் தனே! நின்னைப் பணியும் பேற்றினு முயர்ந்ததொன் றின்மையால் அடியே னதனை எந்நாளடைவே னென்றனர். பகிர்முக நாட்டமின்றி அந்தர்முக நாட்டமென்பார், 'நிற்பணிந்துள்ளே' என்றார். 4

நீறார்த்த மேனி யுரோமஞ் சிலிர்த்,துள நெக்குநெக்குச்
சேறாய்க் கசிந்து கசிந்தே யுருகி, நின்சீரடிக்கே
மாறாத் தியானமுற், றானந்த மேற்கொண்டு, மார்பிற்கண்ணீ
ராறாய்ப் பெருகக் கிடைப்பதென் றோ?கயி லாயத்தனே!

(பொ - ரை) கைலாயபதியே! விபூதியணிந்த உடலிலுள்ள வுரோமங்கள் புளகித்து, உள்ளம் கட்டுவிட்டுக் கட்டுவிட்டுச் சேறு ஆகிக் கசியப்பெற்று நெகிழ, உள்ளம் உருகுத லுற்று, தேவரீருடைய எல்லாச் சிறப்புகளு மமைந்த திருவடிப்போற்றிற்கே நீங்காத் தியானம் பொருந்தி, சந்தோஷம் அதிகரித்து, மார்பினிடத்தில் கண்ணீரானது நதியாகி அதிகரிக்கும் வண்ணம் சமாதியோகத்தி லிருப்பது எந்நாளோ? அறிகிலேன்; (எ - று.)

(வி - ரை) சைவத்துறவி வேடமும், வேடத்துடன் றிருவடித் தியான் மாறாதிருத்தலை யுடையேனுமாகிச் சாத்மீகத்தில் எந்நா ளிருப்பேன்? 5

செல்வரைப் பின்சென்று சங்கடம்பேசித், தினந்தினமும்
பல்லினைக் காட்டிப் பரிதவி யாமற், பரானந்தத்தி
னெல்லையிற் புக்கிட வேகாந்த மாயெனக் காமிடத்தே
யல்லலற் றென்றிருப் பேனத்த னே!கயி லாயத்தனே!

(போ - ரை) செவ்வொளி வாய்ந்த திருமேனியினை யுடைய கைலாயபதியே! சம்பன்னரின் பின்னுற் போய், குறைகளை உரைத்து, நாடோறும் பல்லை யிளித்து வருந்தாமல், சிவானந்தத்தின் முடிவில் பிரவேசிக்கத் தனியாய் அடியேனுக்கு ஆகிய இடதானத்தில் துன்பம் இல்லாதேனுய் எந்நாளி லிருப்பேன்? (எ - று.)

(வி - ரை) பரானந்தத்தின் எல்லையிற் புகுங்காறும் அல்லலும், அவலமும், வறுமையுமாகிய நனி வந்துகொண்டே யிருக்கும்; ஆதலின் இவைகளை வேண்டாமெனவும், திருவடி யின்பமாகிய பரானந்த மொன்றே அடையத்தக்கதெனவும் விளக்கினமை காண்க. எனக்கு ஆம் இடம் என்றது அருணிலையே. 6

மந்திக் குருளையொத் தேனில்லை; நாயேன் வழக்கறிந்துஞ்
சிந்திக்குஞ் சிந்தையை யானென்செய் வே,னெனைத் தீதகற்
புந்திப் பரிவிற் குருளையை யேந்திய பூசையைப்போ [றிப்
லெந்தைக் குரியவன் காணத்த னே!கயி லாயத்தனே!

(போ - ரை) பெண் குரங்கையும், அதன் குட்டியையும் ஒப்பானே னில்லை; அடியேனது தன்மை உணர்ந்தும் விடயங்களை யாராய்ந் தலைகின்ற மனதை அடியே னென்ன செய்வேன்? அடியேனைக் குற்றநீக்கித் திருவுளத்தில் விருப்பத்துடன், குட்டியினை வலியத் தாவுகின்ற பெண் பூனையைப்போல், ஆட்கொள்ள அடியேனது தந்தையாகிய தேவரீருக்கு உரிமையானவன்; அத்தனே!...

(வி - ரை) குரங்குக் குட்டியானது தானே பார்த்திருந்து தாய்க்குரங்கு மரமுதலியவற்றி லேறும்போதும் இறங்கும்போதும் தாயின் வயிற்றினை விரைந்து பற்றிக்கொள்ளும். அவ்வாறு இறைவனை ஆன்மா வலிந்தணையாதென மர்க்கட நியாயத்தைக் கூறி மறுப்பார், 'மந்திக் குருளையொத் தேனில்லை' என்றார். பெண் பூனையானது தானெங்கே யெங்கே போகுமோ அங்கெல்லாம் தன் சிறு குட்டியைக் கௌவிச் செல்லும்; அவ்வாறே இறைவ னுண்டாலன்றி யருணிலை வாராதென்பார் மார்ச்சால நியாயத்தை யுடன்பாடாகக்கொண்டும், 'புந்திப் பரிவிற் குருளையை யேந்திய பூசையைப் போல்' என்றார். 7

வருந்தேன் பிறந்து மிறந்து, மயக்கும் புலன்வழிபோய்ப்
பொருந்தே, னரகிற் புகுகின்றி லேன்,புகழ் வாரிடத்தி
லிருந்தே, னினியவர் கூட்டம்வி டே,னிய லஞ்செழுத்தா
மருந்தே னருந்துவ னின்னரு ளாற்கயி லாயத்தனே!

(பொ - ரை) திருக்கைலமலையி லெழுந்தருளி யிருப்பவனே! தேவரீர் கருணையால் இனி சனித்தும் மரித்தும் துன்புறேன்; சுவையொளி யூறோசை நாற்ற மென்னும் ஐம்புலன் வழியில் சென்று விஷய வியாபாரங்களில் பொருந்தமாட்டேன்; இரௌரவமுதலிய நரகங்களினும் பிரவேசிக்கின்றிலேன்; உன்னையே சதாதுதிப்பவர்களிடத்தில் இருக்கின்றேன்; இனி யவ்வடியவரின் கூட்டத்தை விடேன்; தேவரீ ருருவமாக விளங்குகின்ற ஸ்ரீபஞ்சாட்சரமாகிய அரிய மதுவினை யுண்பேன். (எ - று.)

(வி - ரை) கைலாயபதியே! தேவரீர் திருவருளை யுடையேனாயினே னாதலிற் பிறப்பிறப்பு நரக முதலியவற்றை யடையாது, அடியவர் கூட்ட மடையப்பெற்று, ஸ்ரீபஞ்சாட்சர மென்னும் அருந்தேனை யருந்துவே னென்பதாம். 8

## மதுரை



விடப்படு மோவிப் பிரபஞ்ச வாழ்க்கையை? விட்டுமனந்
திடப்படு மோ?நின் னருளின்றி யேதின மேயலேயக்
கடப்படு மோ? அற்பர் வாயிலிற் சென்றுகண் ணீர்ததும்பிப்
படப்படு மோ?சொக்க நாதா! சவுந்தர பாண்டியனே!

(பொ - ரை) இவ்வுலக வாழ்வை விட்டுவிடக்கூடுமோ? அங்ஙனம் உலகவாழ்வை விடுத்து மனந் துணிவுறுமோ? தேவரீரது அருள் இல்லாமல் தினமும் மலேதற்கு முடியுமோ? இழிஞரின் வாயிலிலே சென்று கண்ணீர் நிரம்பித் துன்புறக்கூடுமோ? சொக்கலிங்கப் பெருமானே! சௌந்தரநாத பாண்டியனே! (எ - று.)

## பொது



உடைகோ வணமுண், டுறங்கப் புறந்திண்ணை யுண்,டுணவிங்
கடைகா யிலேயுண்,டருந்தத்தண் ணீருண்,டருந்துணைக்கே
விடையேறு மீசர் திருநாம முண், டிந்த மேதினியில்
வடகோ டுயர்ந்தென்ன? தென்கோடு சாய்ந்தென்ன? வான்
[பிறைக்கே.

(பொ - ரை.) உடைக்குக் கோவண முளது. உறங்குதற்குப் புறந்திண்ணை யுளது. போசனத்துக்கு இவ்விடத்தில், அடையுங் காயமிலேயும் உளது. குடித்தற்குக் குளிர்ந்த நீருளது. அரிய துணைக்கு இடபத்தி லேறுகின்ற சிவபெருமானுடைய திருப்பெயர்கள் உள்ளன. இந்த உலகத்தில் வானிற்றேன்று மதியத்துக்கு

வடக்குக் கோடு உயர்ந்து விளங்கிறுலென்ன? தெற்குக் கோடு சாய்வுற்று விளங்கிறு லென்ன? (எ - று.)

(வி - ரை) இறைவ னடிமலர்த் தியானமுடைய எனக்கு ஆடையும், படுக்கையும், உணவும், குடிக்க நீரும், துணையும் குறைவறக் கிடந்துள்ளன ஆகலின், இப்பிறையின் கோடு எவ்வாருயி னென்னே என்றனர். 1

வீடு நமக்குத் திருவாலங் காடு; விமலர்தந்த
வோடு நமக்குண்டு; வற்ருத பாத்திரம்; ஓங்குசெல்வ
நாடு நமக்குண்டு கேட்டதெல் லாந்தர; நன்னெஞ்சமே!
ஈடு நமக்குச் சொலவோ வொருவரு மிங்கில்லையே.

(போ - ரை) நல்ல எனது நெஞ்சகமே! திருவாலங்காடென்னுந் தலம் நமக்கு வீடாகும். சிவபெருமான் அளித்த ஓடு நமக்குளது, அது அக்ஷயபாத்திரமாம். செழித்த செல்வங்களையுடைய நாடு நமக்குளது, நாம் கேட்டனவற்றை யெல்லாம் அளித்தற்கு. ஆதலின், நமக்குச் சமானமாக வுரைத்தற்கு இவ்வுலகத்தில் ஒருவருங் கிடையாது. (எ - று.)

(வி - ரை) நாம் இத்தகைய துறவறப் பேற்றினை அடைந்து நிற்றலின் நமக்கு நிகரெவருளர் என்றனர். விமலர்-மலரகிதர். 2

நாடிக்கொண் டீசரை நாட்டமுற் ருயிலை; நாதரடி-
தேடிக்கொண் டாடித்தெளிந்தா யிலை;செக மாயைவந்து-
மூடிக்கொண் டோமென்றுங், காமா யுதங்கண் முனிந்த
வென்றும்-பீடிப்பை யோ?நெஞ்ச மே,யுனைப் போலில்லை
பித்தர்களே.

(பொ - ரை) உள்ளமே! குருநாதன் சொன்ன உபதேச வளவை நாடிக்கொண்டு பரசிவத்தைத் தியானஞ் செய்தாயில்லை. குருநாதரது ஸ்ரீ பாதங்களை இருக்கு மிடங்களைத் தேடி யடைந்து அக் குருநாதரைத் துதித்து அவரிடம் இறைவனை யடையு மார்க்கத்தை அஞ்ஞான சந்தேக விபரீதங்களை நீங்கித் தெரிந்துகொண்டாயில்லை. மாயையானது வந்து மூடிக்கொள்ளப் பெற்றோ மென்றும், மன்மத பாணங்கள் சீறினவென்றும் என்னை வருத்துவையோ? உன்னைப்போலப் பித்துற்றவர்கள் இல்லை; (எ - று.)

(வி - ரை) ஈச னடிமலர்த் தியானமும், குருமுகமான சாத்திர விசாரணையும் இல்லையாகில் மாயாமோகனப் பிரபஞ்ச லீலைகள் வந்து துறவினைக் கெடுக்குமென விளக்கினமை காண்க. மன்மத பாணங்களாவன-தாமரை, மா, அசோகு, முல்லை, நீலம் என்பன. 3

கையொன்று செய்ய, விழியொன்று நாடக் கருத்தொன்றெண்ணப் - பொய்யொன்று வஞ்சக நாவொன்று பேசப், புலால்கமழு-மெய்யொன்று சாரச், செவியொன்று கேட்க, விரும்புமியான்-செய்கின்ற பூசையெவ் வாறுகொள்வாய்? வினை தீர்த்தவனே!

(பொ - ரை) (அடியவர்களுடைய) இருவினைகளை நீக்கிய பெருமானே! அடியேன் கை ஒரு செயலைச் செய்ய, கண் ஒரு பொருளை நாடாநிற்க, சிந்தை ஒன்றை நினைக்க, பொய் பொருந்திய வஞ்சகமே வடிவான நாக்கு ஒரு விஷயத்தைப் பேச, புலால் நாற்றம் வீசுகின்ற பரிசவுணர்ச்சி ஒன்றையடைய, காது ஒரு விஷயத்தைக் கேட்டற்கு விரும்பாநிற்கும். ஆகவே, செய்யப்படுகின்ற பூசையை எவ்வண்ணம் ஏற்றுக்கொள்ளுவை? (எ - று.)

(வி - ரை) பஞ்சேந்திரிய நிக்கிரக மில்லாதேன் செய்யும்பூசை யைத் தேவரீர் ஏற்றுக்கொள்ளமாட்டீ ராதலின், இந்திரிய நிக்கிரக மருளி என் பூசையை யங்கீகரிக்க வேண்டு மென்றன ரென்க. 4

கண்ணுண்டு காணக், கருத்துண்டு நோக்கக், கசிந்துருகிப்
பண்ணுண்டு பாடச், செவியுண்டு கேட்கப், பல்பச்சிலையா
லெண்ணுண்டு சாத்த, எதிர்நிற்க வீச னிருக்கையிலே
மண்ணுண்டு போகுதை யோ!கெடு வீரிந்த மானுடமே.

(போ - ரை) தரிசித்தற்குக் கண்களுள. தியானிக்கச் சிந்தை யுள. மனங்கசிந்து உருக்கமுற்றுப் பாடுதற்கு இசைகளுள. கேட் டற்குக் காதுகளுள்ளன. பலவகைப் பச்சிலைகளை அருச்சித்தற்கு அட்டோத்தரமாகிய எண்ணமைந்த பெயர்க ளுள்ளன. இவ்வாறு பூசிக்கில் எதிரே தோன்றுதற்குச் சிவபெருமான் இருக்கும்பொழுது, கெடுவோர்களே! இம்மனிதப் பிறப்பு, ஐயோ! மண்ணா லுண்ணப்பட் டழிகின்றது; (எ - று.)

(வி - ரை) மக்கட்பிறப்பல்லாத விலங்கு பறவையாதிகளுடைய கண்ணதிய, இறைவன் றிருவுருவினைக் கண்டு மகிழு முரிமையற் றனவும், மக்கட்பிறப்பு இறைவன் றிருவருளைப் பெறுதற்கு உரிமை யுள்ளனவுமாகவும் வாளா பிறந்து மடிகின்றனரே என்று உலகை நோக்கி வருந்தி யுரைத்தன ரென்க. 5

சொல்லினுஞ், சொல்லின் முடிவிலும், வேதச்சுருதியிலும்,
அல்லிலு(ம்), மாசற்ற வாகாயந் தன்னிலும், ஆய்ந்துவிட்
ரில்லிலும், அன்பரிடத்திலு மீச னிருக்குமிடங் [டோ
கல்லிலுஞ் செம்பிலு மோவிருப் பான்?எங்கள்கண்ணுதலே.

(போ - ரை) எங்களுடைய நெற்றிக்கண்ணினையுடைய சுவாமி சிலையிலும் விக்கிரகத்திலுமாத்திரந்தானோ எழுந்தருளியிருப்பான்?

அங்ஙனமன்று; அவற்றில் மாத்திரமே யல்லாமல், பதத்தினும், பதாந்தமான மந்திரத்தினும், மந்திரமுற்றிலு மாலையாகக் கொண்ட வேதசுருதியென்னுங் கலையினும், இரவினும், களங்கமில்லாத ஆகாயத்திலும், எது பொருளென ஆராய்ந்து சீவகோடிகளையும் தத்துவங்களையும் பொருளல்லவென விடுத்த ஞானிகளின் இருப்பிடமான அருண்மாளிகையிலும், எவர்கள் அன்பர்களோ அவர்களிடத்திலும், எல்லா ஐசுவரியங்களையுந் தம்மதாகவுடைய சிவபெருமானிருக்கும் இடங்களாகும். 6

வினைப்போக மேயொரு தேகங்கண் டாய்!வினை தானொழிந்தாற் - றினைப்போ தளவுநில் லாதுகண் டாய்! சிவன் பாதநினை;-நினைப்போரை மேவு;நினையாரை நீங்கி நெறியினின்று - லுனைப்போ லொருவருண் டோ?மன மே! எனக் குற்றவரே.

(போ - ரை) என்னுள்ளமே! இருவினைகளையு மநுபவித்தற் குற்ற இடமே ஒரு சரீரம்; இருவினையின் போகமான இன்பதுன்பங்கள் ஒழிந்தால் இச்சரீரம் தினையளவு நேரமு நில்லாது; அதனால், சிவபெருமானது பாதங்களைத் தியானஞ் செய்! அடியார் கூட்டத்துடன் கலந்திரு! கடவுளை நினையாதாரை விட்டுவிலகி இந்நல்வழியினின்றால் உன்னைப்போல் ஒருவருளரோ எனக்கு வேண்டியவர்கள். (எ - று.)

(வி - ரை) இருவினை நுகர்ச்சிக்கே தேகம் வந்துள்ள தெனவும்; போக நுகர்ந்த பின்னர் தினையினளவு குறுகிய காலங்கூட அத் தேக மிராதெனவும்; ஆதலிற், சிவபெருமான் திருவடிகளை யழியாத வீடென வுணர்ந்து தியானிக்க வேண்டுமெனவும்; இத் தியானம் முதிர்வுறுவான் அங்ஙனம் இறைவ னடிமலரைத் தியானிக்

கும் அடியவர்களுடன் கலந்திருத்தல் வேண்டுமெனவும்; போக நுகர்வின் முடிவில் அழியும் தேகத்தையே நம்பிக்கிடக்கிற அறிவிலிகளின் உறவை விடல்வேண்டு மெனவும்; இவ்வளவு முடைய ராயினும் பிறழ்ந்த நெறியில் நில்லாதிருத்தல் அருமை யாதலின் 'நெறியினின்றால்' எனவும் கூறினரென அறிக. இங்ஙன நிற்ற லருமை யாதலின் 'நின்றால்' என்றார். 7

பட்டைக் கிழித்துப், பருவூசி தன்னைப் பரிந்தெடுத்து,
முட்டச் சுருட்டி,என் மொய்குழ லாள்கையின் முன்கொடு
கட்டி யிருந்த கனமாயக் காரிதன் காமமெல்லாம் [த்து,
விட்டுப் பிரியவென் றோ? இங்ங னேசிவன் மீண்டதுவே

(பொ - ரை) பட்டாடையைக் கிழித்து, பரியவூசியை விரும்பி எடுத்து, ஒன்றோடொன்று நெருங்கும் வண்ணம் சுற்றி, எனது நெருங்கிய கூந்தலினையுடைய மனைவியின் கையினிடத்தில் தாம் போதற்கு முன்னே கொடுத்து, இவ்வண்ணம் சிவபெருமான் எழுந்தருளியது, பந்தவுருவமாக என்னிற் பொருந்தியிருந்த பெருத்த மாயக்காரியின் இச்சை யனைத்தும் என்னை விட்டு நீங்கவென்றுதானோ (எ - று.)

(வி - ரை) பட்டைக் கிழித்துப், பருவூசியைச் சுருட்டி, என் மனையாள் கையிற் சிவனா ரளித்து மறைய, யானதனைப் பிரித்துப் பந்த நீக்கமுந் திருவடி ஞானமு முடையே னயினே னென்றனர். இவ்வரலாற்றை இவர் சரிதத்துட் காண்க. 8

சூதுற்ற கொங்கையு, மானார் கலவியுஞ், சூழ்பொருளும்,
போதுற்ற பூசலுக் கென்செய லாம்?செய்த புண்ணியத்
தீதற்ற மன்னவன் சிந்தையி னின்று தெளிவதற்கோ? [தாற்
காதற்ற ஊசியைத் தந்துவிட் டானென்றன் கைதனிலே.

(பொ - ரை) சூதாடு கருவியனைய தனங்களையுடையவளாகிய மனைவியும், காமக் கிழத்தியரின் புணர்ச்சியும், சூழ்ந்துள்ள பொன் நிலம் பசு மாளிகை முதலிய பொருள்களும், உடலை விடுத்துச் செல்கின்ற காலத்திலுண்டாகின்ற இந்திரியங்களின் சண்டையை விலக்குதற்கு என்ன செய்யக்கூடும்? முன்னர் செய்த நிஷ்காம புண்ணியத்தினால் கொடுஞ் செயலற்ற எமதிறைவன் உள்ளி னின்று தெளியத்தானோ? காதில்லாத வூசியை என்னுடைய கையில் கொடுத்துவிட்டனன். (எ - று.) 9

வாதுற்ற திண்புய ரண்ணு மலையர் மலர்ப்பதத்தைப்
போதுற்றெப் போதும் புகலுநெஞ் சே!யிந்தப் பூதலத்தில்
தீதுற்ற செல்வமென்? தேடிப் புதைத்த திரவியமென்?
காதற்ற வூசியும் வாராது காணுங் கடைவழிக்கே.

(பொ - ரை) வாதிற் பொருந்திய திண்ணிய தோளினரான அண்ணமலை நாதரது மலரனைய பாதங்களை அடைந்து, எந்நேரமும் துதிப்பாயாக மனமே! இந்தப் பூமியில் துன்பம் பொருந்திய செல்வத்தினால் என்ன பிரயோசனம்? செல்வத்தினைச் சம்பாதித்துப் புதைத்து வைத்ததினால் பிரயோசன மென்ன? மூளியூசியும் மரணத்திற்குப் பின் செல்லும் மார்க்கத்திற்கு வரமாட்டாது. (எ-று.)

(வி - ரை) மரணத்துக்குப் பின் செல்வமாகிய துணை வரா. அண்ணமலையாரது திருவடிகளே துணையாக வுள்ளன. ஆதலின், நெஞ்சமே! நீ அவைகளையே நினைப்பாயாக! என்றனர். 'வாதுற்ற திண்புயர்' என்பது காளியோடு வாத நடனஞ் செய்தமையின். 10

வேதத்தி னுட்பொருண் மண்ணுசை மங்கையை
விட்டுவிடப், போதித்த வன்மொழி கேட்டிலை யோ?செய்த

புண்ணியத்தால்; ஆதித்தன் சந்திரன் போலே வெளிச்சமா தாம்பொழுது, காதற்ற வூசியும் வாராது காணுங் கடை வழிக்கே.

(போ - ரை) வேதத்தினது உட்பொருளாய், மண்ணாசையையும் மாதராசையும் விட்டுவிடுதற்கு உபதேசித்தவரது சொல்லைக் கேட்டாயில்லையோ? நீ செய்துள்ள நிட்காம புண்ணியத்தால் சூரியனைப்போலவும் சந்திரனைப் போலவும் உடலை விடுத்து, நீ ஒளியுடன் வெளிப்படுகிற காலத்தில், மூளியூசியும் பிந்திய மார்க்கத்துக்கு வராது (எ - று.)

(வி - ரை) நாம் செய்த புண்ணியத்தால், வேதத்தி னுட்பொருளான சிவபெருமானே ஆசிரியனாக எழுந்தருளி, மண்ணாசை பெண்ணாசைகளை விட்டுவிடுமாறு உபதேசித்ததனைக் கேட்டுள்ளேமாதலின், மரணத்துக்குப் பின் அவை நமக்குத் துணைபுரியா என்றனர்.

மனையாளு, மக்களும், வாழ்வுந், தனமுந்தன் வாயின்மட்டே
இனமான சுற்றம யானமட் டே;வழிக் கேதுதுணை?
தினையா மளவெள் ளளவா கினுமுன்பு செய்ததவந்
தனையாள வென்றும் பரலோகஞ் சித்திக்குஞ் சத்தியமே.

(போ - ரை) மனைவியும், புதல்வர்களும், வாழ்க்கையும், பொன்னும், (உடல் விடுத்துச் செல்லுங்கால்) தன்னுடைய வாசலளவே யலங்கரிக்கும்; இனமாயுள்ள உறவுகள், சுடுகாட்டளவே சிறப்பைத்தரும்: (இவையெல்லாம் உடலுக் கமைந்தன.) உயிர்போம் வழிக்குச் சகாயமாக வருவது யாது? (ஒன்றுமில்லை.) தினையரிசியின் சிறியவளவாகினும், மேற்சொன்ன தினையினுங் குறுகிய எள்ளின் அளவு ஆகினும், மரணத்துக்கு முன்னர்ச்செய்துள்ள தவம் உளதேல், அது உயிரைக் காக்க, அதனால் வீட்டுலகம் கிடைக்கும்; இது உண்மை.

(வி - ரை) பொன் முதலிய எவையும் மரணத்திற்குப் பின்னர்த் துணையாகாவெனவும், சிறியவளவாகவேனுஞ் செய்த தவமுளதாயின் அது காத்துப் பரகதி சேர்க்கும் என்றும், இஃது உண்மையெனவுங் கூறினராதலின், பொருட்செல்வஞ் சேகரிப்பதினும் தவமாகிய அருட்செல்வஞ் சேகரித்தல் வேண்டுமென்பது கருத்து. 12

அத்தமும் வாழ்வு மகத்துமட் டே;விழி யம்பொழுக
மெத்திய மாதரும் வீதிமட் டே;விம்மி விம்மியிரு
கைத்தல மேல்வைத் தழுமைந் தருஞ்சுடு காடுமட்டே;
பற்றித் தொடரு மிருவினைப் புண்ணிய பாவமுமே.

(போ - ரை) செல்வமும் அதனா லுளதான வாழ்வும், வீட்டினளவே; மிகுதியாகச் சூழ்ந்திருந்த பெண்களும் கண்களில் நீரொழுக வீதியளவே; பன்முறை தேம்புற்று இரு கரங்களையும் தலைமீது குவித்தழுகின்ற புதல்வரும் சுடுகாட்டளவே; இறந்து செல்வானைப் பின்றொடர்ந்து செல்லும் இவன் செய்த நல்வினை தீவினைகளின் பயனான புண்ணியமும் பாவமு மென்பன. (எ - று.)

(வி - ரை) ஒருவன் செய்த புண்ணிய பாவங்களை யன்றி மற்றெவையும் மரணத்திற்குப் பின்னர் உடன் வாராதென்பதாம். 13

சீயுங் குருதிச் செழுநீர் வழும்புஞ் செறிந்தெழுந்து
பாயும்; புடவையொன் றில்லாத போது பகலிரவா
யீயு மெறும்பும் புகுகின்ற யோனிக் கிரவுபகன்
மாயு மனிதரை மாயாமல் வைக்க மருந்தில்லையே.

(பொ - ரை) சீழும், இரத்தமாகிய கொழுமையான நீர் சுரக்கின்ற நிணமும் நெருங்கி மிகுந்து வெளிப்பட்டொழுகாநிற்கும்; சேலை ஒன்று கட்டிக்கொள்ளாத கால நேரிடுமாஞல் அப்போது பகற்பொழுதிலும் இராப்பொழுதிலுமாக ஈயும் எறும்பும் நுழைகின்ற பெண்குறிக்கு இராப்பகலாகக் கெடுகின்ற மானுடரைக் கெடாமல் வைத்தற்கு மருந்தொன்றுமில்லை. (எ - று.)

(வி - ரை) ஆய்ந்து பார்த்தால் ஆபாசமான பகத்துளையில் மனஞ் செலுத்திக் கொடுமக்கள் எந்நாளிற் கெடாதிருப்பர் என்பார் 'மருந்தில்லையே' என்ருர். 14

சீதப் பணிக்குண்டு சிக்கெனக் கந்தை; தினமிரந்து
நீதுய்க்கச் சோறு மனைதோறு முண்டு; நினைவெழுந்தால்
வீதிக்கு ணல்ல விலைமாத ருண்டிந்த மேதினியி
லேதுக்கு நீசலித் தாய்?மன மே!என்றும் புண்படவே.

(பொ - ரை) குளிரினை மிகுதியுந் தருகின்ற பனிக்காலத்திற்கு உறுதியான கந்தையுளது. நாள்தோறும் பிச்சை வாங்கி உண்ணுதற்கு அன்னமானது வீடுகள்தோறு முளது. விஷயவிருத்தி யுண்டாஞல் தெருவீதிக்குள் அழகமைந்த பொருட் பெண்டிருளர். இந்த வுலகத்தில் எனது மனமே! என்றுந் துன்புறுமாறு எதற்காகச் சலித்தனை? (எ - று.)

(வி - ரை) எனது மனமே! குளிருக்குப் போர்வை கிடைக்கும். பசிக்கு உணவு கிடைக்கும். காமவிச்சைக்கு மாதருங் கிடைப்பர். இவைகளையன்றி, நீ இல்லத்திருந் தனுபவித்தவை யென்னை? எதற்காக் வருந்துகின்றனை? என அவலமுற்ற சிந்தைக்குச் சாந்தி கூறிஞர். 15

ஆறுண்டு, தோப்புண், டணிவீதி யம்பலந் தானுமுண்டு;
நீறுண்டு; கந்தை நெடுங்கோ வணமுண்டு; நித்தநித்த
மாறுண் டுலாவி மயங்குநெஞ் சே!மனை தோறுஞ்சென்று
சோறுண்டு, தூங்கிப், பின்சும்மா விருக்கச் சுகமுமுண்டே.

(பொ - ரை) நாள்தோறும் மாறுபாடுற்று விடய போகங்களில் திரிந்து மயங்குகின்ற மனமே! குளித்தற்கு ஆறுளது; (விடாய்தீர) மனோகரமான தோப்புளது; அழகிய வீதிகளில் கிடந்துறங்கப் பொதுச்சாவடி யுளது; அணிவதற்கு விபூதியுளது; கந்தையான நீண்ட கோவணம் உடுத்திக்கொள்ளுதற்கு உளது; வீடுகள்தோறும் போய்ச் சோற்றைப் பிச்சையாகப் பெற்றுண்டு, நித்திரை செய்து, பின்னர்ச் சும்மா இருக்க இன்பமும் உளது. (எ - று.)

(வி - ரை) ஆற்றிற் குளித்து, தோப்புள் தங்கி, ஊரில் உண்டு, அம்பலத்துள் உறங்கிப், பின சும்மாவிருக்கச் சுகமுளது என்பதாம்.

உடுக்கக், கவிக்கக், குளிர்காற்று வெய்யி லொடுங்கிவந்தாற்
றடுக்கப் பழைய வொருவேட்டி யுண்டு; சக முழுதும்
படுக்கப் புறந்திண்ணை யெங்கெங்கு முண்டு; பசித்துவந்தாற்
கொடுக்கச் சிவனுண்டு; நெஞ்சே! நமக்குக் குறைவில்லையே.

(பொ - ரை) உள்ளமே! உடுத்தவும்; தலைமீது போட்டுக் கொள்ளவும், குளிரிலும் - காற்றிலும் - வெய்யிலிலும் உடலம் ஒடுக்க முற்று வந்தால் அவைகளா லுண்டாருந் தட்ப வெப்பங்களைத் தடுத்தற்கு பழைய ஓராடை யுளது; உலக முழுமையும் வெளித்திண்ணை எவ்விடத்திலு முளது படுத்தற்கு; பசித்தடைந்தால் கொடுத்தற்குச் சிவபெருமா னிருக்கின்றார்; ஆதலால், நமக்கு யாதொரு குறைவு மில்லை. (எ - று.)

(வி - ரை) நமக்கு உடுத்தற்கு வேட்டியும், படுக்க இடமும், பசியாற்றச் சிவனொரு மிருத்தலிற் குறைவுபாடு யாதொன்று மில்லை யென்பதாம். 17

மாடுண்டு, கன்றுண்டு மக்களுண் டென்று மகிழ்வதெல்லாங்
கேடுண்டெ னும்படி கேட்டுவிட் டோ,மினிக் கேண்மனமே!
ஓடுண்டு,கந்தையுண், டுள்ளே யெழுத் தைந்து மோதவுண்டு
தோடுண்ட கண்ட னடியார் நமக்குத் துணையுமுண்டே.

(போ - ரை) மாடு உளது, கன்று உளது, புதல்வர் உளர் எனச் சந்தோட முறுவதெல்லாம் கேடுளது என்னும் வண்ணம் கேள்வியுற்றுத் துறந்தோம். எனது நெஞ்சமே! இனி யான் சொல்வதைக் கேட்பாயாக! பிச்சை யெடுக்கப் பிச்சாபாத்திரமுளது; உடுத்தற்குக் கிழிந்த ஆடையுளது; மானதமாகச் செபிக்க ஸ்ரீ பஞ்சாட்சர மிருக்கின்றது; தோடு பொருந்திய, ஸ்ரீகண்டரான சிவபெருமானது அடியவர்கள் நந்தமக்குத் துணையாகவு முளர். (எ - று.)

(வி - ரை) நாம், மாடு கன்று மக்களாதிகளாற் கேடே யுண்டாகு மென்று கேட்டுத் துறவுற்றோம். துறவுற்ற நாம் ஓடும், கந்தையும், ஐந்தெழுத்தும், சிவனடியார் துணையு முடையோம். ஆதலின், குறைபாடற்றே யிருக்கின்றோ மென்றனர். 18

மாத்தா னவத்தையு, மாயா புரியின் மயக்கத்தையு, [டு
நீத்தார் தமக்கொரு நிட்டையுண் டோ?நித்த னன்புகொண்
வேர்த்தாற் குளித்துப், பசித்தாற்புசித்து, விழிதுயின்று
பார்த்தா லுலகத் தவர்போ லிருப்பர்பற் றற்றவரே.

(போ - ரை) சிறந்த சுவர்க்காதி லோகங்களிலுள்ள சிந்தாமணி - கற்பகம் - காமதேனு - ரம்பாமுதலிய வஸ்துக்களையும், மாயாலோகத்தின்

மயக்கத்தினையும், இறைவ னருளால் பயனற்றவையென வுணர்ந்து விடுத்த வுட்டிறவினர்க்கு, ஒரு நிட்டை யுளதோ? அழியாத சிவ பெருமான் அன்பைப் பொருளாகப் பெற்று, வெயருற்றால் நீராடி, பசியெடுத்தால் போசனஞ் செய்து, நித்திரை வந்தபோது கண் ணுறங்கிப், பார்வையிட்டால் உலகத்தவரையொப்ப இருப்பார்கள் பந்த நிவர்த்தி பெற்றவர்கள். (எ - று.)

(வி - ரை) சொர்க்கமும், அதன்கணுள்ள போக திரவியங்களும், மாயா காரியமான வுலகமும் துச்சமான பொருளென இறைவனருளா லுணர்ந்து, அவைகளை வெறுத்துச் சிவபெருமான் றிருவடி மலர் களில் அன்புடையனுன வொருவன், வெயர்த்தாற் குளிப்பன், பசித் தாற் புசிப்பன், நித்திரை வந்தா லுறங்குவன்; ஆதலின், அவனைப் பற்றற்றவனென் றறியப்படாவிடினும் அன்னுன் பற்றற்றானே என்று ஞானசாரங் கைப்பற்றிய மேலோனைப் புகழ்ந்துரைத்தனர். ()

ஒன்றென் றிரு!தெய்வ முண்டென் றிரு!உயர் செல்வமெல்
அன்றென் றிரு!பசித் தோர்முகம் பார்!நல் லறமுநட்பு[லாம்
நன்றென் றிரு!நடு நீங்காம லேநமக் கிட்டபடி
யென்றென் றிரு!மன மே!யுனக் கேயுப தேசமிதே.

(பொ - ரை) எனது மனமே! உன்றனுக்கே, (யான் கூறும் இந்த வாக்கியமான) உபதேசமானது, ஒப்பற்றதென வுணர்ந்து இருப்பாயாக! (அந்த உபதேசம் எதுவென்றால்) கடவுள் இருக்கிறார் எனத் துணிந்திருப்பாயாக! உயர்ந்த செல்வமனைத்தும் நிலையற்றவை யெனக் கருதியிருப்பாயாக! உணவின் வேட்கை யுற்றாரது முகத் தைப் பார்ப்பாயாக! பதி புண்ணியமும் சீவகாருணியமும் நல்லன என்று இருப்பாயாக! பொது நிலையினின்று மாறாமல் நமக்கு விதித்த படியே யாகுமென்றும் இருப்பாயாக!

(வி - ரை) மனமே! யானுனக்குச் செய்யும் உபதேசம் இது வாகும்: எதுவென்றால், தெய்வமுண்டென் றிருத்தலும், அதாவது நித்தியமானதெனக் கருதி யிருத்தலும், நித்தியமானதுபோற் காணப் படும் செல்வமனைத்தும் அநித்தியமென அறிந்து கோடலும், பசித் தோர்முகம் பார்த்தலும், பதிபுண்ணியமும் உயிர்ப்பகை யின்மையும் நல்லவையென இருத்தலும், விருப்பு வெறுப்பின்றிப் பொதுமையாக நாமனுபவிக்கும் ஊழனைத்தும் நமக்கு இறைவன் அமைத்த வண்ண மென் றிருத்தலும் என அறிகவென்பதாம்.

இனி, தெய்வமொன்றே யெனவும், அத் தெய்வமே அழியாத பரம்பொருளெனவும், மோக திரவியங்களான செல்வமாதியவனைத் தும் நிலையில் பொருளெனவும், ஆன்மாக்கள் அறமுங் கருணையும் பொருந்தினவரா யிருக்கவேண்டு மென்பதனையும், நமக்கு வரும் ஆகூழ் போகூழாதிய அனைத்தும் நம்மா லியற்றப்பட்ட வினையின் பயனாய் இறைவனா லளிக்கப்படுதலின் னவைகளை யெத்தகையோரு மனுபவித்தே தீரவேண்டு மென்பதனையும், மனத்தை முன்னிலை யாக வைத்து உலகிற் கறிவுறுத்தின ரெனினுமாம், "தெய்வ மென்ப தோர் சித்தமுண்டாகி" என்னுந் தமிழ்மறைப்படி 'தெய்வமுளதென விரு' எனவும்; "ஒருவனா யுலகேத்த நின்ற நாள்" என்ற சுருதியை யுட்கொண்டு 'ஒன்றென் றிரு' எனவும்; "பொய்ம்மாயப் பெருங்கடல்" என்ற சுருதிப்படி உலகபோகமான செல்வத்தை 'அன்றென்றிரு' எனவும்; "ஊழிற் பெருவலியா வுள" என்பதனைக்கொண்டு நினக்கு வரும் துன்பங்கள் ஊழ்முறையா லுண்டாமவையென் றிரு என்பார், 'இட்டபடி என்றென்று' எனவும் கூறினர். 20

நாட்டமென் றேயிரு! சற்குரு பாதத்தை;நம்பு! பொம்ம
லாட்டமென் றேயிரு பொல்லா வுடலை; அடர்ந்தசந்தைக்

கூட்டமென் றேயிரு! சுற்றத்தை! வாழ்வைக் குடங்கவிழ்நீ
ரோட்டமென் றேயிரு! நெஞ்சே! உனக்குப தேசமிதே.

(போ - ரை) எனது மனமே! (நான் கூறுவதை யுனக்கு உறுதி யானதென) நம்புவாயாக! உன்றனுக்கு இது உபதேசமென் றறிதி: அதாவது, ஞானசாரியனது திருவடிகளை நாடும் பொருளான பரம் பொருள் தியானமெனவே கருதியிரு! அடாத செயற்குரிய இவ் வுடலத்தைத் தோற்பாவைக் கூத்து எனவே கருதியிருப்பாயாக! மக்கள் மனைவி முதலிய சுற்றங்களைச் சந்தையிற் கூடுஞ் சனத்திரள் எனவே இருப்பாயாக! இவ்வுலக வாழ்வினைக் குடத்தினின்றும் சாய்த்த வெள்ளத்தின் ஓட்டமெனவே இருப்பாயாக! (எ - று.)

(வி - ரை) "குருவே சிவமெனக் கூறினன் நந்தி" என்பதனால், 'சற்குரு பாதத்தை நாட்டமென்றே இரு' எனவும்; வாழ்வாவது மாயம் என்பதனால், 'பொம்மல் ஆட்டம்,' 'சந்தைக் கூட்டம்,' 'குடங் கவிழ்நீர் ஓட்டம்,' என முறையே உடல்-சுற்றம்-வாழ்வு என்பன வற்றை அநித்தியபொருளென்றனர். 21

என்செய லாவதி யாதொன்று மில்லை;இனித் தெய்வமே!
உன்செய லேயென் றுணரப்பெற் றேன்;இந்த வூனெடுத்த
பின்செய்த தீவினை யாதொன்று மில்லைப்; பிறப்பதற்கு
முன்செய்த தீவினை யோஇங்ங னேவந்து மூண்டதுவே.

(போ - ரை) கடவுளே! நின்னை என்னிறைவனென்றிருந்த பின்னர் என்னுடைய செயலாக வுண்டாவது எதுவொன்றும் இன்றாம்; அனைத்தும் நின் செய்கையே யென அறியப்பெற்றேன்; இந் தத் தேகத்தை நானல்லவென வுணர்ந்து தள்ளிய பின்னர்ச் செய்யப் பட்ட கொடிய செயலேதொன்று மின்றாம்; இத்தகைய ஞான

முண்டாதற்கு முன் அதாவது தேகமே யான்மாவென்றிருந்த காலத்துச் செய்த தீச்செயலோ இவ்வாறு சேர்ந்தது (எ - று.)

(வி - ரை) ஆண்டா னடிமையாக உணர்ச்சி வந்த பின்னர் "ஆட்டுவித்தா லாரொருவ ராடாதாரே" என்றபடி, அனைத்தும் நின் செயலென வுணர்ந்தேன்; அங்ஙன முணர்ந்த பின்னர் என் செயலொன்றுமில்லை யாகவும், இங்ஙனே வந்து மூண்டது நின்னருளடைதற்கு முன் செய்த கன்மபலமோ அறிகிலேன்.

இனி, 'இந்த வூனெடுத்த பின் செய்த தீவினை யாதொன்று மில்லை' என்பதற்கு, 'இந்த மாங்கிச வுடலமான மனிதசரீரப்பிறப்பை யானடைந்ததற்குப் பின் செய்த பாவமோ யாதொன்றும் இல்லை' எனவும்; 'பிறப்பதற்கு முன் செய்த தீவினையோ' என்பதற்கு, 'இப்பிறப்பிற்கு முந்திய பிறப்புக்களிற்செய்த பாவகன்மமோ' எனவும் கூறலாகும். இக் கருத்தாக, "சிவன்செயலாலே யாதும் வருமெனத் தேறேனும்" என்றார் தாயுமானவரும்.

இப்பாசுரம் அடிகள், கழுவினைக் கண்டு கூறியதென்ப.

## விவரம்

பத்திரகிரியெனப் பெயருள்ள ஒரு மன்னவனது நகரினருகில் திருவெண்காட்டடிகள்சென்று,ஒருவிநாயகராலயத்துள் ஒரு இரவில் நிட்டை கூடியிருந்தனர். அன்றிரவு அரசமாளிகையுட் சென்று திருட்வேண்டுமென்னும் எண்ணத்துடன் வந்த சில கள்வர்கள், விநாயகப்பெருமானைச் சுட்டிப், "பெருமானே! இன்றிரவு எங்கள் நினைவு கைகூடிவந்தால் தேவரீரை மறவாது நன்றாய்ப் பூசிப்போம்" எனக் கூறிச் சென்றனர். சென்றார்க்கு அரசமாளியுள் வேண்டுமளவும் இரத்தினபாணங்களும் பொற் குவியல்களுங் கிடைத்தன. எவர் கண்ணுக்கும் புலப்படாமல் வெளிவந்த கள்வர்கள் திரும்பி வருங்

காலத்து விநாயகராலயத்தில் வந்து அரசனணியும் இரத்தின வடமொன்றை யெடுத்து விசிறி விநாயகர் மீதிட்டனர். அவ்வாரம் விநாயகரருகி னிட்டையிலிருந்த அடிகள் கழுத்தில்விழுந்தது. அதனை யறியாது அடிகள் நிரதிசய இன்ப நிட்டையிலிருந்தனர். பிற்றைநாட் காலையில் அரசமாளிகையிற் களவு செய்த கள்வரைப் பிடித்துவரும் வண்ணம் அமைச்சனு லேவப்பெற்று, நாற்புறமுஞ் சென்ற காவலருட் சிலர் விநாயகராலயத்து ளூற்றுப்பார்த்து அரசனணியும் இரத்தினவட மணிந்திருக்கும் அடிகளைக்கண்டு கள்வர் தலைவனெனவுட் கொண்டு பிடித்திழுத்து அரசன்முன் கொண்டு நிறுத்தினர். தனது கண்டசரம் பூண்டிருந்த அடிகளை யாராயாது அன்னோன் கழுவிலிட வுத்தரவிட்டனன். அவனாணைப்படி காவலர் கழுக்கோலி னருகி லடிகளை அழைத்துவந்தனர். அப்பொழுது நிட்டைதெளிந்து புறநோக்கம் விளங்கிய அடிகள் தம்மைக் கழுவிலிடுவான் கொண்டுவந்திருத்தலை யுணர்ந்து புன்னகைகொண்டு இச்செய்யுளை அருளிச்செய்தனர் என்பதாகும். 22

திருவேட மாகித், தெருவிற் பயின்றென்னைத் தேடிவந்து,
பரிவாகப் பிச்சை பகருமென் றானைப்,பதம் பணிந்தேன்;
கருவாகு பேதைக் கடற்கரை மேதக் கருதுமென்னை
யுருவாக்கிக் கொள்ளவல் லோ?விங்ங னேசிவ னுற்றதுவே.

(பொ - ரை) சிவனடியார் திருவுளங்கொண்டு, வீதியில் உலாவி, அடியேனை விசாரித்தெய்தி, விருப்பத்துடன் பிச்சையைப் பகிர்ந்திடும் என்றருளிச்செய்தவரது திருவடிகளை வணங்கினேன்; பிறப்புண்டாகும். துன்பமாகிய சமுத்திரத்தின் கரையை அடைய நினைக்கின்ற அடியேனைத் தமது பொருளான அடிமையாகச்

செய்துகொள்ளுதற்காகவன்றோ இவ்வண்ணம் சிவபெருமானெழுந் தருளியது? (எ - று.)

(வி - ரை) பிச்சான்னத்தால் தேகதாரணை செய்துகொண்டு சமாதியிலிருக்கும் அடிகள் ஒருதினம் பிச்சை வாங்கி வந்த சமயத்தில் இறைவனு மோரடியவரைப்போல வேடந்தாங்கி இவரிடமடைந்து 'பிச்சையிடுக' என, இவரும் தாமெடுத்துவந்த பிச்சையை யவர்க்களிக்க, அவரதனைப்பெற்று மகிழ்ந்து மறைந்தருள, இறைவனென் றுணர்ந்து மகிழ்ந்து கூறிய திச்செய்யு ளென்ப.

தம்மைச் சனனசாகரத்திருந்தெடுத் தாட்கொள்ளக் கருதியோ சிவனடியார் வேடங்கொண்டு வந்து தம்பா லெய்தி இரந்தனரென அறிஞர் கூறுநிற்பச், சிலர் இச் செய்யுட்கு, 'திருவேடம்' என்பது, 'கற்பின் மிகுந்தோமென்று கர்வித்திருந்த தாருகாவன மாதரைக் கற்பழிக்கக் கொண்ட வுருவம்' எனவும், தெரு அம்முனிவர் வீதியெனவும், உருவாக்கிக்கொள்ளுதல் சாரூப்பியமுத்தியெனவுங் கூறுகின்றனர். 23

விட்டே னுலகம்; விரும்பே னிருவினை; வீணருடன்-
கிட்டேன்; அவருரை கேட்டுமி ரேன்;மெய் கெடாதநிலை -
தொட்டேன்; சுகதுக்க மற்றுவிட் டேன்;றொல்லை நான்
மறைக்கு - மெட்டே னெனும்பர மென்னிடத் தேவந்திங்
கெய்தியதே.

(பொ - ரை) விடுத்தேன் உலகத்தை; விரும்பமாட்டேன் நல்வினை தீவினைகளை; உபயோகமற்றவர்களுடன் நெருங்கேன்; அவ்வீணரின் சொற்களைக் கேட்டுக்கொண்டும் இரேன்; உண்மைப்பொருள் அழியாத நிலையைக் கைப்பற்றினேன்; புராதனமான சதுர்வேதங்களுக்கும் அப்பாற்பட்டு நிற்பேன் என்கின்ற சிவமாகிய

பொருளானது என்னிடத்தில் வந்து இவ்விடத்தில் கிட்டியது. (எ - று.)

(வி - ரை) 'நான்மறைக்கும் எட்டேன்' என்னும் பரம்பொருளென்னிடத்து வந்தெய்தியவதனால் யான் உலகினை விட்டேன்; இருவினைகளை விரும்பேன்; வீணருடன் பழகுதலும், அவர் மொழியைக் கேட்டலும் விடுத்தேன்; அழியாத நிலைமையை யடைந்தேன் என்பதாம். 24

அட்டாங்க யோகமு மாதாரமாறு மவத்தை யைந்தும்
விட்டேறிப் போன வெளிதனிலேவியப் பொன்று கண்டே
வட்டாகிச் செம்மதிப் பாலூற லுண்டு மகிழ்ந்திருக்க [ன்
எட்டாத பேரின்ப மென்னை விழுங்கி யிருக்கின்றதே.

(பொ - ரை) அட்டாங்கங்களையுடைய யோகத்தினையும், ஷடாதாரங்களையும், பஞ்சாவத்தைகளையும் கண்டு கழித்து மேலே சென்ற அருள் வியாபக வெளியில், ஆச்சரியமொன்று தரிசித்தேன்; இனிமையிற் கருப்பு, வட்டுப்போல்வதாயுள்ள செவ்விய சந்திரகலாமிர்தத்தை யருந்தி, நிரதிசயவின்பானுபவ முற்றிருந்த கிட்டுதற்கருமையான பேரின்பமானது என்னைத் தன்னுளாக்கி அழியாது நிற்கின்றது. (எ - று.)

(வி - ரை) இயமம், நியமம், ஆதனம், தாரணம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தியானம், சமாதிகளையுடைய யோகவழியில்; மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்கினையென்னு மாதாரங்களையும், படைத்தழிக்கும் இயல்பினையும், சாக்கிர-சொப்பன-சுழுத்தி - துரிய - துரியாதீதமாகிய பஞ்சாவத்தைகளையும் கடந்து, ஞானசாதக முற்று, அருள் மயமான இடத்தைடைந்து, கருப்பு வட்டினு மினிக்குஞ் சந்திரகலாமிர்தத்தையுண்டு இருக்கும்

வண்ணம் பிறருக்குக் கிடைக்காத பேரின்ப மெனக்குக் கிடைத்தது என்றனர். வட்டெடன்பதற்கு வட்டமான என்பாரும், வண்டு என்பாரும் உளர். 25

எரியெனக் கென்னும், புழுவோ வெனக்கெனு, மிந்த மண்ணுஞ்-சரியெனக் கென்னும், பருந்தோ வெனக்கெனுந், தான்புசிக்க - நரியெனக் கென்னும்,புன் னாயெனக் கென்னு,மிந் நாறுடலைப் - பிரியமு டன்வளர்த் தேனித னாலென்ன பேறெனக்கே?

(போ - ரை) இந்த நாற்றம்பொருந்திய உடலத்தை, தீயானது எனக்குரிய தென்னுநிற்கும்; கிருமிகளோ எனக்கெனக்கு என்னுநிற்கும்; இந்தப் பிருதிவியும் எனக்குச் சரியானதென்னும்; பருந்தோ எனக்குடைய தென்னுநிற்கும்; தான் உண்ணுதற்கு குறுநரியானது எனக்கென்று கூறும்; (இங்ஙனமாக இதனை) விருப்பத்துடன் வளர்த்தனன். இவ் வுடலத்தால் எனக்குயாது பயன்? (எ - று.)

(வி - ரை) வெறு மக்களின் உடலா லொருபயனு மில்லையென்பதை விளக்க ஆன்றோ ராசாரம்பற்றி 'எனக்கிதனு லென்ன பயன்' என்றனர். இதனுல் தேகத்தின் நிலைமையையும், உரிமை யின்மையையும் விளக்கினர். 26

அண்ணறன் வீதி யாசிருப் பாகும்; அணிபடையோர் நண்ணொரு நாலொன்ப தாம்;அவ ரேவலு நண்ணுமிவ்வூர் துண்ணென் பசிக்கு மடைப்பள்ளி யான; சுகமுமெல்லா மெண்ணிலி கால மவமே விடுத்தனம், எண்ணரிதே.

(போ - ரை) சிவபெருமானது சந்நிதான வீதியே, நமக்கு அரசாட்சி இருப்பிடமாகவுள்ளது; அழகிய சேனுவீரர்கள், பொருந்திய

முப்பத்தாறு பேர்களாகும்; அம் முப்பத்தறுவரின் ஊழியமும் பொருந்தி நிற்கும் நாம் இப்பொழுது வாழும் இந்த ஊரனைத்தும் விரைந்து வருகிற பசிநோய்க்குச் சமையற்சாலையாக வாயின; இத்தகைய ஞானராச்சிய பரிபாலன சுகமனைத்தும் அளவற்ற காலம் அநுபவியாது வீணே கழித்தனம்; அவையிவற்றை எண்ணுதலருமையாகும் (எ - று.)

(வி - ரை) துறவறத்தின் பெருமையை விளக்கிக் கூறியதிது. "ஊரெல்லாம் அட்டசோறு நம்மதே" என்ற மணிவாசகப் பெருமானை யொப்பக் கூறியதாகும். இதற்கு ஆருதார நிலை பரப்பிரமத்துக்கு அரசிருக்கு மிடமெனவும், முப்பத்தறுவகைத் 'தத்துவங்களும் அப் பிரமத்துக்கு ஏவல் செய்யுமெனவும், இந்த உடலாகிய வூர் ஐம்புலன்களுந் தம் பசிநோய் நீங்குதற்கு மடைப்பள்ளியாகு மெனவும், இவ்வாருன வின்பத்தை நுகராமல் வாணளை வீணுளாக்கிக் காலங் கழித்தனம் எனவும், ஆன்மானுபவத்திற் கன்னியமான சிவானுபவத்தினை இலேசமும் பெற்றேனில்லை என்றூர் எனவுங் கூறுப. 27

என்பெற்ற தாயாரு மென்னைப் 'பிண'மென் றிகழ்ந்து விட்டார், பொன்பெற்ற மாதரும் 'போ'வென்று சொல் லிப் புலம்பிவிட்டார்; கொன்பெற்ற மைந்தரும் பின்வலம் வந்து குடமுடைத்தார்; உன்பற் றொழிய வொருபற்று மில்லை யுடையவனே!

(பொ - ரை) சிவபெருமானே! என்னை யீன்ற அன்னையரும் என்றனைச் சவம் என இகழ்ச்சிசெய்து தொலைத்தனர்; பரியமளித்து மணஞ் செய்துகொண்ட மனைவியரும் போதி என்று கூறி அழுது தொலைத்தனர்; வன்மையமைந்த புதல்வர்களும் பின்னிடத்தில் சுற்றி வந்து குடத்தை யுடைத்தனர்; ஆதலின் உனக்கும் எனக்குமுள்ள

நீங்காத பந்தமன்றி வேறொரு பந்தமும் அடியேனுக்கு உண்மையில் இல்லை. (எ - று.)

(வி - ரை) மாதர், மனைவியர், மைந்தர் என நிற்கு மின்னோர் தேகத்தை யானெனக் கருதித் தேகநாட்ட முண்டாங்காலத்துக் கைவிடுத்துப் பகைஞரை யொப்பச் செல்லுகின்றனர். இறைவ னொருவனே எத்தனைச் சன்மங்கள் வரினும் என்னைவிட்டுப் பிரியா மல் எனக்குற்ற துணையாக விளங்குகின்றனர் என அறிந்துகொண் டேன் என்றனர். 28

கறையற்ற பல்லுங், கரித்துணி யாடையுங், கள்ளமின்றிப்
பொறையுற்ற நெஞ்சமும், பொல்லாத வூணும், புறந்திண்
தறையிற்கிடப்பு,மிரந் துண்ணு மோடுஞ்,சகமறியக்[ ணையும்
குறைவற்ற செல்வமென் றேகோல மாமறை கூப்பிடுமே.

(பொ - ரை) கறையில்லாத தந்தமும், கரித்துணியாகிய ஆடை யும், வஞ்சனையிராமல் சாந்தமடைந்த மனதும், சுவையற்ற வுணவும், வெளித்திண்ணை வாசமும், தரையிற் கிடத்தலும், பிச்சை வாங்கி அருந்துகின்ற மண்ணோடும், உலகமறியக் குறைவு இல்லாத செல்வம் எனவே அழகிய சிறந்தவேதம் முறையிடாநிற்கும்; (எ - று.)

(வி - ரை) உபநிடதங்களுள் நாரதபரிவிராஜகோபநிடதமானது இப்பாட்டின் பொருளை நன்கு வலியுருத்துகின்றது துறவறச்செய விழந்த செயலன்று; வேதத்தாற் புகழ்ந்துரைக்கப்பெற்ற உயர்ந்த செயலெனa விளக்குவார் இங்ஙன முரைத்தனர்.

கறை - தாம்பூலக்கறையென வறிக. 29

எட்டுத் திசையும், பதினாறு கோணமு மெங்குமொன்றாய்
முட்டித் ததும்பி முளைத்தெழுந்தோங்கு சோதியை மூடரெல்லாங்

கட்டிச் சுருட்டித்தங் கக்கத்தில் வைப்பார், கருத்தில்வை
பட்டப் பகலை யிரவென்று கூறிடும் பாதகரே. [யார்,

(பொ - ரை) திசை எட்டும், பதினாறு கோணமும், எவ்விடத்திலும் ஒரே தன்மையாய் நிறைந்து மேல் வழிந்து உண்டாகி உயர்ந்து விளங்கும் அருட்பெருஞ்சோதியை மூடரானவரும் சுருட்டிக்கட்டித் தமது கைம்மூலத்தில் வைப்பார்கள்; உள்ளத்தில் வைக்கமாட்டார்கள்; வெட்டவெளிச்சமான அப் பரஞ்சோதியான பகற்காலத்தினை வெளிச்சமற்ற இராத்திரியென்று சொல்லும் பாவிகள்; (எ - று.)

(வி - ரை) பட்டப்பகலை இரவென்று கூறிடும் பாதகர்களே எங்கு நிறைந்த அருட்பெருஞ் சோதியான சிவத்தைக் கருத்தில் வையாமற் கட்டிச் சுருட்டித் தங்கக்கத்தில் வைப்போர். எங்குநிறைந்த சிவபெருமானை, விக்கிரக முதலியவைகளில் மாத்திரம் இருப்பவராகக்கொண்டு, அவரைத் தியானிக்க வகையறியாது விக்கிரவர்களைச் சுமந்து திரியோம் எனவும்; நூல்களைமாத்திரம் படித்துச் சுமத்தலையன்றி இறைவனை யுள்ளிற் கருதார் மூடரெனவுங் கூறியபடி. 30

வாய்நாறு மூழல்; மயிர்ச்சிக்கு நாறிடு(ம்), மையிடுங்கண்
பீநாறு(ம்), அங்கம் பிணவெடி நாறும்; பெருங்குழிவாய்ச்
சீநாறும்; யோனி யழனாறும், இந்திரியச் சேறுசிந்திப்
பாய்நாறு, மங்கையர்க் கோவிங்ங னேமனம் பற்றியதே.

(பொ - ரை) ஊழல் நாற்றம் வாயில் நாறுநிற்கும்; தலைரோமமோ சிக்குநாற்றம் வீசாநிற்கும்; மை தீட்டுகிற கண்கள் பீளைநாற்றம் வீசாநிற்கும்; உடலம் பிணநாற்றம் வீசாநிற்கும்; குய்யத்தில் சீநாற்றம் வீசாநிற்கும்; யோனியில் தீநாறும்; இந்திரியமாகிய குழம்பு சிந்துற்றுப்

பாயானது நாறுநிற்கும். இத்தகைய அங்கங்களை வாய்ந்த பெண்கட் காகத்தானே இவ்விடத்தில் மனமானது பற்று வைத்தது. (எ - று.)

(வி - ரை) எல்லா அங்கங்களும் இழிவுடைய மாதர்களிடத்தில் தானே மனம் பற்றவேண்டும். முற்றிலும் தூய்மையாளனான இறைவனை மனம் பற்றக்கூடாதா? என்பது குறிப்பு. 31

உரைக்கைக்கு நல்ல திருவெழுத் தைந்துண், டுரைப்படியே
செருக்கித் தரிக்கத் திருநீறு முண்டு; தெருக்குப்பையிற்
றரிக்கக் கரித்துணி யாடையு முண்டெந்தச் சாதியினு [யே.
மிரக்கத் துணிந்துகொண் டேன்; குறை யேது மெனக்கில்லை

(பொ - ரை) சதா சொல்லிக்கொண்டிருத்தற்கு நன்மை யமைந்த அழகிய ஸ்ரீபஞ்சாக்கர மந்திரமுளது. தரிக்கச்சொன்ன வேதாகம முறைப்படியே உடலி லணிந்துகொள்ளுதற்கு விபூதியும் உளது; உடுத்திக்கொள்ளுதற்குத் தெருவிலுள்ள குப்பைகளில் அழுக்குக் கந்தலாடைகளு முள; எந்தச் சாதியினும் பிச்சை வாங்க உறுதி கொண் டிருக்கின்றேன்; இதனால், யாதொரு குறைவும் எனக்குக் கிடையாது. (எ - று.)

(வி - ரை) எனக்கு வாக்கின்றொழிலுக்கு ஸ்ரீபஞ்சாட்சரமும், பூசிக்கொள்ளுதற்கு வேதபடிதமான திருநீறும், அணிந்துகொள்ளுதற்குக் கிரித்துணி யாடையும், உணவிற்கு எல்லாச் சாதியிலும் இரந்துண்ணுதலும், முறையெனக்கொண்டேன்; ஆதலின், எனக்கு யாதுங் குறைவில்லை என்றனர். அதிவன்னாச்சிரமத்தை யடைந்த துறவிகட் கிணை யெங்கு மிலரென இதனாலறியக் கூறினர். 32

ஏதப்பட் டா,யினி மேற்படும் பாட்டையி தென்றறிந்து
போதப்பட் டாயில்லை நல்லோரிடஞ் சென்று; புல்லறிவால்

வாதைபட் டாய்;மட மாஞர் கலவி மயக்கத்திலே
பேதப்பட் டாய்;நெஞ்ச மே!யுனைப் போலில்லை பித்தருமே.

(போ - ரை) மனமே! துன்பமுற்றனை; இனிமே லடையும் துன்பத்தினை இது என வுணர்ந்து சிவஞானிகளிடம் போய்ச் சிவ ஞானத்தை யடைந்தாயில்லை; உனது அறிவின்மையால் நீயே தலைவ னெனக் கருதித் துன்பமுற்றனை; மடப்பத்தினையுடைய மாதருடன் கூடும் இணைவிழைச்சாகிய மயக்கத்தில் வேறுபாடடைந்தனை; ஆதலின், ஆராயுமிடத்து அறிவு மயங்கினவர்கள் உன்னை யொத்தவர் இலர். (எ - று.)

(வி - ரை) மனமே! பதி பசு பாசங்களின் பாகுபாடுகளை யுண ராமையால் துன்புற்றனை. அவை போக, நல்லாசிரியனை யடுத்துச் சிவஞானச் செல்வமெய்தித் துன்பநீங்கிச் சுகமுறாது, மாதர் மயலுட் பேதப்பட்டனை. ஆதலின், உனையொத்த பித்த ரெவருமிலர். 33

சுரப்பற்று வல்வினை, சுற்றமு மற்றுத், தொழில்களற்று,
கரப்பற்று, மங்கையர் கையிணக் கற்றுக், கவலையற்று,
வரப்பற்று, நாதனை வாயார வாழ்த்தி, மனமடங்கப்
பரப்பற்றி ருப்பதன் றோ?பர மா!பர மானந்தமே.

(போ - ரை) பரமனே! தீவினைகள் சுரத்தல் நீங்கி, உறவின ரும் நீங்கி, மனமொழிகளாற் செய்யும் பந்தச்செயல்களும் ஒழிந்து, பொன்னாதிகளை மறைத்துவைத்தலும் நீங்கி, மாதர் கையாற் றழுவுதலு மொழிந்து, மனோவிசாரமு மொழிந்து, அளவுகடந்து சிவபெருமானை வாயால் வாழ்த்துதல் செய்து, மனோலய முண்டாக விடய வியாபார நீங்கி அருளிற் கலந்திருப்பதன்றோ சிவானந்தம். (எ - று.)

(வி - ரை) வல்வினைச் சுரப்பற்றுப், பந்த முதலிய வொழிந்து இறைவனை வாயாா வாழ்த்தி, நிர்விகாரமாகவிருந்து துதித்தலே பேரின்பமெனை விளக்கினார். 34

பேய்போற் றிரிந்து, பிணம்போற் கிடந், திட்ட பிச்
சையெல்லா-நாய்போ லருந்தி, நரிபோ லுழன்று, நன்மங்
கையரைத்-தாய்போற் கருதித், தமர்போ லனைவர்க்குந்
தாழ்மைசொல்லிச் - சேய்போ லிருப்பர்கண் டீருண்மை
ஞானந் தெளிந்தவரே.

(போ - ரை) மெய்ஞ்ஞானம் அறிந்தவர்கள்: திரிதலில் பேய் போலவும், கிடத்தலிற்பிணம்போலவும், பிறரிட்ட பிச்சையனைத்தும், உண்ணுதலில் நாயெனவும், உழலுவதில் நரியெனவுழன்றும், குல மாதர்களைத் தாயைப்போல நினைத்தும், உலகினரனைவருக்கும் சுற்றத் தினரைப்போல் பணிவு மொழிகளை கூறி, இருக்குந்திறத்தில் குழவி யைப்போல இருப்பர். (கண்டீர்-முன்னிலையசை.) (எ - று.)

(வி - ரை) உண்மைஞான முணர்ந்தோர்: பேய்போற் றிரிதலை யும், பிணம்போற் கிடத்தலையும், நாய்போ லருந்துதலையும், நரிபோ லுழலுதலையும், மாதரைத் தாய்போற் கருதுதலையும், அனைவரிடத் துந் தமர்போல் தாழ்வு கூறுதலையும் உடையராய்ச், சேய்போ லிருப் பாரென்க. 35

விடக்கே! பருந்தின் விருந்தே! கமண்டல வீணனிட்ட
முடக்கே! புழுவந் துறையிடமே! நல முற்றுமிலாச்
சடக்கே! கருவி தளர்ந்துவிட் டாற்பெற்ற தாயுந்தொடாத்
தொடக்கே! உனைச்சுமந் தே,னின்னி னேனுசுகமெனக்கே?

(போ - ரை) மாமிசபிண்டமே! பருந்தெனும் பறவைக்கு விருந்துப்பொருளே! கமண்டல மேந்திய வெறுவியோனுன பிரமன் அமைத்து வைத்த சிறுகுடிலே! புழுக்கள் தங்கும் இடமே! நன்மையென்பது சிறிதும் இல்லாத உடலே அல்லது சட்டையே! அந்தக் கரணம் தளர்ச்சியடைந்தால் ஈன்ற அன்னையும் தீண்டாத தீட்டுப் பொருளே! உன்னைத் தாங்கினேன்; உன்னால் எனக்கென்ன சுகம்? (எ - று.)

(வி - ரை) இவ்வுடலி னுபாசத்திற மனைத்தும் விளக்கியிருத்தல் காண்க. தொடக்கு என்பதற்கு எழுவகைத் தாதுக்களால் பின்னப் பட்டதாகலின் தொடக்கென்றனரென்ப; இறந்தபின்பு எவருந் தொடாத அசுத்தப் பொருளாக மதிக்கப்படுதலிற் தொடக்கென்பதற்குத் தீட்டென்றும். 36

அழுதாற் பயனென்ன? நொந்தாற் பயனென்ன? வாவதில்லை - தொழுதாற் பயனென்ன? நின்னை யொருவர் சுடவுரைத்த - பழுதாற் பயனென்ன? நன்மையுந் தீமையும் பங்கயத்தோன் - எழுதாப்படி வருமோ? சலியாதிரென் னேழைநெஞ்சே!

(போ - ரை) எனது ஏழை மனமே! (ஒரு துன்பம் நேர்ந்த காலத்தில்) அழுதமையாற் பிரயோசனம் யாது? நோதலாற் பயனென்ன? அப்போது வணங்கினுற் பயனென்ன? ஒருவர் உன்னை மனம் வருந்தக் கூறிய குற்றமான செயலாற் பயனென்ன? இவைகளால் ஆகப்போவது ஒன்றும் இல்லை; நல்லவையும் தீயவையும் கமலாசனுன பிரமன் எழுதாவகை வராதிருக்குமோ? சலனமுறாமல் இருப்பாயாக! (எ - று.)

(வி - ரை) சாதன் முதலிய வுண்டாகுங்காலத் தழுதலாலும் தெய்வமே! என நோதலாலும், பிறர் நம்மைத் தொழுதலாலும், இகழ்தலாலும் ஒரு பயனும் ஆவது இல்லை; பிரமலிபிப் பிரகாரம் நன்மையுந் தீமையும் வருமேயன்றி வேறு விதமாக வராதென்க. 37

செல்வரைப் பின்சென், றுபசாரம் பேசித், தினந்தினமும்
பல்லினைக் காட்டி பரிதவி யாமற், பரானந்தத்தி
னெல்லையிற் புக்குநல் லேகாந்த மா,யெனக் காமிடத்தே
யல்லலற் றென்றிருப் பே,னால நீழ லரும்பொருளே!

(போ - ரை) கல்லால நிழலில் எழுந்தருளி யிருக்கின்ற அரிய பரம்பொருளே! சம்பன்னரின் பின்னே போய் உபசாரங் கூறி, நாடோறும் பல்லினைத் திறந்திளித்துக்காட்டி வருந்தாமல், சிவானந்தத்தின் முடிவை அடைந்து, மிகவும் தனிமையாய் என்றனக்கு ஆகிய இடத்தில், சலனம் இன்றி எந்நாளில் இருப்பேன்? (எ - று.)

(வி - ரை) ஆலநிழலரும்பொருளே! செல்வர் பின்சென் றுபசாரம் பேசி நாடோறும் பல்லினைக் காட்டிப் பரிதவியாமல், எனக்கானவிடத்தில் ஏகந்தமாய்ப் பரமானந்த எல்லையை யடைந்து, அல்லலற்று எந்நாளிருப்பேன்? அல்லல்-பிறரிட மிச்சகம் பேச லாதியனவும், கரணேந்திரியங்களின் விடய வியாபாரங்களுமாகும். 38

ஊரீ ருமக்கோர் உபதேசங் கேளு, முடம்படங்கப்
போரீர் சமணைக் கழுவேற்று நீற்றைப், புறந்திண்ணையிற்
சாரீ ரனந்தலைச் சுற்றத்தை நீங்கிச், சகநகைக்க
வரீர், உமக்கவர் தாமே தருவ ரிணையடியே.

(பொ - ரை) ஊரினரே! உங்களுக்கு ஒப்பற்ற உபதேசத்தைக் கேளுங்கள்:-சமணர்களைக் கழுவிலேற்றிய விபூதியை உங்கள் சரீர முழுதும்பூசுங்கள்! மனைவி மக்கள் ஒக்கலென்னுஞ் சுற்றத்தைவிடுத்து, வெளித் திண்ணையில் சிவயோகநித்திரை செய்து கொண்டிருப்பீர்! உலகம் சிரிக்குமாறு, பிச்சை யேற்பீர்களாக! இங்ஙனஞ் செய்வீராளு லுங்களுக்கு அந்தச் சிவபெருமானே அளிப்பார் சரணயுகளங்களை. (எ - று.)

(வி - ரை) தாமின்புறுவது உலகின்புறுவதெனுந் தக்க காரிய லைக் கடைப்பிடித்துத் தம்மை யொப்பப் பெருந் துறவினை யடைந்து சுகமுறுவான் உலகினரை விளித்துரைத்தனர். யான் கூறியாங்குத் துறவறநிலை பெறுதிரேல், திருவடி யின்பத்தினை இறைவன் தாமாக வே நுமக்குத் தருவனென்றனர். இறைவனுக்குத் துறவற மதிக விருப்பமாயுள்ள தென்பதனை விளக்கவும், விபூதியின் மகிமையினை விளக்கவும், 'சமணைக் கழுவேற்று நீற்றை' என்றனர். அது சமண ரால் நீக்கமுடியாத வெப்புநோயை ஞானசம்பந்தப் பெருமான், "மந்திரமாவது நீறு" என்ற தமிழ் வேதம் பாடி, வெப்பு நோயாற்றி, மற்றைய வாதங்களிலும் சமணரை வென்று கழுவேற்றுவித்துப், பாண்டிநாடு முழுமையும் திருநீற்றுவெற்றியை யுண்டாக்கினமையின் என்க. 39

நீற்றைப் புனைந்தென்ன? நீராடப்போயென்ன? நீ மனமே!
மாற்றிப் பிறக்க வகையறிந் தாயில்லை; மாமறைநூ
லேற்றிக் கிடக்கு மெழுகோடி மந்திர மென்னகண்டாய்?
ஆற்றிற் கிடந்துந் துறையறி யாம லலைகின்றையே!

(பொ - ரை) என் மனமே! நீ விபூதியைத் தரித்தென்ன? தீர்த்தங்களில் மூழ்குதற்கு யாத்திரையாகச் சென்று என்ன? இது

காறும் மலத்துட் சிக்கிப் பிறந்ததுபோலன்றி அருளிற் படிய மாற்றிச் சனித்தற்கு முறையை அறிந்துகொண்டாய் இல்லை! சிறந்த வேதாகமங்களில் வைக்கப்பெற்றுக் கிடக்கின்ற சத்தகோடி மகாமந்திரம் என்ன வுணர்ந்தனை? ஆற்றினிற் கிடந்தும் ஏறுந்துறை யறியாமல் அலைகின்றனையே? (எ - று.)

(வி - ரை) விபூதி தாரணமும், தீர்த்த யாத்திரையும், மகாமந்திர செபமும் உடையையேனும், மனமே! அருளுருவமாகி மாற்றிப் பிறத்தற்கு அம்மார்க்கம் எளிதாகவும், அதனை யறியாத நீ ஆற்றிற் கிடந்தும் துறையறியாதார்க்கே இணையாதி. 40

ஓங்கார மாய்நின்ற வத்துவி லேயொரு வித்துவந்து
பாங்காய் முளைத்த பயனறிந் தாற்பதி னாலுலகு
நீங்காம னீங்கி நிறையா நிறைந்து நிறையுருவா
யாங்கார மானவர்க் கெட்டாக் கனிவந் தமர்ந்திடுமே.

(போ - ரை) பிரணவ வடிவமாய் நின்ற பொருளினில் ஒரு விதைதோன்றி முறையாகத், தோன்றின பிரயோசனம் இன்னதென்று தெரிந்துகொண்டால், பதினான்கு உலகமும் வியாபித்திருந்தே வேறாய், குடத்துணீரென நிறையாது ஆகாயம்போலப் பூரணமாகி, அகண்ட பரிபூரணமாய், யானெனும் ஆணவபோதச் சேட்டை யுடையாருக்கு கிட்டாத பழம் வந்து பொருந்தும். (எ-று.)

(வி - ரை) ஓங்காரத்தி லுண்டான வித்தானது இன்னதற்காக வுண்டாயது என்பதனை யறிந்துகொண்டால் அவ்வித்தினால் பதினாலு லோகங்களிலும் நிறையாமல் நிறைந்து நிற்கும் கனியானது கிடைக்கும். இக்கனி வேண்டியவர்கள் தம்மைப் பாதந்திரரெனக் கோட்லாகிய அகங்காரமின்மையை யுடையராதல் வேண்டும். இனி இதற்குப் பிரணவத்துள் நாதமாத்திரையா யெழு முண்மையான

விசாரத்தால் பிரபஞ்சவுருவந் தோன்றாது அந்நாசத்துக்குக் காரணராகிய சிவபெருமான் ஞேன்றுவர் என்றும், பிரணவத்தின் முதலெழுத்தான அகாரமே சிவபெருமானென உள்ளபடி யறிந்தார்க்குச் சர்வபரிபூரணனாகிய அப் பரமசிவன் தானே வெளிப்படுவானென்றும் கூறுப. 41

விதியார் படைப்பும், அரியா ரளிப்பும், வியன்கயிலைப்
பதியார் துடைப்பு,நம் பாலணு காது; பரானந்தமே
கதியாகக் கொண்டுமற் றெல்லாந் துயிலிற் கனவெனநீ
மதியா திருமன மே!யிது காணன் மருந்துனக்கே.

(போ - ரை) மனமே! சிவானந்தமொன்றுமே நாமடையுங் கதியாகக் கருதி மற்றவை யனைத்தும், தூக்கத்தில் சொப்பனம்போல, நீ மதிக்காம லிருப்பாயாக! இது கண்கூடான மருந்தாகும் உன்றனுக்கு; (இவ்வகை யனுபவத்தில் நீ நிற்பையேல்) பிரமருடைய ஆக்கற்றொழிலும், திருமாலாருடைய காத்தற்றொழிலும், பெருமையமைந்த கைலாய நாதரின் அழித்தற்றொழிலும், நம்மிடத்தில் சாராது. (எ - று.)

(வி - ரை) மனமே! பிரபஞ்ச காரியங்களை உறக்கத்துக் கனவையொப்ப மதித்துத், திருவரு ளொன்றையே இலக்காகக் கொண்டு சிவானந்தப்பேற்றை நாடி இருப்பவர்கள்: அயனார் படைப்புளும், அரியார் காப்புளும், அரனு ரழிப்புளும் அகப்படாமல், சனன மரண ரகிதர்களாய், நிரதிசய வின்ப முத்தியாகிய திருவடிப் பேற்றினையே யுறுவர் என்பார், 'இதுகாணன் மருந்துனக்கே' என்ரூர். மூன்றவத்தையினுங் கனவுண்மையிற சொப்பனத்துட் சொப்பனத்தை விளக்குவார், 'துயிலிற் கனவென' என்ரூர். 42

நாய்க்குண்டு தெண்டு; நமக்குண்டு பிச்சை; நமனைவெல்ல
வாய்க்குண்டு மந்திர பஞ்சாட் சரமதி யாமல்வரும்
பேய்க்குண்டு நீறு; திகைப்புண்டு நின்ற பிறவிப்பிணி [கே.
நோய்க்குண்டு தேசிகன் றன்னருணோக்கங்க ளுேக்குதற்

(போ - ரை) நாய்க்கெவ்விடத்திலும் தெண்டித்தின்னலுளது; நமக்கெவ்விடத்திலும் பிச்சையுளது; யமனை வெல்லுதற்கு வாய்க்கு மந்திரமான ஸ்ரீபஞ்சாட்சரமுளது; மதிக்காமல் வருகின்ற பேய்க்குளது திருநீறு; திகைத்தலுற்று நின்ற சனன வியாதியாகிய நோய்க்கு ஞானுசிரியனது அருட்பார்வை நம்மை நோக்குதற்கு உளது. (எ - று.)

(வி - ரை) நாய்க்குத் தெண்டித் தின்னலும், நமக்குப் பிச்சையும், நமனைவெல்ல மந்திர பஞ்சாட்சரமும், மதியாமல் வரும் பேய்க்குத் திருநீறும், திகைப்புண்டு நின்ற பிறவிப்பிணி நோய்க்குத் தேசிகனருள்நோக்கமும் இருத்தலின், நமக்கென்னை குறையுளதென்றனர். தெண்டலென்பது பிறருண்ணுங்காற் கண்ணிமையானது பார்த்திருந்து அவர்களா லிரக்கத்தாலோ மிகுதியாலோ வைக்கப்படு மன்னமாதியை உண்ணலென்ப. இதனைச் சோம்பரைத் தெண்டித் தின்போரென இகழ்ந்து கூறுதலைக்கொண் டுணர்க.

தெண்டெடன்பதனை இலைக்கட்டென்பாரு முளர். 43

நேமங்க ணிட்டைகள் வேதங்க ளாகம நீதிநெறி
யோமங்க டர்ப்பணஞ் சந்தி செபமந்த்ர யோகநிலை
நாமங்கள் சந்தனம் வெண்ணீறு பூசி நலமுடனே
சாமங்க டோறு மிவர்செய்யும் பூசைகள் சர்ப்பனையே.

(போ - ரை) நித்திய நைமித்திய நியமங்களும் பல தேவர்களையுத்தேசித்துப் பலமுறை தியானம்புரிதலும், வேதங்களையும் ஆகமங்

களையும் ஓதுதலும், தருமசாஸ்திர வொழுக்கமும், ஓமங்களும், தருப்பணங்களும், சந்தியாவந்தனமும், பலவகை மந்திரங்களும், யோக மார்க்கத்தில் நிற்றலும், நாமங்களிட்டும், சந்தனமணிந்தும், வெள்ளிய பற்பந்தரித்தும், நன்மையுடனே ஒவ்வொரு சாமத்திலும் செய்கின்ற ஆராதனைகள் வஞ்சனையேயாகும். (எ - று.)

(வி - ரை) வைகறைத் துயிலெழல் முதலிய நியமங்களையும், சூரிய நமஸ்காரம் இஷ்ட தேவதாத்தியானமாதிய நிட்டைகளையும், சுவாத்தியாயபடனம் - ஆகமபாராயணம் - தருமசாத்திர வொழுக்கம் - கணபதியோமம் - அக்கினிகாரியம் - ரிஷி தேவ பிதிர் தருப்பணங்களையும், சந்திசெப மந்திரயோக நிலைகளையும், மண் முதலியவைகளாலிடும் ஊர்த்துவபுண்டரமான நாமங்களையும், சந்தனாதிகளா லிடப்படுகின்ற திலதங்களையும், பஸ்மத்தாலாகிய திரிபுண்டரோத் தூளனாதிகளையும் உடையாராய், யாமங்கள்தோறு மின்னோர் செய்யும் சூரியநாராயணர் பைரவமூர்த்தியாதி தேவ பூசைகளெல்லாம் ஆராயுமிடத்தில் பொய்யாகுமேயன்றி மெய்யாகாதாதலின், அத்தகைய போலிச்செயலில் மயக்கங்கொண்டு நிற்காமல் நிரதிசய வின்பவீடான திருவடியின்பத்தைத் தரும் சிவஞான செல்வத்தினையளிக்கும் அருணிலையில் நிற்பதே தகுதியென்றனர்.

இனி, மனத்தினை புறத்தினில் அலையவிடுத்துச் செய்யும் நேமநிட்டைகள் பயனற்றன என்பதே கருத்தென்பாரும், மனத்தினை யொருவழிப்படுத்தி வேறு சிந்தனை சிறிதுமின்றி மேற்கூறியவற்றைச் செய்யிற் பயனுண்டா மென்பாரும் உளர். ஞானசாரமின்றிச் செய்யுங் கிரியையாதிகள் ஆராயுங்கால் சர்ப்பனையே என்பாரும் உளர். இவ்வாசிரியரோ,

"கையொன்று செய்ய, விழியொன்று நாடக்,கருத்தொன் றெண்ணப்
பொய்யொன்று, வஞ்சக நாவொன்று பேசப், புலால் கமழும்

மெய்யொன்று சார, செவியொன்று கேட்க, விரும்புமியான்
செய்கின்ற பூசை யெவ்வாறுகொள் வாய்?வினை தீர்த்தவனே!"
என்று கூறுவதனுற் காண்க. 44

நாளெனத் தனைபுத்தி சொன்னாலும் கேட்கிலை நன்னெஞ்ச
யேனிப் படிகெட் டுழலுகின் றாய்?இனி யேதுமில்லா [மே!
'வானத்தின் மீனுக்கு வன்றூண்டி லிட்ட வகையதுபோற்'
போனத்தை மீள நினைக்கின் றனை;என்ன புத்தியிதே.

(போ - ரை) நான் எவ்வளவு புத்தியைக் கூறினாலும் கேட்டா யில்லை, ஏனிவ்வாறு அழிந்துழலுகின்றனை? இனிமேல் யாதொரு சம்பந்தமும் இல்லாத ஆகாயத்திலுள்ள மீனெனப் பெயருள்ள உடுக்கணங்களைப் பிடித்தற்கும் பெரிய தூண்டில் முள்ளினை மூடன் இட்டவாறுபோல், ஆராயுங்கால் இல்லாததாய்ப்போன உலக சுகத்தைத் திரும்பவும் வேண்டுமென்று எண்ணுகின்றனை. இது என்ன அறிவு? (எ - று.)

(வி - ரை) இருவினைச் செறிவா லுண்டாகும் இன்பதுன்பங்களான சுகதுக்கங்கள் ஆராய்ச்சியிற் பொய்யாகித் திருவடியின்பமொன்றே மெய்யாக விளங்கவும், மாயாபோகங்களை யேன் மெய்யாகக் கருதி விழைகின்றனை? விழையாதை! என்றனர். இதற்கு, ஒருவன் சென்ற விஷயங்களைப்பற்றி மீட்டுமீட்டு மெண்ணி வருந்தல் ஆகாயத்திலுள்ள விண்மீனைப் பிடிக்க வேண்டுமெனக் கருதிப் பூமியிலிருந்தபடி தூண்டின்முள்ளைப் போடக் கருதும் அறிவீனத்தினை யொக்கும் என்று கூறுக. 45

அஞ்சக் கரமெனுங் கோடாலி கொண்டிந்த வைம்புலனும்
வஞ்சப் புலக்கட்டை வேரறவெட்டி, வளங்கள்செய்து,

விஞ்சத் திருத்திச், சதாசிவ மென்கின்ற வித்தையிட்டுப்,
புஞ்சக் களைபறித் தேன், வளர்த் தேன், சிவ போகத்தையே.

(போ - ரை) பஞ்சாட்சரமென்று சொல்லப்படுகின்ற கோடாரியைக்கொண்டு, இந்த ஐம்புலனென்னும் பொய்யறிவான கட்டையை முதலறச் சேதித்து, (அந்நிலத்தை) வளமாகச் செய்து, மிகவுந் திருத்தஞ் செய்து, சதாசிவமென்று சொல்லப்படுகின்ற விதையை நட்டுக், கூட்டமான களையைப் பறித்துச், சிவபோகமென்னும் பயிரை வளர்த்தனன். (எ - று.)

(வி - ரை) ஐம்புலனும் வஞ்சப்புலக்கட்டையை அஞ்சக்கரமென்னும் கோடாரிகொண்டு வேரற வெட்டி, அவைகளின் வாதனைகளை மறத்தலான வளங்களை யமைத்துச், சதாசிவமென்னும் விதையை நட்டுத், தத்துவக்கூட்டமாகிய களைகளைப் பறித்துச், சிவபோகத்தை வளர்த்தே னென்றனர். இனி, ஒருவனுக்கு ஸ்ரீபஞ்சாட்சர செபமிருக்குமானால் ஐம்புலச் சேட்டைகள் ஒடுங்கும்; ஒடுங்கினால், மனம் நிலையுறும்; உற்றால், அது சதாசிவத்தியானத்துக் கேதுவாகும்; ஏதுவாகவே, சிவபோகம் விளையும் எனவும் கூறுப.

கோடாலி-குடாரம் என்னும் வடமொழியின் திரிபு. ஐம்புலன்கள்-சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பனவாம். ஐம்புலனுக்கும் வஞ்சப்புலக்கட்டை வேரற வெட்டுதல் - ஷெ ஐம்புல ஆசைகளையும் முற்றும் அடக்கி ஆளுதல். 46

தாயாருஞ், சுற்றமும், பெண்டிருங், கைவிட்டுத் தாழ்ந்திடுநாள்-"நீயாரு? நானார்?" எனப்பகர் வாரந்த நேரத்திலே-நோயாரும் வந்து குடிகொள்வரே; கொண்ட நோயுமொரு-பாயாரு நீயுமல் லாற்பின்னை யேதுநட் பாமுடலே!

(போ - ரை) மாதாவும், பந்துக்களும், மனைவியரும், கைசோர விடுத்துப் பின்னிடைகின்ற காலத்தில், "நீயார்? நான் யார்?" என்று கூறுவர்; அந்தச் சமயத்தில், வியாதியும் வந்து நிலையுறும்; மேற்கொண்ட வியாதியும், கிடைக்குமொரு பாயும், நீயுமன்றி வேறு உறவு யாது? எனது சரீரமே! (எ - று.)

(வி - ரை) எனது உடலமே! செல்வாதிகளுடன் நீ பிறர்க்குபயோகமாகும் வண்ணம் உலாவிய காலத்தில், "நாங்கள் தாயார்" எனவும், "நாங்கள் மனைவியர்" எனவும் உறவாடுவோர், நினக்கு நோயுண்டாகி, நீ பாயிற் கிடந்து, இனித் தேறு யென்றுருகுங்கால், கொண்ட நோயும் பாயுமன்றி, நினக்கு இவர் துணையாகா ரென்பதை உலக அனுபவத்தாலறிந்து, இன்னாரிடத்து நீ வைத்துள்ள அபிமானத்தை விடுத்துத் திருவருளினை நாடுவாயாக! என்றனர். ஆர் என்பது உகரச்சாரியை பெற்று 'ஆரு' என நின்றது. 47

ஆயும் பொழுது மயிர்க்கால்க டோறு மருங்கிருமி
தோயு மலக்குட்டை யாகிய காயத்தைச் சுட்டுவிட்டாற்,
பேயு நடன மிடுங்கட மாமென்று பேசுவதை
நீயு மறிந்திலை யோ?பொருடேட நினைந்தனையே.

(போ - ரை) விசாரிக்குங் காலத்தில், ரோமத்துவாரங்கள் தோறும் சிறு புழுக்கள் படிந்து கிடக்கின்ற மலநிறைந்த பள்ளமாகிய உடலத்தைத் தகனஞ் செய்தால், "பிசாசுங் கூத்தாடுகின்ற காடாகும்" என உலக முரைப்பதனை நீயுங் கேட்டுணர்ந்தா யில்லையோ? (இவ்வுடலைக் காத்தற்குச்) செல்வந் தேடக் கருதினையே! இஃதென்னை? (எ - று.)

(வி - ரை) உரோமத்துவாரங்கள் தோறும் சிறுபுழு நிறைந்த மலக்குட்டையாகிய இத்தேக நட்டமுற்ற பின்னர்ச்சுட்ட சுடலைக்

களம், "பேயு நடமிடுங் காடாகும்" எனப் பேசுவதைக்கேட்டிலையோ? மனமே! இதனை வளர்க்கப் பொருள் தேட நினைந்தனை! இஃதாச்சரியம்! இவ்வுடன்மீது வீணாசை வையாதை! என்று மனதை நோக்கிக் கூறினர்.

'அருங்கிருமி' என்பதில் அருமை இங்குச் சிறுமையை யுணர்த்தி நின்றது. 48

பூணும் பணிக்கல்ல, பொன்னுக்குத் தானல்ல, பூமிதனைக்
காணும் படிக்கல்ல, மங்கையர்க் கல்ல, நற் காட்சிக்கல்ல,
சேணுங் கடந்த சிவனடிக் கல்ல, என் சிந்தைகெட்டுச்
சாணும் வளர்க்க வடியேன் படுந்துயர் சற்றல்லவே.

(பொ - ரை) அணிந்துகொள்ளும் ஆபரணத்துக்கன்று, பொன்னைச் சேகரிக்கும் பொருட்டன்று, நிலமுடையேனாதலைக் காணுதற்கன்று, மடந்தையர் பொருட்டன்று, நல்ல காட்சிக்கு அன்று, ஆகாயத்தையும் நீங்கி நிற்கிற சிவபெருமானது பாதத்திற்கன்று; என் மனம் அழிந்து, சாண் வயிற்றையும் வளர்த்தற்கு அடியேனடைகின்ற துன்பம் கொஞ்சமன்று. (எ- று.)

(வி - ரை) திருவெண்காடர் கொங்குநாட்டில் மௌன விரதத்துடன் சஞ்சரித்த காலத்திற் பசிப்பிணியையடக்க ஒருவன் வீட்டு வாசலிற் சென்று நின்றனர். நின்ற இவரை வீட்டுக்குடையோன், கள்வனென நினைத்துக் கோலாற் புடைத்தனன். புடைத்தபொழுது அடிகள், "சிவ சிவ" என்றனர். இச் செயலினைக்கண்ட எதிர்வீட்டுக்காரன் ஓடிவந்து அம் மூர்க்கனை வைது, இவரைப் பெரியோரென மதித்தழைத்துச் சென்று உபசாரத்துடன் உணவளித்தனன். அக்காலத்திற் 'பூணும் பணிக்கல்ல' என்னும் இக்கவியை யடிகளருளிச் செய்தனரென்ப ஔவையாரும்.

"மானங் குலங்கல்வி வண்மை யறிவுடைமை
தானந் தவமுயற்சி தாளாண்மை-தேனின்
கசிவந்த சொல்லியர்மேற் காமுறுதல் பத்தும்
பசிவந்திடப் பறந்து போம்."

என்றனர். பசிநோய் யாவற்றினும் கொடியதென்பது கருத்து. 49

வெட்டாத சக்கரம், பேசாத மந்திரம், வேறொருவர்க்
கெட்டாத புட்ப, மிறையாத தீர்த்த, மினிமுடிந்து
கட்டாத லிங்கங், கருதாத நெஞ்சங், கருத்தினுள்ளே
முட்டாத பூசையன் றோ? குரு நாதன் மொழிந்ததுவே.

(பொ - ரை) ஒன்றனிற் பொறிக்காத யந்திரமும், வாயினாற் செபிக்காத மந்திரமும், மற்றொருவருக்குப் பறிக்கப்படாத புட்பமும் அருக்கிய முதலியவையாக இறைக்காத தீர்த்தமும், இனிமையாக முடிந்து தாரணை செய்யாத இலிங்கமும், தியானஞ் செய்யாத மனமும், எண்ணத்துக்கு எட்டாத பூசனை யன்றோ, குருசிரேட்டன் எனக்கு உபதேசித்தது. (எ - று.)

(வி - ரை) பாகிய பூசைக்கு இடம் பொருள் ஏவல் முதலிய வேண்டி யிருத்தலின் துறவறத்தினருக்குக் கண்டசாத்தியமெனவும், அதனால் திருவுளக்கேடு உண்டாத லுண்மையால் துறவினை யடைந்த தமக்கு அந்தரியாகமேசிறந்ததெனே ஆசிரியர் உபதேசித்தனரென்பார், 'குருநாதன் மொழிந்ததுவே' என்றார். 50

எருமுட்டை பிட்கி லுதிர்ந்திடுஞ் செல்லுக் கெவரழுவார்?
கருமுட்டை புக்குக் கழலகன் றுய்கன துக்கமதாய்ப்
பெருமுட்டுப்பட்டவர் போலழும் பேதையீர்! பேத்துகிறீர்;
எருமுட்டும் வீட்டு மரணும மென்றைக்கு மோதுமினே!

(பொ - ரை) (தாயின்) கருப்பமாகிய முட்டையிற் புகுந்து, சிவபெருமானுடைய திருவடிகளை வீணே நீங்கினாய்! (அவ்வாறு நீங்கிப் பயனிழந்த உன்னைக்குறித்து வருந்தாமல் இத்தேகம்நீங்கியதைக் குறித்து) மிக்க தடையை யடைந்தவர்களைப்போல மிகுந்த துன்பமுடையவராக அழுகின்ற அறிவிலிகளே! என் கலங்குகின்றீர்கள்? எருமுட்டையை உடைத்தால் அதினின்றும் சிந்துகின்ற சிதலுக்கு யாவரழுவர்? (ஒருவரும் அழார்) (ஆகையால்) வினையின் வசப்பட்ட தேகம் விழுதலைக்குறித்து வருந்தாதீர்கள்! ஒருவகைக் குறைவும் வராமற் செய்கின்ற, சிவபெருமானது திருநாமத்தை எந்நாளிலும் துதியுங்கள்! (எ - று.)

(வி - ரை) எருமுட்டையை உடைத்தால் அதினின்றும் விழுஞ் செல்லுக்கு எவருமழாமையை யொப்ப, இத்தேக நீக்கத்துக்காகவும் வருந்துவதிற் பயனில்லை; அரனுமொன்றே பயன் தரத்தக்கது; ஆதலின், அதனையே யுரைக்க வுலகீர் விரும்புதிர்! விரும்புதிரேல் நற்கதி யுறுதிர் என்றனர். 51

மையாடு கண்ணியு, மைந்தரும், வாழ்வு, மனையுஞ், செந்தீ
யையா!நின் மாயை யுருவெளித் தோற்ற மகிலத்துள்ளே
மெய்யா யிருந்தது; நாட்செல நாட்செல, வெட்டவெறும்
பொய்யாய்ப், பழங்கதை யாய்க்,கன வாய்,மெல்லப் போன
[துவே.

(பொ - ரை) செவ்விய தீயினைக் காத்தி லேந்திய ஐயனே! நினது மாயையான உருவெளித் தோற்றமானது உலகத்தினுள்ளே, மையணிந்த கண்களையுடைய மனைவியும், புதல்வரும், செல்வத்தோடு கூடி வாழ்தலும், வாழ்க்கை செய்கின்ற வீடும் என உண்மையாக

இருந்தது; அவ் வுருவெளித் தோற்றம் காலம் போகப்போக, முற்றிலும் பொய்யாய்க், கேள்விப்பட்ட பழைய கதைபோல்வதாய், சொப்பனங்கண்டதுபோலாகி, மெல்லெனக் கழிந்தது; (எ - று.)

(வி - ரை) செவ்விய தீயினைக் கையிலேந்திய ஐயனே! மனைவியும் மைந்தரும்-வாழ்வும்-வீடுமாதிய வனைத்தும் தேவரீரது மாயா லீலையால் பொய்த்தோற்றமா யுள்ளதெனத் திருவருளா லுணர்ந்தேன்; ஆதலின், இனித் திருவடிப்பேறொன்றே நித்தியமானதென அறிந்தேன் என்றனர். இனி, உலகத்தைப் பரீட்சியாமல் வெளிநாட்டத்துடன் வாழ்ந்த நாளில் அனைத்தும் உண்மைப் பொருளெனத் தோன்றினவெனவும், முறையே தத்துவசோதனை செய்த காலத்தில் அவரவர்கள் கன்மத்துக்கேற்ப, இறைவன் மாயையினின்று காரியப்படுத்தி வைத்த பதார்த்தங்களாக விளங்குதலும், அவையிடத்திருந்த பற்றொழிந்தவுடன் அவை மீட்டு முண்மைப்பொருளாகத் தோன்றுத லில்லையாதலின், 'மெல்லப் போனதுவே' என்றனர் என்றுங் கூறுக. 52

ஆபாய் பலகலை; ஆய்ந்திடுந் தூய வருந்தவர்பாற்
போயா கிலுமுண்மை யைத்தெரிந் தாயில்லை; பூதலத்தில்
வேயார்ந்த தோளியர் காமவி காரத்தில் வீழ்ந்தழுந்திப்
பேயாகி விழிக்கின் றனை,மன மே!என்ன பித்துனக்கே?

(பொ - ரை) எனது நெஞ்சே! பல நூல்களையும் ஆராயுந்திறமில்லாய்; நூல்களை யாராய்கின்ற பரிசுத்தமான அரிய தவத்தினரிடத்தில் சென்றாலும் உண்மையை யறிந்தாயில்லை; உலகத்தில் மூங்கிலனைய தோள்களையுடைய மங்கையரின் இச்சையாகிய விகாரத்தில் விழுந்து முழுகிப் பிசாசுபோலாகி விழித்து நிற்கின்றனை; என்ன பைத்தியம் உனக்கு? (எ - று.)

(வி - ரை) உண்மை நூல்கள் பலவற்றைக் கற்றலும் கேட்டலு மாகிய இவை யுடையராயிற் றெளிதலு நிட்டை கூடுதலுமாகிய இவை யெளிதிற் கிட்டுமாதலின் முன்னிரண்டனைக் குறித்தனர். உண்மைநூலுணர்ந்தாரை யுற்றே கேட்கவேண்டு மென்பார், 'போயா கிலும்' என்றனர். பெண் வலைப்பட்டார்க்கு நூலாராச்சி கிட்டாதென் பார், 'என்ன பித்து' என்றனர். உண்மை யென்றது, ஆன்மதரிசன சிவதரிசனங்களை என வுணர்க. இனி, பொதுவிலக்கணங் கூறுவது வேதம், சிறப்பிலக்கணங் கூறுவது ஆகமம். ஆதலின் ஆகமங்களை யாராய்ந்திலை யென்பார், 'உண்மையைத் தெரிந்தாயில்லை' என்றனர். "ஆரண நூற்பொதுச் சைவ மருஞ்சிறப்பு நூலாம்" என்பது சிவஞான சித்தியார். என்றும் கற்றலுங் கேட்டலும் வேண்டுமென்பார், 'ஆயாய்' என்றும்; 'போயாகிலும்' என்ற வும்மை அவர் வராமையைச் சுட்டு கின்றதென்றுங் கூறுப. 53

அடியா ருறவு மரன்பூசை நேசமு மன்புமன்றிப்
படிமீதில் வேறு பயனுள தோ?பங் கயன்வகுத்த
குடியான சுற்றமுந், தாரமும், வாழ்வுங், குயக்கலங்கள்
தடியா லடியுண்ட வாறொக்கு மென்றினஞ் சார்ந்திலரே.

(பொ - ரை) சிவபத்தர்களின் நேசமும், பூசையில் விருப்பமும், பத்தியும் அல்லாமல், இவ்வுலகத்திலே வேறு பிரயோசன முளதோ? பிரமன் படைத்த ஒரு குடும்பத்திற் பிறந்த உறவும், மனைவியும், வாழ்க்கையும், குயவனாற் செய்யப்பெற்ற மட்பாத்திரங்கள் தடியினா லடிபட்ட தன்மையை ஒத்திருக்கும் என்று கருதி (நிலையில்லாமை யைக் கண்டு) இன்னமுந் துறவைச்சார்ந்தார் இல்லையே. (எ - று.)

(வி - ரை) மனிதனாகப் பிறந்த ஒருவன் கட்டாயமாக அடைய வேண்டியது, அடியாருறவையும், அரன்பூசை நேசத்தையும், அன்

பையுமாம். இவையல்லாதவனற்றூற் பயனின் றென்றனர். அடிய ரிடத்தும் பூசையிலும் அன்பிலுமே இறைவன் விளங்குதலி னவை களைக் கூறினர். 54

ஆங்காரப் பொக்கசம்; கோபக் களஞ்சியம்; ஆணவத்தால்
நீங்கா வரண்மனை; பொய்வைத்த கூடம்;விண் ணீடிவளர்
தேங்கா பெருமதிற் காமவி லாசமித் தேகங்கந்தல்;
பாங்கா யுனைப்பணிந் தெப்படி ஞானம் பலிப்பதுவே?

(போ - ரை) நானென்பது இருக்கிற பண்டாரம்; கோபமென் பது இருக்கிற பண்டசாலை; ஆணவமானது விடாமலிருக்கிற அரண் மனை; பொய்யை வைத்திருக்கிற கூடம்; வானத்தில் உயர்ந்துவளர்ந்த நிறைவு பொருந்திய உயர்ந்த மதிலினையுடைய காமவிலாசம் ஆகிய இவ்வுடலம் பல துவாரங்களை யுடைமையில் கந்தலேயாம்; முறையாய் உனைவணங்கி எவ்வாறு ஞானசித்தி பெறுவது? (எ - று.)

(வி - ரை) இறைவனே! இத்தேகமானது ஆங்காரம், கோபம், ஆணவம், பொய், காமம் இவைகளுக் கிருப்பிடமான கந்தலாதலால் இதனில் வாழ்ந்துகொண்டு உன்னை வணங்கி யுன்னு லளிக்கப்படும் ஞானசித்தியை எவ்வாறடைவது என்றனர். இவ்வாறன்றி உடலையே விளித்து உரைத்தன ரென்பாரு முளர். 'பாங்கா யுனைப்பணிந் தெப்படி ஞானம் பலிப்பதுவே' என்பதற்கு, "நீ பக்குவமாக இருக்க, உன்னை வணங்கி உணவு முதலியவைகளா லுபசரித்தால் எப்படி ஞானம் கைகூடுவது?" என்ப. 55

ஒழியாப் பிறவி யெடுத்தேங்கி யேங்கி யுழன்றநெஞ்சே!
அழியாப் பதவிக் கவுடதங் கேட்டி! அநாதியனை,
மழுவாள் கரத்தனை, மால்விடை யானை, மனத்திலுன்னி
விழியாற்புனல்சிந்தி,விம்மியழு,'நன்மை வேண்டு'மென்றே.

(பொ - ரை) நீங்காத சனன மெடுத்து, எக்கமுற்றுக் கீழு மேலுமாகச் சுழன்ற நெஞ்சமே! அழிவில்லாத வீட்டுலகமடைதற்கு மருந்து கேட்பாயாக! என்று முள்ளவனை, மழுவுமானுமேந்திய கரங்களையுடையானை, பெருமையாகிய ரிஷபத்தை யுடையவனை நெஞ்சினினைத்து, கண்களி லானந்தக்கண்ணீர் ஒழுகவிடுத்து, 'அடியேன் கருதிய நன்மையைத் தரல்வேண்டும்' எனத் துதிப்பாயாக! இதுவே மருந்தாகும். (எ - று.)

(வி - ரை) அழியாப் பதவியை விழைந்தார் அழியாதானையே வேண்டுதல் வேண்டுதலின், 'அநுதியனை' எனவும்; கண்ணீர் கம்பலையாதிகளுடன் யாசித்தார்க்கே அதுகிட்டுமாதலின், 'விம்மியழு' எனவும்; விம்மி யழவே வேண்டுமென்பதனை, "மெய்தானரும்பி விம்மி யழுதாற் பெறலாமே" என்பதனாலு மறிக. அநுதியானவனிவனென விளக்குவான், 'மழுமான்கரத்தனை மால்விடையானை' என்றனர். 56

நாய்க்கொரு சூலு மதற்கோர் மருத்துவ நாட்டிலுண்டோ?
பேய்க்கொரு ஞானம் பிடிபடு மோ?பெருங் காஞ்சிரங்காய்
ஆக்குவ ரார தருந்துவ ரார துபோலுடம்பு
தீக்கிரை யாவதல் லாலேதுக் காமிதைச் செப்புமினே!

(பொ - ரை) நாய்க்கு முயற்சியுடன் வளர்க்கவேண்டிய கருப்பமும், அப்படிக் கருப்ப முண்டாக்குதற்கு ஒரு வைத்தியமும் உலகத்தில் உளதோ? பிசாசினுக்கு ஒப்பற்ற ஞானம் மனதிற் பதியுமோ? பெரிய எட்டிக்காயைச் சமைப்பவர்கள் யாவர்? அதனைத் தின்னுபவர்கள் யார்? அதனைப்போல, இச் சரீரம் நெருப்புக்கு உணவு ஆதலன்றி வேறெதற்கு ஆகும்? இதனை உரையுங்கள்!(எ-று.)

(வி - ரை) இச் செய்யுளைப் பத்திரகிரியார்க்குத் தேகத்தினிழிவைச் செவியறிவுறுத்த அடிகள் கூறினரென்ப. நாய்க்குக் கருவுண்டாக எவரும் வைத்தியஞ் செய்ய முன்வராவாறு, பேயனையானுக்கு எவரு ஞான முணர்த்தார் பயனின்மை கருதி என்றனர். உணவுக்குதவாத எட்டிக்காயைச் சமைப்பாருந் தின்னுவாரும் இல்லாவண்ணம் பிரயோசனமற்ற வுடலை விரும்புவாரும், அதனாலின்ப நுகருவாரும் அறிஞரி லெவரு மிலரென்க என்றனர். நாய்க்குண்டான சூலைக்கவனித்து மருத்துவஞ் செய்வா ரில்லாமைபோல், பேய்போ லுழலுஞ் சமுசாரிகளுக்கு ஞானோபதேசஞ் செய்வாருமெவரு மிலரெனவும், பயனற்ற எட்டியையொப்ப, இவ்வுடலமும் தீக்கிரையாகி ஒரு பயனு மில்லாதொழியு மெனவுங் கூறினரெனினுமாம். 57

கச்சிற் கிடக்குங் கனதனத் திற்கடைக் கண்கள்பட்டே
இச்சித் திருக்கின்ற வேழைநெஞ் சே!இம வான்பயந்த
பச்சைப் பசுங்கொடி யுண்ணா முலைபங்கர் பாதத்திலே
தைச்சுக் கிடமன மே!யொரு காலுந் தவறில்லையே

(பொ - ரை) (இறுக்கிக்கட்டிய) கச்சுக்குள் கிடக்கும் பெருத்த கொங்கைகளில் உன்கடைக்கண்பார்வை பட்டதினாலே அதனையே விரும்பியிருக்கின்ற வீரமற்ற நெஞ்சமே! மலையரசன் பெற்ற பச்சை நிறமும் பசுமையு மமைந்த கொடிபோல்பவளாகிய அபீதகுசாம்பிகையை ஒரு புறத்தி லுடையவரான சிவபெருமானது திருவடிகளில் பொருந்திக்கிட! நெஞ்சமே! ஒருகாலத்திலும் தவறுதல் உண்டாகாது; (எ - று.)

(வி - ரை) கொடியிடை மடவியர் கொங்கைக் குடங்களில் அடுகளிறனைய ஆண்மக்கள் சிக்குண்டு கிடத்தல் இயல்பாதலின்

'தனத்தில் இச்சித்திருக்கின்ற வேழை நெஞ்சே' எனவும்; திருவடி ஞானமே சிவகதிக்கேதுவாதலின், 'தைச்சுக்கிட' எனவும் அருளிச் செய்தனர். திருவடி யடைதலே சிவகதி யென்பதனைத்,

"திருவடி யேசிவ மாவது தேரிற்
றிருவடி யேசிவ லோகஞ் சிந்திக்கிற்
றிருவடி யேசெல் கதியது செப்பிலற்
றிருவடி யேதஞ்ச முட்டெளி வார்க்கே."

என்னுந் திருமந்திரத்தா லுணர்க. 58

மாஞர் விழியைக் கடந்தேறி வந்தனன்; வாழ்குருவும் [லை
கோஞகி யென்னைக் குடியேற்றிக் கொண்டனன்; குற்றமில்
போஞலும் பேறிருந் தாலுநற் பேறிது;பொய்யன்றுகாண்,
ஆஞலு மிந்த வுடம்போ டிருப்ப தருவருப்பே.

(போ - ரை) மான்போலும் பார்வையினையுடைய மாதரின் கண்களைத் தப்பி (உயர்ந்த அறவறமென்னும் மேட்டிலேறி வந்துளேன்;) இறைவன் திருவடிநிழலில் வாழ்கின்ற ஞாஞசாரியனும் எனக்கு ஆசிரியஞகி அடியேனைத் திருவடிநிழலிற் குடியேறச் செய்தனன்; தோடமில்லை, இவ்வுட லழிந்துபோஞலும் இனி யான் அடைவது திருவடிப்பேற்றையே; அழியாதிருந்தாலும் அடைவது நல்ல திருவடிப்பேற்றையே; இஃதுண்மையே ஆகிலும் இந்தத்தேகத்துடன் இருப்பது வெறுப்புக்கிடமே யாகும். (எ - று.)

(வி - ரை) மிகுந்த துன்பத்துக் கிடமான மாதர் கண்வலையினின்று தப்பி, சற்குரு கடாட்சம் அடைந்து, திருவருள் வீட்டில் குடியிருத்தலால், முத்திபெறுவது திண்ணம். ஆகிலும், இவ்வுடலுடனிருப்பது மாத்திரம் அருவருப்புக் கிடமென்றனர். 59

சற்று கினுந்தன்னைத் தானறி யாய்! தனை யாய்ந்தவரை
யுற்று கினுமுரைக் கப்பொருந் தாய்!உனக் கானநிலை [ன்
பற்றாய்! குருவைப் பணியாய்! பரத்தையர் பாலிற்சென்றெ
பெற்றாய்? மடநெஞ்ச மே!யுனைப் போலில்லை பித்தனுமே.

(போ - ரை) சிறிதேனும் உனது தன்மையை நீ உணர்ந்திலை; தன்னை விசாரித்துணர்ந்தோரை அடைந்தாயினும் அவர்களுரைக்கக் கேளாய்! உனக்குரியதான நிலையை யடையாய்; ஆசாரியனை வணங்காய்! வேசையரிடஞ் சென்று யாது பெற்றனை? அறியாமையினை யுடைய மனமே! உன்னைப்போல் பைத்தியக்காரனும் இல்லை. (எ-று.)

(வி - ரை) ஆன்மாவாகிய தன்னை அரனுடைமை யெனவும், நித்தியனெனவும், சதசத்தெனவும் அறிதலே தன்னைத்தான் அறிதலாம். மேற்கூறியவண்ணம் தன்னை யுணர்ந்து தலைவனையடைந்த ஆசிரியர்களே தனை யாய்ந்தவராவார்? திருவருளைப்பற்றிக் கிடத்தலே உனக்கான நிலையாம். இவைகளை யெல்லா முக்கியமாக அடைதற்கு வேண்டியது ஆசிரிய வழிபாடேயாகும். 60

உளியிட்ட கல்லையும், ஒப்பிட்ட சாந்தையும், ஊத்தை யறப், புளியிட்ட செம்பையும், போற்றுகி லேனுயர் பொன்னெனவே, யொளியிட்ட தாளிரண் டுள்ளே யிருத்துவ துண்மையென்று, வெளியிட் டுடைத்துவைத் தேனினி மேலொன்றும் வேண்டிலனே.

(போ - ரை) உளியினால் கொத்துவேலை செய்யப்பட்ட கல்லுருவத்தையும், உறுப்புக்களை நிரம்ப அமைத்த சுண்ணச் சிலையுருவத்தையும், களிம்பு நீங்கப் புளியிட்டுத் துலக்கிய செப்புருவத்தையும்

துதித்து வணங்கேன்; மாற்றுயர்ந்த பொன்னைப் போலவே பிரகாசிக்கின்ற உபயபாதங்களையும், நெஞ்சினின்பதிய வைப்பது உண்மையெனப் பிறரறியச் செய்து இருதய குகைக்குள் அவ்வடிமலர்களைப் பத்திரப்படுத்தி வைத்தனன்; இதன் பின்னர் ஒன்றையும் விரும்புபவனல்லேன். (எ - று.)

(வி - ரை) இதற்கு, வெளிமுகத்திற் கற்சிலையினையும் சாந்துருவத்தினையும், பொற்சிலையினையும், தாம்பிரச்சிலையினையும் தரிசிக்குங்கால் தரிசிப்பவர்க்கு அவை சுத்தம் நிசவடிவமாக விளங்குவதையன்றித் தெய்வ வடிவமாகச் சிந்தித்தற்குப் பக்குவமில்லேனாகலின், அப்பாவனையில் அபசாரப்படாது உண்முகத்திற் சிவபெருமான் றிருவடிகளைத் தியானித்துய்வேனென்றனர் எனவும்;விக்கிரகங்களைத் தெய்வமாகப் பாவியாது தெய்வங்களை விக்கிரகங்களாகத் தியானித்தல் இழுக்காகும். அது அதி தீவிர பக்குவமுடையார்க்கே விளங்குமாகலானும். பக்குவம் விளையாதவழி, மனத் தியானத்திலேயே திருத்தியடையவேண்டியதாகலினாலும், 'இனி மேல் ஒன்றும் வேண்டிலனே' என்றனர் எனவும்; இங்ஙனம் பொருள் கொள்ளாது, சிலர், ஆசிரியர் விக்கிரகாராதனையை மறுத்துக் கூறினர் என்பர் எனவும்; இங்ஙனங் கூறுவோர், 'தாளிரண்டு' எனத் திருவடியைக் குறித்த உண்மையே உணராதாராவர் எனவும்; தாள் உருவத்திற்கன்றி அருவத்திற்கின்றென்பதை யாவருமறிவர். தாள் என்பதற்கு வேறு பொருள் கூறி இடர்ப்படுவாருமுளரென்று கூறுவர் சிலர். இவையுள் விக்கிரகங்களைத் தெய்வமாகப் பாவியாது தெய்வத்தை விக்கிரகமாகப் பாவிக்கவேண்டுமாதலினாலும் என்ற வசனம் ஊன்றி யாராயத்தக்க நுண்ணியதோரரிய விடயமே யாகும்.

வேறு சிலர், 'அடிகள் உளியிட்ட கல்லையும் ஒப்பிட்ட சாந்தையும் ஊத்தையறப், புளியிட்ட செம்பையும் துதித்து வணங்கேன்,

உயர்ந்த பொன்னை யொப்பப் பிரகாசிக்கின்ற பிங்கலை இடகலை என்ற இரண்டு சரங்களையும் உள்ளே அடக்குவது புறத்திற் செல்லாது உள்ளே யடக்குநெறி உண்மைநெறி என்று வெளியிட்டு அவ்விரண்டு கலைகளையும் வெளியிடாது பத்திரப்படுத்திவைத்தேன் என யோகநூலார் கூறுவர்' என்பர்.

பின்னும் இவர், மானதபூசை கைவந்தவராகையால் 'உளியிட்ட கல்முதலியவற்றைப் போற்றுகிலேன்' என்றார் என்றுங் கூறுவர். ஒவ்வொருவருந் தத்தங் கொள்கைக் கிணங்கப் பொருள் கொள்ளுமாறு சொற்றொட ரமைத்து யாப்புறுத்தஆசிரியர் திறமும் ஆராய்ச்சிக்காரர் திறமும் வியக்கத்தக்கனவேயாகும். ஆசிரியர் வெண்காட்டடிகளின் றிருவாக்கான இச்செய்யுள் அவரவர் தகுதிக்கிணங்கப் பொருள்தரத் தக்கதாகவே விளங்குகின்றது. ஒருவர் கொள்கையை யொருவர்மறுத்துக் கூறினும் ஆசிரிய வசனத்தினை அனைவரு மங்கீகரித்தே நிற்கின்றனர்.

ஆசிரியரை நோக்கிச்சில கிரியாகாண்டிகள், "நீர் சைவத்துறவினராக விளங்கியும், கணபதி சங்கராதிகளி னுருவங்களை வணங்க ஆலய முதலிய இடங்களுக்கு வராமல் ஒரே இடத்திலிருந்து கண்மூடிக் கொள்ளுதல் தகுதியோ?" என்று கேட்டனரென்றும், அங்ஙனம் கேட்டாரைச் சுட்டியே இக்கவி யடிக ளருளிச்செய்ததெனவும், இக்கவியில் போற்றுகிலே னென்ற சொல்லினை வினுக் குறிப்பாகக் கொண்டு எடுத்த லோசையாற் கூறிப் 'போற்றுமலா இருக்கிறேன்; போற்றிக்கொண்டே யிருக்கின்றேன்' என்பார், 'பொன்னெனவே ஒளியிட்டதா ளிரண்டுள்ளே, யிருத்துவதுண்மை என்றனர்' என்றுங் கூறுப.

பட்டினத்தடிகள் மானதபூசை கைவந்தவ ராதலால் பகிர்ப்பூசையை வெறுத்தன ரென்பார். பகிர்ப்பூசை செய்வோ ரெல்லாம்

நாடோறும் மானதபூசை யுடையவராகவே இருக்கின்றாரென்பதனை மறந்தாரேயாவர். உளிபிட்ட கல் முதலியவைகளை மூடர்களே போற்றுவர்; சிவ சமஸ்காரம் பெற்ற பின்னரே அறிஞர் விக்கிரகங்களை வணங்குவர். மதிற் புறங்களிலும் கோபுரங்களிலுங் காணப்படும் கற்சிலைகளை எவரும் வணங்காதிருத்தல் எதனாலெனவும், ஆலயங்களிற் பிரதிட்டிக்கப்பட்டுள்ள கற்சிலைகளைக் கண்டவுடன்வணங்குவது எதனா லென்பதனையும் ஊன்றி ஆராய்வார் நன்குணர்வர். ஆசிரியர் விக்கிரகாராதனையை மறுத்திலரெனவும், உடன்பட்டவரே யாவரெனவும், விக்கிரகாராதனையின் செயலைச் சிவபூசை முதலியவைகளை தீட்சாக் கிரமங்களுடன் அறிந்தனுஷ்டிப்பவர்க ளறிவார்கள். விக்கிரகங்கள் முன்னிலைச் சுட்டென்பதனையும், சமஸ்காரத்தால் வணங்க யோக்கியதை யுற்றனவென்பதனையும் உணர்ந்தவர்கள் விக்கிரகாராதனையை மறுத்திலரென வறிவர். 61

திருச்சிற்றம்பலம்.

---

## தாயாருக்குத் தகனகிரியை செய்கையிற் பாடிய

### வெண்பா



ஐயிரண்டு திங்களா வங்கமெலா நொந்துபெற்றுப்;
பையலென்ற போதே பரிந்தெடுத்துச்,—செய்யவிரு
கைப்புறத்தி லேந்திக் கனகமுலை தந்தாளை,
எப்பிறப்பிற் காண்பே னினி?

(போ - ரை) பத்துமாதங்கள் ஐயோவென்னுமாறு சுமந்து கான் முதற் றலையளவுள்ள உறுப்புக்களனைத்தும் வருத்தமடைந்து பிரசவித்து, ஆண்குழந்தையென அருகிலுள்ளார் கூறக் கேட்டவுடனே விரும்பிக் கைதனி லெடுத்துச் செவ்விய இரண்டு கையினிடத்திற் றூங்கிப், பொன்னணிபூண்ட ஸ்தனங்களிலுள்ள பாலினையுண்ணுமா றளித்த அன்னையை, இனி எந்தப் பிறப்பிற் காணப்போகின்றேன்? (காணேன் என்பது கருத்து.) (எ - று.)

(வி - ரை) அன்னையானவள் தான் பெறுதற்கு மிக்க கவலை யுண்டாகி இளைப்புற்றுக் கிடக்குங் காலத்தில், ''பிறந்தது ஆண் மகவு'' என்று சொல்லக் கேட்டால், இளைப்புக் களைப்புகளை ஒரு பொருட்டாக மதியாது விரைந்தெழுந்து குழந்தையை யெடுத்துப் பாலூட்டுவது உலக வழக்கமாதலை யிங்கு விளக்கி, அவ்வாறு தம்மை யுஞ் செய்த அன்னை யிறந்ததற்காக இரங்கி, 'எப்பிறப்பிற் காண் பேனினி' என்றனர். பெண் குழந்தையினிடத்து அன்னையருக்கு அவ்வளவு அன்பிராதென்பது இதனால் விளங்குகின்றது. ஒருமுறை யொருவனுக்கு அன்னையாக நின்றவள் மற்றொரு பிறப்பினும் அன்னையாவாளென்னு நியதி யின்மையால், 'எப்பிறப்பிற் காண் பேனினி' என்றனர். 1

முந்தித் தவங்கிடந்து, முந்நூறு நாளளவும்
அந்திபக லாச்சிவனை யாதரித்துத்,—தொந்தி
சரியச் சுமந்துபெற்ற தாயார் தமக்கோ
எரியத் தழன்மூட்டு வேன்?

(போ - ரை) (சந்தானம் வேண்டுமென) முன்னே தவஞ் செய்துகிடந்து, (அத்தவ பேற்றால்) கருப்பதிந்த நாள்முதல் முந் நூறுநாள் வரையும் இரவிலும் பகலிலும் ஆகச் சிவபெருமானைப்

பிரார்த்தித்து, வயிறு முன்தள்ள என்னைச் சுமந்து பிரசவித்த அன்னைக்கோ பற்றி யெரியும்வண்ணம் தீயைப் பற்றவைப்பேன்? (எ-று.)

(வி - ரை) இச் செய்யுளை அடிகள் தமதன்னைய ரிறந்துபோனவுடன் அவருடலைச் சுற்றத்தார் சுமந்து சுடலைக்குக் கொண்டுவருதலைக் கண்டு அவர்களைக் கல்லா லெறிந்து துரத்தித் தாமே சவத்தினை யெடுத்துச் சென்று சுடலைசேர்த்து தகனஞ்செய்யத் தொடங்கியபொழு துரைத்ததென்ப. முந்நூறுநாள் என்றது பத்துமாதத்தை.

வட்டிலிலுந், தொட்டிலிலு, மார்மேலுந், தோண்மேலுங்
கட்டிலிலும் வைத்தென்னைக் காதலித்து—முட்டச்
சிறகிலிட்டுக் காப்பாற்றிச் சீராட்டுந் தாய்க்கோ
விறகிலிட்டுத் தீமூட்டு வேன்?

(பொ - ரை) துணியா லுண்டாக்கப்படுகின்ற எணையிலும், மரமுதலியவற்றாற் அமைக்கப்பட்ட தொட்டிலிலும், தனது மார்பகத்தும், புயத்தின்மீதும், மஞ்சத்திலும் இருத்தி, என்னை விரும்பி முற்றிலும் கக்கத்தில் வைத்துக் காப்பாற்றிச் சிறப்பனைத்துஞ் செய்யும் அன்னைக்கோ கட்டையில் வைத்துத் தீயைப் பற்றவைப்பேன்? (எ - று.)

(வி - ரை) சிறு குழந்தைகள் அழுகிற சமயத்தில் அன்னையர் கட்டில் வட்டில் முதலிய பல விடங்களில் கிடத்தித் தூங்கச்செய்யும் வழக்கத்தினால், 'வட்டிலிலுந் தொட்டிலிலு மார்மேலுந் தோண்மேலும்' என்றனர். 3

நொந்து சுமந்துபெற்று, நோவாம லேந்திமுலை
தந்து, வளர்த்தெடுத்துத் தாழாமே—அந்திபகல்

கையிலே கொண்டென்னைக் காப்பாற்றுந் தாய்தனக்கோ
மெய்யிலே தீமூட்டு வேன்?

(போ - ரை) (அதிகப்) பிரயாசையுடன் வயிற்றில் (பத்துமாதம் வரையில்) தாங்கிப், பின்வருந்திப் பிரசவித்து, எனக்கு நோவாத வண்ணம் கையிற் றூங்கிப் பாலூட்டி, வளர்த்து உயர்த்தி, தாழ்ச்சியின்றி இரவும் பகலும் கையில் தாங்கி, என்றனை வளர்த்த அன்னைக்கோ உடலத்தில் தீயெரிய வைப்பேன்? (எ - று.)

(வி - ரை) என்னால் தனக்கெவ்வளவு துன்ப முண்டானாலும் அதனை யொருபொருளாக மதியாது என்னை வளர்த்த என்னருமைத் தாயினுடலை 'எவ்வாறு தீ மூட்டுவேன்' என்றார். 4

அரிசியோ நானிடுவே னுத்தா டனக்கு
வரிசையிட்டுப் பார்த்து மகிழாமல்,—உருசியுள்ள
தேனே! அமிர்தமே! செல்வத் திரவியப்பு
மானே! எனவழைத்த வாய்க்கு?

(போ - ரை என்னைப்பெற்ற தாய்க்கு வரிசைவைத்துக் கண்டு களிப்புறாமல், (என்னைச்) சுவையுள்ள தேனேயெனவும், அமுதமேயெனவும், செல்வத்தினையுந் திரவியத்தினையுமுடைய அரசனே! எனவும் விளித்த வாய்க்கு அரிசியையோ நானிடாநிற்பேன்? (எ-று.)

(வி - ரை.) இனிய பல சொற்களாலென்னை யன்புட னழைத்த என் தாயின் வாயில் யான் அரிசியையோ அள்ளியிடுவேன்? புமான்-ஆண்மகன். அரிசி என்றது வாய்க்கரிசியை. 5

அள்ளி யிடுவ தரிசியோ? தாய்தலைமேற்
கொள்ளிதனை வைப்பேனோ? கூசாமன்—மெள்ள

முகமேன் முகம்வைத்து முத்தாடி யென்றன்
மகனே! எனவழைத்த வாய்க்கு..

(பொ - ரை) மெல்லெனத் தன் முகத்தின்மீது என் முகத்தினை வைத்து முத்தமிட்டு, 'எனது புதல்வா!' என்று விளித்தவாய்க்கு அரிசியையோ அள்ளிப்போடுவது? (அதுவுமல்லாமல்) கூச்சமின்றிக் கொள்ளியையும் வைப்பேனோ? (எ - று.) 6

## விருத்தம்

முன்னை யிட்டதீ முப்பு ரத்திலே;
பின்னை யிட்டதீ தென்னி லங்கையில்;
அன்னை யிட்டதீ யடிவ யிற்றிலே;
யானு மிட்டதீ மூள்க! மூள்கவே!

(பொ - ரை) முதலில் (சிவபெருமானால்) இடப்பட்ட நெருப்பு திரிபுரத்தின்கண் (மூண்டெரிந்தது); அதன்பின்னர் வானரருட் சிறந்த அநுமானால் இடப்பட்ட நெருப்பு அழகிய இலங்கா நகரத்துள் (மூண்டெரிந்தது); என் மாதா எனக்கிட்ட நெருப்பு வயிற்றின் அடியில் (மூண்டெரியாநின்றது); ஆதலின், நானும் என் அன்னையினுடலிலிட்ட நெருப்புப் பற்றுக! பற்றுக! (எ - று.)

(வி - ரை) சிவபெருமானும் அநுமானும் அன்னையுமிட்ட தீ புரதகனத்துக் கேற்பன வாதலின் யானிட்ட நெருப்பும் மாதாவின் சரீரமாகிய புரத்தைத் தகனஞ் செய்க என்றனர். 7

## வெண்பா

வேகுதே தீயதனில்; வெந்துபொடி சாம்ப
லாகுதே; பாவியே னையகோ!—மாசக்

குருவி பறவாமல் கோதாட்டி யென்னைக்
கருதி வளர்த்தெடுத்த கை.

(போ - ரை) வானிற் பறக்குங் குருவிகள் என்னேரே பறவா வண்ணம் என்னைப் பாராட்டி, இவனால் யான் அனைத்து முடையே னுவேனென எண்ணி என்னை வளர்த்த அத்தங்கள் நெருப்பினில் வேகின்றதே; வேவானின்று பொடியான சாம்பலாக ஆகின்றதே; இதனைக் கண்டு மிருக்கின்றேன். ஐயகோ! (எ - று.)

(வி - ரை) இளங்குழந்தைகளைச் சில பறவைகளின் சாயை படியவைத்திருந்தால் அதனாற் சில நோய்கள் குழந்தைகளுக் குண்டாகுமென்பது மருத்துநூல் வழக்காதலின், அவ்வா றுண்டாகா வண்ணங் கையில் வைத்துக் காத்த அன்னையினுடலம் வெந்து சாம்பராதலைக் காணவும் விதியிருந்ததே என இரங்கினர். 8

வெந்தாளோ சோணகிரி வித்தகா! நின்பதத்தில்
வந்தாளோ! என்னை மறந்தாளோ!—சந்ததமும்
உன்னையே நோக்கி யுகந்துவரங் கிடந்தென்
றன்னையே யீன்றெடுத்த தாய்.

(போ - ரை) அருணசல வடிவாக விளங்கும் ஞானவுருவனே! எப்பொழுதும் உன்னையே தியானித்து மகிழ்வுடன் வரம்வேண்டி, என்னைப் பெற்ற அன்னை வெந்துபோயினளோ! உனது திருவடி நிழலில் வந்து சேர்ந்தாளோ? என்னை மறந்துவிட்டாளோ அறிகிலேன்; (எ - று.)

(வி - ரை) உலகினர், மக்களைப் பெறு மருமை பெருமைகளையும், தமது அன்னையின் அரிய தவச்செயலையும் நினைந்து வருந்தினரென்க. 9

வீற்றிருந்தா ளன்னை; வீதிதனி லிருந்தாள்;
நேற்றிருந்தாள்; இன்றுவெந்து நீறானாள்;—பாற்றெளிக்க
எல்லீரும் வாருங்கள்! ஏதென் றிரங்காமல்
எல்லாம் சிவமயமே யாம்.

(பொ - ரை) தாயானவள் சுகமாகவிருந்தாள்; வீதியிலு முலாவி யிருந்தனள்; நேற்று உயிரோடிருந்தனள்; இத்தினம் வேவுற்றுச் சாம்பலாயினாள்; இஃதென்னேயென வருந்தாமல், பால் தெளித்தற்கு அனைவரும் வாருங்கள்! அனைத்தும் சிவமயமேயாகும்; (எ - று.)

(வி - ரை) தோன்றலும், வளர்தலும், அழிதலும் புதிய செய லன்றாதலின் வருந்தாது, வெந்து சாம்பரான அன்னைக்குப் பால் தெளிக்க வாருங்கள்! என்றனர். 10

## திருவிடைமருதூர்



மென்று விழுங்கி விடாய்கழிக்க நீர்தேடல்
என்று விடியுமெனக் கென்கோவே!—நன்றி
கருதார் புரமூன்றுங் கட்டழலாற் செற்ற
மருதா;உன் சந்நிதிக்கே வந்து.

(பொ - ரை) தம்மை யுயர்த்திய நன்றியை நினையாதாரின் முப் புரங்களையும் மிகுந்த நெருப்பினால் நீறாக்கிய இடைமருதீசனே! உனது சன்னிதானத்துக்கே வந்து, உணவை மென்று விழுங்கி, தாகத்தை நீக்கிக்கொள்ள நீரைத் தேடுகின்ற தொழிலானது எனக்கு எந்நாளி லொழியும்? (எ - று.)

(வி - ரை) உணவருந்தலும், நீர் வேட்டலும் நின் தியானத்துக்கு முட்டானவையாதலின் அவை 'எனக்கென் கொழியும்' என்றனர். 1

## திருவொற்றியூர்

கண்டங் கரியதாம்; கண்மூன் றுடையதாம்;
அண்டத்தைப் போல வழகியதாம்;—தொண்டர்
உடலுருகத் தித்திக்கு மோங்குபுக ழொற்றிக்
கடலருகே நிற்குங் கரும்பு.

(போ - ரை.) மிக்க புகழினையுடைய ஒற்றிமாநகர்க் கடலருகில் விளங்கும் கரும்பானது: கண்டங்கரியதாகும்; கண்கள் மூன்றையுடையதாகும்; ஆகாயத்தையொப்ப அழகினையுடையதாகும்; அடியவர்களின் உடலும் குழைந்துருகும்படி இனிக்கும்; (எ - று.)

(வி - ரை) ஒற்றிக்கடலருகிலுள்ள கரும்பு: கண்டங் கரியதும், கணுக்கள் மூன்றினை யுடையதும், தொண்டர் உடலுருகத் தித்திப்பதுமாகும் என்றனர். கண்டங்கரியது-கண்டமில்லாதது, அல்லது கற்கண்டில்லாதது. கண்-கணு. 2

ஒடுவிழுந்து சீப்பாயு மொன்பதுவாய்ப் புண்ணுக்
கிடுமருந்தை யானறிந்து கொண்டேன்;—கடுவருந்தும்
தேவாதி தேவன் றிருவொற்றி யூர்த்தெருவிற்
போவா ரடியிற் பொடி.

(போ - ரை) கட்டிகளுண்டாகிச், சீப்பாயாநின்ற நவத்துவாரங்களையுடைய உடலாகிய புண்ணுக்கு இடுகின்ற மருந்தினை நான்

அறிந்து கொண்டேன்; (என்னெனின்,) விடபானஞ் செய்யும் தேவாதி தேவனது திருவொற்றியூர் வீதியின்கண் நடப்பவர்களுடைய திருவடியிலுள்ள துகளேயாம். (எ - று.)

(வி - ரை) திருவொற்றியூர் வீதியிலுலவுவோ ரடியிற் பொடியானது ஒன்பது அவாரங்களையுடைய உடலாகிய புண்ணுக்கு மருந்தாக அறிந்தே னென்றனர். அது அத்தலப் பெருமையைச் சுட்டியென் றுணரவும். 3

வாவியெல்லாந் தீர்த்த(ம்); மணலெல்லாம் வெண்ணீறு;
காவனங்க ளெல்லாங் கணநாதர்;—பூவுலகில்
ஈது சிவலோக மென்றென்றே மெய்த்தவத்தோர்
ஓதுந் திருவொற்றி யூர்!

(பொ - ரை) இது பூலோக சிவலோகம் எனப் பன்முறை கூறி உண்மைத் தவமுடையா ருரைக்கின்ற திருவொற்றியூரிலுள்ள தடாக மனைத்துந் தீர்த்தங்கள்; மணல் அனைத்தும் வெள்ளிய விபூதி; சோலைகளு நந்தவனங்களு மாதியவனைத்தும் சிவகண நாதர்களாகும்; (எ-று.)

(வி - ரை) திருவொற்றியூரானது பூலோக சிவலோகம்; அதன் கணுள்ள தடாகங்கள் புண்ணிய தீர்த்தங்கள்; மணலனைத்தும் விபூதி; சோலை நந்தவன மாதிய சிவகணநாதர் என்றனர். 4

## திருவாரூர்



ஆரூர ரிங்கிருக்க வவ்வூர்த் திருநாளென்
றாரூர்க டோறு முழலுவீர்!—நேரே

உளக்குறிப்பை நாடாத வூமர்கா ணீவிர்
விளக்கிருக்கத் தீத்தேடு வீர்.

(போ - ரை) திருவாரூருடையா ரிவ்விடத்தி லிருக்க அந்த ஊரில் திருநாளென்று ஊர்கள்தோறும் ஊர்கள்தோறும் சென்று அலைவோரே! நேராக மனக்கருத்தை ஆராயாத மூகர்களே! நீங்கள், தீபம் இருக்க நெருப்பைத் தேடுகின்றீர்கள். (எ - று.)

(வி - ரை) "நகரின் மேன்மைபெற்றது கமலாலயநகரம்" என்ப. ஆதலிற் சிறந்த ஆரூர் நாதனை வணங்குவதை விடுத்து ஊர் ஊர்தோறு முழலுவது, விளக்கினைக் கையிலேந்திக்கொண்டு தீயை நாடுதலை யொக்கும் என்றனர். 5

எருவாய்க் கிருவிரன்மே லேறு புழுக்கூண்டுக்
கருவாய்க்கோ கண்கலக்கப் பட்டாய்!—திருவாரூர்த்
தேரோடும் வீதியிலே செத்துக் கிடக்கின்றாய்,
நீரோடுந் தாரைக்கே நீ.

(போ - ரை) மலத் துவாரத்திற்கு இருவிர லளவிற்கு மேல் உயர்ந்து காணப்படுகின்ற கிருமிக்கூண்டான பிறப்பிடத்திற்கோ கண்கலக்க முற்றனை? திருவாரூரில் தேரோடுந் தெருவில் இறந்து கிடக்கின்றனை, நீரொழுகுந் துவாரத்துக்காக நீ. (எ - று.)

(வி - ரை) 'எறுபுழுக் கூண்டு' என்பதற்குப் பதில் 'எறுண் டிருக்கும் எனவும் பாடமுண்டு. மலத்துவாரத்துக் கிருவிர லுயரத் துள்ள சலத்துவாரத்தினை விரும்பித் தெருவிலிறந்து கிடக்கின்றனை யென மடந்தையர் காமத்தாற் கொலையுண்ட வொருவனைச் சுட்டி யுரைத்தனர் என்க.

'தன்னை யடுத்திருந்த ஒரு நல்லடியார் தன் கட்டளைப்படி விவாகஞ் செய்து வாழ்ந்துகொண்டிருக்கையில், பெண் சம்மந்தமான சுகஜன்னி கண்டு மாண்டுபோக, அது தெரிந்து அவனைச் சமீபித்து, இத் திருச்செய்யுளைப் பாடி எழுப்பிவிட்டனர்' என்றுங் கூறுவர். 6

## திருக்காஞ்சி



எத்தனையூர்? எத்தனைவீ(டு?) எத்தனைதாய்? பெற்றவர்கள்
எத்தனைபே ரிட்டழைக்க வேனென்றேன்—நித்தம்
எனக்குக் களையாற்று மேகம்பா! கம்பா!
உனக்குத் திருவிளை யாட்டோ?

(போ - ரை) திருவேகாம்பரத்தினையும், கம்பா நதியினையும் உடைய பெருமானே! எத்தனை யூர்கள்? எத்தனை வீடுகள் எத்தனை அன்னையர்கள்! ஈன்றவர்கள் எத்தனைப் பெயர்களை இட்டு விளிக்க தினம் ஏனென்று கேட்டேன்; (இவ்வாறு சுழலும்) அடியேனுக்கு உண்டாகும் இளைப்பை ஆற்றுவாய்! தேவரீருக்கு இது ஒரு திருவிளையாட்டா யிருக்கிறதோ? (எ - று.)

(வி - ரை) பிறப்பெடுத்த ஊருக்கும், வீட்டிற்கும், அன்னையருக்கும், இட்டபெயருக்கு ஏனென்றதற்கும் அளவின்மையின், அத்தகைய பிறவியை யொழித்தருளுவீராக! என்றனர். 7

## திருக்கச்சிக்காரோணம்



அத்திமுதலெறும்பீ றானவுயி ரத்தனைக்குஞ்
சித்த மகிழ்ந்தளிக்குந் தேசிகா!—மெத்தப்

பசிக்குதையா! பாவியேன் பாழ்வயிற்றைப் பற்றி
யிசிக்குதையா! காரோண ரே.

(பொ - ரை) யானைமுதல் எறும்பு இறுதியாகவுள்ள சீவர்கள் அவ்வளவிற்கும் திருவுள மகிழ்ந்து அவைகளுக்கு வேண்டியவைகளைக் கொடுக்கின்ற தேசிகனே! மிகவும் பசிக்கின்றது. ஐயனே! பாவியான அடியேனது பாழான வயிற்றைப் பிடித்து இழுக்கின்றது. ஐயனே! திருக்காரோணத்தி லெழுந்தருளியிருக்குங் கடவுளே! (எ - று.)

(வி - ரை) காரோணத்தையனே! அனைத்துயிர்களின் இட்டங்களை யளிக்குங் கடவுள் தேவரீராதலின் அடியேனுடைய பசிப்பிணியை யொழிக்க வேண்டுகின்றே னென்றனர். 8

## திருக்காளத்தி



பொய்யை யொழியாய்; புலாலைவிடாய்; காளத்தி
யையரை யெண்ணாய்; அறஞ்செய்யாய்;—வெய்ய
சினமே யொழியாய்; திருவெழுத்தைந் தோதாய்;
மனமே! யுனக்கென்ன மாண்பு.

(பொ - ரை) மனமே! பொய்பேசுவதை ஒழிக்கின்றாயில்லை; ஊனுண்பதை விடுகின்றாயில்லை; திருக்காளத்தி இறைவனை நினைக்கின்றாயில்லை: தருமஞ் செய்கின்றாயில்லை; கடியகோபத்தை யொழிக்கின்றாயில்லை; ஸ்ரீபஞ்சாட்சரத்தை ஓதுகின்றாயில்லை; உனக்கு என்ன மாட்சிமை யுளது? (எ - று.)

(வி - ரை) மனமே! பொய்யொழிதலாதிய நற்செய லெவையுமில்லாதபோது நீ மாண்புடையை யல்லை என்றனர். 9

## திருவிருப்பையூர்



மாதா வுடல்சலித்தாள்; வல்வினையேன் கால்சலித்தேன்;
வேதாவுங் கைசலித்து விட்டானே;—நாதா!
இருப்பையூர் வாழ்சிவனே! இன்னமோ ரன்னை
கருப்பையூர் வாராமற் கா!

(போ - ரை) (என்னைப் பெற்ற) அன்னை உடல் தளர்ந்தனள்; வலிய வினையினையுடைய யான் கால் சலிப்புற்றேன்; பிரமனும் கை தளர்ந்துவிட்டான்; நாதனே! திருவிருப்பையூரில் வாழுஞ் சிவபெருமானே! இனிமேலும், ஒரு தாயின் கருப்பப்பையாகிய ஊரினில் வாராமல் அடியேனைக் காத்தருள்! (எ - று.)

(வி - ரை) அன்னைமுதலிய அனைவருஞ் சலித்தனராதலிற் பிறவி வேண்டேன் என்றனர். 10

## திருவையாறு



மண்ணுந் தணலாற, வானும் புகையாற,
எண்ணரிய தாயு மிளைப்பாறப்—பண்ணுமயன்
கையாறவு மடியேன் காலாறவுங் கண்பார்!
ஐயா! திருவை யாறா!

(போ - ரை) என் தந்தையே! திருவையாற்றானே! பூமியானது நெருப்புத் தணியவும், ஆகாயமானது புகை யடங்கவும், அளவற்ற அன்னையர்கள் இளைப்பொழியவும், படைக்கின்றபிரமனது கைகள் இளைப்பாறவும், அடியேனுடைய கால்கள் இளைப்பாறவும் கருணைக்கண்ணாற் பார்த்தருளுவீராக! (எ - று.)

(வி - ரை) யாஞெருவன் பிறப்பதனுல் மண் - வான் - தாய் - அயன் ஆதியருந் துன்புறவேண்டியிருத்தலின், அடியேன் வருத்தத்துடன் மண்ணுதியின் இளைப்பு மொழிய கருணைக்கண்ணுற் பாரும் என்றனர். 11

## திருக்குற்றலம்

காலன் வருமுன்னே, கண்பஞ் சடைமுன்னே,
பாலுண் கடைவாய் படுமுன்னே,—மேல்விழுந்தே
உற்ருர ழுமுன்னே, யூரார் சுடுமுன்னே,
குற்ருலத் தானையே கூறு!

(போ - ரை) யமன் வருவதற்கு முன்னே, கண்கள் பஞ்சடைவதற்கு முன்னே, பாலாகியவுணவு கடைவாயின் வழி யொழுகுதற்கு முன்னே, உடன்மீது விழுந்து உறவின ரழுதற்குமுன்னே, ஊரினர் (மயானத்திற்குக் கொண்டுபோய்த்) தகனஞ் செய்வதற்கு முன்னே, திருச்குற்ருலத் திறைவரையே துதிப்பாயாக! (எ - று.)

(வி - ரை) மரண வேதனைக்கு முன்னரே சிவத்தியானஞ் செய்தால் நற்கதி பெறலாமென்பது கருத்து. 12

## போது

சிற்றம் பலமுஞ் சிவனு மருகிருக்க
வெற்றம் பலந்தேடி விட்டோமே;—நித்தம்
பிறந்திடத்தைத் தேடுதே பேதைமட நெஞ்சம்;
கறந்திடத்தை நாடுதே கண்.

(போ - ரை) சிற்றம்பலமும் சிவபெருமானும் அருகில் இருக்க வெறுமையாகிய அம்பலத்தைத்தேடிக்கொண்டோம்;(என்னெனின்) நாள்தோறும், அறியாமையினையும் மடைமையினையுமுடைய நெஞ்சமானது, பிறந்த தானத்தை நாடுகின்றது; நயனங்கள், பால் கறந்த தானத்தை நாடுகின்றன. (எ - று.)

(வி - ரை) தோற்றுவாயான நிதம்பத்தினையும், பாலுணவினையளித்த தனத்தினையு முறையே மனமுங் கண்ணும் நாடியும் பார்த்து மயங்குதலாற் பிறப்பே யுண்டாகுமாதலி னவைகளை யொழித்தல் வேண்டு மென்றனர். பிறந்திடம்-பெண்குறி. கறந்திடம்-தனம். 1

தோடவிழும் பூங்கோதைத் தோகையுனை யிப்போது
தேடினவர் போய்விட்டார் தேறியிரு!—நாடிநீ
என்னை நினைத்தா லிடுப்பி லுதைப்பேனுன்
உன்னை நினைத்தா லுதை.

(போ - ரை) இதழ் விரிந்த மலர்மாலை யணிந்த கூந்தலினையு மயிலனைய சாயலினையுமுடைய மாதே! இந்தச் சமயத்தில் உன்னை நாடினவர் போய்விட்டனர்; மனம் தெளிந்திருத்தி! நீ யென்னை விரும்பி நினைத்தனையேல் நான் உனதிடையிலுதைப்பேன்; உன்னை யான் நினைத்தால் நீயென்னை இடுப்பி லுதைப்பாயாக! (எ - று.)

(வி - ரை) இச்செய்யுள் அருணைமாநகரில் அடிகளருளிச் செய்த தெனவும்; அருணகிரிநாதரின் அன்னையைப்பார்த் துரைத்த தெனவும் வழங்குவர். இதன் விவரங்களை யருணகிரிநாதர் புராணத் துட் காண்க. 2

வாசற் படிகடந்து வாராத பிச்சைக்கிங்
காசைப் படுவதில்லை யண்ணலே!—ஆசைதனைப்

பட்டிறந்த காலமெலாம் போதும் பரமேட்டி!
சுட்டிறந்த ஞானத்தைச் சொல்!

(போ - ரை) தெருவாசற்படியைக் கடந்து கொண்டுவந்திடாத பிச்சைக்கு விருப்பங்கொள்வது இங்கில்லையாகும். சுவாமியே! (அங்ஙனம்) அப் பிச்சையினுக்கு ஆசையுற் றழிந்த காலமனைத்தும் போதுமானது. சிவபெருமானே! சுட்டிறந்த ஞானத்தை அடியேனுக்கு அருள்செய்! (எ - று.)

(வி - ரை) திரிபுடியில்லாத ஞானம் வேண்டு மென்றனர் திரிபுடியாவது-ஒன்றனைச் சுட்டுபவனாகிய ஞாதுருவும், சுட்டப்படுபொருளாகிய ஞேயமும், சுட்டுதற் றொழிலாகிய (மனத்தின் செயலான) ஞானமும் ஆகிய மூன்றுமென வறிக. இறந்தகாலம்-கழிந்த காலம் எனினும் பொருந்தும். 3

நச்சரவம் பூண்டானை நன்றாய்த் தொழுவதுவும்,
இச்சையிலே தானங் கிருப்பதுவும்,—பிச்சைதனை
வாங்குவது முண்பதுவும், வந்துதிரு வாயிலிலே
தூங்குவதுந் தானே சுகம்.

(போ - ரை) விடத்தினையுடைய பாம்பினையணிந்த சிவபெருமானை, நன்மை பெற வணங்குவதும், இஷ்டம்போல இருத்தலும், பிச்சை யெடுப்பதும், உண்ணுவதும், ஆலயவாயிலையடைந்து உறங்குவது மன்றோ சுகம். (எ - று.)

(வி - ரை) பசிக்கு இரந்துண்டு பரசிவாலய வாயிலிற் படுத்துறங்குவதே சுகமென்றனர். 4

இருக்கு மிடந்தேடி யென்பசிக்கே யன்னம்
உருக்கமுடன் கொண்டுவந்தா லுண்பேன்—பெருக்க

அழைத்தாலும் போகேன் அரனே! என்றேகம்
இளைத்தாலும் போகே னினி.

(பொ - ரை) சிவபெருமானே! யானிருக்குமிடத்தையாராய்ந்து எனது பசியைத் தணித்தற்குச் சோற்றைப் பரிவுடன் கொண்டுவந் தாற் புசிப்பேன். மிகவும் வருந்தி யழைத்தாலும் போகமாட்டேன். இனி எனதுடலம் இளைப்படைந்தாலும் போகமாட்டேன். (எ - று.)

(வி - ரை) மாதுகர பிச்சையானது விருப்பு வெறுப்புக்களுக் கிடமான தாதலின் அயாசித பிச்சையே இனி யருந்துவேனென்ற னர். 5

விட்டுவிடப் போகுதுயிர்; விட்டவுடனே யுடலைச்
சுட்டுவிடப் போகின்றார் சுற்றத்தார்;—பட்டதுபட்
டெந்நேரமுஞ் சிவனை யேத்துங்கள்! போற்றுங்கள்!
சொன்னே னதுவே சுகம்.

(பொ - ரை) உலகினரே! உங்களுடலைவிடுத்து உயிர்போகப் போகின்றது; அங்ஙனம் உயிர் நீங்கியவுடனே உறவினர் தேகத்தைத் தகனஞ்செய்துவிடப் போகின்றார்கள். என்ன பாடு பட்டாயினும், எப்பொழுதும், சிவபெருமானைத் துதியுங்கள்! வணங்குங்கள்! அவ் வாறு செய்வதே சுகமாகும்; உங்களுக்குரைத்தேன். (எ - று.)

(வி - ரை.) இவ்வுடலை விடுத்து உயிர் போவதும், உயிர் போகிய பின்னர், உறவினர் உடலைச் சுட்டுவிடுவதும் அனுபவசித்தமாதலின், உடலுள்ளபோதே இறைவனைத் தியானித்து நற்கதி பெற விரும்புங் கள்! என வுலகினரைச் சுட்டிக் கூறினர். 6

ஆவியொடு காய மழிந்தாலு மேதினியில்
பாவியென்று நாமம் படையாதே!—மேவியசீர்
வித்தார முங்கடம்பும் வேண்டா மடநெஞ்சே!
செத்தாரைப் போலே திரி.

(போ - ரை) அறியாமையோடு கூடிய மனமே! உயிருடன் கூடிய சரீரம் அழிந்தாலும் உலகத்தில் பாவியென்று பெயர்படைக்காதே! பொருந்திய செல்வச் சிறப்பும், பொய்யுலகரோடு உறவாந் தன்மையும் உனக்கு வேண்டாம்; இறந்தாரை யொப்பாக வுலவுவாயாக! (எ - று.)

(வி - ரை) நீ பாவியெனப் பெயரைப் படையாமலும், செல்வ வித்தாரத்தைக் காட்டாமலும், உலகினரோ டுறவு கொள்ளாமலும் செத்தாரை யொப்பத் திரிந்தாற் சிவானுபவ சித்தி யெளிதிற் கைகூடிவரு மென்றனர். 7

வெட்ட வெளியான வெளிக்குந் தெரியாது;
கட்டளையுங் கைப்பணமுங் காணாதே;—இட்டமுடன்
பற்றென்றாற் பற்றாது; பாவியே னெஞ்சிலவன்
இற்றெனவே வைத்த வினிப்பு.

(போ - ரை) பாவியாகிய எனது மனதில், அக் கடவுள், இத் தன்மைத் தென்னும்படி அமைத்த இனிமையானது, வெறு வெளியான வெளிக்குந் தெரியாது; கட்டளையும் கைப்பணமும் காண மாட்டாது. பிரியத்துடன் பிடி யென்றாலும் பிடியாது. (எ - று)

(வி - ரை) அந்தக் கடவுளளித்த சுகம் எவரானும் எதனாலும் அறிதற்கரிய நுண்ணியதென்பது கருத்து. 8

### பின்முடுகு வெண்பா

இப்பிறப்பை நம்பி யிருப்பரோ? நெஞ்சகமே!
வைப்பிருக்க, வாயின் மனையிருக்கச்,—சொப்பனம்போல்
விக்கிப்,பற் கிட்டக், கண் மெத்தப்பஞ் சிட்!டப்பைக்
கக்கிச்,செத் துக்கொட்டக் கண்டு.

(பொ - ரை) எனது மனமே! க்ஷேமப் பொருளிருக்க, வாயிலினையுடைய வீடு இருக்க, கனவுபோல் விக்கலெடுத்துப், பல்கிட்டிக் கொள்ள, கண்கள் மிகவும் பஞ்சடைந்து, நீரையும் கோழையையும் கக்கி, இறந்து, சாப்பறை யடிக்கப்படுதலைக் கண்டிருந்தும், அறிவுடையோர்கள் இந்தப் பிறவியை நம்பி யிருப்பார்களோ? (எ - று.)

(வி - ரை) கனவுபோல இறத்தலைக் கண்கூடாகக் கண்டும், இந்தப் பிறவியை யறிவுடையார் நம்பி யிருப்பாரோ? இரார் என்றறிக என்றனர். 9

மேலு மிருக்க விரும்பினையே! வெள்விடையோன்
சீல மறிந்திலையே! சிந்தையே!—கால்கைக்குக்
கொட்டையிட்டு, மெத்தையிட்டுக், குத்திமொத்தப் பட்ட
கட்டையிட்டுச் சுட்டுவிடக் கண்டு. [வுடல்

(பொ - ரை) காற்குங் கைக்கும் சிறு திண்டுகள் வைத்து, மெத்தை விரித்து, குத்தியடித்துப் பிடிக்கப்பட்ட சரீரம்; கட்டையில் வைத்துத் தகனஞ் செய்யப் பார்த்தும், உள்ளமே! பின்னரும் இருக்க விரும்பினையே! வெள்ளிய இடபத்தினை யுடைய சிவபெருமானது கல்யாண குணங்களை யுணர்ந்திலையே! (எ - று.)

(வி - ரை) கால் கைகளுக்குச் சிறு திண்டிட்டுக் குத்திமொத்தப் பட்ட வுடலினைச் சுட்டுவிடக்கண்டும், இன்ன மிருக்கச் சிந்தையே

விரும்பாதே! சிவபெருமானது கல்யாண குணங்களை யுணர்ந்தா யில்லையே! (எ - று.) 10

ஒன்பதுவாய்த் தோற்பைக் கொருநாளைப் போலவே
அன்புவைத்து நெஞ்சே! அலைந்தாயே!—வன்கழுக்கள்
தத்தித்தத் திச்சட்டை தட்டிக்கட் டிப்பிட்டுக்
கத்திக்குத் தித்தின்னக் கண்டு.

(போ - ரை) வலிய கழுகென்னும் பறவைகள், தடுமாறித் தடுமாறி, இறகைத் தட்டி, ஒன்றோடொன் றணைத்து, பிளந்து, இரைந்து மூக்கினாற் குத்தித் தின்னப் பார்த்தும், மனமே! நவத்துவாரங்களை யுடைய தோலாகிய உடலெனும் பைக்கு ஒருநாள் போலவே பக்ஷம் வைத்துத் திரிந்தனையே! (எ - று.)

(வி - ரை) வலிய கழுக்கள் குழுமி உடற்றசையைப் பலவிடத் தும் தின்னக் கண்டும் அச்சரீரத்தின்மீது ஆசைகொண் டலைகின் றனையே நெஞ்சமே! என்றனர். தோற்பை-உடல். 11

இன்னம் பிறக்க விசைவையோ? நெஞ்சமே!
மன்னரிவ ரென்றிருந்து வாழ்ந்தவரை—முன்னம்
எரிந்தகட்டை மீதி லிணைக்கோ வணத்தை
உரிந்துருட்டிப் போட்டது கண்டு.

(போ - ரை) அரசர் இவரென்று சொல்லப்பட்டிருந்து வாழ்ந் தோரை, முன்னம் (வேறொரு சபம்) எரிந்த கட்டையின்மீது, தமது ஆண்மைக்குத் துணையாயிருந்த கோவணத்தையு முரிந்துகொண்டு, உருட்டிப்போட்டதைப் பார்த்திருந்தும் எனது மனமே! நீ இனி மேலும் பிறத்தற்கு விரும்புவாயோ? (எ - று.)

(வி - ரை) அரச வாழ்வினை யுடையாரு மிறத்த லுண்மையின் அழிவினையுடைய வுடலுடன் வாழ்வதனை நெஞ்சமே! விரும்புவதிற் பயனில்லை என்றனர். 12

முதற்சங் கமுதூட்டு(ம்); மொய்குழலா ராசை
நடுச்சங்க நல்விலங்கு பூட்டும்;—கடைச்சங்கம்
ஆம்போ ததுவூதும்; அம்மட்டோ? இம்மட்டோ?
நாம்பூமி வாழ்ந்த நலம்.

(போ - ரை) நாம் பிறந்தவுடன் முதலிலுண்டாகிற சங்கானது பாலாடையாக நின்று பாலை புண்ணச்செய்யும்; அச் சங்கமானது நமது பிறப்பின் மத்தியில் (அதாவது யௌவனபருவத்தில்) வண்டுகள் படிந்த கூந்தலினையுடைய இளமாதரின் ஆசையாகிய நல்விலங்கைக் கலியாண முறையிலூதிப் பூட்டாநிற்கும்; மூன்று முறையாகிய கடைசியி லூதப்படும் சங்கமானது, இறக்குங் காலத்துக் குரியதாகி யூதப்படும். (ஆகவே) நாம் உலகில் வாழ்ந்த சுகமானது, அவ்வளவோ? இவ்வளவோ? அறிகிலேம். (எ - று.)

(வி - ரை) சங்கானது முதலிற் பாலூட்டிப், பின் கலியாணமாக்கிப், பின் இறந்த குறியாக நிற்கின்றதாகவே, நாம் வாழ்ந்த வாழ்வென்னை? 13

எத்தனைநாள் கூடி யெடுத்த சரீரமிவை
அத்தனையு மண்டின்ப தல்லவோ?—வித்தகனார்
காலைப் பிடித்துமெள்ளக் கங்குல்பக லற்றிடத்தே
மேலைக் குடியிருப் போமே.

(போ - ரை) இவைகள் எத்தனை நாள் சேர்த்தெடுத்த வுடம்புகள்? அவ்வாறெடுத்த வுடலனைத்தும், மண்ணோடு மண்ணாவதன்றோ?

சிவபெருமானது திருவடிகளைப்பற்றி மெல்லென இரவும் பகலுமற்ற விடத்தில் மேன்மைக் குடியாக இருப்போம். (எ - று.)

(வி - ரை) இவ்வுடலம் அழிவதாதலின் அழியாத இறைவன் திருவடி வீட்டிலிருப்போ மென்றனர். 14

எச்சிலென்று சொல்லி யிதமகிதம் பேசாதீர்!
எச்சி லிருக்குமிட மறியீர்—எச்சிறனை
உய்த்திருந்து பார்த்தா லொருமை வெளிப்படும்; பின்
சித்த நிராமய மாமே.

(போ - ரை) மிச்சிலென்று இகழ்ந்துரைத்து, வேண்டுதல் வேண்டாமைகளை யுரையாதீர்! மிச்சில் இருக்குந் தானத்தை யறிய மாட்டீர்! மிச்சிலை ஆலோசனையுடனிருந்து பார்த்தால் ஒற்றுமை வெளியாகும்; பின்னர் மனமானது துக்க மற்றதாகும். (எ - று.)

(வி - ரை) வெறுப்புப் பொருள்களும் விருப்புப்பொருள்களும் ஒரேயிடத்தி லுண்டாதலின் வாளா விருப்பு வெறுப்பிற் காலந்தள்ளற்க என்றனர். எச்சி லென்றது வாய்நீரை மாத்திரமன்று; வெறுப்புப் பொருளையென வுணர்க. 15

எத்தனைபேர் நட்டகுழி? எத்தனைபேர் தொட்டமுலை?
எத்தனைபேர் பற்றி யிழுத்தவிதழ்?—நித்தநித்தப்
பொய்யடா பேசும் புவியின்மட மாதரைவிட்
டுய்யடா! உய்யடா! உய்.

(போ - ரை) எத்தனைபேர் தம் கோசத்தை நட்ட பள்ளம்? எத்தனைபேர்கள் தங்கள் தங்கள் கரங்களினால் பிடித்த தனம்? எத்தனை பேர் தங்கள் தங்கள் பற்களால் பிடித்து இழுத்த அதரம்? ஆகையால், நாள்தோறும் பொய்யும் அடாதனவுங் கூறும் உலகிலுள்ள அறியாமை

யோடுங் கூடிய பொருட்பெண்டிரை நீங்கி கடைத்தேறடா! கடைத்தேறடா! கடைத்தேறு! (எ - று.)

(வி - ரை) பொய்ம்மை முயக்கினரான பொருட்பெண்டிரை விடுமின்கள் என அடிகள் அறத்தாறொழுகுவான் உலகினரைநோக்கியுரைத்த திதுவென்க. 16

இருப்பதுபொய்; போவதுமெய்; என்றெண்ணி நெஞ்சே!
ஒருத்தருக்குந் தீங்கினை யுன்னாதே!—பருத்ததொந்தி
நம்மதென்று நாமிருப்ப, நாய்நரிகள் பேய்கழுகு
தம்மதென்று தாமிருக்குந் தான்.

(பொ - ரை) மனமே! இவ்வுடலுடனே இவ்வுலகி லிருப்பது பொய், இறந்துபோவது மெய் என நினைந்து எவருக்கும் கெடுதியை நினையாதே! பெருத்த வயிற்றினையுடைய இவ்வுடலினை நம்மதென்று நாம் எண்ணி இருக்க, நாயும் நரியும் பேயுங் கழுகும் தம்மதென்று அவைகள் எண்ணியிருக்கும். (எ - று.)

(வி - ரை) நாம் நம்மதென எண்ணியிருக்கு முடலினை நாய்நரியாதிய தம்மதென விருத்தலின் அதனை நம்பற்க. 17

எத்தொழிலைச் செய்தாலும், ஏதவத்தைப் பட்டாலும்,
முத்தர் மனமிருக்கு மோனத்தே;—வித்தகமாய்க்
காதிவிளை யாடியிரு கைவீசி வந்தாலும்
தாதிமன நீர்க்குடத்தே தான்.

(பொ - ரை) எந்தத் தொழிலைச் செய்யினும், என்னவுபத்திரவமுற்றாலும், முத்தான்மாக்களி னுள்ளம் மௌனநிலையிலேயே இராநிற்கும்; (எதுபோலும் என்னில்,) சாதுரியமாய் அசைந்து விளையாடிக்கொண்டு இரண்டு கைகளை வீசிக்கொண்டு வந்தாலும் தாதியின் மனமானது தண்ணீர்க்குடத்திலேதான் என்வறிக! (எ - று.)

(வி - ரை) தாதியானவள் வேறு வேலை செய்து கையசைத்துச் செல்லினும், தலையின்மீது வைத்த தண்ணீர்க் குடத்திலேயே சிந்தை செலுத்திச் செல்லுமாறுபோல, முத்தர்களும் மோனநிலையிலேயே எத்தொழிலைச் செய்தாலு நிற்ப ரெனவறிக. 18

மாலைப் பொழுதினறு மஞ்சளரைத் தேகுளித்து
வேலை மினுக்கிட்டு விழித்திருந்து—சூலாகிப்
பெற்ருள், வளர்த்தாள், பெயரிட்டாள், பெற்றபிள்ளை
பித்தானு லென்செய்வாள் பின்?

(பொ - ரை) மாலைக்காலத்தில், நல்ல மஞ்சளை யரைத்துக் குளித்து, புருவத்தைத் தீட்டி, தூங்காமலிருந்து கருப்ப முடையவளாகி, ஒருபிள்ளையினைப் பெற்று வளர்த்துப்பெயரிட்டாள்; அங்ஙனம் தான் பெற்ற பிள்ளை பைத்தியங் கொண்டவனுனல் பின்னர் அவள் யாது செய்வாள்? (எ - று.)

(வி - ரை) அன்னையின் நினைவிற் கேற்ப மைந்த னில்லாவிடில் அவள் என் செய்வாள்? அதுபோல, நமதெண்ணப்படி நிறைவேருத இவ்வுலக வாழ்வினில் ஆசை கொள்ளாது விடுதலே நலம் என்றனர். 'வேலை மினுக்கிட்டு' என்பதற்கு 'வேலைகளை விடுத்து' என்றும் பொருள் கூறுவர். 19

நாப்பிளக்கப் பொய்யுரைத்து, நவநிதியந் தேடி,
நலனென்று மறியாத நாரியரைக் கூடிப்,
'பூப்பிளக்க வருகின்ற புற்றீசல் போலப்' [வீர்
புலபுலெனக் கலகலெனப் புதல்வர்களைப் பெறு
காப்பதற்கும் வகையறியீர்; கைவிடவு மாட்டீர்; [டே
கவர்பிளந்த மரத்துளையிற்கா னுழைத்துக்கொண்

ஆப்பதனை யசைத்துவிட்ட குரங்கதனைப் போல
அகப்பட்டீர், கிடந்துழல வகப்பட்டீரே.

(பொ - ரை) நாவு பிளவுறும்வண்ணம் பொய் பேசி, புதிதாகத் திரவியம் சம்பாதித்து, நன்மை யென்பது யாதொன்றையும் உணராத பெண்களை மணந்து, பூமி வெடிக்க அதினின்றும் வெளிப்படுகின்ற புற்றீசலையொப்பப் புலபுலவெனவும் கலகலவெனவும் பிள்ளைகளைப் பெறுவீர்கள்; அவைகளைக் காப்பாற்றவும் வழியறியமாட்டீர்கள்; கைவிடவுமாட்டீர்கள்; இருபிளவாகப் பிளந்த மரத்தின் துளையில்காலை நுழையவிட்டுக்கொண்டு ஆப்பை யசைத்தெடுத்த குரங்கினையொப்ப அகப்பட்டுக்கொண்டீர்; கிடந்துழலுமாறு அகப்பட்டுக் கொண்டீர்கள். (எ - று.)

(வி - ரை) அறிவின்றிச் சமுசாரத்தி லகப்பட்டுச் சுழலுவதினாற் பயனில்லை யென்றனர். 20

வேறு

வடிவந்தானும் வாலிபம்: மகளுந்தாயும் மாமியும்
படிகொண்டாரு மூரிலே பழிகொண்டாட னீதியோ?
குடிவந்தானு மேழையோ? குயவன்றானுங் கூழையோ?
நடுநின்றானும் வீணனோ? நகரஞ்சூறை யானதே.

(பொ - ரை) உருவமு மிளமை யுள்ளது. மகளும் அவள் தாயும் மாமியாரும் (தமக்குப் போதுமான) பூமியைச் சுவாதீனப்படுத்திக் கொண்டு வாழும் மூரினில், இந்தப் பழியைக்கொண்டு கூறுதல் நியாயமோ? (இச் சரீரமாகிய வீட்டில்) குடியிருக்க வந்தவனாகிய ஆன்மாவும் ஏழையாயுள்ளவனோ? (மட்கலம் போல் அழியுமுடலை வனைந்த குயவனாகிய) பிரமனும் வன்மை யில்லாதவனோ? (தேஹி தேஹசம்பந்தத்துக் காரணனாய) நடுவே நிற்பவனும் வீணனாவனோ?

(அதாவது, பயனற்ற செய்கையைச் செய்பவனோ?) (அன்றே? அங்ஙனமாக) இந்தச் சரீரமாகிய ஊரும் சூறையானது; இஃதென்ன பாவம்? (எ - று.)

(வி - ரை) உடலை ஆக்கிய குயவனாகிய பிரமனும், நடுநின்றானாகிய யமனும், குடியிருந்தவனான சீவனும், முறையே கூழையும் வீணனும் ஏழையுமல்லர். அங்ஙனமாகவும், உடலாகிய நகரஞ் சூறை போயது. இதற்காக வருந்துவதிற் பயனென்ன? 21

வேறு

மண்ணு முருகு மரமுருகு மாயை யுருகு மாவுருகும்,
பெண்ணு முருகு மாணுருகும் பேதா பேத வகையுருகும்;
அண்ண லுருகு மிடத்தமர்ந்த வாத்தா ளுருகு மரவணை
யான்! எண்ணியுருகுங் குருநாத னென்பா லுரைத்தவோர் மொழியே.

(போ - ரை) எனது குருசிரேட்டன் எனக்கு உபதேசித்த ஒரு மொழியை நினைந்து பூமியும் உருகாநிற்கும்; மரமும் உருகாநிற்கும்; மாயையும் உருகாநிற்கும்; மாயா (காரியமாகிய) மோகமும் உருகாநிற்கும்; பெண் தன்மையும் ஆண் தன்மையும் உருகாநிற்கும்; பேதாபேத வகைகளும் உருகாநிற்கும்; சிவபெருமானும் உருகுவர்; அவரிடப்பாகத்துறையு முலக மாதாவான உமாதேவியும் உருகாநிற்பர்; அரவணையானான நாராயணனு நினைந்து உருகாநிற்பன்.

(வி - ரை) குருநாத னுரைத்த ஒரு மொழியி னருமையை வியந்தபடி.

"ஒருமொழியே பலமொழிக்கு மிடங்கொடுக்கு மந்த
வொருமொழியே மல்மொழிக்கும்."—எனவும்,

"மன்ன வென்னை யோர்வார்த்தை யுட்படுத்து"—எனவும்,

வருவனவற்று லுணர்க. 22

பட்டினத்துப்பிள்ளையார் பாடல் முற்றுப்பெற்றன.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

பட்டினத்துப்பிள்ளையார்

# அருட்புலம்பல்

## * முதல்வன் முறையீடு.

கன்னிவனநாதா - கன்னிவனநாதா

(போ - ரை) மீனாட்சி தேவி கன்னிப்பெண்ணாக இருந்து அரசு புரிந்த தலமாகிய மதுரையம் பதியிலே எழுந்தருளியிருக்கும் சிவபெருமானே!

மூல மறியேன்; முடியு முடிவறியேன்,
ஞாலத்துட் பட்ட துயர் நாட நடுக்குதடா!

(போ - ரை) வினையின் தோற்றத்தினைத் தெரிந்துகொண்டேனில்லை; அவ் வினை முடிவாதலைத் தெரிந்திலேன்; உலகில் உண்டாகிய துன்பம் என்னைச் சேர அனுபவமாக வருகிறது. 1

* இக் கண்ணிகளில் வரும் அரிய விஷயங்கள் பெரும்பாலும் முன்னமுள்ள விருத்தப்பாக்களில் வந்திருத்தலினாலும், அவ்வரிய விஷயங்களைப் பிரமாணவாயிலாக ஆங்காங்கே நன்குவிளக்கி யிருத்தலினாலும், மீண்டும் விசேஷங்க ளெழுதாமல் அத்தியாவசியமான விஷயங்கள் பொழிப்புரையுள் குறிக்கப்பட் டிருக்கின்றன.

அறியாமை யாமலத்தா லறிவுமுதற் கெட்டனடா!
பிறியா வினைப்பயனாற் பித்துப் பிடித்தேனடா!

(பொ - ரை) ஆணவ வினையினால் அறிவு முதலாகச் சொல்லப்பட்ட யாவற்றினாலுங் கலங்கினேன்; பிராரத்துவ வினையின் காரியத்தால் வைத்தியத்திற் கட்டுப்பட்டேன். 2

தனுவாதிய நான்குந் தானாய் மயங்கினண்டா!
மனுவாதி சத்தி வலைபி லகப்பட்டனடா!

(பொ - ரை) தனு கரண புவன போகம் ஆகிய நான்கினிலும் அவைகளின் மயமாகவே யிருந்து கலங்கினேன்; நீதியாகிய திரோதைச் சத்தியின் மறைவெனும் வலையில் சிக்கிக்கொண்டேன். 3

மாமாயை யென்னும் வனத்தி லலைகிறண்டா!
தாமா யுலகனைத்துந் தாது கலங்கிறண்டா!

(பொ - ரை) வியாபகமான அசுத்த மாயையென்னுங் காட்டினிடத்தே அலைகின்றனன்; அம்மாயையேயாய் உலக முழுவதும் மனச்சஞ்சல முறுகின்றனன். 4

(கன்னிவனநாதா!-கன்னிவனநாதா!)

மண்ணாசைப் பட்டேனை மண்ணுண்டு போட்டதடா!
பொன்னாசை பெண்ணாசை போகேனே யென்குதே.

(பொ - ரை) கன்னிவனமென்று சொல்லப்படாநின்ற மதுரையம்பதியிலுள்ள சிவபெருமானே! உலகில் ஆசை வைத்த என்னை அவ்வுலகே விழுங்கிவிட்டது; திரவியத்தினிடத்து வைத்த விருப்பமும் நீங்குதலில்லை. 5

மக்கள்சுற்றத் தாசை மறக்கேனே யென்குதே;
திக்கரசா மாசையது தீரேனே யென்குதே.

(பொ - ரை) புத்திரன் உறவினர் (முதலியோர்) பற்று நீங்கக் கூடவில்லை; எட்டுத் திசைகளையும் கட்டி யாளவேண்டுமென்னும் விருப்பமானது விட்டுப் பிரிதலில்லை. 6

வித்தைகற்கு மாசையது விட்டொழியே னென்குதே;
சித்துகற்கு மாசை சிதையேனே யென்குதே.

(பொ - ரை) (உலகக்) கல்வியில் பழகும் பற்று நீங்குமா றில்லை; (அஷ்டமா) சித்தியினைத் தெரிந்துகொள்ளும் பற்று ஒழிந்த தில்லை. 7

மந்திரத்தி லாசை மறக்கேனே யென்குதே;
சுந்தரத்தி லாசை துறக்கேனே யென்குதே,

(பொ - ரை) மந்திரங் கற்றுக்கொள்ள வேண்டுமென்கிற பற்று மறந்துபோவதில்லை; சௌந்தரியமாக இருக்கவேண்டு மென்கிற விருப்பம் நீங்குவதில்லை. 8

கட்டுவர்க்கத் தாசை கழலேனே யென்குதே;
செட்டுதனி லாசை சிதையேனே யென்குதே.

(பொ - ரை) (உயர்ந்த) வஸ்திர முதலியவற்றி லுண்டான பற்று நீங்குவதில்லை; திரவியம் சேர்த்துவைக்க வேண்டுமென்னும் பற்று ஒழிந்துபோனதில்லை. 9

மாற்றுஞ் சலவை மறக்கேனே யென்குதே;
சோற்றுக் குழியுமின்னுந் தூரேனே யென்குதே.

(பொ - ரை) அடிக்கடி உடுத்திக்கொள்ளுதற்கேற்ற சுத்தமான வஸ்திரங்களை மறந்துவிடுவதில்லை; சாப்பிடும் வயிறு இன்னம் நிறம்புவதில்லை. 10

(கன்னிவனநாதா! -கன்னிவனநாதா!)

ஐந்து புலனு மடங்கேனே யென்குதே;
சிந்தை தவிக்கிறதுந் தேறேனே யென்குதே.

(பொ - ரை) சத்த-பரிச-ரச-ரூப-கந்தங்கள் என்னும் பஞ்சேந்திரியங்களின் சேஷ்டை யொடுங்கினபாடில்லை; மனச் சஞ்சலமும் நிவிர்த்தியாயினதில்லை. 11

காமக் குரோதம் கடக்கேனே யென்குதே;
நாமே யரசென்று நாடோறு மெண்ணுதே.

(பொ - ரை) காமமும் கோபமும் விட்டு ஒழிந்ததில்லை; எல்லாரைவிட நாமே பெரியனென்று பிரதிதினம் நினைக்கின்றது. 12

அச்ச மாங்கார மடங்கேனே யென்குதே;
கைச்சு மின்னுமானங் கழலேனே யென்குதே.

(பொ - ரை) அதைரியமும், இறுமாப்பும் அடங்குவதில்லை; யாவற்றையும் வெறுத்தும் பின்னும் அபிமானம் ஒழிந்ததில்லை. 13

நீர்க்குமிழி யாமுடலை நித்தியமா யெண்ணுதே;
ஆர்க்கு முயராசை யழியேனே யென்குதே.

(பொ - ரை) நீரிலுண்டாகும் மொக்குளை யொத்த தேகத்தை என்றைக்கு முள்ளதாக நினைக்கிறது; அனுபவிக்கு மிகுந்த அவா ஒழியாம லிருந்துகொண்டிருக்கிறது. 14

கண்ணுக்குக் கண்ணெதிரே கட்டையில் வேகக்கண்டும்
எண்ணுந் திரமா யிருப்போமென் றெண்ணுதே.

(போ - ரை) நித்தியமும் தனக்கு முன்னே சுடுகாட்டில் உடலானது எரிவதனைப் பார்த்திருந்தும் என்றும் வாழ்ந்திருப்போமெனவே எண்ணம் விளைகின்றது. 15

அநித்தியத்தை நித்தியமென் றுதரவா யெண்ணுதே;
தனித்திருக்கே னென்குதே; தனைமறக்கே னென்குதே.

(போ - ரை) அழியத்தக்கதை என்று முள்ளதென்று பற்றாக நினைக்கின்றது; நிட்டைகூடத் தனித்திருப்பதில்லை; மனதை யொருமைப்படுத்துவதில்லை. 16

நரகக் குழியுமின்னு நான்புசிப்பே னென்குதே;
உரகப் படத்தல்கு லுனைக்கெடுப்பே னென்குதே.

(போ - ரை) நரகக்குழியும் இன்னும் நான் எடுத்து விழுங்கிவிடுவே னென்கிறது; பாம்பின் படத்தினையொத்த (மாதர்) நிதம்பமானது உன்னைக் கெடுப்பேனென்று மயக்குகின்றது. 17

குரும்பை முலையுங் கெடுப்பே னென்குதே;
அரும்பு விழியுமென்ற னுவியுண்பே னென்குதே.

(போ - ரை) (மாதரது) தென்னங்குரும்பினை யொத்த தனமானது (தன் வசமாக்கிக்) குடும்பத்தினைக் கெடுத்துவிடுவேன் என்கின்றது; (அம்மாதர்கள்) நீலமலரினையொத்த கண்கள் உயிரை யுண்டிடுவே னென்கிறது. 18

மாதருருக் கொண்டு மறலிவஞ்ச மெண்ணுதே;
ஆதரவு மற்றிங் காக்கா யுருகிறண்டா!

(போ - ரை) இயமனானவன் பெண்கள் வடிவினை யெடுத்து மோசஞ் செய்கின்றான்; (அதனால்) யாதொரு உதவியின்றித் தீயில் விட்ட அரக்கினையொத்து உருகிப்போகின்றேன். 19

கந்தனை யீன்றருளுங் கன்னிவன நாதா!
எந்த விதத்தினு மேறிப் படருவண்டா!

(கன்னிவனநாதா! - கன்னிவனநாதா!)

(போ - ரை) முருகக்கடவுளைப் பெற்றெடுத்த மதுரைச் சொக்கலிங்கப்பெருமானே! எந்த வுபாயத்தால் உனது திருவடியினை யடைந்துய்வேன்? 20

புல்லாகிப் பூடாய்ப் புலர்ந்தநாள் போதாதோ?
கல்லாய் மரமாய்க் கழிந்தநாள் போதாதோ?

(போ - ரை) புல்லாகியும், பூண்டாகியும் வாடியகாலம் போதாதோ? கல்லாகியும், விருட்சமாகியும் ஒழிந்தகாலம் போதாதோ? 21

கிரியாய்க் கீடமாய்க் கெட்டநாள் போதாதோ?
நீரியா யூர்வனவாய் நின்றநாள் போதாதோ?

(போ - ரை) கீரிப்பிள்ளையாகியும், புழுவாகியும் அறிவு குறைந்திருந்த காலம் போதாதோ? நீர்வாழ்வனவாயும், நகருகின்ற பாம்பு முதலியவைகளாயும் வாழ்ந்த காலம் போதாதோ? 22

பூதமொடு தேவருமாய்ப் போனநாள் போதாதோ?
வேதனைசெய் தானவராய் வீந்தநாள் போதாதோ?

(போ - ரை) பூதங்களுடனே, தெய்வலோகத்தர்களாய்ப் பிறந்து வாழ்ந்த காலம் போதாதோ? துன்பத்தினை விளைவிக்கின்ற அசுரர்களாய் அலைந்த காலம் போதாதோ? 23

அன்னை வயிற்றி லழிந்தநாள் போதாதோ?
மன்னவனாய் வாழ்ந்து மரித்தநாள் போதாதோ?

(போ - ரை) தாயினுடைய கர்ப்பத்தில் வெளிப்படாமலே அழிந்த காலம் போதாதோ? அரசனாகவிருந்து இறந்த காலம் போதாதோ? 24

தாயாகித் தாரமாய்த் தாழ்ந்தநாள் போதாதோ?
சேயாய்ப் புருடனுமாய்ச் சென்றநாள் போதாதோ?

(போ - ரை) (நான் ஒருவருக்கு) அன்னையாகியும், (நானொருவருக்கு) மனைவியாகியும் தாழ்வை யடைந்தகாலம் போதாதோ? (நானொருவனுக்குக்) குழந்தையாய், (நானொருவனுக்கு) நாயகனாய்க் காலங்கழித்தது போதாதோ? 25

நோயுண்ண மேமெலிந்து நொந்தநாள் போதாதோ?
பேயுண்ணப் பேயாய்ப் பிறந்தநாள் போதாதோ?

(போ - ரை) பற்பல நோய்களின் உபத்திரவத்தால் மெலிவுற்றுத் துன்பமடைந்த காலம் போதாதோ? அறியாமையுடைய பேயாகி உதித்தகாலம் போதாதோ? 26

ஊனவுடல் கூன்குருடா யுற்றநாள் போதாதோ?
ஈனப் புசிப்பி லிளைத்தநாள் போதாதோ?

(போ - ரை) மாமிச தேகத்தில் கூனும் குருடாயும் அடைந்த காலம் போதாதோ? அற்ப போசனத்தால் இளைத்துப்போனகாலம் போதாதோ? 27

பட்ட கிளையும் பரதவிப்பும் போதாதோ?
கெட்டநாள் கெட்டேனென்று கேளாதும் போதாதோ?

(போ - ரை) அடிக்கடி சென்மத்தால் நேர்ந்த இளைப்பும், பாதவிப்பும் போதாதோ? வீணாகக் கழிந்தகாலம் போக இனியேனும் பிறர் சொல்லைக் கேளாதிருப்பது போதாதோ? 28

நில்லாமைக் கேயழுது நின்றநாள் போதாதோ?
எல்லாரு மென்பார மெடுத்தநாள் போதாதோ?

(போ - ரை) தேகமுதலிய நிலையாமையைக் கருதியழுது இருந்தநாளும் போதாதோ? (செனனங்கடோறும்) என் தாய்மார்கள் என்னைச் சுமந்த பளுவை எடுக்கும்படிச் செய்தகாலம் போதாதோ? 29

காமன் கணையாற் கலைபட்டல் போதாதோ?
ஏமன் கரத்தா லிடியுண்டல் போதாதோ?

(போ - ரை) மன்மதனுடைய அம்பினால் துன்ப மடைந்தது போதாதோ? காலனுடைய கரங்களினால் அடிக்கடி புடைக்கப்பட்டதும் போதாதோ? 30

நான்முகன் பட்டோலை நறுக்குண்டல் போதாதோ?
தேன்றுளபத் தானேமி தேக்குண்டல் போதாதோ?

(போ - ரை) பிரமன் விதி ஏட்டினை (அடிக்கடி) கிழித்ததும் போதாதோ? தேன் நிரம்பும் துளசியினையுடைய விஷ்ணுவின் ஆஞ்ஞா சக்கரத்தின்கீழ் அலைப்புண்டது போதாதோ? 31

உருத்திரனார் சங்காரத் துற்றநாள் போதாதோ?
வருத்த மறிந்தையிலை; வாவென் றழைத்தயிலை. (கன்னி)

(போ - ரை) உருத்திரமூர்த்தியின் சங்காரத்தில் பொருந்திய காலம் போதாதோ? என் கஷ்டத்தினைத் தெரிந்தா யில்லை; என்னைச் சமீபத்தும் வரச் செய்தாயில்லை. 32

பிறப்பைத் தவிர்த்தையிலே; பின்னாகக் கொண்டையிலே;
இறப்பைத் தவிர்த்தையிலே; என்னென்று கேட்டையிலே.

(பொ - ரை) எனது பிறப்பினை யொழித்தாயில்லை; பின்பு அடிமையாகக் கொண்டது மில்லை; மரணத்தினை யொழித்தாயில்லை; என்னை விசாரித்தது மில்லை. 33

பாச மெரித்தையிலே; பர தவிர்ப்பைத் தீர்த்தயிலே;
பூசிய நீற்றைப் புனையென் றளித்தையிலே.

(பொ - ரை) என் பந்தத்தினை இல்லாமற் செய்தாயில்லை என் கஷ்டத்தினை நீக்கினாயில்லை; தரிக்கத்தகுந்த விபூதியினைத் தரிக்கும்படி கொடுத்தாயில்லை. 34

அடிமையென்று சொன்னையிலே; அக்கமணி தந்தையிலே;
விடுமுலகம் போக்கியுன்றன் வேட மளித்தையிலே.

(பொ - ரை) என்னை உனக்குத் தொண்டனென்று ஏற்றுக் கொண்டாயில்லை; உருத்திராட்சம் அளித்தாயில்லை; நீங்குவதற்கேதுவாகிய பிரபஞ்சத்தினின்றும் நீங்கி, தேவரீருடைய திருவேடமாகிய சாரூபத்தைத் தந்தாயில்லை. 35

உன்னி லழைத்தயிலே; ஒன்றாய்க் கொண்டையிலே;
நின்னடியார் கூட்டத்தி னியழைத்து வைத்தையிலே.

(பொ - ரை) சிவசாரூபந் தந்தாயில்லை; சிவசாயுச்சியம் கொடுத்தாயில்லை; தேவரீரது அடியார்கள் கூட்டத்தில் ஒருவனாக நீ என்னைச் சேர்த்தாயில்லை. 36

ஓங்கு பரத்து ளொளித்தவடி யார்க்கடியான்
ஈங்கோ ரடியா னெமக்கென் றுரைத்தயிலே.

(போ - ரை) ஓங்கிய சிவபாதத்துள் கலந்த அடிமைக்கடிமை யாகிய இவனும் இவ்வுலகில் நமது அடிமை என்று சொன்னாயில்லை. 37

நாமந் தரித்தையிலை; நானொழிய நின்றயிலை;
சேம வருளிலெனைச் சிந்தித் தழைத்தையிலை.

(போ - ரை) சிவனடியான் என்று சொன்னாயில்லை; நானென்னும் ஆங்காரத்தை நீங்கச்செய்தாயில்லை; திருவருளில் என்னைச்சேர எண்ணிக் கூப்பிட்டாயில்லை. 38

முத்தி யளித்தையிலை; மோனங் கொடுத்தையிலை;
சித்தி யளித்தையிலை; சீராட்டிக் கொண்டையிலை.

(போ - ரை) மோட்சம் கொடுத்தாயில்லை; சும்மாயிருக்க வைத்தாயிலை; அருட்சித்தி தந்தாயில்லை; அன்பனைப் பாராட்டினாயில்லை. ()

தவிர்ப்பைத் தவிர்த்தையிலை; தானாக்கிக் கொண்டையிலை;
அவிப்பரிய தீயாமென் னாசை தவிர்த்தையிலை.

(போ - ரை) எனக்கு உண்டாயிருக்கும் பரிதவிப்பை நிவர்த்தி செய்தாயில்லை; சிவமாந் தன்மையைச் செய்தாயில்லை; அணையத்தகாத நெருப்பாகிய என் அவாவினை நீக்கினாயில்லை. 40

நின்ற நிலையி னிறுத்தியெனை வைத்தையிலை;
துன்றுங் கரணமொடு தொக்கழியப் பார்த்தையிலை,

(போ - ரை) திருவருணிலையில் அழுத்திச் சலனப்படாதபடி என்னை யிருக்கச்செய்தாயில்லை; பொருந்திய அகப் புறக் கரணங்களுடன் கூடிய கூட்டத்தினை நீக்கத் திருஷ்டித்தாயில்லை. 41

கட்டவுல கக்காட்சிக் கட்டொழியப் பார்த்தையிலே;
நிட்டையிலே நில்லென்று நீநிறுத்திக் கொண்டையிலே.

(கன்னிவனநாதா! - கன்னிவனநாதா!)

(போ - ரை) பந்தமாகிய பிரபஞ்சக் காட்சிகளின் சம்பந்தம் கலகலத்துப்போகத் தீக்ஷித்தாயில்லை; சிவராஜ யோக சமாதியிலே வாவென்று நீ என்னை நிறுத்தினையில்லை. 42

கடைக்கணருள் தாடா! கன்னிவன நாதா!
கெடுக்குமல மொருக்கிக் கிட்டிவரப் பாரேடா!

(போ - ரை) மதுராபுரித்தேவே! நயனதீட்சை செய்வாயாக! பந்தத்தி லழுத்தும் ஆணவத்தினது காரியத்தை நீக்கிச் சிவசாமீ பத்தினை யளிக்க அனுக்கிரகிப்பாயாக. 43

காதல் தணியேனே! கண்டு மகிழேனே!
சாதல் தவிரேனே! சங்கடந்தான் தீரேனே!

(போ - ரை) தேவரீரது திருவருள் அடியேனுக்குக் கிடைக்கில் உலக ஆசையை அடக்கிக்கொள்ளேனே! தேவரீர் திருவுருவத்தினைத் தரிசனம் செய்து களியேனே! மரணத்தினை நீக்கிக் கொள்ளேனே; பிரபஞ்ச அலைச்சல் நீங்கேனே. 44

உன்னைத் துதியேனே! ஊர்நாடி வாரேனே!
பொன்னடியைப் பாரேனே! பூரித்து நில்லேனே!

(போ - ரை) தேவரீரைத் தோத்திரம் செய்யேனே! சிவத்தலங்களை விசாரித்து யாத்திரை செய்யேனே! தேவரீர் திருவடியைத் தரிசியேனே! சிவானந்தம் அடையேனே! 45

ஓங்காரப் பொற்சிலம்பி னுல்லாசம் பாரேனே!
பாங்கான தண்டை பலபணியும் பாரேனே!

(போ - ரை) (தேவரீர் திருவடியில் தரித்த) பிரணவசொரூப மாகிய அழகிய சிலம்பின் அழகைத் தரிசியேனே! பொருத்தமான தண்டை முதலிய பல பூஷணங்களையும் பாரேனே! 46

வீரகண்டா மணியின் வெற்றிதனைப் பாரேனே!
சூரர்கண்டு போற்றுமந்தச் சுந்தரத்தைப் பாரேனே!

(போ - ரை) ஜயத்தைக் குறிக்கும் வீரகண்டாமணி யென்னும் ஆபரணத்தின் வல்லபத்தைப் பாரேனே! வீரர்கள் தரிசித்து வணங்கும் திருமேனியின் அழகைப் பாரேனே! 47

இடையில் புலித்தோ லிருந்தநலம் பாரேனே!
விடையி லெழுந்தருளும் வெற்றியினைப் பாரேனே!

(போ - ரை) அரையில் புலியின்தோல் தங்கிய அழகைப் பாரேனே! (தருமரூபமான) இடபத்தில் ஆரோகணித்திருக்கும் ஜயத்தினையும் பாரேனே! 48

ஆனை யுரிபோர்த்த வழகுதனைப் பாரேனே!
மானைப் பிடித்தேந்து மலர்க்கரத்தைப் பாரேனே!

(போ - ரை) யானைத் தோலைத் தரித்த சுந்தரத்தைப் பாரேனே! மானை யேந்திய தாமரைமலர்போன்ற திருக்கையினைப் பாரேனே! 49

மாண்டார் தலைபூண்ட மார்பழகைப் பாரேனே;
ஆண்டார் நமக்கென் றறைந்து திரியேனே;

(போ - ரை) இறந்தவர்களாகிய பிரம விஷ்ணுக்களின் சிரங்களைத் தரித்த சுந்தரத்தைப் பாரேனே! அடியேங்கட்குத் தலைவர் சிவபெருமானே யென்று பேசிச் சஞ்சரியேனே! 50

கண்டங் கறுத்துநின்ற காரணத்தைப் பாரேனே;
தொண்டர் குழுவினின்ற தோற்றமதைப் பாரேனே;

(போ - ரை) கண்டம் கருமை நிறத்துடன் கூடியிருந்த காரணத்தைப் பாரேனே! சிவனடியார்கள் ஒருங்கு கூடியிருந்த காட்சியினைப் பாரேனே! . 51

அருள்பழுத்த மாமதியா மானனத்தைப் பாரேனே!
திருநயனச் சடையொளிருஞ் செழுங்கொழுமை பாரேனே!

(போ - ரை) திருவருள் முதிர்ந்த அழகிய சந்திரனை யொத்த திருமுகத்தினைத் தரிசியேனே! கிருபாநேத்திரத்துடன் சடாபாரம் விளங்கும் மிகுந்த அழகினைப் பாரேனே! 52

செங்குமிழின் துண்டம்வளர் சிங்காரம் பாரேனே!
அங்கனியை வென்ற வதரத்தைப் பாரேனே!

(போ - ரை) செம்மையான குமிழமலரினையொத்த நாசியினிலுண்டாகிய அழகினைப் பாரேனே! அழகிய கோவைப்பழத்தினுமிக்க அழகினைவாய்ந்த அதரத்தினையும் தரிசியேனே! 53

முல்லை நிலவெறிக்கு மூரலொளி பாரேனே!
அல்லார் புருவத் தழகுதனைப் பாரேனே!

(போ - ரை) முல்லை யரும்பினைப்போலப் பிரகாசிக்கும் பற்களின் பிரகாசத்தினைப் பாரேனே! கறுத்த புருவத்தின் அழகினையும் தரிசியேனே! 54

மகரங் கிடந்தொளிரும் வண்மைதனைப் பாரேனே!
சிகர முடியழகுஞ் செஞ்சடையும் பாரேனே!

(போ - ரை) முதலையின் வடிவத்தினை யொத்துப் பிரகாசிக்கும் குண்டலங்களின் அழகைப் பாரேனே! சிரசின் முடியழகினையும், சிவந்த சடையினையும் பாரேனே! 55

கங்கையொடு திங்கணின்ற காட்சிதனைப் பாரேனே!
பொங்கரவைத் தன்சடையிற் பூண்டவிதம் பாரேனே!

(பொ - ரை) கங்காநதியுடனே சந்திரன் தங்கிய அழகைப் பாரேனோ! மிகுந்த சர்ப்பக்கூட்டங்களைத் தமது சடாபாரத்தில் தரித்த வகையினையும் பாரேனோ! 56

சரக்கொன்றை பூத்த சடைக்காட்டைப் பாரேனோ
எருக்கறுகூ மத்தையணி யேகாந்தம் பாரேனோ!

(பொ - ரை) தொங்குகின்ற கொன்றைமலர் புட்பித்த நெருங்கிய சடைக்காட்டினைப் பாரேனோ! எருக்கு, அறுகு, ஊமத்தையாகிய இவற்றை அணிந்த கோலத்தைப் பாரேனோ! 57

கொக்கிறகு சூடிநின்ற கொண்டாட்டம் பாரேனோ
அக்கினியை யேந்திநின்ற வாநந்தம் பாரேனோ!

(பொ - ரை) கொக்குப்பட்சியின் இறகினைத் தரித்திருந்த ஆனந்தத்தைப் பாரேனோ! மழுவாயுதத்தைத் தாங்கிய களிப்பினைப் பாரேனோ! 58

தூக்கிய காலுந் துடியிடையும் பாரேனோ!
தாக்கு முயலகன்மேற் றாண்டவத்தைப் பாரேனோ!

(பொ - ரை) கனகசபையின்கண்ணே தூக்கிய திருவடியையும், உடுக்கைபோன்ற இடையினையும் பாரேனோ! எதிர்த்த முயலகாசுரன் முதுகில் தாண்டவத்தைச் செய்தருளும் நிர்த்தனத்தைப் பாரேனோ!

(வி - ரை) 'துடியடியும்' என்றும் பாடமுண்டு. இதற்கு, 'காத்திற்றாங்கிய துடியின் ஓசையையும்' என்பது பொருள். 59

வீசு கரமும் விகசிதமும் பாரேனோ!
ஆசை யளிக்கு மபயகரம் பாரேனோ!

(பொ - ரை) சிற்றம்பலத்திலே வீசுகின்ற திருக்காத்தினையும் புஞ்சிரிப்பினையும் பாரேனோ! விருப்பத்தினை விளைவிக்கும் அபயாஸ்தத்தையும் பாரேனோ! 60

அரிபிரமர் போற்ற வயரர் சயசயெனப்
பெரியம்மை பாகம்வளர் பேரழகைப் பாரேனே!

(போ - ரை) நாரணனும் நான்முகனுந் தோத்தரிக்க, தேவர்கள் ஜெயஜெய என்ன, பெரியநாயகியம்மை இடதுபாகத்தில் எழுந்தருளியிருக்கும் மிகுந்த அழகினைப் பாரேனே! 61

சுந்தர நீற்றின் சொகுசுதனைப் பாரேனே!
சந்திர சேகரனுய்த் தயவுசெய்தல் பாரேனே! (கன்னி)

(போ - ரை) அழகிய விபூதியின் அலங்காரத்தினைப் பாரேனே! சந்திரசூடனுய்க் கிருபையுடன் தரித்திருத்தலைப் பாரேனே! 62

கெட்டநாள் கெட்டாலுங் கிருபையினிப் பாரேடா!
பட்டநாள் பட்டாலும் பதமெனக்குக் கிட்டாதோ?

(போ - ரை) அருளை யடையாமல் வீணன காலம் போனலும் இனியாயினும் கிருபை பாலிப்பாயாக! துன்ப மடைந்தநாள் பலவுண்டாயினும் தேவரீர் திருவடி அடியேனுக்குச் சித்தியாதோ? 63

நற்பருவ மாக்குமந்த நாளெனக்குக் கிட்டாதோ?
எப்பருவ முங்கழன்ற வேகாந்தங் கிட்டாதோ?

(போ - ரை) தேவரீரை யடைதற் கேற்ற பரிபக்குவமாகும் காலம் எனக்குண்டாகாதோ? எல்லாப் பருவங்களையுங் கடந்து தனித்திருக்குநாள் கிட்டாதோ? 64

வாக்கிறந்து நின்ற மவுனமது கிட்டாதோ?
தாக்கிறந்து நிற்குமந்தத் தற்சுத்தி கிட்டாதோ?

(போ - ரை) பேச்சற்ற நிலையாகிய மவுனயோகநிலை கிட்டாதோ? தற்போதமற்று நிற்கும் அல்லது பிரபஞ்ச சம்பந்தமில்லாது நிற்கும் ஒப்பற்ற அச் சுத்தமாந் தன்மை கிட்டாதோ? 65

வெந்துயரைத் தீர்க்குமந்த வெட்டவெளி கிட்டாதோ?
சிந்தையையந் தீர்க்குமந்தத் தேறலது கிட்டாதோ?

(பொ - ரை) கொடிய பிறவித்துன்பத்தை நிவிர்த்திக்கும் அச் சிதாகாயம் உண்டாகாதோ? மனச்சந்தேகத்தை யொழிக்கும் அல்லது எண்ணிய எண்ணத்தை முடிக்கும் அந்த திருவருள் தேனனது உண்டாகாதோ? 66

ஆன வடியார்க் கடிமைகொளக் கிட்டாதோ?
ஊனமற வென்னை யுணர்த்துவித்தல் கிட்டாதோ?

(பொ - ரை) தேவரீருக்கு உரித்தாகிய சிவனடியவர்கட்கு அடிமையாய் வாழக்கிட்டாதோ? குற்றம் நீங்க அடியேனை உள்நின்று திருவருளை யூட்டல் கிட்டாதோ? 67

என்னென்று சொல்லுவண்டா? என்குருவே! கேளேடா!
பின்னை யெனக்கு நீயல்லாற் பிறிதில்லையே. (கன்னி)

(பொ - ரை) அடியேனை அடிமையாக ஆட்கொண்ட ஆசிரியரே! அடியேனது வினையின் செயலை (துன்பமனைத்தினை) என்னவென எடுத்துரைப்பேன்? கேட்பீராக! பின்பு அடியேனுக்குத் துணை தேவரீரல்லது வேறில்லை. 68

அன்ன விசாரமது வற்றவிடங் கிட்டாதோ?
சொன்ன விசாரந் தொலைந்தவிடங் கிட்டாதோ?

(பொ - ரை) ஆகார சம்பந்தமாக விளையுந் துக்கம் நீங்கின இடம் கிட்டாதோ? பொருள் சம்பந்தமான அதாவது பொன்னைத் தேடி யலைதலா லுண்டாகின்ற துன்பம் நீங்கின இடம் கிட்டாதோ?

உலக விசார மொழிந்தவிடங் கிட்டாதோ?
மலக்குழுவின் மின்னார் வசியாதும் கிட்டாதே?

(போ - ரை) பிரபஞ்ச துன்பம் நீங்கின இடம் கிட்டாதோ? மலத்தடிப்பு மிகுந்த மாதர்களின் மத்தியில் தங்காதிருப்பது கிட்டாதோ? 70

ஒப்புமை பற்றோ டொழிந்தவிடங் கிட்டாதோ?
செப்புதற்கு மெட்டாத் தெளிந்தவிடங் கிட்டாதோ?

(போ - ரை) சமத்துவம், திருட்டாந்தம், பந்தம் இவை நீங்கிய நிலை கிட்டாதோ? வாக்கா லெடுத்தும் பேசுதற்குக் கிட்டாத சலன மற்ற நிலை கிட்டாதோ? 71

வாக்கு மனாதீத வகோசரத்திற் செல்லவெனைத்
தாக்குமருட் குருவே!நின் றாளிணைக்கே யான்போற்றி.

(போ - ரை) பேச்சினுக்கும் உள்ளத்திற்கும் கடந்த துரியத்தில் அடைய அடியேனைச் சேர்க்கும் திருவருணிறைந்த வடிவே! தேவரீர் திருவடிக்கே அடியேன் தோத்தரிக்கின்றேன். 72

முதல்வன் முறையீடு
முற்றுப்பெற்றன

---

பட்டினத்துப்பிள்ளையார்
மகமேுன்னிலையாகத் திருவாய்மலர்ந்த

# அருட்புலம்பல்

---

ஐங்கரனைத் தெண்டனிட்டே னருளடைய வேண்டுமென்று
தங்காமல் வந்தொருவன் றற்சொரூபங் காட்டியெனை.

(பொ - ரை) திருவருளினைப் பெறவேண்டுமென்று ஐந்து திருக்கரங்களுடன் கூடிய விநாயகரை அஞ்சலித்தேன்; முதல்வன் உடனே தாமதியாமல் எழுந்தருளி வந்து தனது உண்மை வடிவினைக் காட்டி அடியேனை, 1

கொள்ளைப் பிறப்பறுக்கக் கொண்டான் குருவடிவம்;
கள்ளப் புலனறுக்கக் காரணமாய் வந்தாண்டி!

(பொ - ரை) அநேகமான சென்மங்களினை ஒழிக்க ஆசாரிய கோலத்தினை எடுத்துக்கொண்டு கபடமாகிய ஐம்புலன்களை வெல்லுதற்குக் காரணமாய் வந்தனன். 2

ஆதார மோராறு மைம்பத்தோ ரட்சரமும்
சூதான கோட்டையெல்லாஞ் சுட்டான் றுரிசறவே.

(பொ - ரை) மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனுகதம், விசுத்தி, ஆக்ஞையாகிய ஆறினையும்; அவ்வாதாரங்களினுள்ள ஐம்பத்தோரெழுத்துகளையும், இவையடங்கிய உடலையெல்லாம் அதாவது அவ்வாதார கோணங்களையும் ஆகிய எல்லாவற்றையும் ஆசாரியன், குற்றமறவே தமது நேத்திரத்தால் தீட்சித்தான். 3

மெத்த விகாரம் விளைக்கும் பலபலவாம்
தத்துவங்க ளெல்லாந் தலைகெட்டு வெந்ததடி!

(பொ - ரை) அநேகமான விகாரங்களை உண்டாக்கும் பற்பலவாகிய தத்துவக் கூட்டங்களெல்லாம், ஆசாரியன் அநுக்கிரகத்தினல் ஆற்றலழிந்து ஒடுங்கிவிட்டன. 4

என்னோ டுடன்பிறந்தா ரெல்லாரும் பட்டார்கள்;
தன்னந் தனியே தரித்திருக்க மாட்டேண்டி!

(பொ - ரை) அடியேனுடன் கூட வுற்பவித்தனவாகியதத்துவ சமூகமும் அழிந்தனர்; இனி அடியேன் தனிமையாக இருந்து வாழேன். 5

எல்லாரும் பட்டகள மென்று தொலையுமடி?
சொல்லி யழுதாற் றுயரமெனக் காறுமடி!

(போ - ரை) தத்துவங்களெல்லாம் ஒடுங்கிய இடம் எக்கால நீங்கும்? என் துன்பங்களை வாயாற் சொல்லிக் கதறினால் எனது விசனம் நீங்கும். 6

மண்முதலா மைம்பூத மாண்டுவிழக் கண்டேனடி!
விண்முதலா மைம்பொறிகள் வெந்துவிழக் கண்டேனடி!

(போ - ரை) மண், நீர், தீ, காற்று, ஆகாயம் ஆகிய ஐம்பூதங்களின் காரிய நீங்கக் கண்டேன்; சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகிய ஐம்பொறிகளின் சேட்டைகள் ஒடுங்கவும் தரிசித்தேன். 7

நீங்காப் புலன்களைந்து நீறாக வெந்ததடி!
வாக்காதி யைவரையு மாண்டுவிழக் கண்டேனடி!

(போ - ரை) எக்காலத்தும் நீங்குதற்கருமையான மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஞானேந்திரியங்களும் சாம்பலாயின. வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம் ஆகிய கன்மேந்திரியங்களும் தத்தம் தொழில்களினின்றும் நீங்குவதைக் கண்டேன். 8

மனக்கரண மத்தனையும் வகைவகையே பட்டழிய
இனக்கரணத் தோடே யெரிந்துவிழக் கண்டேனடி!

(போ - ரை) மனம், புத்தி, சித்தம், அகங்காரம் யாவும், இவை கட்கேதுவான புறக்கரணங்கள் அழிந்துவிடவும் கண்டேன். 9

ஆத்தும தத்துவங்கள் அடுக்கழிய வெந்ததடி!
போற்றும்வகை யெப்படியோ போத மிழந்தானே.

(போ - ரை) ஞானேந்திரியம், கன்மேந்திரியம், அந்தக்கரணம், தன்மாத்திரை, பூதம் ஆகிய ஆன்ம தத்துவங்கள் இருபத்துநான்கும்

தமது வரிசை யழிந்தன. இனித் தற்போதமில்லாத முதல்வனை (சிவபெருமானை) எத்தும் விதம் எங்ஙனமோ அறிகிலேன். 10

வித்தியா தத்துவங்கள் வெந்துவிழக் கண்டேண்டி!
சுத்தவித்தை யைந்தினையுஞ் சுட்டான் றுரிசரவே.

(பொ - ரை) வித்தியா தத்துவங்களான கலை, காலம், நியதி, வித்தை, அராகம், புருடன், மாயை ஆகிய இவைகள் அழியக் கண்டேண்டி; சுத்த தத்துவங்களான சுத்தவித்தை, ஈச்சுரம், சாதாக்கியம், சத்தி, சிவம் ஆகிய இவைகளின் காரியந்தலையெடாதபடி ஆசாரியன் தீட்சித்தான். 11

மூன்று வகைக்கிளையு முப்பத் தறுவரையும்
கான்றுவிழச் சுட்டுக் கருவே ரறுத்தாண்டி!

(பொ - ரை) சுத்தம், அசுத்தம், சுத்தாசுத்தமாக மூன்றுவகைப் பட்ட முப்பத்தாறு தத்துவங்களையும் தமது செயலற தீட்சித்து அவை அங்குரியாதவண்ணம் ஆசாரியன் செய்தான். 12

குருவாகி வந்தானோ? குலமறுக்க வந்தானோ?
உருவாகி வந்தானோ? உருவழிக்க வந்தானோ?

(பொ - ரை) ஞானாசாரியனாகி எழுந்தருளினனோ? குலப் பற்றை நீக்க எழுந்தருளினனோ? சகளீகரித்து அதாவது சகள வடிவங்கொண் டெழுந்தருளினனோ? எனது தேகத்தடிப்பை நீக்க எழுந்தருளினனோ! 13

கேடுவரு மென்றறியேன்; கெடுமதிகண் டோற்றாமல்
பாடுவரு மென்றறியேன்; பாதியாண் டிருந்தேண்டி!

(பொ - ரை) இனி வரும் கேட்டினைப்பற்றிச் சிந்தித்தே னில்லை; அறிவு விளங்காமல் துன்பத்தினை நோக்கினேனில்லை; பூமியிற் றலைமை பூண்டிருந்தேன். 14

எல்லாரும் பட்டகள மின்னவிட மென்றறியேன்;
பொல்லாங்கு தீர்க்கும் பொறியிலியைக் கண்டேண்டி!

(போ - ரை) தத்துவங்களெல்லாம் ஒடுங்கிய இடம், இன்ன நிலைக்களமென அதாவது இன்னவித மாயிற்றெனத் தெரிந்தேனில்லை; வினையை யொழிக்கும் ஐம்பொறி கடந்த முதல்வனை (சிவபெருமானைத்) தரிசித்தனன். 15

உட்கோட்டைக் குள்ளிருந்தா ரொக்க மடிந்தார்கள்;
அக்கோட்டைக் குள்ளிருந்தா ரறுபதுபேர் பட்டார்கள்.

(போ - ரை) தேகத்துள்ளே யிருந்த தத்துவங்கள் ஒருங்கே மடிந்தன; (அன்றியும்) அவ் வுடலின்கண்ணே யிருந்த தத்துவங்கள் அறுபது மொடுங்கின. 16

ஒக்க மடிந்ததடி; ஊடுருவ வெந்ததடி!
கற்கோட்டை யெல்லாங் கரிக்கோட்டை யாச்சுதடி!

(போ - ரை) தத்துவக் கூட்டங்கள் ஒருங்கே யொடுங்கின; அவை யாவும் நீறாயின; கருங்கல் கோட்டையினை யொத்திருந்த உடலானது கரிக்கோட்டைக்குச் சமானமாயிற்று. 17

தொண்ணூற் றாறுவரையுஞ் சுட்டான் றுரிசறவே;
கண்ணேறு பட்டதடி கருவே ரறுத்தாண்டி!

(போ - ரை) தொண்ணூற்றாறு தத்துவங்களையும் குற்றமற ஆசாரியன் தீட்சித்தான்; பிறரால் திருஷ்டிபட்டது அதாவது நீறாகி விட்டது; இனி அவை முளைத்தற்கு ஏதுவில்லாமற் செய்தான். 18

ஓங்காரங் கெட்டதடி; உள்ளதெல்லாம் போச்சுதடி!
ஆங்காரங் கெட்டதடி; அடியோ டறுத்தாண்டி!

(போ - ரை) பிரணவத்திற்கேதுவாகிய நாதமுங் குறைந்தது; அது சம்பந்தமான எல்லாந் தத்துவங்களும் நீங்கின; ஆங்கார தத்து

வத்தின் செருக்கொழிந்தது; அதற் காதாரமானதும் முளையாதபடி செய்தான். 19

தரையாங் குடிலைமுதல் தட்டுருவ வெந்ததடி!
இரையு மனத்திடும்பை யெல்லா மறுத்தாண்டி!

(போ - ரை) பூமியைப்போன்று எல்லாவற்றிற்கும் ஆதாரமான சுத்த மாயை முதலாகிய தத்துவமனைத்தும் ஒடுங்கின; விவகாரஞ் செய்துகொண்டேயிருக்கும் மனத்துன்பம் யாவு நீக்கினான். ()

முன்னை வினையெல்லா முழுது மறுத்தாண்டி!
தன்னை யறியவே தானொருத்தி யானேண்டி!

(போ - ரை) சஞ்சிதமுழுவதும் அதாவது பூர்வசென்மவினை முற்றும் நீக்கினான்; பின்னர் ஆன்மசொரூபத்தினை யறிந்தமாத்திரத்து முதல்வனை நாயகனாகக்கொண்டு தனித்துவிட்டேன். 21

என்னையே நானறிய விருவினையு மீடழித்துத்
தன்னை யறியத் தலமெனக்குச் சொன்னாண்டி!

(போ - ரை) ஆன்ம சொரூபத்தினையே அதாவது ஆன்மாவாகிய என்னையே நான் தெரிந்துகொள்ள, நல்வினை தீவினைகளைக் கெடுத்து, முதல்வனாகிய சிவபெருமானைத் தெரிந்துகொள்ளுமிடம் எனக்கு அறிவித்தான் (உபதேசித்தான்.) 22

தன்னை யறிந்தேண்டி! தனிக்குமரி யானேண்டி!
தன்னந் தனியே தனியிருக்கும் பக்குவமே!

(போ - ரை) முதல்வனாகிய சிவபெருமானைத் தெரிந்துகொண்டேன். உடனே அவனை அனுபவிக்கும் பக்குவமடைந்தேன்; இனி நான் தனித்திருக்கும் பக்குவமுண்டாயிற்றுப்போலும். 23

வீட்டி லொருவரில்லை, வெட்டவெளி யானேனண்டி!
காட்டுக் கெறித்தநிலா கனவாச்சே கண்டதெல்லாம்.

(போ - ரை) வீடாகிய உடலில் தத்துவமென்றுமில்லை; சிதாகாய சொரூபனாயினேன்; பிரபஞ்ச முழுவதும் காட்டி லெறிகின்ற நிலவினை யொத்தும், நித்திரையிற் கண்ட கனவினை யொத்தும் விளங்கின. 24

நகையாரோ கண்டவர்கள்? நாட்டுக்குப் பாட்டலவோ?
பகையாரோ கண்டவர்கள்? பார்த்தாருக் கேச்சலவோ?

(போ - ரை) என் துறவினைக் கண்டவர்கள் சிரியாரோ? நாடனைத்தும் பேச்சாக முடியாதோ? கண்டார் விரோதியாரோ? நேர்ந்தவர்க்குப் பழிப்பல்லவோ? 25

என்னிலைமை கண்டாண்டி! எங்கு மிருந்தாண்டி!
கன்னி யழித்தாண்டி! கற்பைக் குலைத்தாண்டி!

(போ - ரை) அடியேனுடைய நிலையினைநோக்கிப் பரிபூரணனாயிருந்தவன் ஆசாரிய கோலங்கொண் டெழுந்தருளி அபக்குவத்தை நீக்கி, ஏகதேசஞானத்தினை யொழித்து எல்லாம் சிவமாகப் பாவிக்கச் செய்தான். 26

கற்புக் குலைத்தமையுங், கருவே றறுத்தமையும்,
பொற்புக் குலைத்தமையும், போத மிழந்தமையும்.

(பொ - ரை) கற்பினை நீக்கினமையும், பிறப்பினை யொழித்தமையும், அழகைக் கெடுத்தமையும், தற்போத நீங்கினமையும். 27

என்ன வினைவருமோ? இன்னமெனக் கென்றறியேன்!
சொன்ன சொல்லெல்லாம் பலித்ததடி! சோர்வறவே.

(போ - ரை) மேலும் அடியேனுக்கு என்னென்ன துன்பம் விளையுமோ? தெரியேன்; ஆசாரியன் கூறிய வார்த்தைகளெல்லாம் தவறாமல் அனுபவத்தில் வந்தன. 28

கங்குல்பக லற்றிடத்தைக் காட்டிக் கொடுத்தாண்டி!
பங்க மழித்தாண்டி! பார்த்தானைப் பார்த்திருந்தேன்.

(போ - ரை) இரவு பக லில்லாத சிதாகாயத்திலே என்னைச் சேர்ப்பித்தான்; வினையைப் போக்கினான்; அடியேனை நோக்கியசிவத்தையே நான் தரிசித்துக் கொண்டிருந்தேன். 29

சாதியிற் கூட்டுவரோ? சாத்திரத்துக் குள்ளாமோ?
ஓதி யுணர்ந்ததெல்லா முள்ளபடி யாச்சுதடி!

(போ - ரை) இறக்கத் துணிந்துகொண்டமையின் இனி யுலகினர், குலத்திற் கூட்டிக்கொள்ளுவரோ? நன்மை தீமை இறந்த என் செயல் சாஸ்திரங்களிற் கட்டுப்படுமோ? படித்துத் தெரிந்தவையெல்லாம், உண்மையாகப் பலித்தன. 30

என்னகுற்றஞ் செய்தேனோ? எல்லாருங் காணாமல்,
அன்னைசுற்ற மெல்லா மறியாரோ வம்புவியில்?

(போ - ரை) யான் பிற ரறியாதபடி ஏதுதீமை புரிந்தனனோ? தாய் தந்தைய ராதியர் இப் பூமியின்கண்ணே தெரிந்துகொள்ளாரோ? 31

கொன்றாரைத் தின்றேனோ? தின்றாரைக் கொன்றேனோ?
எண்ணுதெல் லாமெண்ணு மிச்சை மறந்தேனோ?

(போ - ரை) ஒருகாலத்தி லென்னைக் கொன்ற சீவனை மற்றொருகாலத்தில் நான் அதனைப் புசித்தேனோ? ஒருகாலத்தில் என்னைப் புசித்த சீவனை யான் கொன்றேனோ? இத் துன்பங்களை யெல்லாம் எண்ணி ஆசைமறந்தவனாயினனோ? 32

சாதியிற் கூட்டுவரோ? சமயத்தோ ரெண்ணுவரோ?
பேதித்து வாழ்ந்ததெல்லாம் பேச்சுக் கிடமாச்சுதடி!

(போ - ரை) இறந்துண்டவென்னை மறுபடியும் சாதியிற் கூட்டிக்கொள்வரோ? கட்டுக்கடங்காத என்னைச் சமயத்தாரு ளொருவராக மதிப்பார்களோ? வேற்றுமையாக வாழ்ந்ததெல்லாம் வைவுக்கு இடமாயிற்று. 33

கண்டார்க்குப் பெண்ணலவோ? காணார்க்குக் காமமடி!
உண்டார்க ளுண்டதெலா மூணல்லா துண்பர்களோ?

(போ - ரை) உண்மை தேர்ந்தவர்கட்கு முன்னே உண்மையினைக் காணாத நான் பெண்டன்மை யுடையவனல்லவோ? அனுபவியாதவர்க்கே இச்சை விளையுமன்றோ? அனுபவிப்பவர் போகமனைத்தும் ஊழன்றி யனுபவிப்பார்களோ? 34

கொண்டவர்கள கொண்டதெல்லாங் கொள்ளாதார் கொள்ளுவரோ? விண்டவர்கள் கண்டவரோ? கண்டவர்கள் விண்டவரோ?

(போ - ரை) ஆசாரியரிடத்துப் பெற்ற பேறனைத்தும் அங்ஙனம் பெறாதவர் அனுபவிப்பரோ? பேசுபவர்கள் உண்மை யறிந்தவரோ? உண்மை தெரிந்தவர்கள் வாய்விட்டுப் பேசுவரோ? 35

பண்டாய நான்மறைகள் பாடும் பரிசலவோ?
தொண்டாய தொண்டருளந் தோற்றி யொடுங்குமதோ?

(போ - ரை) பழமையான வேதங்கள் தோத்தரிக்குந் தன்மையுடைத்தன்றோ? அடியார்க்கடியாரது மனத்தின்கண்ணே தோன்றி அம் மனத்திலேயே யொடுங்கத்தக்கதன்றோ. 36

ஓத வெளிதோ? ஒருவருணர் வெளிதோ?
பேதமற வெங்கும் விளங்கும் பெருமையன்காண்.

(போ - ரை) வாக்கினுக் கெட்டுவதோ? ஒருவன் தெரிந்து கொள்ளுந் தன்மையதோ? அபேதமாக எவ்விடத்தும் பிரகாசிக்குந் தன்மையுடையன் சிவபெருமான். 37

வாக்கு மனமுங் கடந்த மனோலயன்காண்!
நோக்க அரியவன்காண்! உண்ணரிய வுண்ணியன்காண்!

(போ - ரை) சொல்லும் இருதயமும் கடந்த மனத்திருப்பவன்; பிரத்தியட்ச காட்சியினுக்கு எலாதவன்; அணுவிற்கணுவாயிருப்பவன் அதாவது நுட்பமா யறிபவர்பாலும் நுண்மையாக விளங்குபவன். 38

சொல்லுக் கடங்கான்காண்! சொல்லிறந்து நின்றவன்காண்!
கல்லு ளிருந்த கனலொளிபோ னின்றவன்காண்!

(போ - ரை) அபாஞானத்திற் கட்டுப்படாதவன்; அபாஞானத்தைக் கடந்தவன்; சிவலிங்கத்தி லெழுந்தருளியிருந்த அருட்சோதி போல இருப்பன் காண். 39

சுட்டிறந்த பாழதனிற் சுகித்திருக்கச் சொன்னவன்காண்!
ஏட்டி லெழுத்தோ? எழுதினவன் கைப்பிழையோ?

(போ - ரை) ஏகதேச அறிவிற் கெட்டாத சிதாகாயத்தில் சுகமாக வாழ்ந்திருக்கக் கட்டளை யிட்டவன்; (இத்தகையன் கட்டுக்கு அடங்குவனென்பது) சாமானியர் சிலர், ஏட்டி லெழுதிய வெறும் பேச்சோ? உண்மையினையே எழுதும்போது உண்டான தவறோ? (அறியேன்.) 40

சும்மா விருக்கவைத்தான் சூத்திரத்தை நானறியேன்;
அம்மா! பொருளிதென வடைய விழுங்கினண்டி!

(போ - ரை) மவுனநிலையில் வாழ வைத்தவனது தந்திரத்தினை முதலில் அறிந்துகொண்டேனில்லை; அங்ஙனம் சும்மா விருக்க

வைத்த உண்மையினைத் (தெரிந்து கொண்ட பின்னர்) அம்மா! இன்னதுதான் பொருளென்ன என்னைத் தானாக்கிக்கொண்டனன்.

பார்த்த விடமெல்லாம் பரமாகக் கண்டேனேண்டி!
கோர்த்த நிலைகுலைத்த கொள்கை யறிவேண்டி!

(போ - ரை) நான் நோக்கிய பொருளனைத்தும் சிவமயமாகத் தரிசித்தேன்; (தரிசித்த பின்) தத்துவக் கூட்டங்களால் கட்டப்பட்டிருந்த தன்மை கலைந்தவிதம் தெரிந்தேனில்லை. 42

மஞ்சன மாட்டி மலர்பறித்துச் சாத்தாமல்
நெஞ்சுவெறும் பாழானேன் நின்றநிலை காணேனேண்டி!

(போ - ரை) (சிவலிங்கப் பெருமானுக்கு) அபிடேகம் செய்து புட்பங்களைப் பறித்து அருச்சனைசெய்யாமல் மனத்தினை வீணாக்கி விட்டனன்; (அதனால்) முதல்வன் உண்மை நிலையினைத் தெரிந்து கொண்டேனில்லை. 43

பாடிப் படித்திருந்தும் பன்மலர்கள் சாத்தாமல்,
ஓடித் திரியாம லுருக்கெட்டு விட்டேனேண்டி!

(போ - ரை) (பல சாஸ்திரங்களை) ஆராய்ச்சி செய்திருந்தும், பல புட்பங்களை சிவலிங்கத்தின்மேல் அருச்சியாமலும், பல திவ்விய ஸ்தலங்கட்குச் செல்லாமலும் தேகத்தை வீணாக்கினேன். 44

மாணிக்கத் துள்ளொளிபோல் மருவி யிருந்தாண்டி!
பேணித் தொழுமடியார் பேசாப் பெருமையன்காண்!

(போ - ரை) மாணிக்கத்தின்கண்ணே விளங்கும் பிரகாசத்தினைப்போல, சிவசத்தியில் திருமேனிகொண்டு விளங்கினன்; அத்தகைய முதல்வனை விரும்பிப் பணிந்தார் சொல்லுதற்கரிய அருமையினை யுடையவன். 45

அன்றுமுத லின்றளவு மறியாப் பருவமதில்
என்றும் பொதுவா யிருந்த நிராமயன்காண்!

(பொ - ரை) பிறந்த நாள்முதல் இன்றையவரையில் என்னை யானறியாக் காலமுழுவதும் எக்காலமும்கலந்திருந்த நிராமயனனவன்.

சித்த விகாரத்தாலே சின்மயனைக் காணாமல்
புத்தி கலங்கிப் புகுந்தேன் பொறிவழியே.

(பொ - ரை) மன மயக்கத்தினாலே ஞானமயனாகிய சிவபெருமானைத் தரிசியாமல், அறிவு வேறுபட்டு இந்திரியங்களின் வழியே சென்றனன். 47

பத்தி யறியாமற் பாழிற் கவிழ்ந்தேனடி!
ஒத்தவிட நித்திரையென் றொத்து மிருந்தேனடி!

(பொ - ரை) சிவபக்தி யின்னதெனத் தெரிந்துகொள்ளாமல் வீண் காலம் போக்கினேன்; சௌகரியமான இடமே சுகமென்னத் தங்கி வாழ்ந்தேன். 48

செத்தாரை யொத்தேனடி! சிந்தை தெளிந்தேனடி
மற்றொரு மில்லையடி! மறுமாற்றங் காணேனடி!

(பொ - ரை) பிணத்தினை ஒத்து வாழ்ந்தேன்; அதனால் மனத் தெளிவுற்றேன்; சுட்டியறிதற்கு ஒருவருமில்லை; வேறு வார்த்தையுங் காணேன். 49

கல்வியல்ல, கேள்வியல்ல, கைகாட்டுங் காரணங்காண்
எல்லையள வற்றதடி! எங்கு நிறைந்ததடி!

(பொ - ரை) சின்முத்திரைக்குக் காரணம்; கல்வி கேள்விகளால் தெரிந்துகொள்ளத் தக்கதல்ல; அது அகண்டிதமானது; சர்வ வியாபகமானது. 50

வாசா மகோசரத்தை மருவியிடங் கொண்டாண்டி;
ஆசூச மில்லாண்டி! அறிவுக் கறிவாண்டி!

(போ - ரை) ஆன்மாக்களின் வாக்குக்கெட்டாததைப் பொருந்திய இடத்தினை வாய்ந்தவன்; அறிவினுக்கு அறிவாகி (யாரிடத்தும்) அசூயை யில்லாதிருப்பவன். 51

பத்துத் திசைக்கு மடங்காப் பருவமடி!
எத்திசைக்கு மெங்கு மிடைவிடா தேகமடி!

(போ - ரை) பத்துத் திசைகட்கும் கட்டுப்படாத நிலையினை யுடையான்; எவ்விடத்தும் எங்கும்பரிபூரணமாக ஒன்றாயிருப்பவன்.

தித்திக்க வூறுமடி! சித்த முடையார்க்குப்,
பத்திக் கடலுட் பதித்தபரஞ் சோதியடி!

(போ - ரை) சிவத்தியான முடையார்க்குச் சுவைப்பொருளாயுள்ளவன்; (அடியார்களுடைய) பத்தியென்னும் சமுத்திரத்தில் நிலைத்த அருட்பெருஞ்சோதி. 53

உள்ளுணர்வாய் நின்றவர்த முணர்வுக் குணர்வாண்டி!
எள்ளளவு முள்ளதிலே யேறிக் குறையாண்டி!

(போ - ரை) அதோமுகத்தி லிருப்பவர்கள் அறிவுக்கு அறிவாயிருப்பவன்; சிறிதளவும், (அடியர்) மனத்திலேவித்தியாசமாகஇரான்.

தூருந் தலையுமிலான்; தோற்ற மொடுக்கமிலான்;
ஆரு மறியாம லகண்டமாய் நின்றாண்டி!

(போ - ரை.) அடியும் முடியுமில்லாதவன். பிறப்பும் இறப்பும் இல்லான். ஏகதேச உணர்வினு லறியப்படாதவியாபகமாகவிருந்தான்.

எத்தனையோ வண்டத் திருந்தவர்க ளெத்தனைபேர்
அத்தனைபே ருண்டாலும் அணுவுங் குறையாண்டி!

(போ - ரை) எண்ணிறந்த உலகங்களில் வாழ்ந்தவர்கள் எவ்வளவோ அவ்வளவு ஆன்மாக்கள் அதாவது, இவ்வளவெனக் கணக்கில் அடங்கக்கூடாத ஆன்மகோடிகள் (கிருபா சமுத்திரத்திற் படிந்துதிருவருளை) உண்டாலும், சிறிதும் குறையான் அதாவது பரமாணு அளவும் குறைதலில்லான். 56

வாக்கு மனமும் வடிவுமிலா வான்பொருள்காண்!
போக்கும் வரவுமிலான்; பொருவரிய பூரணன்காண்!

(போ - ரை) சொல்லும், உள்ளமும், உருவமும் இல்லாதவனாகிய பொருளாயுள்ளவன்; போதலும் வருதலும் இல்லாதவன்; ஒப்பற்ற வியாபகன். 57

காட்சிக் கெளியான்காண்! கண்டாலுங் காணான்காண்!
மாட்சிமனம் வைத்தார்க்கு மாணிக்கத் துள்ளொளிகாண்!

(போ - ரை) திருவருட்பார்வைக்கு இலேசாக எட்டக்கூடியவன்; அங்ஙனம் திருவருளைக்கொண்டு கண்டாலும் பிரத்தியக்ஷமாக ஊனக்கண்ணுக்கு எட்டமுடியாதவன். பெருமைபொருந்திய மனத்தால் தியானித்தவர்கட்கு மாணிக்கவொளிபோன்று பிரகாசிப்பவன்.

வாழ்த்தி யவனை வழிப்பட்டால் மன்னுயிர்கள்
தோற்ற வரியான்காண்! சொல்லிறந்த சோதியன்காண்!

(போ - ரை) வாயாரத்தோத்தரித்து அம்முதல்வனை வணங்கினல் பிரத்தியட்சமாகத் தோற்ற அருமையானவன்; சொல்லுக்கெட்டாத அருட்பிரகாசன். 59

ஐய மறுத்தவனை யாராய்வா ருண்டானல்
வையகத்தே வந்து மலர்பாதம் வைத்திடுவான்.

(போ - ரை) ஆன்மாக்கட்கு நேர்ந்த சந்தேகத்தை யொழித்தவனை விசாரிப்பா ருண்டானல், சிவபெருமான் பூமியின்கண்ணே ஆசாரிய கோலங்கொண்டு வந்து அவர்கட்குத் திருவடி தீட்சை செய்திடுவான். 60

அணுவுக்கு மேருவுக்கு மகம்புறமாய் நின்ருன்காண்!
கணுமுற்று ஞானக் கரும்பின் றெளிவான்காண்!

(போ - ரை) அதி சிறிதாகிய அணுவினிடத்தும், அதிபெரிதாகிய மேருவினிடத்தும் உள்ளும் புறமுமாய் வியாபகமாக எழுந்தருளியிருப்பவன்; கணுவானது முதிர்ந்த, ஞானவடிவமான கரும்பினது சுவையுடன் விளங்கும் சாரமானவன். 61

எந்நாளு மிந்நாளு மிப்படியாய் யப்படியாய்ச் [காண்!
சொன்னலுங் கேளான்காண்; சோத்திரத்திற் கொள்ளான்

(போ - ரை) எக்காலத்தும், இப்போதும், இவ்விதமாயுள்ளவன் அவ்விதமாயுள்ளவன் என்று, அறிஞர் எவர் சொல்லினும் கேட்கமாட்டான்! தனது காது கொடான். 62

ஆத்தாளுக் காத்தாளாம்; அப்பனுக்கு மப்பனுமாம்;
கோத்தார்க்குக் கோத்தநிலை கொண்டகுணக் கடல்காண்!

(போ - ரை) அன்னைக்கு அன்னையாகியும், தந்தைக்குத் தந்தையாகியும் உள்ளவன்; சுற்றத்தினர்க்குச் சுற்றத்தினராயிருந்து வாய்ந்த கருணைக்கடல். 63

இப்போ புதிதோடி! எத்தனைநா ளுள்ளதடி!
அப்போதைக் கப்போ திருளறிவுக் கந்தாண்டி!

(போ - ரை) இன்றுதான் நூதனமாக உதித்தவனோ? பழமையாக வுள்ளவனன்றோ? அப்போதைக்கப்போது திருவருள் கொடுப்பவனேயாம். 64

பற்றற்றார் பற்றாகப் பற்றி யிருந்தாண்டி!
குற்ற மறுத்தாண்டி! கூடி யிருந்தாண்டி!

(போ - ரை) பிரபஞ்சப் பற்று நீங்கின ஆன்மாக்கட்கு ஆதரவாகச் சம்பந்தித்திருந்தான்; அவர்கள் பாச மலத்தையு மொழித்தான்; அவருடன் அத்துவிதமாக விருந்தான். 65

வெட்ட வெளியி லெனைமேவி யிருந்தாண்டி!
பட்டப் பகலிலடி! பார்த்திருந்தா ரெல்லோரும்.

(போ - ரை) சிதாகாயத்தில் (பகிரங்கமானவிடத்தில்) அடியேனைக் கலந்திருந்தான்; சுத்த மாயாபுவனத்தில் அன்பரெல்லாம் பார்த்திருந்தனர். 66

வாழ்வான வாழ்வெனக்கு வந்ததடி! வாழாமல்
தாழாமற் றாழ்ந்தேனடி! சற்றுங் குறையாமல்.

(போ - ரை) அதனால் அடியேனுக்கு, திருவருளாகிய வாழ்வு கிடைத்தது; பாசத்தில் வாழாமல், அதனாற் கீழ்படாமல் சிறிதுங் குறையுண்டாகாதபடி திருவருளி னமைந்தேன். 67

பொய்யான வாழ்வெனக்குப் போதுமெனக் காணேண்டி!
மெய்யான வாழ்வெனக்கு வெறும்பாழாய் விட்டதடி!

(போ - ரை) நிலையில்லாத பிரபஞ்ச வாழ்வு எனக்குத் திருப்தியடையக்காணேன்; அதாவது எனக்குப் போதும் என வெறுப்படைந்தேன் இல்லை; இதனால் சத்தியமாகிய திருவருள் எனக்குச் சிதாகாயமாகவாச்சுது அதாவது பொய்த்துப்போய்விட்டது. 68

கன்னி யழித்தவனைக் கண்ணாரக் கண்டேண்டி!
என்னியல்பு நானறியேன்; ஈதென்ன மாயமடி!

(பொ - ரை) மலத்திற்கட்டுப்பட்டிருந்த வயதை நீக்கினவனைப் பிரத்தியட்சமாகத் தரிசித்தேன்; (பின்னர்) எனது சுதந்தர நிலையினைத் தேரேன்; இஃதென்ன ஆச்சரியம். 69

சொல்லாலே சொல்லுதற்குச் சொல்லவா யில்லையடி!
எல்லாருங் கண்டிருந்து மிப்போ தறியார்கள்.

(பொ - ரை) பெருமான் தன்மையினைச் சொற்களினாலே எடுத்துக்கூறித் தீர்மானித்து அபரஞானத்தாற் பேசுதற்கு வாயெழவில்லை; (இவ்வுண்மையினை) யாவரு மறிந்திருந்தும், மலத்தடிப்பால் இப்போது உணரார்கள். 70

கண்மாய மிட்டாண்டி! கருத்து மிழந்தேண்டி!
உண்மாய மிட்டவனை யுருவழியக் கண்டேண்டி;

(பொ - ரை) (ஆசாரியன்) நயனதீட்சை செய்தான்; (அங்ஙனம் செய்தமாத்திரத்தில்) என் தற்போத மிழந்தேன். என்னுள்ளே போத மிழக்கச்செய்தவனை நிஷ்கள சிவமாகத் தெரிசித்தேன். 71

என்னசொல்லப் போரே னிந்த வதிசயத்தைக்,
கன்னி யிளங்கமுகு காய்ந்ததடி கண்ணாய்.

(பொ - ரை) நிகழ்ந்த அருமைப்பாட்டினை என்னவென எடுத்துச் சொல்லுவேன்? பிரத்தியட்சமாக (இளம் பாக்குமரம் போன்ற) சிறுவயதிலேயே (காயுண்டானதுபோல்) திருவருள் விளைந்தது. 72

ஆர்ந்தவிட மத்தனையு மருளா யிருக்குமடி!
சார்ந்தவிட மெல்லாஞ் சவ்வாது மணக்குதடி!

(பொ - ரை) தங்கியவிடமெல்லாம் திருவருண்மயமாக விருக்கின்றது; அடைந்தவிட முழுவதும் சிவமணம் வீசுகின்றது. 73

இந்தமண மெங்கு மியற்கைமண மென்றறிந்து
அந்தசுகா தீதத் தருட்கடலில் மூழ்கினண்டி!

(பொ - ரை) இங்ஙனம் வீசிய சிவமணம் இயற்கையாகவே யெவ்விடத்தும் வீசுகின்ற மணமென்னத் தெரிந்து அந்த ஆனந்தாதீத கிருபா சமுத்திரத்தில் அழுந்தினேன். 74

'இரும்புநிறை நீர்போல' எனைவிழுங்கிக் கொண்டாண்டி!
'அரும்புநிறை வாசனைபோ' லன்றே யிருந்தாண்டி!

(பொ - ரை) காய்ச்சிய இரும்பு கிரகித்த நீரினைப்போல, அடியேனைக் கிரகித்துக்கொண்டான்; புட்பத்தி லுற்ற மணம்போல அநாதியிலேயே ஆன்மாவுடன் கலந்திருந்தான். 75

'அக்கினிகற் பூரத்தை யறவிழுங்கிக் கொண்டாற்போல்'
மக்கினம் பட்டுள்ளே மருவி யிருந்தாண்டி!

(பொ - ரை) தீயானது கற்பூரத்தினைக் கிரகித்தாற்போல அதாவது, முற்றும் தன் மயமாக்கிக் கொண்டதுபோல, மலக்குறைவடைந்த என்னிடத்தே கலந்திருந்தான் (எழுந்தருளி யிருந்தான்.)

'கடல்நீறு மாறும்போற்' கலந்துகரை காணேணண்டி!
'உடலு முயிரும்போ' லுட்கலந்து நின்றாண்டி!

(பொ - ரை) கடற் சலமும், நதியும் சேர்ந்த காலத்து எல்லை காண முடியாததுபோன்று, தேகமும் உயிரும் ஒன்றுபட்டது போன்று சிவபெருமான் உயிருடன் அபேதமாக இருந்தான். 77

'பொன்னுமுரை மாற்றும்போற்' பொருவரிய பூரணன்கா
மன்னுமனு பூதியடி மாணிக்கத் துள்ளொளிபோல். [ண்

(பொ - ரை) பொன்னும் அதனையுரைத்துத் தெரிந்துகொள்ளும் மாற்றும்போலவும், மாணிக்கத்தின் பிரகாசம்போலவும், ஒப்பற்ற பரிபூரணனாய்ப் பிரித்து அறியக்கூடாத நிலைபெற்ற சுவானுபூதிக்குரியவன். 78

கங்குகரை யில்லாண்டி! கரைகாணாக் கப்பலடி!
எங்கு மளவில்லாண்டி! ஏகமாய் நின்றாண்டி!

(பொ - ரை) ஓர் அளவு காணப்படாதவன்; எத்துறையினையு நாடாத கப்பலொத்தான்; அகண்டிதன்; (இவ்வளவென அளவிடப் படாதவன்); ஒரு தனித்த பொருளாயுள்ளவன். 79

தீவகம்போ லென்னைச் சேர்ந்தபர சின்மயன்காண்!
பாவகமொன் றில்லாண்டி! பார்த்திடமெல் லாம்பரன்காண்.

(பொ - ரை) தீபத்தினைப்போல அடியேனைக் கலந்து விளக்கம் செய்துகொண்டிருக்கும் ஞானமயன்; பாவமென்பது இல்லாதவன்; அல்லது பாவனை யொன்றினும் அறியப்படாதவன்; கண்ட விடம் எங்கும் சிவமாக வியாபித்திருப்பவன். 80

உள்ளார்க்கு முள்ளாண்டி! ஊருமில்லான், பேருமில்லான்;
கள்ளப் புலனறுக்கக் காரணமாய் வந்தாண்டி!

(பொ - ரை) உண்டென்பார்க்குப் பிரத்தியட்சமானவன்; தனக்கென ஊரும் பேரு மில்லாதவன்; ஆயினும், ஆன்மாக்களின் வஞ்சகமான இந்திரியங்களை யொழிக்க (ஊரும் பேருங் கொண்டு) ஆச்சாரியனாய் வந்தனன். 81

அப்பிறப்புக் கெல்லாம் அருளா யமர்ந்தாண்டி!
இப்பிறப்பில் வந்தா னிவ்வுருகு மெய்ப்பொருள்காண்!

(போ - ரை) முன் செனனங்கட்கெல்லாம் திருவருள் கூட்டி வந்தான்; இச் சென்மத்தில் ஆசாரியனாய் வந்தான்; இவனே உண்மைச் சிவம். 82

நீரொளிபோ லெங்கு நிறைந்த நிராமயன்காண்!
பாரொளிபோ லெங்கும் பரந்த பராபரன்காண்!

(போ - ரை) நீரிற் கலந்த அதனொளிபோல், உலக வியாபகனாகி பல நோயற்றவன்; பூமியிற் சூரியப் பிரகாசம் வியாபித்திருத்தல் போல, எங்கும் வியாபியா யுள்ளவன். 83

நூலா லுணர்வரிய நுண்மையினு நுண்மையன்காண்!
பாலாறு சர்க்கரைபோற் பரந்தபரி பூரணன் காண்!

(போ - ரை) பாச நூல்களினாலே எட்டற்கரிய நுட்பத்திலும் அதி நுட்பமானவன்; பாலும் சருக்கரையுங் கலந்தாற்போலப் பரவிய பரிபூரணன். 84

உளக்கண்ணுக் கல்லா லூன்கண்ணா லோருமதோ?
விளக்குத் திடரொளிபோன் மேவி யிருந்தாண்டி!

(போ - ரை) மனக்கண்ணுக்குப் புலப்படுவானல்லது ஊன் நேத்திரத்தா லாராயத்தக்கவனோ? அகலி லேத்திய தீபம்போலப் பொருந்தியிருந்தான். 85

கல்லு ளிருந்த கனலொளிபோற் காரணமாய்ப்
புல்லி யிருந்தும் பொருவரிய பூரணன்காண்.

(போ - ரை) அக்கினி சம்பந்தமாயுள்ள பிரகாசமானது கல்லினிடத்தே சூக்குமமாகக் கலந்திருந்ததுபோன்று எல்லாவற்றிலும் கலந்திருந்தும் ஒப்பற்ற பரிபூரணன். 86

பொற்பூவும் வாசனைபோற் போதம் பிறந்தார்க்குக்,
கற்பூவும் வாசனைபோற் காணாக் கயவருக்கு.

(பொ - ரை) அழகிய புட்பத்தினிடத்து மணம்போல அருளடைந்தார்க்கு உண்டு; கல்லாற் செய்யப்பட்ட பூவின் வாசனையைப் போல மருளுடையாருக்கு உண்டு. 87

மைக்குழம்பு முத்தும்போன் மருவி, மறவாதவர்க்குக்
கைக்குட் கனியாகுங் கருவறுத்த காரணர்க்கு.

(பொ - ரை) கருமையிற் கலந்த முத்தினைப்போலத் தன்னை மறவாதவரிடத்தே பொருந்தி, பிறவியை நீக்கிய பெரியோர்கட்கு உள்ளங்கை நெல்லிக்கனியாவன். 88

பளிங்கிற் பவளமடி! பற்றற்ற பாவலர்க்குக்,
கிளிஞ்சிலை வெள்ளியென்பார் கிட்டாதார் கிட்டுவரோ?

(பொ - ரை) பிரபஞ்சப் பற்று இல்லாதவர்கட்குப் பளிங்கினுடன் கலந்த பவளம்போன்று விளங்குவன்; யாவருக்கு மெட்டாதவக் கிளிஞ்சிலை வெள்ளியென மயங்குவார்கட்கு எட்டுவரோ? 89

எட்டுக் கடங்காண்டி; எழுத்திற் பிறவாண்டி!
நாட்டி னரிகளெல்லா நற்புரவி செய்தாண்டி!

(பொ - ரை) எட்டினால் அளக்கப்படாதவன்; சொல்லால் தீர்மானிக்கப்படாதவன்; நாட்டினையடுத்த காட்டிலுள்ள நரிகளெல்லாவற்றையும் நல்ல குதிரைகளாகச் செய்தவன். 90

பஞ்சப் பிரளயத்து மிஞ்சி யிருப்பாண்டி!
நஞ்சு பொதிமிடற்று னயனத் தழல்விழியான்.

(பொ - ரை) பிருதிவியாதி ஐவகை பூதங்களின் பிரளயகாலத்தும் மிகுதியாகவிருப்பவன் அதாவது அப்பாற்பட்டவன்; விஷகண்டன்; அக்கினிநேத்திரன். 91

அகங்காக்கும்; புறங்காக்கும்! அளவிலா வண்ட முதல்
செகங்காக்கும்; காணுத் திசைபத்துங் காக்குமடி!

(போ - ரை) உள்ளும் புறமும் கலந்து காக்கும்; எண்ணிலாத அண்டமுதலாக உலகினைக் காக்கும்; காணப்படாத பத்துத்திசைகளையும் புரக்கும். 92

பேசாப் பிரமமடி! பேச்சிறந்த பேரொளிகாண்!
ஆசா பாசங்கள் அணுகாத பேரொளிகாண்!

(போ - ரை) ஒருவராலும் இன்னபடியெனப் பேசப்படாத தெய்வம் (பிரமமயமா யுள்ளவன்;) வாக்குக்கெட்டாதபிரகாசன் அதாவது பெருஞ்சோதியாக வுள்ளவன்; ஆசாபாசங்களால் நெருங்கமுடியாத பெரிய சோதியாக விளங்குபவன். 93

தேச மிறந்தவன்காண்! திசையிறந்த தெண்கடல்காண்!
ஊசி முனையூன்ற வில்லா வுருபொருள்காண்!

(போ - ரை) ஊரில்லாதவன்; அளவில்லாத அருட்கடல் போன்றவன்; ஊசி நுனியளவும் ஊன்றுதற்கு இடமில்லாதபடி எங்கும் வியாபகனுயுள்ளவன். 94

சிப்பியின் முத்தொளிகாண்! சின்மயநோக் கில்லார்க்கு
அப்பி லொளிபோ லமர்ந்த வரும்பொருள்காண்!

(போ - ரை) (ஞானிகட்குச்) சிப்பியில் விளங்கு முத்தினையொத்தவன்; ஞானப்பார்வை யில்லார்க்கு நீரினிடத்துத் தோன்று அது விளங்கும் பிரகாசம்போலத் தங்கிய அருமையான வஸ்து. 95

ஆலா விருட்சமடி! அளவிலாச் சாகையடி!
மேலாம் பதங்கள் விசும்பூடுருவு மெய்ப்பொருள்காண்!

(போ - ரை) எண்ணில்லாத கிளைகளுடன் கூடிய ஆலவிருக்ஷம் போன்று, அநேகமான உலகங்களை வாய்ந்த ஆகாயவெளியில் ஊடுருவி வியாபித்து விளங்கும் உண்மைப்பொருள். 96

வங்கிஷமெல் லாங்கடந்து மருவா மலர்ப்பதங்காண்;
அங்கிஷமா யெங்கும் ஆய்ந்த வரும்பொருள்காண்!

(போ - ரை) பரம்பரை யெல்லாவற்றையுங்கடந்து விளங்கும் தாமரைபோன்ற திருவடியினை யுடையவன்; எவ்விடத்தும் நுண்ணியனாய் ஆராயத்தகுந்த அரிய பொருளானவன். 97

நாமநட்ட மானதடி! நவிலவிட மில்லையடி!
காமனைக்கண் ணலெரிக்கக் கனல்விழித்த காரணன்காண்!

(போ - ரை) யாவரும் அஞ்சத்தகுந்த ஆனந்த நடனஞ் செய்பவன்; அவனுடைய நிலைமை இன்னபடித்தெனப் பேசற்கிடமில்லாதவன்; நேத்திரத்தினால் மன்மதனை யெரிக்கும்படி விழித்துப் பார்த்தவன். 98

கொட்டாத செம்பொனடி! குளியாத் தரளமடி!
எட்டாத கொம்பிலடி யீப்புகாத் தேனமுதம்.

(போ - ரை) உளிபடாத சுயம்பாகிய பொன்னையும், கடலில் முழுகி எடுக்கப்படாத முத்தினையும், ஒருவருக்கும் எட்டாத கிளையிற் கட்டியுள்ள ஈக்கள் மொய்க்காத தேவாமிர்தத்தினையும் போன்றவன்.

காணிப்பொன் னணியுடன் கல்லுரைமாற் றின்னதென்றே
ஆணியுடன் கூட்டி யடங்கலிட்டுக் கொண்டாண்டி!

(போ - ரை) (யாவருக்கும்) உரிமையாகிய பொன்கட்டையைக் கல்லுரை மாத்திரை இன்னதென்றே கல்லி லுரைத்து மாற்றுக் கண்டுபிடியாதபடி பொன்கட்டையின் தன்மையைத் தெரிந்து

கொள்ளுதல்போல, எல்லாவற்றையும் (ஆன்மா அனைத்தையும்)தெரிந்துகொண்டான். 100

அளவிறந்த அண்டத்தா ரத்தனைபே ருண்டாலும்
பிளவளவுந் தான்சற்றும் பேசாப் பிரமமடி!

(பொ - ரை) எண்ணில்லாத அண்டத்தினர்கள் அவ்வளவுபேர்களும் புசித்திடினும் ஒருசிறிதும் குறையாதபடி மவுனமாகவிருக்கும் முதல்வன். 101

கன்னெஞ்சி னுள்ளே கழுநீலம் பூத்தாற்போல்,
என்னெஞ்சி னுள்ளே யிணையடிகள் வைத்தாண்டி!

(பொ - ரை) (பக்குவமடையாத) கல்போன்ற மனத்தினிடத்தே நீலோற்பலமலர் பூத்ததுபோல், அடியேன் மனத்திலே இரண்டு திருவடிகளையும் மலர்ந்தருளச் செய்தனன். 102

வேதப் புரவியடி? விரைந்தோடி யும்மறியார்;
காதற்ற ஞானமடி! காண்பார் கருத்துடையோன்.

(பொ - ரை) மறைகளாகிய குதிரைகளின்மேல் செல்பவன்; அதிவேகமாகப் பின் றொடர்ந்தும் அகப்படாதவன்; காதினாற் கேளாது (மவுனநிலையினால்) வெளிப்படுபவன்; (தற்போத நீங்கித்) தரிசிப்பார் மனத்திலே விளங்குபவன். 103

பாச வினையைப் படப்பார்த்த பார்வையுடன்
நேசத்தைக் காட்டி நில்லென்று சொன்னாண்டி!

(பொ - ரை) பாசசம்பந்தமான வினையொழிய தீட்சித்த நேத்திரத்துடன் (திருவருளாகிய) அன்பினைக் காட்டிசிவோகம்பாவனையிலிருவென்று கட்டளையிட்டான். 104

ஓசை யொடுங்குமிட மோங்காரத் துள்ளொளிகாண்!
பேசா திருக்கும் பிரமமிது வென்றாண்டி!

(போ - ரை) வாக்கிறந்தவிடம்; பிரணவத்துட் சோதியான வன், சிவன் மவுனநிலையினர்கட்குத் தோன்றுவதென்றான். 105

சின்மய நன்னோக்காற் சிற்சொரூபங் காட்டியெனைத்
தன்மயமா யாக்கியே தானவனாய் நின்றாண்டி!

(போ - ரை) ஞானப்பார்வையினால் ஞானவடிவைத் தரிசிப் பித்து, சிவமயமாக்கி, நான் சிவமாக விளங்கச்செய்தான். 106

தானென்னைப் பார்த்தாண்டி! தன்னைத்தா னல்லாமல்
நானென்ன சொல்லுவண்டி! நவிலவிட மில்லையடி!

(போ - ரை) ஆசாரியன் அடியேனைத் திருஷ்டித்தான்; எங் கும் சிவமயமா யிருப்பதல்லால் இத்தன்மைத்தான நிலையினை நானென்னவெனச் சொல்லுவேன்? சொல்லும் வகை யில்லை. 107

இன்றிருந்து நாளைக் கிறக்கிறபே ரெல்லாரும்
என்றும்பரி பூரணத்தி லினிதிருக்கச் சொன்னாண்டி!

(போ - ரை) இன்றைக்கு உயிருடன் வாழ்ந்து அடுத்த நாள் இறக்கத்தகுந்த மனிதரையெல்லாம் எக்காலத்தும் திருவருளில் நன் றாய் வாழும்படி கட்டளையிட்டான். 108

பார்க்கி லெளிதலவோ? பற்றற்ற பற்றலவோ?
ஆர்க்கு மிடங்காட்ட வவனிதனில் வந்தாண்டி!

(போ - ரை) யாவருக்கும் மோட்சநிலை காட்ட ஆசாரியவடி வாக உலகில் வந்தவன், (தற்போத மொழிந்து பார்க்கில்) எளிமை யானவனன்றோ? (பிரபஞ்சப்) பற்றிலார்கட்குப் பற்றுடையா னல்லவோ? 109

இத்தனை காலமடி பிறந்து பிறந்ததெல்லாம்
இத்தனையு மில்லையடி யிரும்பினுறை நீரானேன்.

(போ - ரை) இதுகாறும் (உலகில்) இறப்பினும் பிறப்பினும் பட்டதெல்லாம் இவ்வளவும் இனியில்லை யென்னும்படி காய்ச்சிய இரும்பானது, நீரைக் கிரகித்ததுபோ லாக்கினான். 110

எக்காலம் பட்டதடி! இறந்து பிறந்ததெல்லாம்,
அக்கால மெல்லாம் அழுந்தினே னரகில்.

(போ - ரை) இறப்புப் பிறப்பனைத்தும் எவ்வளவு கால முண்டானதோ அவ்வளவுகால மனைத்தும் யான் நரகிலழுந்தினேன். 111

காலங் கழிந்ததடி! கர்மமெல்லாம் போச்சுதடி!
நாலு வகைக்கருவு நாமகெட்ட மாச்சுதடி!

(போ - ரை) அநேககாலம் சென்றது; கர்மவினையனைத்து நீங்கியது; நாலுவகைப்பட்ட அண்டசம், சுவேதசம், உற்பீசம், சராயுசம் ஆகிய பிறப்பும் பெயரற்றுச் சூனியமாகியது. 112

முப்பாழுக் கப்பால் முதற்பாழ் முழுமுதலாய்
இப்போது வந்தான்காண்! எனைவிழுங்கிக்கொண்டான்காண்!

(போ - ரை) விந்து மோகினி மானாகிய மூன்று பாழுக்கு மப்பால் சிதாகாசத்தில் முழுமுதலாயுள்ளவன், இப்போது ஆசாரியகோலங்கொண்டு வந்தான்; அடியேனைத் திருவருளில் முழுகச்செயதான்.

'பாலின்க ணெய்யிருந்தாற் போலப்' பரஞ்சோதி
ஆலிங் கனஞ்செய் தறவிழுங்கிக் கொண்டாண்டி!

(போ - ரை) பாலில்மறைந்த நெய்யினைப்போல அருட்சோதி என்னைக் கலந்து தன்னருளில் முற்றும் மறையச்செய்தான். 114

தெத்தபட மானேனண்டி! தீபிரும்பி னீரானேன்;
'ஒத்தவிட நித்திரை'யென் றோது முணர்வறிந்தேன்.

(போ - ரை) நெருப்பிலிட்ட வஸ்திரமாயினேன்; அக்கினிமயமான இரும்பு கிரகித்த நீராயினேன்; வினையினையொத்த அவசரத்திலே சிவயோக நித்திரையுண்டென் றறிந்தேன். 115

ஒப்பு முவமையுமற் றோதவரி தாயபொருள்
இப்பூவி னிற்குருவே யென்னவந்தோன் றாள்வாழி.

(போ - ரை சமத்துவமும் உவமானமும் இல்லாமல் சொல்லுதற்கரிய முதல்வன், இவ்வுலகின்கண்ணே என்பொருட்டு ஆசாரியகோலங்கொண்டு எழுந்தருளி வந்தான். அவன் திருவடி வாழ்கக்கடவது. 116

ஒப்பாரி சொல்லிடினும், உவமை பிழைத்திடினும்,
முப்பாலுங் கற்றுணர்ந்தோர் முன்னோர்பொறுத்தருள்வார்.

(போ - ரை) யான் ஒப்புச்சொல்லிப் பாடிய புலம்பலிலே உவமை தவறினும், மும்மாயையின் சொரூபமறிந்த பெரியோர் பொறுத்தருளவேண்டும். 117

அருட்புலம்பல்
முற்றுப்பெற்றன.

---

## இரந்தகாலத் திறங்கல்

வார்த்தைத் திறமில்லா மனிதருக்குப் புன்சொல்லாஞ்
சாத்திரங்கள் சொல்லிச் சதுரிழந்து கெட்டேனே.

(போ - ரை) பேச்சுறுதி யில்லாத மானிடர்க்குப் பாசநூல்களைப் போதித்து எனது சமர்த்திழந்து கெடுதி யடைந்தேன். 1

மெத்தமெத்தச் செல்வாக்கில் வேறு மருளடுத்துத்
தத்தித் தலைகீழாய்த் தானடந்து கெட்டேனே.

(பொ - ரை) அபாரமான செல்வத்தில் வேறான மருளிற்சிக்கி ஒழுங்கற்று நான் வாழ்ந்து கெடுதி யடைந்தேன். 2

வழக்கத் தலங்களினு மண்பெண்பொன் னாசையினும்
பழக்கந் தவிராமற் பதியிழந்து கெட்டேனே.

(பொ - ரை) பழகிய ஊர்களிலும், மண் பெண் பொன் ஆகிய ஈஷணாத்திரயங்களினும் பழக்கத்தை விடாமல் முதல்வனை யிழந்து கெடுதி யடைந்தேன். 3

ஆணி பொருந்து மரும்பூமி யத்தனையுங்
காணி நமதென்று கனம்பேசிக் கெட்டேனே.

(பொ - ரை) முதன்மை வாய்ந்த அரிய உலகனைத்தும் நமக்குச் சொந்தமென்று கௌரவம் பாராட்டிக் கெடுதி யடைந்தேன். 4

ஆசார மில்லா வசடருடன் கூடிப்
பாசாங்கு பேசிப் பதியிழந்து கெட்டேனே.

(பொ - ரை) ஒழுக்கமில்லாத கீழ்மக்களுடன் சேர்ந்து வஞ்சக வார்த்தைகளைப்பேசித் தலைவனையிழந்து கெடுதியையடைந்தேன். 5

குருமார்க்க மில்லாக் குருடருடன் கூடிக்
கருமார்க்கத் துள்ளே கருத்தழிந்து கெட்டேனே.

(பொ - ரை) ஆசாரியனை வழிபட்டு நடவாத மனக்குருடருடன் சேர்ந்து பிறவிக்கேதுவான வழியிலே உள்ளந் தடுமாறி யழிந்தேன். 6

ஆல மருந்து மரன்பெருமை யெண்ணாமல்
பாலர்பெண்டீர் மெய்யென்று பதியிழந்து கெட்டேனே.

(பொ - ரை) விஷமுண்ட சிவபெருமான் மகிமையினை நினையாமல், புத்திரரும் மனைவியரும் நிலையென்று எண்ணித் தலைவனையிழந்து, கெடுதியை யடைந்தேன். 7

பிணவாச முற்ற பெருங்காய மெய்யென்று
பணவாசை யாலே பதியிழந்து கெட்டேனே.

(பொ - ரை) முடைநாற்றம் வீசுகின்ற பெரியதேகத்தினைச் சத்தியமென்று திரவிய விருப்பத்தாலே பதியிழந்து கெட்டேன். 8

கண்ட புலவர் கனக்கவே தான்புகழ
உண்ட வுடம்பெல்லா முப்பரித்துக் கெட்டேனே.

(பொ - ரை) எதிரிட்ட வித்துவான்கள் (என்னை) அதிகமாகத் தோத்தரித்துப் பாட ஊணூட்டிவளர்ந்து வந்த தேகமானது தளர்ச்சியடையக் கண்டேன். 9

எண்ணிறந்த சென்ம மெடுத்துச் சிவபூசை
பண்ணிப் பிழையாமற் பதியிழந்து கெட்டேனே.

(பொ - ரை) அளவற்ற பிறப்புக்கள் பிறந்து, சிவபூசைசெய்து பிறப்பு வாராதபடி செய்துகொள்ளாமல், பதியிழந்து கெட்டேன். 10

சிற்றெறும்பு சற்றுந் தீண்டப் பொறாவுடம்பை
உற்றுருக்க வுஞ்சுடவு மொப்பித்து மாண்டேனே.

(பொ - ரை) ஒரு சிறிய எறும்பு கடிக்கினும் சிறிதும் சகியாத தேகத்தைக் கொளுத்தவும் சுடவும் நெருப்பினிடம் ஒப்புவித்து இறந்தேன். 11

தன்னுடம்பு தானே தனக்குப் பகையாமென்
றெண்ணுமுணர் வில்லாம லின்பமென்று மாண்டேனே.

(போ - ரை) தனது தேகந்தானே தனக்கு விரோதியென்னும் அறிவில்லாமல், இன்பமுடைய தென்றெண்ணி மாண்டேனே. 12

தோலெலும்பு மாங்கிஷமுந் தொல்லன்னத் தால்வளரு
மேலெலும்புஞ் சுத்தமென்று வீறுப்பாய் மாண்டேனே.

(போ - ரை) தோலும், எலும்பும், மாமிசமும், பழமையான அன்னத்தால் வளரும் உடலும், சுத்தமானதென்று கருவித்து மாண்டேனே. 13

போக்கு வரத்தும், பொருள்வரத்துங் காணுமல்
வாக்கழிவு சொல்லி மனமறுகிக் கெட்டேனே.

(போ - ரை) பிறப்பும் இறப்பும், முதல்வ னநுக்கிரகமும் தேராமல் வீண்வார்த்தை பேசி மனமயக்குற்றுக் கெட்டேனே. 14

இறந்தகாலத்திறங்கல்
முற்றுப்பெற்றன.

---

## நெஞ்சொடுபுலம்பல்

மண்காட்டிப் பொன்காட்டி மாயவிருள் காட்டிச்
செங்காட்டி லாடுகின்ற தேசிகனைப் போற்றுமல்,
கண்காட்டும் வேசியர்தங் கண்வலையிற் சிக்கிமிக
அங்காடி நாய்போ லலைந்தனையே நெஞ்சமே!

(போ - ரை) மனமே! திருச்செங்காட்டிலே கிர்த்தனஞ் செய்கின்ற சிவபெருமானைத் தோத்தரியாமல், மண்ணைக் காட்டியும், பொன்னைக் காட்டியும், மாயா சொரூபமாகிய (பெண்ணைக்) காட்டி

யும், கண்சாடை காட்டும் விலைமாதர்களுடைய மிகுந்த ஆசைவலையிற் சிக்குண்டு, கடைத்தெரு நாய்போல் மிக அலைந்தனையே. (இது உனக்குத் தகுமோ?) 1

புட்பா சனவணையிற் பொற்பட்டு மெத்தையின்மேல்
ஒப்பா வணிந்தபணி யோடாணி நீங்காமல்
இப்பாய்க் கிடத்தி யியமனுயிர் கொள்ளுமுன்னே
முப்பாழைப் போற்ற முயங்கிலையே நெஞ்சமே!

(பொ - ரை) மனமே! புஷ்பம் பரப்பிய கட்டிலில், அழகிய பட்டு மெத்தையின்மீது, அழகாகத் தரித்த ஆபரணங்களுடன் நிலை நீங்காது, (அத்தகைய உடலை) பாயிலில் கிடத்தி, எமன் உயிரைக் கொண்டுபோவதற்கு முன்னே விந்து மோகினி மானென்னும் முப்பாழினைக் கடந்த ஒன்றைப் போற்றுதற்கு முயற்சித்தாயில்லையே.

(வி - ரை) 'இப்பாழ்க் கிடத்தி' என்றும் பாடமுண்டு. 'முப்பாழைப் போற்றி' என்றும் பாடமுண்டு. 2

முப்பாழும் பாழாய், முதற்பாழ் வெறும்பாழாய்,
அப்பாழுக் கப்பானின் றாடுமனைப் போற்றாமல்
இப்பாழாம் வாழ்வைநம்பி யேற்றவர்க்கொன் றீயாமல்
துப்பாழாய் வந்தவினை சூழ்ந்தனையே நெஞ்சமே!

(பொ - ரை) மனமே! பிரகிருதி, அசுத்தமாயை, சுத்தமாயை ஆகிய மூன்றும் பாழாக, சிதாகாயம் சூனியமாய், சிதாகாயம் கடந்து நிலையுற்று நிர்த்தனம் செய்யும் நடராஜப் பிரபுவினைத் தோத்தரியாமல், இங்கு அழிந்துபோகத்தகுந்த இவ்வுலக வாழ்வினை நம்பி, அடைந்து யாசித்தவர்க்கு ஒன்றும் கொடாமல், பாழாகிய வினை வந்து சூழ்ந்துகொள்ளும்படி செய்துகொண்டனையே. 3

அன்னம் பகிர்ந்திங் கலேந்தோர்க் குதவிசெயுஞ்
சென்ம மெடுத்துஞ் சிவனருளேப் போற்ருமல்,
பொன்னு,மனேயு, மெழிற் பூவையரும், வாழ்வுமிவை
இன்னுஞ் சதமாக வெண்ணினேயே நெஞ்சமே!

(போ - ரை) மனமே! இவ்விடத்தி லன்னத்தினேப் பங்கிட்டு ஆதரவற்றவர்க்கு உபகரிக்கும் மனிதசென்ம மெடுத்தும் சிவபெருமான் திருவருளுக்கு ஆளாகாமல், பொன்னினேயும், மண்ணினேயும், அழகுவாய்ந்த பெண்ணினேயும், போகத்தையும் இந்நாள் பரியந்தம் சத்தியமாக நினேத்தனேயே. 4

முற்ருெடர்பிற் செய்த முறைமையால் வந்தசெல்வம்
இற்றைநாட் பெற்ருேமென் றெண்ணுது பாழ்மனமே!
அற்றவர்க்கு மீயாம லான்பூசை யோராமல்
கற்றவர்க்கு மீயாமற் கண்மறைந்து விட்டனேயே.

(போ - ரை) பாழாகிய நெஞ்சே! பூர்வ சென்மங்களிற் புரிந்த புண்ணியத்தினுல் நேர்ந்த அநுபவிக்கத்தகுந்த ஐஸ்வரியம் இந்நாளில் வாய்க்கப் பெற்ருேமென்று நினேயாது, தரித்திரர்க்கும் கொடாமல், சிவபூசை நாடாமல், கல்விமான்களுக்கு உதவாமல், கண் மறைந்து வாழ்கின்றனேயே. 5

மாணிக்க முத்து வயிரப் பணிபூண்டு
ஆணிப்பொன் சிங்கா தனத்தி லிருந்தாலும்,
காணித் துடலேநமன் கட்டியே கைப்பிடித்தால்
காணிப்பொன் கூடவரக் காண்கிலமே நெஞ்சமே!

(போ - ரை) மனமே! இரத்தினம் முத்து வயிர மிவற்ருலாய ஆபரணந் தரித்து, உயர்ந்த பொன்ஞ்ல் லிழைக்கப்பெற்ற சிம்மா

சனத்தின்மீது வீற்றிருந்தாலும், இலட்சியம் வைத்துத் தேகத்தை இயமனானவன் கயிற்றினால் இறுக்கியே தன் கையிற் கொண்டால், காணியளவும் பொருள் தன்னுடன் வரக்கண்டோ மில்லையே. 6

கற்கட்டி மோதிரநற் கடுக்கனரை ஞாண்பூண்டு
திக்கெட்டும் போற்றத் திசைக்கொருத்த ராலும்
பற்கிட்ட வேமனுயிர் பந்தாடும் வேளையிலே
கைச்சட்டங் கூடவரக் காண்கிலமே நெஞ்சமே!

(போ - ரை) மனமே! கல்லிழைத்த மோதிரங்களும், உயர்ந்த கடுக்கன்களும், அரைஞாணும் தரித்து எட்டுத்திக்கினரும் புகழ, எத்திசையினருக்கும் மேற்பட்டவனாயினும், மரணகாலத்தில், பல் கிட்டிக்கொள்ளும் சமயத்தில், உயிரினை இயமன் பந்தினைப்போல இலேசாகக்கொண்டு செல்லுகையில், ஒரு ஓலையும் எடுத்துக்கொண்டு போகக் கண்டோமில்லையே. 7

முன்னநீ செய்ததவ முப்பாலுஞ் சேருமன்றிப்
பொன்னும் பணிதிகளும் பூவையுமங் கேவருமோ?
தன்னைச் சதமாகச் சற்குருவைப் போற்றாமல்
கண்ணற்ற வந்தகன்போற் காட்சியற்றாய் நெஞ்சமே!

(போ - ரை) மனமே! பூர்வசென்மத்தில் நீ புரிந்த தவமானது மூன்று சென்மத்திலுந் தொடருவதல்லாமல், திரவியங்களும் - ஆபரணங்களும் - மாதர்களும் நீ செல்லும்போது அங்கே உடன் வந்திடுமோ? (வராது;) அவற்றை நிலையுடைய பொருளாக எண்ணி உண்மைக் குருவை போற்றாமல் கண் கெட்ட குருடனைப்போலப் பார்வையில்லாதவனாயினை. 8

பையரவம் பூண்ட பரமர்திருப் பொற்றாளைத்
துய்யமலர் பறித்துத் தொழுது வணங்காமல்

கையிலணி வளையுங், காலிலிடும் பாடகமும்
மெய்யென் றிறுமாந்து விட்டனையே நெஞ்சமே!

(பொ - ரை) மனமே! படத்துடன்கூடிய சர்ப்பத்தை ஆபரண மாகத் தரித்த சிவபெருமான் அழகிய திருவடியைச் சுத்தமான புட்பங்களை யெடுத்து அருச்சித்துத் தோத்தரித்துப் பணியாமல், கரத்தின்கண்ணே அணிந்த வளையல்களையும், கால்களிலே தரிக்கும் பாடகத்தையும் (உடைய மாதரை,) நிலையென்று கர்வித்தனையே. 9

மாதுக் கொருபாகம் வைத்தவரன் பொற்றுளைப்
போதுக் கொருபோதும் போற்றி வருந்தாமல்,
வாதுக்குத் தேடியிந்த மண்ணிற் புதைத்துவைத்தே
ஏதுக்குப் போகநீ யெண்ணினையே நெஞ்சமே!

(பொ - ரை) மனமே! பார்வதியாருக்கு ஒருபாகத்தைக் கொடுத்த சிவபெருமான் திருவடியை ஒரு நாளைக்கு ஒருபொழுதேனும் ஏத்தி யிரங்காமல், வம்பிலே சம்பாதித்த (பொருளை) நீ பூமியிற் சேமித்து வைத்துவிட்டு, எந்த நிலையடைய நினைத்திருக்கின்றாய்? 10

அஞ்சருளைப் போற்றி யைந்துபுல னைத்துறக்க
நெஞ்சே உனக்கு நினைவுநான் சொல்லுகிறேன்;
வஞ்சகத்தை நீக்கி மறுநினைவு வாராமல்
செஞ்சரணத் தாளைச் சிந்தைசெய்வாய் நெஞ்சமே!

(பொ - ரை) மனமே! பயப்படத்தகுந்த திருவருளினைத் தோத்தரித்துப், பஞ்சேந்திரியங்களை யடக்க, மனமே! உனக்கு ஞாப கஞ் செய்விக்கின்றேன்; வஞ்சகத்தை யொழித்து, வேறு சிந்தை செய்யாமல் செவ்விய திருவடி யுடையவனை (சிவபெருமானை) தியானிப்பாயாக! 11

அற்புதமா யிந்தவுட லாவி யடங்குமுன்னே
சற்குருவைப் போற்றித் தவம்பெற்று வாழாமல்
உற்பத்தி செம்பொன் உடைமைபெரு வாழ்வைநம்பிச்
'சற்பத்தின் வாயிற் றவளைபோ' லானேனே.

(பொ - ரை) மனமே! ஆச்சரியகரமாக இத்தேகத்தினின்றும் உயிரொடுங்கு முன்பே அதாவது உயிரானது வெளிப்படு முன்னமே நல்ல ஆசாரியனை யேத்தித் தவத்தினை யடைந்து வாழாமல், உண்டா கின்ற செவ்விய பொன்னினையும், ஆபரணங்களையும், பிரபஞ்ச போகத்தையும் நம்பிப் பாம்பினது வாயிலகப்பட்ட தவளையினைப் போலாயினேன். 12

உற்றாரார்? பெற்றாரார்? உடன்பிறப்பார்? பிள்ளைகளார்?
மற்றா ரிருந்தாலென்? மாளும்போ துதவுவரோ?
'கற்று விழுந்தவிளங் கன்றதுபோ' லேயுருகிச்
சிற்றுகிச் சிற்றின்பஞ் சேர்ந்தனையே நெஞ்சமே!

(பொ - ரை) மனமே! உறவினர்கள் யாவர்? பெற்றவரியாவர்? கூடப் பிறந்தவர் யாவர்? புத்திரரியாவர்? மற்றவர்கள் எத்தனை பெய ரிருந்துமென்ன? மரணகாலத்தில் உதவி செய்வாரோ? பசுவினைப் பிரிந்த சிறிய கன்றினைப்போல மனங்கசிந்து, சிறுமையினையடைந்து, அற்பமாகிய பிரபஞ்ச இன்பத்தினை யடைந்தனையே. 13

வீடிருக்க, தாயிருக்க, வேண்டுமனை யாளிருக்க,
பீடிருக்க, ஊணிருக்கப், பிள்ளைகளுந் தாமிருக்க,
மாடிருக்கக், கன்றிருக்க, வைத்த பொருளிருக்கக்,
கூடிருக்க, நீபோன கோலமென்ன கோலமே?

(பொ - ரை) வீடிருக்கவும், அன்னை யிருக்கவும், மிக விரும்பத் தகுந்த பெண்சாதி யிருக்கவும், பெருமை யிருக்கவும், உணவிருக்க

வும், புத்திரர்க ளிருக்கவும், மாடுகளும் கன்றுகளு மிருக்கவும்; இருப்பா யுள்ள செல்வ மிருக்கவும், உடலிருக்கவும், ஆன்மாவாகிய நீ பிரிந்த மாய்கை யென்ன மாய்கையோ? 14

சந்தனமுங், குங்குமமுஞ், சாந்தும், பரிமளமும்
விந்தைகளாகப் பூசிமிகு வேடிக்கை யொய்யாரக்
கந்தமலர் சூடுகின்ற கன்னியருந் தாமிருக்க
எந்தவகை போனுமென் றெண்ணிலையே நெஞ்சமே!

(பொ - ரை) மனமே! சந்தனத்தினையும், குங்குமத்தினையும், கூட்டுவர்க்கத்தினையும், மற்றும் அநேகமான வாசனைத் திரவியங்களையும் விநோதமாகப் பூசிக்கொண்டு, வேடிக்கையாகவும் ஒழுங்காகவும், வாசனையுடன் புட்பங்களைத் தரிக்கின்ற பெண்களுமிருக்க, என்ன விதத்தில் பிரிந்தாயென்று நினைந்தாயில்லையே! 15

காற்றுத் துருத்தி கடியவினைக் குள்ளான
ஊற்றைச் சடலத்தை யுண்டென் றிறுமாந்து,
பார்த்திரங்கி யன்னம் பசித்தோருக் கீயாமல்
'ஆற்று வெள்ளம்போல' அளாவினையே நெஞ்சமே!

(பொ - ரை) மனமே! காற்றினை யடைத்துவைத்த தோல் துருத்தியாய், கொடிய வினையிற் கட்டுப்பட்ட நாற்றமுறு தேகத்தை நிலையாக விருக்குமெனக் கருவித்து, எளியாரைக் கண்டு மனம் இளகி அன்னத்தினைப் பசித்தோருக்குக் கொடுக்காமல், நதியின் நீர்ப்பெருக்கினைப்போலப் பரதவிக்கின்றனையே. 16

நீர்க்குமிழி வாழ்வைநம்பி நிச்சயமென் றேயெண்ணிப்
பாக்களவா மன்னம் பசித்தோர்க் களியாமல்
போர்க்கு ளமதூதன் பிடித்திழுக்கு மப்போது
ஆர்ப்படுவா ரென்றே யறிந்திலையே நெஞ்சமே!

(போ - ரை) மனமே! சலத்தி லுண்டாகிய நீர்மொக்குளினை யொத்த வாழ்வை நிசமென்னக் கருதி, ஒரு பாக்களவினையொத்த அன்னமும் பசித்தவர்கட்குக் கொடாமல், சிலேட்டும உபத்திரவ காலத்தில், இயமபடர்கள் கட்டிக்கொண்டு போம்போது, யார் எதிரடைவர் (உதவி செய்ய வருவர்) என்று தெரிந்துகொண்டாயில்லையே. 17

சின்னஞ் சிறுநுதலாள் செய்த பலவினையான்
முன்னந்த மார்பின் முளைத்த சிலந்திவிம்மி
வன்னந் தளதளப்ப மயங்கிவலைக் குள்ளாகி
அன்னம் பகிர்ந்துண்ண வறிந்திலையே நெஞ்சமே!

(போ - ரை) மனமே! (மூன்று விரற்கடையுள்ள) மிகவும் சிறிய நெற்றியை யுடையவள் பூர்வத்தில் செய்த வினைக்குத் தக்கபடி, மார்பின் முன்னே உண்டாகிய கட்டியினையொத்த தனமானது பூரித்து, அழகு தளதளப்பாய்ப் பிரகாசிக்கக்கண்டு, அதனால் மோகங்கொண்டு அவ்வலையிற் பட்டு, அடியவர்கட்கு அன்னம் கொடுத்துச் சாப்பிடத் தெரிந்தாயில்லையே. 18

ஓட்டைத் துருத்தியை, உடையும் புழுக்கூட்டை,
ஆட்டுஞ் சிவசித்த ரருளைமிகப் போற்றியே
வீட்டைத் திறந்து வெளியையொளி யாலழைத்துக்
காட்டும் பொருளிதென்று கருதிலையே நெஞ்சமே!

(போ - ரை.) மனமே! துவாரமுள்ள தோற்பையை, இறக்கும் புழுக்கள் நிறைந்த கூண்டினை (ஒத்த உடலை) ஆட்டிவைக்கும் எல்லாம் வல்ல சித்தர் திருவருளை மிக நாடியே, ஆணவக் கதவைத் திறந்து, சிதாகாயத்தை அருட்சோதியா லழைத்துக் காட்டுவிக்கும் பொருள் ஈதென்ன நினைத்தாயில்லையே. 19

ஊன்பொதிந்த காயம், உளைந்த புழுக்கூட்டைத்
தான்சுமந்த தல்லால்நீ சற்குருவைப் போற்றாமல்,
கான்பரந்த வெள்ளங் கரைபுரளக் கண்டேகி
'மீன்பரந்தாற் போலே' விசாரமுற்றாய் நெஞ்சமே!

(போ - ரை) மனமே! மாமிசம் நிறைந்த உடலை, அளைக்கும் புழுக்கள் நிறைந்த கூண்டினைத் தான் தாங்கினதல்லாமல், உண்மையான ஆசிரியனை வணங்காமல், காட்டினிடத்தே பரவிய சலப் பிரளயம், இருகரையினும் வழியப் பார்த்துச் சென்று மீன்களும் பரவியதுபோலத் துன்ப மடைந்தனையே. 20

உடக்கை யொருக்கி யுயிரை யடைத்துவைத்த
சடக்கைச் சதமென்று சார்ந்தாங் கிறுமாந்தை!
உடக்கைத் தகர்த்தே யுயிரையெமன் கொள்கையிலே
அடக்கமாய் வைத்தபொரு ளங்குவர மாட்டாதே.

(போ - ரை) (மனமே! வாயுவாகிய ஒரு) சுள்ளாணியை முறுக்கி உயிரை அடக்கிவைத்திருக்கிற தேகத்தினை நிலையென்று பொருந்து இறுமாப்புற்றனை; அச் சுள்ளாணியைக் கழற்றி உயிரை இயமன் கிரகிக்கையிலே நீ இரகசியமாக வைத்திருந்த திரவியம் உன்னுடன் கூட வருவதில்லையே. 21

தித்திக்குந் தேனைத் தெவிட்டாத தெள்ளமுதை,
முத்திக்கு வித்தான முப்பாழைப் போற்றாமல்,
பற்றிப் பிடித்தியமன் பாசத்தாற் கட்டும்வண்ணம்
சுற்றி யிருக்கும்வினை சூழ்ந்தனையே நெஞ்சமே!

(போ - ரை) மனமே! சுவையுடைய தேனை, (உண்ண உண்ண) வெறுக்காத நல்ல அமுதத்தை, மோட்சத்திற்குக் காரணமான முப்பாழினையும் கடந்த வொரு பொருளைப் போற்றாமல், நெருங்கிப்

பிடித்து இயமன் கயிற்றால் பிணிக்கும்படியாகச் சூழ்ந்திருக்கும் வினைகளினிற் கூடினையே. 22

அஞ்செழுத்தா யெட்டெழுத்தா யைம்பத்தோ ரட்சரமாய்
பிஞ்செழுத்தாய் நின்ற பெருமானைப் போற்றாமல் [ப்
வஞ்சகமா யுற்றமுலை மாதர்வலைக் குள்ளாகிப்
பஞ்சரித்துத் தேடிப் பாழுக் கிறைத்தோமே!

(பொ - ரை) அஞ்செழுத்தாய் (நமசிவாயவாய்), எட்டெழுத்தாய் (ஓம் ஆம் அவ்வும் சிவாயநமவாய்), ஐம்பத்தோரெழுத்தாய் பிஞ்செழுத்தாய் (சத்தியட்சரமாகிய வகாரமாய்) இருந்த முதல்வனை வணங்காமல், வஞ்சகம் வாய்ந்த, தனமுடைய பெண்களின் வலையிற்பட்டு, கெஞ்சிப்பேசி, அவரைத் தொடர்ந்துநாடி, காலத்தைப் பாழினிற் கழித்தோமே. 23

அக்கறுகு கொன்றைதும்பை யம்புலியுஞ் சூடுகின்ற
சொக்கர் திருத்தாளைத் தொழுது வணங்காமல்,
மக்கள்பெண்டிர் சுற்றமுடன் வாழ்வைமிக நம்பியன்பாய்
எக்காலமு முண்டென் றெண்ணினையே நெஞ்சமே!

(பொ - ரை) மனமே! உருத்திராட்சத்தினையும், அறுகம்புல்லினையும், கொன்றைப்புட்பத்தினையும், தும்பைமலரினையும், சந்திரனையுந் தரிக்கின்ற சொக்கலிங்கப்பெருமானது அழகிய திருவடிகளைத் தொழுது வணங்காமல், புத்திரர்-மனைவியார்-சுற்றத்தார் ஆகிய இவர்களுடன் கூடி வாழ்தலையே அதிகமாக நம்பி ஆசையாய் எக்காலமும் சத்தியமா யிருக்குமென்று நினைத்தாயே. 24

ஆண்ட குருவி னருளை மிகப்போற்றி
வேண்டுங் கயிலாய வீட்டுவழி பாராமல்

பூண்டகுழன் மாதுநல்லார் பொய்மாய்கைக் குள்ளாகித்
'தூண்டி லகப்பட்டுத் துடிகெண்டை' யானேனே!

(போ - ரை) மனமே! அடிமையாக ஆண்டுகொண்ட ஆசாரியனுடைய திருவருளினை மிகவும் எத்தி, அத்தியாவசியமாக விரும்பப்படும் திருக்கைலையாகிய மோக்ஷ நெறியினை எதிர்பாராமல் புட்பங்களைத் தரித்த கூந்தலினையுடைய மாதர்களின் பொய்யாகிய வஞ்சனையிற் சிக்குண்டு, தூண்டிமுள்ளிற் சிக்கித் துடிக்கின்ற மீனினை யொத்தேன். 25

எணிப் பழுவா மிருளையறுத் தாளமுற்றும்
பேணித் தொழுங்கயிலை பேறுபெற மாட்டாமல்
காணவரும் பொருளாய்க் கண்கலக்கப் பட்டடியேன்
'ஆணியற்ற மாமரம்போ' லாகினனே நெஞ்சமே!

(போ - ரை) மனமே! எணியின் பழுமரம்போல (அஞ்ஞானத்திற்குச் சோபானம்) ஆகிய ஆணவமலத்தினை யொழிக்க, என்றும் வணங்கத் தகுந்த கயிலாயத்தினை யடையும் இலாபத்தை யடையாது அருவமாக வொருபொருளிருப்பதாக எண்ணிக் கண்கலங்கி ஏழையேன் ஆதரவற்ற பெரிய மரத்தினை யொத்தேன். 26

சோத்துப் பிரகாசங் கொண்டுருகி யண்டமெல்லாம்
காத்தப் படியே கயிலாயஞ் சேராமல்
வேற்றுருவப் பட்டடியேன் வெள்ளம்போ லுள்ளுருகி
'ஏற்றுங் கழுவி லிருந்தபிண' மானேனே!

(போ - ரை) கலந்து அருட்சோதியடைந்து, மனங்கசிந்து, உலகமுழுவதும் திருவருளிற் றிளைத்து இரக்ஷித்தவண்ணமே திருக்கயிலாய மடையாமல், வேறு இடங்களிலுள்ள தெய்வங்களை

வணங்கி, ஏழையேன், நீர்போலத் தளர்ந்து, ஏற்றிய கழுமரத்திலே செத்துக்கிடந்த பிணத்தினை யொத்தேன். 27

நிலைவிட் டுடலையுயிர் நீங்கி யகலுமுன்னே
சிலைதொட்ட வேடனெச்சிற் றின்றானைச் சேராமல்,
'வலைபட் டுழலுகின்ற மான்போற்' பரதவித்துத்,
'தலைகெட்ட நூலதுபோற்' றட்டழிந்தாய் நெஞ்சமே!

(போ - ரை) மனமே! தேகத்திலிருந்து ஆன்மா பிரியுமுன்னர், வில்லினைக் கரத்தி லேந்திய கண்ணப்பநாயனாரது எச்சிலை யுகந்த முதல்வனை அடையாமல், வலையிற் சிக்குண் டலைகின்ற மானைப் போலக் கலங்கி, நுனி யகப்படாத நூலினைப்போல அலைந்தனை. 28

முடிக்குமயிர்ப் பொல்லா புழுக்குரம்பை மின்னாரின்
இடைக்கு நடைக்கு மிதங்கொண்ட வார்த்தைசொல்லி,
அடிக்கொண்ட தில்லைவனத் தையனே! நாயனையேன்
'விடக்கை யிழந்த மிருகமது' வானேனே.

(போ - ரை) புட்பங்களைத்தரிக்கும் கூந்தலை வாய்ந்த பொல்லாத உடலுடன் கூடிய மாதரின் (உடுக்கை போன்ற) இடையென்றும், (அன்னம் போன்ற) நடையென்றும் இதமான வார்த்தைகளைப் பேசி, ஆதாரமான சிதம்பரநாதனே! நாயேன், (வாயிலுள்ள) மாமிசத்தை இழந்த (நாயாகிய) மிருகத்தை யொத்தேன். 29

பூவாணர் போற்றும் புகழ்மதுரைச் சொக்கரது
சீர்பாதம் போற்றிச் சிவலோகஞ் சேராமல்,
'தாவரங் தோறுந் தலைபுகுந்த நாய்போலே'
ஆகாத நெஞ்சமே! அலைந்து திரிந்தாயே.

(போ - ரை) உபயோகமில்லாத மனமே! உலகத்தார் வந்திக்கும் கீர்த்தி வாய்ந்த மதுரையி லெழுந்தருளியிருக்கும் சொக்கலிங்கப் பெருமானது திருவடியை வணங்கிச் சிவகதி யடையாமல், பல வீட்டின் தாவாரங்கள்தோறும் ஓடிச்சென்று (யாவராலும் அடியுண்ணும்) நாயினைப்போல வீணாய் ஓடி யலைந்தனையே. 30

பத்தெட்டா, யீரைந்தாய்ப், பதின்மூன் றிரண்டொன்றாய்,
ஒத்திட்டு நின்றதோ ரோவியத்தைப் போற்றாமல்,
தெத்திட்டு நின்ற திரிகண்ணிக் குள்ளாகி
வித்திட்டாய் நெஞ்சே! விடவு மறியாயே.

(போ - ரை) மனமே! பத்து, எட்டு, ஐந்து, பதின்மூன்று ஆக முப்பத்தாறு தத்துவங்களையுங் கடந்து ஒத்தெழுந்தருளி அசைவற்று நின்ற சொரூபத்தினை வணங்காமல், வேடிக்கையிற் பட்டுத் திரிகின்ற கண்மயமாகி நிலையுற்றாய், அதாவது கண்ணால் மயக்கி யலைகின்ற மாதர்பால் சிக்குண்டனை, நீங்கவுமறியாய். 31

அஞ்சு முருவாகி யைம்மூன்று மெட்டுமொன்றாய்,
மிஞ்சி யிருந்த விளக்கொளியைப் போற்றாமல்,
'பஞ்சிலிடு வன்னியைப்போற்' பற்றிப் பிடியாமல் [னே.
'நஞ்சுண்ட கெண்டையைப்போல்' நானலைந்து கெட்டே

(போ - ரை) அஞ்சு, ஏழு, ஐம்மூன்று, எட்டு, ஒன்று ஆகிய முப்பத்தாறு தத்துவங்களையுங் கடந்து அருட்சோதியைப் போற்றாமல், பஞ்சிற் பிரவேசித்த அக்கினியைப்போன்று தாவாது; விடமுண்ட மீன் துடிப்பதுபோன்று நான் திரிந்து வீணாயினேன் அதாவது துடிக்கின்றேனென்பதாம். 32

ஊன முடனே யுடையும் புழுக்கூட்டை
யானமுட னேசுமந்து மண்ணுலகின் மாளாமல்,
'ஆனதொரு பஞ்சவர்க ளாண்டிருந்த தேசம்விட்டுப்
போனதுபோ' லேநாம் போய்பிழைத்தோ மில்லையே.

(போ - ரை) மனமே! குற்றமுடனே அழியும் புழு நிரம்பிய தேகத்தைக் கவுரவத்துடனே தாங்கி உலகி லிறந்துபோகாமல், பஞ்சபாண்டவர்கள், ஆண்ட தமது சுதேசம் பிரிந்து காட்டிற் சென்று சீவித்ததுபோல நாமும் சீவித்தோமில்லை. 33

ஊறை யிறைக்கின்ற வுப்பிருந்த பாண்டத்தை,
நாறுமல் நாறி நழுவும் புழுக்கூட்டை,
வீறும் புரத்தை விரும்புகின்ற தெப்படியென்
றூராத நாட்டி லகன்றிருந்தே னில்லையே.

(போ - ரை) மலசல மிறைக்கின்ற உப்படைத்த பாண்டம் போன்றதனை, நாறும லிருந்து இறந்து, போனவுடனே நாற்ற மெடுத்து இறந்துபோகும் புழு மலிந்த உடலை, செருக்கு வாய்ந்த தேகத்தை, நேசிப்பு தெவ்விதம்? அழிவற்ற பூமியிற் சென்று வாழ்ந்தேனில்லை. 34

அரிய வரிதேடி யறியா வொருமுதலைப்
பரிவுடனே போற்றும் பரஞ்சுடரைப் போற்றுமல்
கரியபெரு வாழ்வைநம்பிக் காமத் தழுந்தியே
'அரிவாயிற் பட்ட கரியதுபோ' லானேனே.

(போ - ரை) அருமையான விஷ்ணுமூர்த்தியானவர் தேடிக் காணப்படாத ஒப்பற்ற முதல்வனை, ஆசையுடனே வணங்கத்தகும் சிவபரஞ்சுடரை யேத்தாமல், சரிந்துபோகத்தகுந்த பிரபஞ்ச

வாழ்வை நம்பிக் காமாந்தகாரத்தி லுட்பட்டுச் சிங்கத்தின்வாயிற்பட்ட யானையினை யொத்தேன். 35

தந்திரத்தை யுன்னித் தவத்தை மிகநிறுத்தி,
மந்திரத்தை யுன்னி மயங்கித் தடுமாறி,
விந்துருகி நாதமா மேலொளியைக் காணுமல்
அந்தரத்தே கோலெறிந்த அந்தகன்போலானேனே.

(பொ - ரை) சிவாகமத்தைப் படித்துத் தவத்தினை நிலைபெறச் செய்யாது, (சிறு தெய்வ) மந்திரங்களைத் தியானித்து, மயக்கங் கொண்டலைந்து, விந்துநாதங்களைக் கடந்த அருட்பிரகாசத்தைத் தரிசியாமல், ஆகாயத்தில் கோலை வீசிய குருடனை யொத்தேன். 36

விலையாகிப் பாணனுக்கு வீறடிமைப் பட்டதுபின்
சிலையார்கை வேடனெச்சிற் றின்றானைப் போற்றுமல்,
'அலைவாய்த் துரும்பதுபோ' லாணவத்தி னலமுழுங்கி,
'உலைவாய் மெழுகதுபோ' லுருகினையே நெஞ்சமே!

(பொ - ரை) மனமே! பாணபத்திர்பொருட்டு அவருக்கு அடிமைமாணவனாகி, மற்றொரு காலத்தில் வில்லேந்திய கண்ணப்ப நாயனாது எச்சிலை யுண்டானை எத்தாமல், கடலில் மொத்துண்ணும் துரும்பினைப்போன்று, ஆணவமலத்திற் கட்டுப்பட்டு, கொல்ல னுலையிற்பட்ட மெழுகினைப்போல அயர்ந்தனையே. 37

நெஞ்சோடு புலம்பல்

முற்றுப்பெற்றன.

## பூரணமாலை

மூலத் துதித்தெழுந்த முக்கோணச் சக்கரத்துள்
வாலைதனைப் போற்றாமல் மதிமறந்தேன் பூரணமே!

(பொ - ரை) எங்கு நிறைந்த பொருளே! மூலாதாரத்திலுதித்த திரிகோணவடிவமாயுள்ள யந்திரத்தின்கண்ணே எழுந்தருளி யிருக்கும் வாலாம்பிகைத்தாயை வணங்காமல் அறிவிழந்தேன். 1

உந்திக் கமலத் துதித்துநின்ற பிரமாவைச்
சந்தித்துக் காணாமற் றட்டழிந்தேன் பூரணமே!

(பொ - ரை) பூரணமே! சுவாதிட்டானத்தில் அதாவது உந்தியாகிய கமலத்தில் விளங்கு நான்முகனை நெருங்கித் தரிசியாமல் நிலைகுலைந்தேன். 2

நாவிக் கமலநடு நெடுமால் காணாமல்
ஆவிகெட்டு யானு மறிவழிந்தேன் பூரணமே!

(பொ - ரை) பூரணமே! மணிபூரகத்தில் விளங்குகின்ற விண்டுவைத் தரிசியாமல் உயிரிழந்து புத்தி கெட்டேன். 3

உருத்திரனை யிருதயத்தி லுண்மையுடன் பாராமல்
கருத்தழிந்து நானுங் கலங்கினேன் பூரணமே;

(பொ - ரை) பூரணமே! அனாகதத்தில் (இருதயத்தில்) உருத்திரமூர்த்தியைத் தரிசியாமல் மனங்கெட்டுச் சஞ்சலமுற்றேன். 4

விசுத்தி மகேசுரனை விழிதிறந்து பாராமல்
பசித்துருகி நெஞ்சம் பதறினேன் பூரணமே;

(போ - ரை) பூரணமே! விசுத்தியில் விளங்கும் மகேஸ்வரனை நோக்கி (விழித்துக்கொண்டிருந்து) தரிசியாமல், பசியால் வருந்தி மனங் கலங்கினேன். 5

நெற்றி விழியுடைய நிர்மல சதாசிவத்தைப்
புத்தியுடன் பாராமற் பொறியழிந்தேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! விசுத்தியில் விளங்குகின்ற முக்கண் வாய்ந்த சதாசிவத்தினை ஆதாவது, நெற்றியின்கண்ணே நேத்திரத்தினையுடைய மலரகிதமாயுள்ள சதாசிவத்தினை அறிவுடன் தரிசியாமல் ஐம்பொறியிற் சிக்கினேன். (ஞான மிழந்தேன்.) 6

நாதவிந்து தன்னை நயமுடனே பாராமல்
போத மயங்கிப் பொறியழிந்தேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! நாததத்துவத்தையும், விந்துதத்துவத்தையும் விருப்பமுடனே தரிசியாமல் அறிவு மயங்கி ஐம்பொறியிற் சிக்குண்டேன். 7

உச்சி வெளியை யுறுதியுடன் பாராமல்
அச்சமுட னுனு மறிவழிந்தேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! உச்சியிலே யிருக்கும் சிதாகாயத்தை நிலையாகத் தரிசியாமல், பயத்துடனே புத்தி கெட்டேன். 8

மூக்கு முனையை முழித்திருந்து பாராமல்
ஆக்கைகெட்டு நானு மறிவழிந்தேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! சுழுமுனையை அதாவது மூக்கினுனியாகிய இடத்தினைக் கண்விழித்திருந்து தரிசியாமல், உடல் கெட்டு அறிவு அழியப்பெற்றேன். 9

இடைபிங் கலையி னியல்பறிய மாட்டாமல்
தடையுடனே யானுந் தயங்கினேன் பூரணமே!

(பொ - ரை) பூரணமே! சூரியகலை சந்திரகலைகளின் தன்மையினைத் தெரிந்துகொள்ளாமல், தடைப்பட்டு அயர்ந்திட்டேன்.

(வி - ரை) இடகலை-மூக்கின் இடது துவாரத்தின் வழியாக வரும் பிராண வாயுவாகிய சுவாசம்; இதனைச் சந்திரகலையென்றுங் கூறுவர். பிங்கலை மூக்கின் வலது துவாரத்தின் வழியாகவரும்பிராண வாயுவாகிய சுவாசம்; இதனைச் சூரியகலையென்றுங் கூறுவர். 10

ஊனுக்கு ணீயின் றுலாவினதைக் காணாமல்
நானென் றிருந்து நலனழிந்தேன் பூரணமே!

(பொ - ரை) பூரணமே! தேகத்தினுள்ளே தேவரீர் ஆன்மாவினுக்கு ஆன்மாவாகி யிருப்பதை யறியாமல் சிவமே நானென எண்ணி நன்மை யிழந்தேன். 11

மெய்வாழ்வை நம்பி விரும்பிமிக வாழாமல்
பொய்வாழ்வை நம்பிப் புலம்பினேன் பூரணமே!

(பொ - ரை) பூரணமே! உண்மையான வாழ்வாகிய திருவருளில் ஆசைகொண்டு வாழாமல் பொய்மையான வாழ்வாகிய பிரபஞ்ச வாழ்வை நம்பித் துயரடைந்தேன். 12

பெண்டுபிள்ளை தந்தைதாய் பிறவியுடன் சுற்றமிவை
உண்டென்று நம்பி யுடலழிந்தேன் பூரணமே?

(பொ - ரை) பூரணமே! மனைவி, புத்திரர், பிதா, அன்னை, சோதரர், உறவினர் ஆகிய இவர்களெல்லாம் சதமென எண்ணித்தேகமழியப்பெற்றேன். 13

தண்டிகைபல் லாக்குடனே சகலசம் பத்துகளும்
உண்டென்று நம்பி யுணர்வழிந்தேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! தண்டிகை, பல்லக்கு, மற்ற ஐஸ்வரியம் ஆகிய இவைகளெல்லாம் எந்நாளு மிருக்குமென நம்பி அறிவிழந்தேன். 14

இந்த வுடலுயிரை யெப்போதுந் தான்சதமாய்ப்
பந்தமுற்று நானும் பதமழிந்தேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! இத் தேகத்திலே ஆன்மா எக்காலு நிலையாய்(இருக்குமென்று)பந்தப்பட்டவனாகி யடியேன்பக்குவ மிழந்தேன். 15

மாதர் பிரபஞ்ச மயக்கத்தி லேவிழுந்து
போத மயங்கிப் பொறியழிந்தேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! மாதர்கள் என்னும் உலகமோகத்திலே முழுகி, அறிவு கலக்கமுற்று மதிகெட்டவனாயினேன். 16

சரியைகிரியா யோகந் தான்ஞானம் பாராமல்
'பரிதிகண்ட மதியதுபோற்' பயனழிந்தேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய இவற்றை அனுஷ்டிக்காமல், சூரியனைக்கண்ட சந்திரன்போல் பிரயோசன மிழந்தேன். 17

மண்பெண்பொன் னாசை மயக்கத்தி லேவிழுந்து
'கண்கெட்ட மாடதுபோற்' கலங்கினேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! மண், பெண், பொன் என்கிற ஆசைகளாகிய மயக்கிலே சிக்குண்டு, குருட்டு மாட்டினைபோலக் கலக்கமடைந்தேன். 18

தனிமுதலைப் பார்த்துத் தனித்திருந்து வாழாமல்
அணியாய மாய்ப்பிறந்திங் கலைந்துநின்றேன் பூரணமே!

(பொ - ரை) பூரணமே! ஒப்பற்ற முதல்வனாகிய (சிவபெருமானைத் தரிசித்துத்) தன்னந்தனியே வசியாமல், வீணாகப் பிறப்படைந்து, இவ்வுலகிற்றிரிந்து வாழ்ந்தேன்.

(வி - ரை) தன்னந்தனியே வசித்தல் - சுகமாக இருந்து வாழுதல். 19

ஈராறு தன்கலைக்குள் ளிருந்துகூத் தாடினதை
ஆராய்ந்து பாராம லறிவழிந்தேன் பூரணமே!

(பொ - ரை) பூரணமே! துவாதசாந்த தலத்திலிருந்து ஞானநடனஞ் செய்யு முதல்வனைத் தீர விசாரித்துத் தரிசனஞ் செய்யாமல், புத்தி மயங்கினேன். 20

வாசிதனைப் பார்த்து மகிழ்ந்துனைத்தான் போற்றாமல்
காசிவரை போய்த்திரிந்து காலலுத்தேன் பூரணமே!

(பொ - ரை) பூரணமே! பிராணவாயுவினைச் சோதித்து அதிற் சந்தோஷித்து தேவரீரை யேத்தாமல், காசித்தலம்வரையிற் சென்றலைந்து கால்நொந்தேன். 21

கருவிகரொண் ணூற்றாறிற் கலந்துவிளை யாடினதை
இருவிழியாற் பாராம லிடழிந்தேன் பூரணமே!

(பொ - ரை) பூரணமே! தொண்ணூற்றாறு தத்துவங்களிலும் வியாபித்து அவற்றை அசைப்பித்த முதல்வனை இரண்டு நேத்திரங்களால் தரிசியாமல் கெட்டேன். 22

உடலுக்குள் நீநின் றுலாவினதைக் காணாமல்
கடமலைதோறுந் திரிந்து காலலுத்தேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! தேகத்திற்குள்ளே தேவரீர் எழுந்தருளியிருந்து சஞ்சரித்ததைத் தரிசியாமல், கடலைத் தாண்டியும், மலைகளில் வாழ்ந்தும் கால் சலித்தேன். 23

எத்தேச காலமுநா மிறவா திருப்பமென்று
உற்றுனைத்தான் பாராம லுருவழிந்தேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! எந்தக் காலத்திலேயும் நாம் சாகாமலிருப்போமென்றெண்ணி தேவரீரைத் தரிசியாமல் நிலை குலைந்தேன். 24

எத்தனை தாய் தந்தை யிவர்களிடத் தேயிருந்து
பித்தனு யானும் பிறந்திறந்தேன்? பூரணமே!

(போ - ரை) பூரணமே! எண்ணில்லாத தாய்தந்தையர்களிடந் தங்கி, பித்துப் பிடித்தவனாகி, யானும் இறப்பினும் பிறப்பினும் உட்பட்டேன். 25

பெற்றலுத்தாள் தாயார்; பிறந்தலுத்தேன் யானும்; உன்
பொற்றுணைத்தாள் தந்து புகலருள்வாய் பூரணமே! [றன்

(போ - ரை) பூரணமே! அன்னைமார் பலர் என்னைப் பெற்றெடுத்து வாடினர்; அடியேனும் பலதரம் பிறந்து வாடினேன்; (இனியாகினும்) தேவரீர் அழகிய திருவடியிணை தந்து அடைக்கலந்தருளாய். 26

உற்று றழுதலுத்தார்; உறன்முறையார் சுட்டலுத்தார்;
பெற்றலுத்தாள் தாயார்; பிறந்தலுத்தேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! சுற்றத்தினர், அடிக்கடி அழுது ஓய்ந்தார்; உறவின்முறையார், அடிக்கடி கொளுத்தி ஓய்ந்தார்;

தாய்மார்கள், அடிக்கடி பெற்றெடுத்து ஓய்ந்தனர்; யான் அடிக்கடி சென்மித்து ஓய்ந்தேன். 27

பிரமன் படைத்தலுத்தான்; பிறந்திறந்து நானலுத்தேன்;
உரமுடைய வக்கினிதா னுண்டலுத்தான் பூரணமே!

(போ - ரை) பூரணமே! நான்முகன் (என்னை) அடிக்கடிசிருஷ்டித்து ஓய்ந்தான்; அடிக்கடி பிறந்து இறந்து நான் ஓய்ந்தேன்; பலம் பொருந்திய அக்கினிபகவான் என்னைச் சுட்டு ஓய்ந்தான். 28

எண்பத்துநான்கு நூறுயிரஞ் செனனமுஞ் செனித்துப்
புண்பட்டு நாளும் புலம்பினேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! யான் எண்பத்து நான்கு நூறுயிரம் பிறவிகளிற் பிறந்து, துன்பமடைந்து துக்க மடைந்தனன். 29

என்னை யறியாம லெனக்குள்ளே நீயிருக்க
உன்னை யறியாம லுடலழிந்தேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! நான் தெரிந்துகொள்ளாதபடி என்னிடத்தே தேவரீர் அத்துவிதமாயிருக்க, தரிசியாது அதாவது அறிந்துகொள்ளமாட்டாமல் தேகத்தை விட்டு நீங்கினேன். 30

கருவா யுருவாய்க் கலந்துலகெ லாநீயாய்
அருவாகி நின்ற தறிகிலேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! கற்பத்திலிருந்த காலத்தும் உடலெடுத்த காலத்தும் நீ அத்துவிதமாகவிருந்து, உலகமுழுதும் சர்வவியாபியாய், நிஷ்களமாக விருந்த உண்மையினைத் தெரிந்தேனில்லை.

செம்பொற் கமலத் திருவடியைப் போற்றாமல்,
பம்பைகொட்ட வாடும் பசாசானேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! சிவந்த அழகிய தாமரைபோன்ற சரணங்களை வணங்காமல், உடுக்கையினைக் கொட்டத் தலைவிரித்தாடும் பேயனையே னாயினேன். 32

எனக்குள்ளே நீயிருக்க, உனக்குள்ளே நானிருக்க,
மனக்கவலை தீர வரமருள்வாய்! பூரணமே!

(போ - ரை) பூரணமே! என்னிடத்தே நீ அத்துவிதமாகவிருக்கவும், உன் வியாபகத்தில் நான் வியாப்பியமாக இருக்கவும், (அதைத் தெரிந்துகொள்ளமாட்டாது மயங்கும் எனது) மனத்துன்ப மொழிய வரம் தந்தருள்வாய்!. 33

எழுவகைத் தோற்றத் திருந்துவிளை யாடினதைப்
பழுதறவே பாராமற் பயனிழந்தேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் ஆகிய எழுவகையான பிறப்புக்களிலேயும் நீ தங்கி செய்த அருள் விளையாட்டைக் குற்றமற விசாரியாமல் அப்பிரயோசன மடைந்தேன். 34

சாதி பேதங்கள் தனையறிய மாட்டாமல்
வாதனையால் நின்று மயங்கினேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! சாதி வித்தியாசங்களி னுண்மையைத் தீர விசாரியாமல், துன்பத்திலிருந்து கலங்கினேன்.

(வி - ரை) துன்பத்திலிருந்து கலங்குதல் - வேதனைபட்டுக் கொண்டிருந்து மயக்கமுறுதல். 35

குலமொன்றா னீபடைத்த குறியையறி யாமல்நான்
பலபாண்டத் துள்ளிருந்து மயங்கினேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! மனிதசென்மமொன்றாகவே நீ சிருஷ்டித்த குறிப்பினைத் தெரிந்துகொள்ளாமல் யான் மல நிறைந்த தேகத்தில் தங்கி (கட்டுப்பட்டு) கலங்கினேன். 36

அண்டபிண்ட மெல்லா மணுவுக் கணுவாய்நீ
கொண்ட வடிவின் குறிப்பறியேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! அண்டத்திலேயும் பிண்டத்திலேயும் அணுவினுக்கணுவாகித், தேவரீர் எழுந்தருளி யிருக்கின்ற உண்மை வடிவினது குறிப்பினைத் தெரிந்துகொண்டேனில்லை. 37

சகஸ்திரத்தின் மேலிருக்குஞ் சற்குருவைப் போற்றாமல்
அகத்தினுட வாணவத்தா லறிவழிந்தேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! ஆயிர மிதழுடன் கூடிய தாமரை போன்ற (இருதயத்தில் எழுந்தருளியிருக்கும்) ஆசாரியனைத் தோத்திரியாமல் மனத்தினுடைய ஆணவச் செருக்கால் மயங்கினேன் (கெட்டேன்.) 38

ஐந்து பொறியை யடக்கியுனைப் போற்றாமல்
நைந்துருகி நெஞ்ச நடுங்கினேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! பஞ்சேந்திரியங்களையுஞ் செயித்துத் தேவரீரைத் தோத்தரியாமல் வாடி மனங்கசிந்து உள்ளங் குலைந்தேன்.

என்னைத் திருக்கூத்தா லிப்படிநீ யாட்டுவித்தாய்,
உன்னை யறியா துடலழிந்தேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! அடியேனை (எனது கன்மத்திற்குத் தக்கபடி) பிரபஞ்சக்கூத்திலே இந்தப்பிரகாரம் ஆட்டிவைத்தனை; (அதனால்) தேவரீரைத் தெரிந்துகொள்ளாமல் தேகமிழந்தேன்; 40

நரம்புதசை தோலெலும்பு நாற்றத்துக் குள்ளிருந்து
வரம்பறிய மாட்டாமல் மயங்கினேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! நரம்பு, மாமிசம், தோல், எலும்பு ஆகிய (இத்தகைய) நாற்றத்துடன் கூடிய தேகத்திற் றங்கித் திருவருளின் எல்லையினை யறியாமல் கலங்கினேன். 41

'சிலந்தியிடை நூல்போற்' சீவசெந்துக் குள்ளிருந்த
நலந்தனைத்தான் பாராம னலமழிந்தேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! சிலந்திப் பூச்சியினிடமிருந்து நூல் உண்டானதுபோல, ஆன்மாக்களுள் தேவரீர் தங்கி (மாயையைக் காரியப்படுத்தின) உபகாரத்தினை ஆலோசியாமல் நன்மையிழந்தேன்.

குருவாய்ப், பரமாகிக், குடிலை, சத்தி நாதவிந்தாம்,
அருவா யுருவான தறிகிலேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! குருவாகியும், பரம்பொருளாகியும், சுத்தமாயையாகியும், திருவருட்சத்தியாகியும், பரநாத பரவிந்துவாகியும், நிஷ்களை சகளமாகியும் உள்ள (உண்மையினைத்) தெரிந்தேனில்லை. 43

ஒளியாய்க் கதிர்மதியா யுள்ளிருளா யக்கினியாய்
வெளியாகி நின்ற வியனறியேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! அருட்சோதியாய், சூரியசந்திரர்களாய், மனவிருளாய், தீயாய், ஆகாயமாயிருந்த பெருமையைத் தெரிந்துகொள்ளவில்லை. 44

இடையாகிப் பிங்கலையா யெழுந்த சுழுமுனையாய்
உட லுயிராய் நீயிருந்த வுளவறியேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! சூரியகலையாய், சந்திரகலையாய், சுழு முனைநாடியாய், உடலின்கண்ணே உயிருமாய்த், தேவரீர் வியாபித்திருந்த உண்மையினைத் தேரேன். 45

மூலவித்தாய் நின்றுமுளைத் துடல்தோ றுமிருந்து
காலனென வழிக்குங் கணக்கறியேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! (ஆன்மாக்கள் உண்டாதற்குக்) காரணமாகவிருந்து; தோன்றியபின் ஆன்மாக்கள்தோறும் அந்தராத்துமாவாகவிருந்து சங்கார மூர்த்தியினைப்போன்று ஒடுக்கும் உண்மையினையறியேன். 46

உள்ளும் புறம்புமா யுடலுக்கு ணீயிருந்த
தெள்ளளவு நானறியா திருந்தேனே பூரணமே!

(போ - ரை) பூரணமே! தேகத்தினிடத்தே, உள்ளத்தும் புறத்தும் தேவரீர் எழுந்தருளியிருந்ததைச் சிறிதும் நானறியாது இருந்தேன். 47

தாயாகித், தந்தையாய்த், தமர்கிளைஞர் சுற்றமெல்லாம்
நீயாகி நின்றநிலை யறியேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! அன்னை, பிதா, உறவினர், சுற்றம் ஆகிய யாவும் தேவரீராகவே யிருக்க, இவற்றின் உண்மையைத் தேரேன். 48

விலங்குபுள் ளூர்வனவசரம் விண்ணவர்நீர்ச் சாதிமனுக்
குலங்களெழு வகையினின்ற குறிப்பறியேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! விலங்கு, புள், ஊர்வன, தாவரம், தேவர்; நீர்வாழ்வன, மக்கள் ஆகிய எழுவகையினு மிருந்த சைகையினைத் தெரியேன். 49

ஆணாகிப், பெண்ணாய், அலியாகி, வேற்றுருவாய்,
மாணாகி நின்ற வகையறியேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! ஆணாகியும், பெண்ணாகியும், அலியாகியும், அவற்றினுக்கு மாறுபட்டனவாகியும் பெருமையுடனின்ற விதமறியேன். 50

வாலையாய்ப், பக்குவமாய், வளர்ந்துகிழந் தானாகும்,
பாலையாய் நின்ற பயனறியேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! வாலையாகியும், யௌவனமாகியும், முதிர்த்த மூப்பாகியும், சிறுவயதாகியும் இருந்த பிரயோசனந் தேரேன். 51

பொய்யாய்ப், புவியாய்ப், புகழ்வா ரிதியாகி
மெய்யாகி நின்ற வியனறியேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! (தெய்வமில்லை யென்பார்பால்) பொய்யாகியும், பூமியாகவும், புகழப்படுகின்ற சமுத்திரமாகியும், (தெய்வம் உளதென்பார்பால்) உண்மையாகவு மிருந்த ஆச்சரியத்தைத் தேர்ந்திலேன். 52

பூவாய் மணமாகிப், பொன்னாகி மாற்றாகி,
நாவாய்ச் சொல்லான நயமறியேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! புட்பமாகியும் (அதன்) வாசனையாகியும், சொர்னமாகியும் அதன் நிறமாகி (மாற்றாகி)யும் நாவாகியும் அதன் சொல்லாகியு முள்ள நலத்தினை யறியேன். 53

முதலாய், நடுவாகி, முப்பொருளாய், மூன்றுலகாய்,
இதமாகி நின்ற வியலறியேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! ஆதியாகியும், மத்தியமாகியும், முத்தேவர்களாகியும், மூன்றுலகமாகியும், நன்மையாகியு மிருந்த தன்மையினை யறியேன். 54

ஊனா யு—லுயிராய், உண்ணிறைந்த கண்ணொளியாய்த்,
தேனாய் ருசியான திறமறியேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! மாமிசமாகியும், தேகத்தில் ஆன்மாவாகியும், உயிருள் நிறைந்த கண்ணொளியாகியும், தேனாகியும் அதன் சுவையாகியு மிருக்கும் தன்மையினை யறியேன். 55

வித்தாய், மரமாய், விளைந்தகனி யாய்ப், பூவாய்ச்,
சித்தாகி நின்ற திறமறியேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! விதையாகியும் அதன் காரியமான மரமாகியும், (அம்மரத்தில் தோன்றிய) பழமாகியும், (அப்பழத்தினுக்காதாரமாகிய) புட்பமாகியும், அறிவு சொரூபமாகியு மிருந்த தன்மையினை யறியேன். 56

ஐவகையும் பெற்றுலக வண்டபகி ரண்டமெலாந்
தெய்வமென நின்ற திறமறியேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! பஞ்சகிருத்தியங்களைச் செய்து உள்ளும் புறம்புமான அண்டமனைத்திலும் தெய்வமாக எழுந்தருளியிருந்த தன்மையினை யறியேன். 57

மனமாய்க், கனவாகி, மாய்கையா, யுள்ளிருந்து
நினைவாகி நின்றநிலை யறியேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! மனமாகியும், அம்மனத்தில் விளையுங் கனவாகியும், மாயமாகியும் இருதயத்திலிருந்து நினைவாகியும் இருந்த நிலையினை யறியேன். 58

சத்திசிவ மிரண்டாய்த், தான்முடிவி லொன்ருகிச்,
சித்திரமாய் நின்ற நிற மறியேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! சத்தியென்றும் சிவமென்றும் இருவகையாகிச், சொரூபத்தி லொன்றேயாகி, விசித்திரமாயிருந்ததன்மையினை யறியேன். 59

பொறியாய்ப், புலனுகிப், பூதபேதப் பிரிவாய்,
அறிவாகி நின்ற அளவறியேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! ஐம்பொறிகளாகவும், ஐம்புலனுகவும், பஞ்சபூதப் பகுப்புகளாகவும் அதாவது பூதங்களாகவும் அவற்றின் பேதங்களாகவும் அறிவு சொரூபமாகவும், மிருந்த அளவினைத் தெரிந்தேனில்லை. 60

வானிற் கதிர்மதியாய் வளர்ந்துபின்னென் ருனதுபோல்,
ஊனுடலுக் குள்ளிருந்த வுயிர்ப்பறியேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! ஆகாயத்தின்கண்ணே சூரிய சந்திரர்களாய்த் தோன்றிப் பின்பு அருளொளி யொன்றேயானதுபோல ஊனுடன் கூடிய தேகத்தினிட மிருந்த பிராணனைத் தெரிந்தேனில்லை. 61

பொய்யும் புலையுமிகப் பொருந்திவீண் பேசலன்றி
ஐயோ வுனையுரைக்க வறிகிலேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! பொய்மையும் புலாலுண்ணுதலும் அதிகமாகப்பெற்று; வீணன வார்த்தை பேசுதலல்லாமல், அந்தோ! தேவரீரைத் தோத்தரிக்கத் தேர்ந்தேனில்லை. 62

நிரந்தரமா யெங்கு நின்றுவிளை யாடினதைப்
பரமதுவே யென்னப் பதமறியேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! நித்தியப் பொருளாக எங்கு நிறைந்து, திருவிளையாடற் செய்ததனைப் பரம்பொரு ளதுவேயென்னும் பக்குவமறியேன். 63

கொல்வாய்; பிறப்பிப்பாய்; கூடவிருந்தே சுகிப்பாய்;
செல்வாய் பிறர்க்குள்; செயலறியேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! சங்கரிப்பாய்; சிருஷ்டி செய்விப்பாய்; உடனிருந்து காப்பாய்; பிறருயிருக்கு உயிராவாய் (உள்ளுணர்வா யிருந்துகொண்டிருப்பாய்); இக் காரியத்தினை யறியேன். 64

வாரிதியாய், வையமெல்லா மன்னுமண்ட பிண்டமெல்லாஞ்
சாருதியாய் நின்றதல மறியேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! சமுத்திரமாய், உலகமுழுவதும் நிலை பெற்ற சர்வாண்டங்களிலும் அதாவது அண்டபிண்ட மனைத்தினிலு மிருந்து நடத்துபவனுயிருந்த இடந்தெரியேன் அல்லது தன்மை யினைத் தேரேன். 65

வித்தாய், மரமாய், வெளியா யொளியாய்நீ
சத்தா யிருந்த தலமறியேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! விதையாகியும், விருட்சமாகியும், ஆகாயமாகியும், பிரகாசமாகியும், சத்தாகியும் தேவரீர் பரவியிருந்த தன்மையினைத் தேரேன். 66

தத்துவத்தைப் பார்த்து, மிகத்தன்னை யறிந்தறிவால்
உய்த்துணைத்தான் பாராம லுய்வாரோ? பூரணமே!

(போ - ரை) பூரணமே! தத்துவ தரிசனம் செய்து, பின்னர் ஆன்மாவாகிய தன்னைத் தரிசனம் செய்து அல்லது விசாரித்து, அப்

படி யறிந்த அறிவால் ஆராய்ந்து தேவரீரைத் தரிசியாமல் வாழ்பவர் உச்சீவிப்பரோ? 67

ஒன்றா யுயிரா யுடல்தோறு நீயிருந்தும்
என்று மறியார்க ளேழைகள்தாம் பூரணமே!

(போ - ரை) பூரணமே! ஒன்றாகியும், உயிராகியும், நீ ஆன்மாக்கடோறும் அந்தரான்மாவாயிருந்தும், அறிவீனர்கள் எப்போது மறிய மாட்டார்கள். 68

நேற்றென்று நாளையென்று நினைப்புமறப் பாய்ப்படைத்து
மாற்றமாய் நின்ற வளமறியேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! நேற்றையதினமென்றும் (இறந்தகாலமென்றும்) நாளையதினமென்றும் (எதிர்காலமென்றும்) சகல கேவலமென்றும் உண்டாக்கி, அவற்றின் வேறுபட்டிருக்கும் தன்மையினையறியேன். 69

மனம்புத்தி சித்த மகிழறிவாங் காரமதாய்,
நினைவாந் தலமான நிலையறியேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! மனம், புத்தி, சித்தம், களிக்கின்ற அறிவாகிய ஆங்காரம் ஆகிய அந்தக்கரணம் நான்கும் உண்டாதற் கேதுவான இடத்தின் நிலையினை யுணரேன். 70

உருப்பேத மின்றி யுய்ந்தசப்த பேதமதாய்க்,
குருப்பேத மாய்வந்த குணமறியேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! உருவினால் வித்தியாச மில்லாமல், சப்தமாத்திரத்தினாலே பேதமாய், ஆசாரிய கோலங்கொண்டு வந்த, தன்மையினை யறியேன்.

(வி - ரை) 'குருப்பேதமாய் வந்த' என்பதற்கு, 'காத்திர மமைந்ததென்ற' என்றும், 'நிறபேதமாக எழுந்தருளிவந்த' என்றும் பொருள் கூறுப. 71

சட்சமய பேதங்கள் தான்வகுத்துப், பின்னுமொரு
உட்சமய முண்டென் றுரைத்தனையே பூரணமே!

(போ - ரை) பூரணமே! ஆறுவகைச் சமயங்களை யுண்டாக்கி, அதற்குமேலும் ஒரு அகச்சமய முண்டென்று ஆசாரிய கோலங் கொண் டெழுந்தருளித் தெரிவித்தனையே.

(வி - ரை) ஆறுவகைச் சமயங்களாவன: பாடாணவாத சைவர், பேதவாத சைவர், சமவாத சைவர், சங்கிராந்தவாத சைவர், ஈசுவர விகாரவாத சைவர், சிவாத்துவித சைவர், ஆம். உட்சமயமாவது - சுத்தாத்துவித சித்தாந்த வைதிக சைவம். 72

முப்பத்திரண் டுறுப்பாய் முனைந்துபடத் துள்ளிருந்த
செப்பிடு வித்தைத் திறமறியேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! முப்பத்திரண்டு அங்கங்களுடன் கூடிய ஒரு உடலை யுண்டாக்கி, அவ்வுடலிலிருந்துகொண்டு செய்யும் சாலவித்தையின் சாமர்த்தியத்தினை யறியேன்.

(வி - ரை) 'செப்படி வித்தைத் திறம்' என்றும் பாடங்கொண்டு, இதற்கு, 'காலத்தின் சாமர்த்தியம்' என்றும் பொருள் கூறுப. 73

என்னதான் கற்றாலென்? எப்பொருளும் பெற்றாலென்?
உன்னை யறியாதா ருய்வரோ? பூரணமே!

(போ - ரை) பூரணமே! எவ்வளவு சாஸ்திரங்களைப் படித்து மென்ன? எவ்வளவு செல்வமடைந்துமென்ன? தேவரீரைத் தெரிந்து கொள்ளாதவர் உச்சீவிப்பரோ? 74

கற்றறிவோ மென்பார், காணார்க ளுன்பதத்தைப்,
பெற்றறியார் தங்களுக்குப் பிறப்பறுமோ பூரணமே!

(போ - ரை) பூரணமே! கல்விகற்றுத் தெரிந்தோ மென்பர்; (கற்றபின்) நின் திருவடியினைக் காணார்கள்; உன்னை யடைந்து உன்னை யறியாதவர்கட்கு (உன் திருவருளைப் பெறாதவர்கட்கு) சென்ம நீங்குமோ? 75

வானென்பார்; அண்டமென்பார்; வாய்ஞான மேபேசித்
தானென்பார் வீணர்; தலையறியார் பூரணமே!

(போ - ரை) பூரணமே! (தேவரீருக்கு) இருப்பிடம் ஆகாய மென்பர்; (சிலர்) அண்டமென்பர்; இங்ஙனம் வாசா கைங்கரிய மாடித் தானே தெய்வ மென்பர்; இவர்க ளியாவரும் ஆன்ம இலக்கண மறியாத வீணராவர். 76

ஆதியென்பார்; அந்தமென்பார்; அதற்குணடு வாயிருந்த
சோதியென்பார்; நாதத் தொழிலறியார்; பூரணமே!

(போ - ரை) பூரணமே! உற்பத்தி சொல்லுவர்; முடிவு சொல்லுவர்; அவற்றின் மத்தியிலுள்ள சோதிசொரூப மென்பர்; நாத தத்துவத்தின் சொரூபநிலை தெரிந்துகொள்ளார். 77

மூச்சென்பார்; உள்ளமென்பார்; மோனமெனு மோட்ச
மென்பார்;—பேச்சென்பார்; உன்னுடைய பேரறியார்;
பூரணமே!

(போ - ரை) பூரணமே! சிலர் பிராணவாயு வென்பர்; சிலர் மனமென்பர்; சிலர் மவுனநிலையான மோட்சமென்பர்; சிலர் சத்த ரூபமென்பர்; இவரனைவரும் தேவரீர் உண்மைத் திருநாம மறியாதவராவர். 78

பரமென்பார்; பானுவென்பார்; பாழ்வெளி யாய்நின்ற
வரமென்பார்; உன்றன் வழியறியார்; பூரணமே!

(போ - ரை) பூரணமே! சிலர் மேலானவனென்பர்; சிலர்சூரிய னென்பர்; சிதாகாய சொரூபமாகவிருந்த மேன்மைப் பொருளென்பர்; இவர்களியாவரும் உண்மைநிலையினைத் தெரியாதவரே யாவர்.

எத்தனை பேரோ வெடுத்தெடுத்துத் தானுரைத்தார்;
அத்தனைபேர்க் கொன்றுன தறிகிலேன்! பூரணமே!

(போ - ரை) பூரணமே! உலகில் அளவிறந்தவர்கள் நின்பெருமையினை வெகுவிதமாக எடுத்துப் பேசினர்; (அங்ஙனம் பேசினும்) அவர்களுக்கெல்லாம் நீ யொருபொருளாகவிருந்த தன்மையினை யறிந்தேனில்லை. 80

நகாரமகார மென்பார்; நடுவே சிகாரமென்பார்;
வகாரயகார மென்பார்; வகையறியார்; பூரணமே!

(போ - ரை) பூரணமே! திரோதானசத்தியாகிய நகர எழுத்து என்பர்; மலமாகிய மகரவெழுத் தென்பர்; அவற்றினடுவே சிகர எழுத்துஎன்பர்; வகர எழுத்து யகரவெழுத்து என்பர்; இவ்வெழுத்துகளை யதிட்டித்துக்கொண்டிருப்பவரைத் தெரிந்துகொள்ளார்.

(வி - ரை) சிகாரம்-சிவம். வகாரம்-சத்தி. யகாரம்-ஆன்மா. 81

மகத்துவமாய்க் காம மயக்கத்துக் குள்ளிருந்து
பகுத்தறிய மாட்டாமற் பயனழிந்தேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! கௌரவமாய்க் காமாந்தகாரத்திற்சிக்கி. பிரித்தறிய வாராது பிரயோசன மிழிந்தேன்.

(வி - ரை) பிரித்தறிதல் - சிற்றின்பத்திற்கு அன்னியமாகப் பேரின்பம் ஒன்று உண்டு என்பதைத் தெரிந்துகொள்ளுதல். 82

உண்மைப் பொருளை யுகந்திருந்து பாராமற்
பெண்மயக்கத் தாலே பிறந்திறந்தேன்; பூரணமே!

(போ - ரை) பூரணமே! சத்தியமான பொருளினை விரும்பித் தரிசியாமல் மாதரிடத்து வைத்த மோகத்தினாலே (வீணாக) இறப்பினும் பிறப்பினும் கட்டுப்பட்டுத் (துன்ப மடைந்தேன்). 83

வாயார வாழ்த்தி மகிழ்ந்துனைத்தான் போற்றாமல்
காய மெடுத்துக் கலங்கினேன்; பூரணமே!

(போ - ரை) பூரணமே! வாய்நிரம்பத் தோத்திரஞ்செய்து சந்தோஷித்துத் தேவரீரைத் தோத்தரியாமல் உடலெடுத்துக் கலக்க முற்றேன். 84

'சந்திரனை மேகமேது தாமறைத்த வாறதுபோற்'
பந்தமுற யானுனைப் பார்க்கிலேன்; பூரணமே!

(போ - ரை) பூரணமே! சந்திரனை மேகமானது மறைத்தவிதம் போல, (என்னைப்) பாசமுற, அதனால் அடியேனு முன்னைத் தரிசித்தேனில்லை. 85

செந்தா மரைத்தாளைத் தினந்தினமும் போற்றாமல்,
அந்தரமாய் நின்றங் கலைந்தேனான் பூரணமே!

(போ - ரை) பூரணமே! சிவந்த தாமரைபோன்ற திருவடியினை நாடோறும் துதிசெய்யாமல் அனாதரவாக விருந்துகொண்டு நான் திரிந்தேன். 86

'நீர்மேற் குமிழிபோல்' நிலையற்ற காயமிதைத்
தாரகமென் றெண்ணிநான் றட்டழிந்தேன்; பூரணமே!

(போ - ரை) பூரணமே! சலத்தின்மீது உண்டாகின்ற குமிழினைப்போல, நிலையில்லாத தேகமாகிய இதனை ஆதாரமென்றுநினைத்து அடியேன் தடுமாறினேன். 87

நெஞ்ச முருகி நினைந்துனைத்தான் போற்றிகெடு
வஞ்சகத்தைப் போக்க வகையறியேன் பூரணமே!

(போ - ரை) பூரணமே! மனங்கசிந்து தியானித்து தேவரீரையே தோத்தரித்து, (எனக்குள்ள) பெரிய வஞ்சகத்தை ஒழித்துக் கொள்ள ஏது வொன்றும் தெரிந்துக்கொண்டேனில்லை. 88

எள்ளுக்கு ளெண்ணெய்போ லெங்கு நிறைந்திருந்த
துள்ள மறியா துருகினேன்; பூரணமே!

(போ - ரை) பூரணமே! எள்ளினுக்குள்ளே எண்ணெய் வியாபித்திருப்பது போன்று, (தேவரீர்) எவ்விடத்தும் வியாபித்திருந்ததை மனதிற் கொள்ளாமல் இளைத்தேன். 89

மாயப் பிரபஞ்ச மயக்கத்தி லேவிழுந்தே
ஓயாச் சனன மொழித்திலேன்; பூரணமே!

(போ - ரை) பூரணமே! காரியரூபமான உலகத்தினது, திகைப்பிலே அழுந்தி, நீங்காத பிறப்பினை நீக்கிக்கொண்டேனில்லை. 90

பூசையுடன் புவன போகமெனும் போக்கியத்தால்
ஆசையுற்றே நானு மறிவழிந்தேன்; பூரணமே!

(போ - ரை) பூரணமே! சிறுதெய்வப் பூசையுடன், பிரபஞ்ச வாழ்வெனும் அநுபவத்தினுலே அவா வைத்தே, அடியேனும் புத்தி கெட்டேன். 91

படைத்து மழித்திடுவாய்; பார்க்கிற்பிர மாவெழுத்தைத்
தொடைத்துச்சிரஞ் சீவியாத் துலங்குவிப்பாய்! பூரணமே!

(போ - ரை) பூரணமே! சிருஷ்டிசெய்வாய்; சங்கரிப்பாய்; ஆராயில், பிரமன் ஏற்படுத்திய விதியைக் கெடுத்து நித்தியமாய்ப் பிரகாசிக்கச் செய்வாய். 92

மந்திரமாய்ச், சாத்திரமாய், மறைநான்காய் நீயிருந்த
தந்திரத்தை நானறியத் தகுமோதான்? பூரணமே!

(போ - ரை) பூரணமே! பஞ்சாட்சர மந்திரமாகியும், பதிநூலாகிய சாஸ்திரங்களினால் பிரதிபாதிக்கப்படுபவனாகியும், நான்கு வேதங்களால் பிரதிபாதிக்கப்படுபவனாகியும் தேவரீர் எழுந்தருளியிருந்த சூழ்ச்சியினை அடியேன் தெரிந்துக்கொள்ளத் தகுதியாதுமோ? 93

அல்லாய்ப், பகலா யனவரத காலமெனுஞ்
சொல்லாய்ப், பருத்த தொடர்பறியேன்; பூரணமே!

(போ - ரை) பூரணமே! இருளாயும், பிரகாசமாயும், எல்லாக் காலமாகியும், நூலாலே வகுத்துள்ள சம்பந்தத்தைத் தெரிந்தேனில்லை. 94

நரகஞ் சுவர்க்கமென நண்ணுமிரண் டுண்டாயும்
அரகரா வென்ப தறிகிலேன்; பூரணமே!

(போ - ரை) பூரணமே! நரகமெனவும் மோட்சமெனவும் பொருந்திய இரண்டிடங்கள் ஏற்பட்டிருந்தும்," 'அரகர' என்னும் மந்திரத்தினைச் செபிக்கத் தெரிந்திலேன். 95

பாவபுண் ணியமென்னும் பகுப்பாய்ப் படைத்தழித்திங்
காவலையுண் டாக்கிவைத்த வருளறியேன்; பூரணமே!

(போ - ரை) பூரணமே! பாவமென்றும் புண்ணியமென்றும் இரண்டு பிரிவாய், அவற்றின் அநுபவத்திற்குத் தக்கபடி உண்டாக்கியும் அழித்தும், இவ்வுலகில் ஆசையை ஏற்படுத்திவைத்த திருவருளினைத் தேரேன். 96

சாந்தமென்றுங், கோபமென்றுஞ், சாதிபேதங்களென்றும்;
பாந்தமென்றும்,புத்தியென்றும் படைத்தனைபே பூரணமே!

(பொ - ரை) பூரணமே! பொறுமையென்றும், சினமென்றும், வேறு வேறு சாதிகளெனவும், பந்தமென்றும், அறிவென்றும் வகுத்தனையே. 97

பாச முடலாய்ப் பசுவதுவுந் தானுயிராய்
நேசமுட னீபொருளாய் நின்றனையே; பூரணமே!

(பொ - ரை) பூரணமே! பாசமென்பது தேகமாகியும், பசுவானதுவும் ஆன்மாவாகவும் விருப்பத்துடன் தேவரீர் அவற்றிற்குப் பதியாகவும் அன்புடனே இருந்தனையே! 98

ஏதிலடி யாரிரங்கி யிகத்தில்வந் துன்றன்
பாதமதில் தாழப் பரிந்தருள்வாய்! பூரணமே?

(பொ - ரை) பூரணமே! குற்றமில்லாத சிவனடியார்கள், மனமிரங்கி இம்மையில் வந்து தேவரீரது திருவடியில் வணங்க, விருப்பத்துடன் அவர்கட்குத் திருவருள் புரிவை. 99

நானேநீ நீயேநா னிரண்டு மொன்றானால்
தேனின் ருசியதுபோற் றெவிட்டாய்நீ பூரணமே!

(பொ - ரை) பூரணமே! சிவமாம் தன்மையடைய நானே நீயாகியும், நீயே நானாகவும், இருவரும் சுத்தாத்துவிததன்மை யடைந்தால், தேனின் சுவையைப்போலத் தேவரீர் தித்திப்பீர். 100

முடிவிலொரு சூனியத்தை முடித்துநின்று பாராமல்
அடியிலொரு சூனியத்தி லலைந்தேனே பூரணமே!

(போ - ரை) பூரணமே! தத்துவங்களின் முடிவிலும் விளங்காத பொருளைத் தெரிந்து தீர்மானித்துத் திருவருளிலிருந்து தரிசியாமல், ஆரம்பத்திலேயே ஒன்றுமில்லை யென்னும் அறியாமையை அடைந்தேன். 101

பூரண மாலைதனை புத்தியுட னோதினர்க்கு
தாரணியில் ஞானந் தழைப்பிப்பாய்; பூரணமே!

(போ - ரை) பூரணமே! பூரணமாலையென்னு மிந்நூலை, அறிவுடனே படித்தோர்க்கு உலகில் சிவஞானத்தை உண்டாக்குவாய்!

பூ ர ண மா லை
முற்றுப்பெற்றன.

---

## நெஞ்சொடுமகிழ்தல்

அன்றுமுத லின்றளவு மாக்கையொடு கூட்சியுமாய்
நின்ற நிலையறிய நேசமுற்றாய்; நெஞ்சமே!

(போ - ரை) நெஞ்சமே! பிறந்தநாள்முதலாக இதுவரையிலும் எனது தேகத்துடனே தந்திரமாய்க் கலந்த தன்மையினைத் தெரிந்து கொள்ள விருப்பம் வைத்தாய். 1

அங்கங் குணர்வா யறிவாகி யேநிரம்பி
எங்கெங்கு மானதிலே யேகரித்தாய்; நெஞ்சமே!

(போ - ரை) நெஞ்சமே! ஆன்மாக்கடோறும் அறிதற்கேதுவாய் அறிவு சொரூபமாகவிருந்து, எவ்விடத்துமான எவற்றிலும் கலந்தனை.

அலையாத பேரின்ப வானந்த வெள்ளத்தில்
நிலையா யுருவிறந்து நின்றனையே; நெஞ்சமே!

(போ - ரை) நெஞ்சமே! சலியாத சிவானந்த அருட்கடலிலே சாசுவதமாய் அருவமாகி இருந்தனையே. 3

பாராமற் பதையாமற் பருகாமல் யாதொன்றும்
ஓரா துணர்வுடனே யொன்றினையே; நெஞ்சமே!

(போ - ரை) நெஞ்சமே! ஒன்றை நோக்காமலும், பதைத்திடாமலும், உண்ணுமலும், எதனையும் ஆராயாமலும், அறிவுடனேமுதல்வனுடன் ஒன்றுபட்டனை. 4

களவிறந்து, கொலையிறந்து, காண்பனவுங் காட்சியும்போ
யளவிறந்து நின்றதிலே யன்புற்றாய்; நெஞ்சமே!

(போ - ரை) நெஞ்சமே! பிறர் பொருளைக் கிரகிக்காமல், கொலை செய்யாமல், ஞாதுருவும் ஞானமும் கடந்து, வியாபகப் பொருளிலே ஆசை வைத்தாய். 5

பேச்சிறந்து, சுட்டிறந்து, பின்னிறந்து, முன்னிறந்து,
நீச்சிறந்து நின்றதிலே நேசமுற்றாய்; நெஞ்சமே!

(போ - ரை) நெஞ்சமே! மவுனமாய், ஏகதேச நோக்கற்று, எதிர்கால மிழந்து, இறந்தகால மிழந்து, வியாபாரமற்ற நிலையிலே அன்பு வைத்தாய். 6

விண்ணிறந்து, மண்ணிறந்து, வெளியிறந்து வொளியிறந்து,
எண்ணிறந்து நின்றதிலே யேகரித்தாய், நெஞ்சமே!

(போ - ரை) நெஞ்சமே! ஆகாயம் கடந்து பூமிகடந்து, வெளி கடந்து, பிரகாசம் கடந்து, அளவு கடந்து, நின்ற நிலையிலே அதாவது அளவற்றிருந்த வஸ்துவினிடத்தே ஒன்ருகக் கலந்தனை. 7

பார்த்த விடமெங்கும் பரமெனவே யுட்புறம்புங்
கோத்தபடி யுண்மையெனக் கொண்டனையே; நெஞ்சமே!

(போ - ரை) நெஞ்சமே! நோக்கிய இடங்கள்தோறும் சிவமய மெனவே உள்ளும் புறமும் கலந்தபடி சத்தியமெனத் தெரிந்து கொண்டனை. 8

ஊரிறந்து, பேரிறந்து, வொளியிறந்து, வெளியிறந்து,
சீரிறந்து நின்றநிலே சேர்ந்தனையே; நெஞ்சமே!

(போ - ரை) நெஞ்சமே! தேச மிழந்து; பூதப்பிரகாச மிழந்து, ஆகாய வெளியிழந்து, பிரபஞ்ச சிறப்பிழந்து நின்ற நிலையிலே கலந் தனையே. 9

ஆண்பெண் ணலியென் றழைக்கவரி தாய்நிறைந்து
காண்பவரி தாயவிடங் கண்ணுற்ருய்; நெஞ்சமே!

(போ - ரை) நெஞ்சமே! புருடனென்றும், மாதென்றும், நபுஞ் சகனென்றும், பெயரிட்டழைக்க அருமையாய், எங்கும் வியாபக மாகிக், காட்சிக்கு அரியதாயுள்ள இடத்தினைக் கண்டனை. 10

ஆங்கார மச்ச மகற்றி யறிவினெடு
தூங்காமற் றூங்கிச் சுகம்பெற்ருய் நெஞ்சமே!

(போ - ரை) நெஞ்சமே! செருக்கு பயம் நீக்கி, ஞானமயமாகித் தற்போத முன்னிட்டுத் தூங்காமல் அருட்போத முன்னிட்டுத் தூங்கி இன்ப மடைந்தனை. 11

ஆதியாய் நின்ற வகண்டபரி பூரணத்தைச்
சாதியா நின்றவிடஞ் சார்வுற்றாய் நெஞ்சமே!

(போ - ரை) நெஞ்சமே! எல்லாவற்றிற்கும் முதன்மையாயிருந்த வியாபகமான பரிபூரண வஸ்துவைத் தெரிவிக்கத் தகுந்த இடத்திற் சேர்ந்தனை. 12

விருப்புவெறுப் பில்லாத வெட்டவெளி யதனில்
இருப்பே சுகமென் றிருந்தனையே; நெஞ்சமே!

(போ - ரை) நெஞ்சமே! சுகம் துக்கம் இவற்றைக்கடந்த சிதாகாயத்தில் இருத்தலே சுகமென்னத் தங்கினையே. 13

ஆருமுறுப் பேரண்டத் தப்புறத்து மிப்புறத்தும்
'நீருமுப்பு மென்ன' நிலைபெற்றாய்; நெஞ்சமே!

(போ - ரை) நெஞ்சமே! எவரும் அடைதற்குக்கூடாத பெரிய ஆகாயத்தில், அதன் வெளியிலும் உள்ளும், நீரிற்கலந்த உப்பேபோல நிலையுற்றனை. 14

உடனாகவேயிருந்து முணரவரி யானோடு
'கடனீரு மாறும்போற்' கலந்திலையே! நெஞ்சமே!

(போ - ரை) நெஞ்சமே! ஆன்மாவோடு கலந்திருந்தும், அவ்வான்மாவினாலே எட்டற்கு அரியவனுடனே, கடற் சலமும் ஆற்றுச் சலமும் போலக் கலந்திருந்தா யில்லையே. 15

நெடியகத்தைப் போக்கி, நின்ற சழக்கறுத்துப்,
'படிகத்துக் கும்பம்போற்' பற்றினையே நெஞ்சமே!

(போ - ரை) நெஞ்சமே! நீண்ட பேச்சிறந்து, நிலையுற்ற குற்றங் களைந்து, படிகத்தினாற்செய்த கடத்தைப்போலப் பிடித்தனையே.

மேலாகி யெங்கும் விளங்கும் பரம்பொருளிற்
'பாலூறு மென்சுவைபோற்' பற்றினையே நெஞ்சமே!

(போ - ரை) நெஞ்சமே! எவற்றினுக்கும் மேற்பட்டதாகி, எவ்விடத்தும் பிரகாசிக்கும் சிவத்தில், பாலிடத்தி லுண்டான விசேஷ சுவையினைப்போலப் பிடித்தனையே. 17

'நீரோடுதண் ணாலிவிண்டு நீரான வாறேபோல்'
ஊரோடுபே ரில்லானோ டொன்றினையே; நெஞ்சமே!

(போ - ரை) நெஞ்சமே! சலத்தினிடத்தில் ஆலங்கட்டி வெளிப்பட்டு மறுபடியும் நீரானதுபோல, ஊருடன் பெயரு மில்லாதவனாகிய சிவபெருமானுடனே பொருந்தினையே. 18

இப்பிறப்பைப் பாழ்ப்படுத்தி யிருந்தபடி யேயிருக்கச்
செப்பவரி தாயவிடஞ் சேர்ந்தனையே; நெஞ்சமே!

(போ - ரை) நெஞ்சமே! எடுத்த சன்மத்தினை மறுபடியு முண்டாகாதபடி பாழாக்கி, நிலையாகவிருக்க அதாவது மவுனநிலையிலிருந்திடச் சொல்லுதற் கருமையாகிய இடத்தினை யடைந்தனையே. 19

மேலாம் பதங்களெல்லாம் விட்டுவிட் டாராய்ந்து
நாலாம் பதத்தி னடந்தனையே; நெஞ்சமே!

(போ - ரை) நெஞ்சமே! மேற்பட்டுள்ள மும்மூர்த்திகளின் பதவிகளைக் கடந்து, அதன்மேலிடத்தை யாராய்ந்து, நாலாவது பதவியாகிய சிவபெருமானது சிதாகாய உலகத்தில், அடைந்தனையே. 20

கடங்கடங்க டோறுங் கதிரவனூ டாடி
யடங்குமிடந் தானறிந் தன்புற்றாய்; நெஞ்சமே!

(போ - ரை) நெஞ்சமே! உடலாகிய பாண்டந்தோறும், காரிய மாயையாகிய சூரியன் சங்கித், தங்கும் காரண மாயையினைத் தெரிந்து விருப்பமுற்றனையே. 21

கற்றவனாய்க், கேட்டவனாய்க், காணானாய்க், காண்பவனாய்,
உற்றவனாய் நின்றநிலை யொன்றுபட்டாய் நெஞ்சமே!

(போ - ரை) நெஞ்சமே! எல்லாம் கற்றவனாகவும், எல்லார் பிரார்த்தனைகளையும் கேட்டவனாகவும், ஒருவருக்கும் காணாதவனாக வும், (அடியவர்கட்குக்) காண்பவனாகவும், எல்லாரிடத்தும் அடைந் தவனாகவும் நிலைபெற்றவ னிடத்திலே கலந்தனை. 22

நாலுவகைக் கரணமல்கு புலனைந்து மொன்றாய்ச்
சீலமுற்று நின்றநிலை சேர்ந்தனையே நெஞ்சமே!

(போ - ரை) நெஞ்சமே! நான்கு வகைப்பட்ட அந்தக்கரணங் களும், விஷயங்களைக் கொடுக்கும் ஐந்து புலன்களும், ஒருமையாயாகிச் சுத்தனாகி இருந்த நிலையிலே அடைந்தனையே. 23

விட்டிடமுந், தொட்டிடமும், விண்ணிடமு(ம்), மண்ணிடமு
கட்டுமொரு தன்மையெனக் கண்ணுற்றாய்; நெஞ்சமே! [ங்

(போ - ரை) நெஞ்சமே! நீங்கிய இடமும், அடைந்த இடமும், ஆகாயமும், பூமியும் சேர்ந்த ஒருதன்மை யுடையதெனப் பார்த்தனை.

(வி - ரை) விட்டிடம்-மண்ணிடம், தொட்டிடம்-விண்ணிடம்.

எந்தெந்த நாளு மிருந்தபடி யேயிருக்க
அந்தச் சுகாதீத மாக்கினையே; நெஞ்சமே!

(போ - ரை) நெஞ்சமே! எக்காலமும் இருந்த விதமாகவே நிலையுற்றிருக்க அந்த இன்பமயமாகச் செய்தனையே. 25

வாக்கிறந்து நின்றமனோ கோசரந் தன்னிலே
தாக்கறவே நின்றநிலை தலைசெய்தாய்; நெஞ்சமே!

(போ - ரை) நெஞ்சமே! சொல்லிறந்த நிலைபெற்ற மனாதீத நிலையிலே, யாதொன்றினும் சம்பந்தப்படாத நிலையிலே தலைமை வாய்ந்தாய். 26

எத்தேசமு நிறைந்தே, எக்கால முஞ்சிறந்து,
சித்தாய சித்தினிடஞ் சேர்ந்தனையே; நெஞ்சமே!

(போ - ரை) நெஞ்சமே! எல்லாத் தேயங்களினும் வியாபித்தே, எக்காலத்தும் சிறப்புற்று, அறிவுருபமாயுள்ள சிவத்தினிடம் அடைந்தனையே. 27

தாழாதே நீளாதே தன்மயமாய் நிறைந்து
வாழாதே வாழ மருவினையே; நெஞ்சமே!

(போ - ரை) நெஞ்சமே! தாழ்வு அடையாமலும், உயர்வடையாமலும், சிவமயமாகி வியாபித்துத் தற்போத முன்னிட்டு வாழாமல் அருளில் வாழக் கலந்தனையே. 28

உள்ளும் புறம்பு முவட்டாத வானந்தக்
கள்ளருந்தி நின்றநிலை கண்ணுற்றாய்; நெஞ்சமே!

(போ - ரை) நெஞ்சமே! உள்ளும் - அகத்திலேயும் புறத்திலேயும் தெவிட்டாத சிவானந்தமாகிய தேனுண்டு, நின்ற நிலையிலே தரிசித்தாய். 29

வாதனைபோய், நிட்டையும்போய், மாமௌன ராச்சியம்
பேதமற நின்றவிடம் பெற்றனையே; நெஞ்சமே! [போய்,

(போ - ரை) நெஞ்சமே! பிரபஞ்ச வாசனை போய், யோகம் கலந்து, மவுனநிலை நீங்கி, அபேதமாக வுற்ற திருவருளினை அடைந்தனையே. 30

'இரதம் பிரிந்துகலந் தேகமாம் வாறேபோல்'
விரகந் தவிர்ந்தனல்பால் மேவினையே; நெஞ்சமே!

(போ - ரை) நெஞ்சமே! பாதரசம் நீங்கி உடனே கலந்து ஒன்றாகும் விதம்போலப், பிரபஞ்ச மோகம் நீங்கிச் சிவாக்கினியினிடத்து அடைந்தனையே. 31

'சோதியான் சூழ்பனிநீர் சூறைகொளு மாறேபோல்'
நீதிகுரு வின்றிருத்தாள் நீபெற்றாய்; நெஞ்சமே!

(போ - ரை) நெஞ்சமே! சூரியன் தன்னைச்சூழ்ந்த பனிநீரினை நீக்கும் விதம்போல, ஒழுக்கம் வாய்ந்த ஆசாரிய மூர்த்தியின் அழகிய திருவடியை நீ யடைந்தாய். 32

நெஞ்சோடு மகிழ்தல்

முற்றுப்பெற்றன.

---

சிவமயம்.

# உடற்கூற்றுவண்ணம்

தனதனதான தனதனதான
தந்ததனந்தன தந்ததனந்தன
தனனதனந்த தனனதனந்த
தானனதானன தானனதந்த—
தந்ததனதான தனதானா.

ஒருமடமாது மொருவனுமாகி யின்பசுகந்தரு
மன்புபொருந்தி யுணர்வுகலங்கி யொழுகியவிந்து
ஊறுசுரோணித மீதுகலந்து—

(பொ - ரை) ஒரு அழகிய பெண்ணும் ஒரு வாலிபனுங் கூடி இன்பமாகிய சுகத்தினைக் கொடுத்தற் கேதுவாகிய அன்பினை யடைந்து, கலவியில் அவசமாகியபோது வெளிப்பட்ட சுக்கிலம் பெண்ணின் சுரோணிதத்துடன் கலந்து,

பனியிலொர்பாதி சிறுதுளிமாது பண்டியில்வந்துபு
குந்துதிரண்டு பதுமவரும்பு கமடமிதென்று
பார்வைமெய்வாய்செவி கால்கைகளென்ற—

(பொ - ரை) (அந்தச் சுக்கிலமும் சுரோணிதமும் சேர்ந்து) ஒரு பனித்துளியில் பாதித் துளியளவாகிப் பெண்ணின் கருப்பாசயத்தில் பிரவேசித்து, அவ்விடத்திலிருந்து திறட்சியடைந்து, தாமரை மொக்கினை நிகர்த்து, ஆமைவுருவாகிக், கண் உடல் வாய் காது கால் கைகளென்று சொல்லத்தகுந்த,

உருவமுமாகி வுயிர்வளர்மாத மொன்பதுமொன்றுநி
றைந்துமடந்தை யுதரமகன்று புவியில்விழுந்து
யோகமும்வாரமு நாளுமறிந்து—

(போ - ரை) உருவத்தினை யடைந்து, உயிர் விருத்தியாதற்குப் பத்து மாதங்கள் பூர்த்தியாகி, அம்மாதின் வயிற்றினின்றும் வெளி வந்து பூமியில் விழுந்து, இன்ன யோகம், இன்ன வாரம், இன்ன நாளுமெனத் தெரிந்து,

மகளிர்கள்சேனை தரவணையாடை மண்படவுந்தியு
தைந்துகவிழ்ந்து மடமயில்கொங்கை யமுதமருந்தி
யோரறிவீரறி வாகிவளர்ந்து—

(போ - ரை) பெண்களின் கூட்டம், எணையில் வளர்த்த பூமியி லுதைத்தும், கவிழ்ந்து மயில்போன்ற சாயலையுடைய தனது தாயின் தனத்தினது பாலைக் குடித்துச், சிறிது சிறிதாக அறிவு வளர வயதடைந்து,

ஒளிநகையூற லிதழ்மடவாரு வந்துமுகந்திட
வந்துதவழ்ந்து மடியிலிருந்து மழலைமொழிந்து
வாவிருபோவென நாமம்விளம்பி—

(போ - ரை) பிரகாசிக்கின்ற பற்களுடன் ஊறும் உதட்டினைப் பெண்கள் விரும்பி முத்தமிட, ஓடித் தவழ்ந்து, தாயின் மடிமீதில் தங்கிக், குதலை வார்த்தைகளைப் பேசி, வா இரு போவென இரண் டொரு வார்த்தைகளைப் பேச,

உடைமணியாடை யரைவடமாட வுண்பவர்தின்பவர்
தங்களொடுண்டு தெருவிலிருந்து புழுதியளைந்து
தேடியபாலரொ டோடிநடந்து—
அஞ்சுவயதாகி விளையாடியே— ($\frac{1}{4}$)

(போ - ரை) உடுக்கத்தகுந்த ஆபரணம், வஸ்திரம், அரைஞாண் அசைய, சாதம் சாப்பிடுபவருடனும், பலகாரம் சாப்பிடுபவருடனு மிருந்து உண்டு, வீதியிற் றங்கிப், புழுதி பூசிக்கொண்டு, நாடிவரும் மற்றைப் பிள்ளைகளுடன் ஓடி நடந்து ஐந்துவயதுவரையில் இவ்வாறு விளையாடியே;

உயர்தருஞான குருவுபதேச முந்தமிழின்கலை
யுங்கரைகண்டு வளர்பிறையென்று பலரும்விளம்ப
வாழ்பதினாறு பிராயமும்வந்து—

(போ - ரை) உயர்வாகிய ஞானாசிரியரிடம் உபதேசமும், தமிழ் சாஸ்திரங்களின், அளவு கண்டு, விருத்திச் சந்திரனென்று பற்பலரும் சொல்ல, வாழத்தகுந்த பதினாறு வயதடைந்து,

மயிர்முடிகோதி யறுபதநீல வண்டிமிர்தண்டொடை
கொண்டைபுனைந்து மணிபொனிலங்கு பணிகளணிந்து
மாகதர்போகதர் கூடிவணங்கி—

(போ - ரை தலைமயிர் வாரி முடித்து, ஆறு கால்களுடன் கூடிய நீல வண்டுகள் தங்கிப் பாடுகின்ற குளிர்ச்சிபொருந்திய மாலைகளைத் தலையில் தரித்து, இரத்தினங்களிழைத்த பொன்னாற் செய்யப்பட்ட ஆபரணங்களைத் தரித்து, மாகதர் போகதராகிய பாடகர்கள் சேர்ந்து வணங்க,

மதனசொரூப னிவனெனமோக மங்கையர்கண்டும
ருண்டுதிரண்டு வரிவிழிகொண்டு சுழியவெறிந்து
மாமயில்போலவர் போவதுகண்டு—

(போ - ரை) மன்மதனை யொத்த வடிவினன் இவனென்னனக் காமமாதர்கள் பார்த்து மருட்சியுற்றுக் கூடிச், செவ்வரி படர்ந்த

நேத்திரத்தினுல் சுழற்றி மருட்ட, அழகிய மயிலன்ன சாயலுடன் அவர்கள் நடப்பதைப் பார்த்து,

மனதுபொருமலவர்பிறகோடி மங்கலசெங்கல
சந்திகழ்கொங்கை மருவமயங்கி யிதழமுதுண்டு
தேடியமாமுதல் சேரவழங்கி—

(போ - ரை) மனந் தாளாது, அவர் பின் சென்று, மங்கலமாகிய அழகிய கலசத்தையொத்த அவர் தனங்களை அணைக்கத், திகைப்புண்டு அதரபானஞ் செய்து, தாம் சம்பாதித்த பெரியசெல்வத்தினை முழுதுங் கொடுத்து,

ஒருமுதலாகி முதுபொருளாயி ருந்ததனங்களும்
வம்பிலிழந்து மதனசுகந்த விதனமிதென்று
வாலிபகோலமும் வேறுபிரிந்து—

(போ - ரை) ஒரு முதற்பொருளாகவும், அபாரமாகவு மிருந்த செல்வமுழுதும் வீணுகச் செலவழித்து, மதனலீலை விசனத்திற்கு எதுவென்று, வாலிபப்பருவமும் வேறுபட்டு,

வளமையுமாறி யிளமையுமாறி வன்பல்விழுந்திரு
கண்களிருண்டு வயதுமுதிர்ந்து நரைதிரைவந்து
வாதவிரோத குரோதமடைந்து—
செங்கையினிலோர் தடியுமாகியே— (½)

(போ - ரை) அழகுங்கெட்டு, இளமையுங் கெட்டு, வலியபற்கள் விழுந்து, இரண்டு நேத்திரங்களும் மறைந்து, மூப்படைந்து, நரையும் திரையும் அடைந்து, வாதநோயும் யாவரையும் விரோதிக்கும் கோபமுங் கொண்டு, செவ்விய கரத்தினிடத்தில் ஒரு தடி யூன்றியே;

வருவதுபோவ தொருமுதுகூனு மந்தியெனும்படி
குந்திநடந்து மதியுமழிந்து செவிதிமிர்வந்து
வாயறியாமல்வி டாமல்மொழிந்து—

(பொ - ரை) ஒரு முதுகூனுடன், வருவதும் போவதுமாகிக் குரங்கினைப்போலக் குந்தி குந்தி நடந்து, அறிவுகெட்டு, காது செவிடுபட்டு, இன்னது சொல்வதென் றறியாமல் எந்நேரமும் பேசி,

துயில்வருநேர மிருமல்பொறுது தொண்டையுநெஞ்சமு
லர்ந்துவறண்டு துகிலுமிழந்து சுணையுமழிந்து
தோகையர்பாலர்கள் கோரணிகொண்டு—

(பொ - ரை) தூங்குகின்ற சமயத்தில் இருமலைச் சகிக்கமுடியாமல் தொண்டையும் உலர்ந்து வறண்டு, இடுப்பிலுள்ள வஸ்திரம் நழுவச், சுரணையின்றி மாதரும் பிள்ளைகளும் கோளாறு செய்யப்பெற்று,

கலியுகமீதி லிவர்மரியாதை கண்டிடுமென்பவர்
சஞ்சலமிஞ்ச கலகலவென்று மலசலம்வந்து
கால்வழிமேல்வழி சாரநடந்து—

(பொ - ரை) இக் கலியுகத்திலே இவர் தன்மையினைப் பாருமென்ச் சொல்பவர்கட்குத் துன்ப மதிகரிக்கக், கலகலென மலமும் சலமும் பெருகிக், கால்வழியாகவும், தேகமேலும் பொருந்த வழிந்து,

தெளிவுமிராம லுரைதடுமாறி சிந்தையுநெஞ்சமு
லைந்துமருண்டு திடமுமுலைந்து மிகவுமலைந்து
தேறிநலாதம வேதனைநொந்து—

(பொ - ரை) மனத் தெளிவில்லாமல் குளறும்படியான வார்த்தைகளை யடைந்து, மனமும் எண்ணமும் மிக அலைந்து, தேகதிடம் தப்பி, மிகுதியும் பாடுபட்டு, நல்ல ஆதரவு ஏதுமில்லையென வருந்தி,

மறையவன்வேத மெழுதியவாறு வந்ததுகண்டமு
மென்றுதெளிந்து இனியெனகண்ட மினியெனதொந்த
மேதினிவாழ்வுநி லாதினிநின்ற—

(பொ - ரை) 'வேதங்களுக்குரிய பிரமன் தலையிலெழுதிய விதி நெருங்கிவிட்டது, இனி மரணகண்டம் வந்தது' எனத் தெரிந்து, வேறு கண்டமேது? இனி யென்ன சம்பந்தமுளது? இனி உலக வாழ்வேது? நில்லாது பாக்கியாகவிருக்கும்,

கடன்முறைபேசு மெனவுரைநாவு றங்கிவிழுந்துகை
கொண்டுமொழிந்து கடைவழிகஞ்சி யொழுகிடவந்து
பூதமுநாலுசு வாசமுநின்று—
நெஞ்சுதடுமாறி வருநேரமே.— 3/4

(பொ - ரை) கடன் முதலியவற்றைப்பற்றி ஏதாவது ஏற்பாடு செய்யவேண்டுமெனச் சொல்லிக்கொண்டிருந்த நாவானது குளறி இழுத்துக்கொள்ள, கைகளினுற சாடைகாட்டிக், கஞ்சி பக்கங்களில் ஒழுகிவிடப், பஞ்ச பூதங்களும் விடுகின்ற பிராணவாயுவும் தடைப்பட்டு,

வளர்பிறைபோல வெயிறுமுரோம முஞ்சடையுஞ்சிறு
குஞ்சியும்விஞ்ச மனதுமிருண்ட வடிவுமிலங்க
மாமலைபோல்யம தூதர்கள்வந்து—

(பொ - ரை) வளைந்த சந்திரனைப் போலப் பற்களும், மயிரும், சடையும், சிறு குடுமியும் காண, (கடின) மனமும், கறுத்த உருவமும் பிரகாசிக்கப் பெரிய மலையினைப்போல நமன் தூதுவர்கள் நெருங்கி,

வலைகொடுவீசி யுயிர்கொடுபோக மைந்தரும்வந்துகு
ணிந்தழுநொந்து மடியில்விழுந்து மனைவிபுலம்ப,
மாழ்கினரேயிவர் காலமறிந்து—

(பொ - ரை) பாச வலையை வீசி உயிரைப் பிடித்துக்கொண்டு போகப் பிள்ளைகளும் வந்து குந்தித் துக்கப்பட, மடிமேல் விழுந்து மனைவி புலம்ப இவர் இறந்தனரே. இக்காலத்தினைக் கேட்டு,

பழையவர்காணு மெனுமயலார்கள் பஞ்சுபறந்திட
நின்றவர்பந்த ரிடுமெனவந்து பறையிடமுந்த
வேபிணம்வேக விசாரியுமென்று—

(பொ - ரை) இவர் மிக வயோதிகரெனச் சொல்லும் அயலவர்கள் பஞ்சினைப்போல வோடி, இருந்தவர் இனிப் பந்தர் முதலிய இடஞ் செய்வீரென, (பஞ்சமர்) வந்து மேளங்கொட்ட ஆரம்பிக்கவே, பிணத்தினைக் கொண்டுபோய்ச் சுட விசாரியுங்களென்று,

பலரையுமேவி முதியவர்தாமி ருந்தசவங்கழு
வுஞ்சிலரென்று பணிதுகிலொண்கல் களபமணிந்து
பாவகமேசெய்து நாறுமுடம்பை—

(பொ - ரை) பலரையும் அனுப்பிக் கேட்டுச் சில பெரியவர், தங்கிய பிணத்தினைச் சிலர் கழுவுவீரெனச் சொல்லி; ஆபரணம், வஸ்திரம், மாலை, வாசனை முதலிய தரித்து அலங்கரித்து, துர்வாசனையுடைய தேகத்தை,

வரிசைகெடாம லெடுமெனவோடி வந்திளமைந்தர்கு
னிந்துசுமந்து கடுகிநடந்து சுடலையடைந்து
மானிடவாழ்வென வாழ்வெனநொந்து—

(பொ - ரை) கிரமமாக எடுமென யாரு மோடிவந்து, பிள்ளைகள் குனிந்து தாங்கி விசையாகச் சென்று சுடுகாட்டினைச் சேர்ந்து, மனிதவாழ்வு இவ்வளவுதானோ என வருந்தி,

விறகிடமூடி யழல்கொடுபோட வெந்துவிழுந்துமு
றிந்துநிணங்க ளுருகியெலும்பு கருகியடங்கி
யோர்பிடிநீறுமி லாதவுடம்பை—
நம்புமடியேனை யினியாளுமே.— (1)

(பொ - ரை) விறகு அடுக்கி மறைத்து நெருப்பு மூட்டிவிட, உடல்வெந்து, பிணம் விழுந்து நொறுங்கி, கொழுப்பு உருகி, எலும்பு கறுத்துத் தீயடங்கி ஒரு பிடியளவு சாம்பல் ஆகாத தேகத்தினை நிலையென எண்ணும் அடியேனை இனி யாட்கொள்ள வேண்டும்.

உடற்கூற்றுவண்ணம்

முற்றுப்பெற்றன.



பத்திரகிரியார் அருளிச்செய்த

# மெய்ஞ்ஞானப்புலம்பலும்

தத்துவார்த்தவிளக்க உரையும்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பத்திரகிரியார் திருநட்சத்திர வெண்பா

ஓங்குதிரு வெண்காட் டேயடிகள் தண்ணருளைப்
பாங்குபெற வேபெற்ற பத்ரகிரி—யாங்கொளிபாய்ச்
சித்திரை மாமகத்திற் சேர்ந்தனனே மாமருதூர்க்
கத்த னருளிற் கலந்து.

---

பூவை - கலியாணசுந்தர முதலியார் இயற்றியது.

உ

திருச்சிற்றம்பலம்

பத்திரகிரியார்

# மெய்ஞ்ஞானப்புலம்பல் மூலமும்

## தத்துவார்த்தவிளக்க உரையும்

விநாயகர் வணக்கம்.

முத்திதரும் ஞான மொழியாம் புலம்பல்சொல்ல
அத்தி முகவன்றன் அருள்பெறுவ தெக்காலம்?

(பொ - ரை) ஆன்மாக்கள் மோக்ஷத்தினை யடைதற்கு ஏதுவாயும், ஞானசம்பந்தமாயுமுள்ள மெய்ஞ்ஞானப்புலம்பலாகிய இந்நூலினை (யான்) பாடுதற்கு யானைமுகத்தோடுங் கூடிய விநாயகமூர்த்தியின் திருவருளினை அடையப்பெறுவது எக்காலம்?

நூல்.

ஆங்கார முள்ளடக்கி, ஐம்புலனைச் சுட்டறுத்துத்,
தூங்காமற் றூங்கிச் சுகம்பெறுவ தெக்காலம்?

(பொ - ரை) அகங்கார தத்துவத்தினை யடங்கச்செய்து, பஞ்சேந்திரியங்களைக் கெடுத்துத், திருவருளினை முன்னிட்டு யோகநித்திரை செய்து, சிவானந்தம் அடைவது எப்போது? 1

நீங்காச் சிவயோக நித்திரைகொண் டேயிருந்து,
தேங்காக் கருணைவெள்ளந் தேக்குவது மெக்காலம்?

(போ - ரை) நீங்காத சிவராஜயோக சமாதி யடைந்து, தனும் பாத சிவானந்தவெள்ளம் என்னிடத்து நிறைவது எப்போது? 2

தேங்காக் கருணைவெள்ளந் தேக்கியிருந் துண்பதற்கு
வாங்காமல் விட்டகுறை வந்தடுப்ப தெக்காலம்?

(போ - ரை) முற்கூறிய கிருபாவெள்ளமானது நிறைந்து, அதனை அனுபவித்தற்குப் பூர்வசென்ம சேஷமானது என்னை யடுக்க அதனால் யான் இன்பம் அனுபவிப்பது எப்போது? 3

ஓயாக் கவலையினு ளுள்ளுடைந்து வாடாமல்,
மாயாப் பிறவி மயக்கறுப்ப தெக்காலம்?

(போ - ரை) ஒழியாத பிரபஞ்சக் கவலையினால் மனந்தளராது, மாயாகாரியத்தினால் உண்டாகும் சென்மத்தினால் விளையும் மயக்கத்தினை யொழிப்ப தெப்போது? 4

மாயாப் பிறவி மயக்கத்தை யூடறுத்துக்,
காயா புரிக்கோட்டை கைக்கொள்வ தெக்காலம்?

(போ - ரை) மாயாகாரிய பிறப்பினை யொழித்துத், தேகமாகிய கோட்டை நிலைபெறுமாறு காயசித்தியடைவ தெப்போது? 5

காயா புரிக்கோட்டை கைவசமாய்க் கொள்வதற்கு
மாயா வனுபூதி வந்தடுப்ப தெக்காலம்?

(போ - ரை) காயசித்தியினால் தேகத்தினை நிலைபெறச்செய்வதற்குச் சிவானுபூதி யுண்டாகப்பெறுவ தெப்போது? 6

சேயாய்ச் சமைந்து, செவிடூமை போற்றிரிந்து,
பேய்போ லிருந்துன் பிரமைகொள்வ தெக்காலம்?

(போ - ரை) இவ்வுலகில் புத்திரனாகப் பிறந்து, இந்திரியமில்லாதவனைப்போலச் செவிடனைப்போன்றும் ஊமையனைப்போன்றும்

சஞ்சரித்துப், பேய்பிடியுண்டான்போல இருந்து, தேவரீருடைய திருவருளினை அடையப்பெறுவது எப்போது? 7

பேய்போற் றிரிந்து, பிணம்போற் கிடந்துபெண்ணைத்
தாய்போ னினைத்துத், தவமுடிப்ப தெக்காலம்?

(போ - ரை) பேய்போலத் திரிந்து, நடைப்பிணம்போலுஞ் சஞ்சரித்து, எல்லா மாதர்களையும் தாய்மார்களாகக் கருதி, தவவிரதத்தினைப் பூர்த்திசெய்வ தெப்போது? 8

கால்காட்டிக், கைகாட்டிக், கண்கள் முகங்காட்டி,
மால்காட்டு மங்கையரை மறந்திருப்ப தெக்காலம்?

(போ - ரை) கால், கை, கண், முகம் என்னும் அங்கங்களைக் காட்டி, அவற்றால் மயக்கத்தினை யுண்டாக்கும் வேசியரை மறந்து திருவருள் மயமாகவிருப்பது எப்போது? 9

பெண்ணினல்லா ராசைப் பிரமையினை விட்டொழிந்து
கண்ணிரண்டு மூடிக் கலந்திருப்ப தெக்காலம்?

(போ - ரை) பெண்ணாசையை அறவேவிட்டு நீங்கி இரண்டு கண்களையும் மூடித் திருவருளினிற் கலந்து சுகித்திருப்ப தெப்போது?

வெட்டுண்ட புண்போல் விரிந்தவல்குற் பைதனிலே
தட்டுண்டு நிற்கை தவிர்வதுவு மெக்காலம்?

(போ - ரை) கத்தியினால் வெட்டுப்பட்ட புண்ணைப்போன்று பிளப்போடுங்கூடிய (மங்கையர்கள்) அல்குலினில் மயங்கும் மயக்க மொழியப்பெறுவது எப்போது? 11

ஆறாத புண்ணி லழுந்திக் கிடவாமல்
தேறாத சிந்தைதனைத் தேற்றுவது மெக்காலம்?

(போ - ரை) ஆறாத புண்ணையொத்த நிதம்பத்தி லழுந்தாமல் திருவருளினை ஆராயாத மனதை நன்னெறியினில் வைப்பதெப்போது? 12

தந்தை, தாய், மக்கள், சகோதரரும் பொய்யெனவே
சிந்தைதனிற் கண்டு திருக்கறுப்ப தெக்காலம்?

(போ - ரை) பிதா, மாதா, புத்திரர், சோதரர் ஆகிய சுற்றத்தினரை மாயாஜாலமென மனத்தினுல் உண்மையினை விசாரித்துத் தெளிந்து பிரபஞ்ச மயக்கொழிப்பது எப்போது? 13

மண்ணுயிரைக் கொன்று வதைத்துண் டுழலாமல்
தன்னுயிர்போ லெண்ணித் தவமுடிப்பதெக்காலம்?

(போ - ரை) ஜீவஜெந்துக்களைக் கொன்று தின்று வாழாமல் பிறவுயிரையெல்லாம் தன்னுயிர்போல எண்ணிக் கொல்லா விரதமாகிய தவத்தினை முடிக்கப்பெறுவ தெப்போது? 14

பாவியென்ற பேர்படைத்துப் பாழ்நரகில் வீழாமல்,
ஆவியென்ற சூத்திரத்தை யறிவதினி யெக்காலம்?

(போ - ரை) பாவியென்ற பெயரை வகித்துப் பாழாகிய நரகில் வீழ்ந்து வருந்தாமல், உயிர் உடலி னிலைத்துநின்ற இரகசியத்தினை யறிவ தெப்போது? 15

உளியிட்ட கல்லும், உருப்பிடித்த செஞ்சாந்தும்,
புளியிட்ட செம்பும், பொருளாவ தெக்காலம்?

(போ - ரை) சிலாவுருவம், சாந்தினு லமைந்த திருவுருவம், புளியினுல் சுத்தம் செய்யப்பெற்ற விக்கிரகம் ஆகிய இவைகளில் (சிவபெருமான் அதிட்டித்திருக்கும்) உண்மையினைக் கண்டுபிடிப்ப தெப்போது? 16

வேடிக்கை வுஞ்சொகுசு, மெய்ப்பகட்டும், பொய்ப்பகட்டும்,
வாடிக்கை யெல்லா மறந்திருப்ப தெக்காலம்?

(போ - ரை) பிரபஞ்ச வேடிக்கை, சொகுசாக நடத்தல், சரீரத்தை அலங்கரித்தல், பெரியோர்களைப்போன்று நடித்தல் ஆகிய உலகப் பகட்டனைத்து நீக்கி எவற்றினும் பற்றற்றிருப்ப தெப்போது?

பட்டுடை பொற்பணியும், பாவனையுந் தீவினையும்
விட்டுவிட்டுன் பாதம் விரும்புவது மெக்காலம்?

(போ - ரை) பட்டுடை தரித்தல், பொன்னாற் செய்யப்பெற்ற ஆபரணங்களை அணிந்து கொள்ளுதல், அன்னியரைப் போன்று நடித்தல், தீவினைசெய்தல் ஆகிய உலகபாவனை நீங்கி உன் திருவடியினை விரும்புவது எப்போது? 18

'ஆமை வருமாட்கண் டைந்தடக்கஞ் செய்தாற்போல்'
ஊமை யுருக்கொண் டொடுங்குவது மெக்காலம்?

(போ - ரை) ஆமையானது தன்னிடத்து நெருங்கு மனிதரைக் கண்டு நீரில் அடைந்து தனது உறுப்புக்களை யடக்குவதுபோலப் பஞ்சேந்திரியங்களை யொடுக்கி மவுனநிலையுற்று விவகார மற்றிருப்பது எப்போது? 19

தண்டிகையுஞ், சாவடியுஞ், சாளிகையு மாளிகையுங்,
கண்டு களிக்குங் கருத்தொழிவ தெக்காலம்?

(போ - ரை) பல்லக்கு, சத்திரம், பணப்பை, மாளிகை ஆகிய உலக பதார்த்தங்களைத் தனக்கு எப்போதும் சொந்தமென எண்ணிச் சந்தோஷிக்கும் எண்ண மொழிவ தெப்போது? 20

அத்த னிருப்பிடத்தை ஆராய்ந்து பார்த்துநிதஞ்
'செத்த சவம்போற்' றிரிவதினி யெக்காலம்?

(போ - ரை) சிவபெருமான் இருப்பிடத்தைச் சாஸ்திரங்களைக் கொண் டாராய்ந்து நடைப்பிணம்போலத் திரிவ தெப்போது? 21

ஒழிந்த தருமத்தினை வைத்துள்ளே ளும்புவெள்ளே ளும்பாய்க்
கழிந்தபிணம் போலிருந்து காண்பதினி யெக்காலம்?

(போ - ரை) சிவதருமங்களை ஆதாரமாகக்கொண்டு, (உடலின் கண்ணேயுள்ள) என்பானது வெளுத்த எலும்பாகிச் சவம்போன் றிருந்து வாழ்ந்து உனைத் தரிசிப்ப தெப்போது? 22

அற்பசுக மறந்தே யறிவையறி வாலறிந்து,
கெர்ப்பத்தில் வீழ்ந்துகொண்ட கோளறுப்ப தெக்காலம்?

(போ - ரை) சிற்றின்பத்தினை மறந்து, சிவபெருமானைத் திரு வருளை முன்னிட்டு அறிந்து, பிறப்பறுப்ப தெப்போது? 23

கருப்படுத்தி யென்னையமன் கைப்பிடித்துக் கொள்ளாமுன்
உருப்படுத்தி யாள வுடன்படுவ தெக்காலம்?

(போ - ரை) பிரமன் என்னை மனிதனுகப் பிறப்பித்து யான் உலகில் வாழ்ந்தபிறகு, இயமன் என்னைப் பிடிக்குமுன்பு சிவமாந் தன்மை செய்து ஆட்கொளல் எப்போது? 24

'தூண்டுவிளக்கனைய தொடர்ந்திருள்முன் சூழ்ந்தாற்போல்'
மாண்டு பிழைத்துவந்த வகைதெரிவ தெக்காலம்?

(போ - ரை) இருளும் ஒளியு மாறிமாறி வருவதுபோன்று அடிக்கடி மாறிமாறி வரும் பிறப்பிறப்பி னுண்மையினைத் தெரிந்து கொள்வ தெப்போது? 25

'தூரியினின் மீன்போற்' சுழன்றுமணம் வாடாமல்,
ஆரியனைத் தேடி யடிபணிவ தெக்காலம்?

(போ - ரை) வலையிற்பட்ட மீனைப்போலத் திரிந்து வாடாமல், குருநாதனைக் கண்டு வணங்குவ தெப்போது? 26

எண்ணு றுகமிருந்து மெய்தாத வீடுபெற
வெண்ணீறு பூசி விளங்குவது மெக்காலம்?

(பொ - ரை) (விபூதி யணியாது) அநேக யுகம் வாழ்வதைக் காட்டிலும் விபூதி யணிந்து மோட்ச வீட்டினில் வாழ்ந்திருப்பது எப்போது? 27

அவவேடம் பூண்டிங் கலைந்து திரியாமற்,
சிவவேடம் பூண்டு சிறந்திருப்ப தெக்காலம்?

(பொ - ரை) வீண் வேஷம் போட்டு வீணே திரியாமல் சிவ வேஷம் போட்டுச் சிறப்படைவது எப்போது? 28

அண்டருக்கா நஞ்சருந்தி அம்பலத்தி லாடுசிவன் [காலம்?
தொண்டருக்குத் தொண்டனெனத் தொண்டுசெய்வ தெக்

(பொ - ரை) தேவரின்பொருட்டு விடமுண்டு, தில்லைச் சிற்றம் பலத்திலே ஆனந்த நிர்த்தனம் செய்யும் நடராஜனுடைய அடியார்களுக்கு அடிமையென அவர்கட்கு அடிமையாவ தெப்போது? 29

பன்றி வடிவெடுத்துப் பாரிடந்து மால்காணுக்
குன்றில் விளக்கொளியைக் கூறுவது மெக்காலம்?

(பொ - ரை) பன்றி வடிவெடுத்து பூமியினை யகழ்ந்தும் திருமாலாற் காணப்பெறாத சோதிசொரூபமான திருவண்ணமலையைத் தோத்தரிப்பது எப்போது? 30

தித்திக்குந் தெள்ளமிர்தை, சித்தாந்தத் துட்பொருளை,
முத்திக்கு வித்தை, முதனினைப்ப தெக்காலம்?

(பொ - ரை) தித்திக்கும் தேவாமிர்தம்போன்றவனைச், சித்தாந்தத்திலே விளங்கும் உட்பொருளை, மோட்சத்திற்கு வித்தினை எத்தேவரினும் முதன்மையாகச் சிந்திப்ப தெப்போது? 31

வேதாந்த வேதமெல்லாம் விட்டொழிந்தே, நிட்டையிலே
ஏகாந்த மாக விருப்பதினி யெக்காலம்?

(பொ - ரை) பொதுவான வேதக்கருத்தை விட்டுச் (சிறப்பான) சிவாகமநிஷ்டை கூடித் தனித்திருப்ப தெப்போது? 32

மற்றிடத்தைத் தேடியென்றன் வாழ்நாளைப் போக்காமல்
உற்றிடத்தைத் தேடி யுறங்குவது மெக்காலம்?

(பொ - ரை) பகிர்முக விசாரணையால் எனது ஆயுள்நாளை வீணாகப் போக்காமல், அந்தர்முக விசாரணையால் யோகநித்திரை செய்வது எப்போது? 33

இன்றுள்ளோர் நாளை யிருப்பதுவும் பொய்யெனவே
மன்றுளோர் சொல்லும் வகையறிவ தெக்காலம்?

(பொ - ரை) இன்றிருப்பார் நாளை யிருப்பது நிச்சயமில்லை யென்னும் பெரியோர்கள் கூறும் வார்த்தையின் உண்மையினை யறியப்பெறுவ தெப்போது? 34

கஞ்சா வபினியுடன் கள்ளுண்டு வாடாமற்
பஞ்சா மிர்தம் பருகுவது மெக்காலம்?

(பொ - ரை) கஞ்சா, அபினி, கள் முதலிய உண்டு கெடாமல்; (சிவபெருமானுக்கு அபிடேகித்த) பஞ்சாமிர்தத்தினை உண்பது எப்போது? 35

செஞ்சலத்தி னூற்றிரண்ட ஜெனனமோக்ஷம் பெறவே
சஞ்சலத்தை விட்டுன் சரணடைவ தெக்காலம்?

(பொ - ரை) தாயின் கருப்பாசய ரத்தத்தினால் வடிவெடுத்த ஜன்மமானது நீங்கி மோட்சமடைய உலக சஞ்சலங்களை விடுத்துத் தேவரீர் திருவடிப்போதினை அடையப்பெறுவது எப்போது? 36

கும்பிக் கிரைதேடிக் கொடுப்பா ரிடந்தோறும்
வெம்பித் திரிகை விடுப்பதினி யெக்காலம்?

(போ - ரை) வயிற்றின் ஆகாரத்தின்பொருட்டுப் பிறரிடம் நாடி மனம் புழுங்கித் திரிதலை விடுவது எப்போது? 37

ஆடுகின்ற சூத்திரந்தா னறுமளவு மேதிரிந்து
போடுகின்ற நாள்வருமுன் போற்றுவது மெக்காலம்?

(போ - ரை) உலகத்தில் உலாவிவரும் இத்தேகமானது அழியு முன்னர்த் தேவரீரைத் துதிப்பது எப்போது? 38

நவசூத் திரவீட்டை நானென் றலையாமல்
சிவசூத் திரத்தைத் தெரிந்தறிவ தெக்காலம்?

(போ - ரை) நவத்துவாரங்களுடன் கூடிய தேகத்தின்மீது வைத்திருக்கும் தேகாபிமானத்தை விட்டுச் சிவஞானபோத சூத்திரத்தி னுண்மைப்பொருளினை யறியப்பெறுவது எப்போது? 39

மறந்து,மல சலங்கள் மாயும்புழுக் கூட்டைவிட்டுக்
கரந்துணடி யிணைக்கீழ்க் கலந்துநிற்ப தெக்காலம்?

(போ - ரை) அறிவு மயங்கி, மலசலம் தாமே கழிந்து இறந்து போகும் புழுக்களால் நிறையப்பெற்ற இத்தேகத்தினின்று நீங்கு முன்னமே தேவரீரது திருவடியிற் கலப்பது எப்போது? 40

இம்மைதனிற் பாதகனா யிருவினைக்கீ டாயெடுத்த
பொம்மைதனைப் போட்டுன்னைப் போற்றிநிற்ப தெக்காலம்?

(போ - ரை) இப்பிறப்பில் பாதகத்தையே மிகுதியு மியற்றிப் பாவியானமையால் இருவினைக்கீடாக எடுத்துள்ள பொய்யுடலை யொழித்து உன்னைப் போற்றுவ தெப்போது? 41

உப்பிட்ட பாண்ட முடைந்துகருக் கொள்ளுமுன்னே
அப்பிட்ட வேணியனுக் காட்படுவ தெக்காலம்?

(பொ - ரை) உப்பிட்ட பாண்டத்தினை யொத்த உடலழிந்து மீண்டும் பிறவியெடுக்குமுன்னர் கங்காதரமூர்த்தியாகிய சிவபெருமானுக்கு அடிமையாவது எப்போது? 42

சேவை புரிந்து, சிவரூபக் காட்சிகண்டு,
பாவைதனைக் கழித்துப் பயனடைவ தெக்காலம்?

(பொ - ரை) ஆலய வழிபாடு செய்து, சிவலிங்கப்பெருமான் திருவுருவத்தினை தரிசித்து, மாதர் மயக்கத்தினின்று நீங்கி மோட்சமடைவ தெப்போது? 43

'காண்டத்தை வாங்கிக் கருமேக மீண்டதுபோல்,'
பாண்டத்தை நீக்கிப் பரமடைவ தெக்காலம்?

(பொ - ரை) உவர்நீரை யுண்டு சுத்தநீரைக் கரிய மேகம் நன்னீராகப் பொழிவதுபோன்ற, தேகத்தினின்றும் மலத்துடன் சம்பந்தப்பட்ட உயிர் நீங்கப்பெற்றுத் திருவருளை யடையப்பெறுவது எப்போது? 44

சோற்றுத் துருத்திதனைச் சுமந்தலைந்து வாடாமல்
ஊத்தைச் சடம்போட் டுனையடைவ தெக்காலம்?

(பொ - ரை) சோற்றினை யடைத்துவைக்கும் பையாகிய உடலைத் தாங்கி வருத்த முறாமல், நாற்றத்தோடும் கூடிய அச்சடலத்தை விட்டு தேவரீரை யடையப்பெறுவ தெப்போது? 45

தொடக்கைச் சதமெனவே சுமந்தலைந்து வாடாமல்
உடக்கை கழற்றி உனையறிவ தெக்காலம்?

(போ - ரை) தேகத்தை நிச்சயமென்று கருதிச் சுமந்து வாடாமல், தத்துவங்களைக் கழன்று உன்னைத் தெரிந்துகொள்வ தெப்போது? 46

ஆசைவலைப் பாசத் தகப்பட்டு மாயாமல்
ஓசைமணித் தீபத்தி லொன்றிநிற்ப தெக்காலம்?

(போ - ரை) பிரபஞ்ச ஆசையாகிய மாயவலையில் சிக்காமல், நாததத்துவத்திலே தோன்றும் சோதியில் இரண்டறக் கலப்பது எப்போது? 47

கூறரிய நால்வேதங் கூப்பிட்டுங் காணாத
பார ரகசியத்தைப் பார்த்திருப்ப தெக்காலம்?

(போ - ரை) சொல்லுதற்கு அருமையான நான்கு வேதங்கள் முறையிட்டும் அவற்றால் அறியப்படாத பெரிதும் இரகசியப்பொருளாகிய சிவபெருமானைத் தரிசித்துக்கொண்டிருப்ப தெப்போது? 48

புல்லாய், விலங்காய்ப், புழுவாய், நரவடிவாய்,
எல்லாப் பிறப்பி னிருளகல்வ தெக்காலம்?

(போ - ரை) புல்லாகியும், விலங்காகியும், புழுவாகியும், மனித வடிவாகியும், மற்றும் பற்பலவகையான பிறப்புக்களிலேயும் பிறக்கின்ற தன்மையாகிய ஆணவவிருள் நீங்குவ தெப்போது? 49

தக்கும்வகைக் கோர்பொருளும் சாராம லேகினைவில்
பக்குவம்வந் துன்னருளைப் பார்த்திருப்ப தெக்காலம்?

(போ - ரை) பிரபஞ்ச சம்பந்தமான பொருளின்கண் பற்று வைக்காமல், அறிவின்கண்ணே இருவினையொப்படைந்து பற்றின்றித் (தேவரீர்) திருவருளைத் தரிசித்துக்கொண் டிருப்பது எப்போது? 50

பருவத் தலைவரோடும் புல்கியின்பம் கொள்வதற்குத்
தெரிவைப் பருவம்வந்து சிக்குவது மெக்காலம்?

(போ - ரை) முதல்வனுடன் கலந்து பேரின்ப மடைவதன் பொருட்டுத் தெரிவையைப்போன்ற பரிபக்குவ வயது அடைவ தெப்பொழுது? 51

தெரிவையுறும் பக்குவத்தின் சீராட்டெல் லாமறிந்து
குருவையறிந் தேனினைத்துக் கும்பிடுவ தெக்காலம்?

(போ - ரை) தெரிவைப் பெண் தன்னுடைய வயதில் உலகத்தின் சிறப்பனைத்தும் அறிந்து அனுபவிப்பது போன்று, எனது பரிபக்குவகாலத்தில் திருவருளை யனுபவித்துக் குருநாதனை விசாரித்தறிந்து தியானித்து வணங்குவது எப்போது? 52

வம்படிக்கு மாதருடன் வாழ்ந்தாலு 'மன்னுபுளி
யம்பழமு மோடும்போ' லாவதினி யெக்காலம்?

(போ - ரை) உபத்திரவத்தினை யுண்டாக்கும் மாதருடன் கூடியிருக்கினும், புளியம்பழமும் அதனோடும்போலப் பற்றற்று வாழ்ந்திருப்பது எப்போது? 53

'பற்றற்று நீரிற் படர்தா மரையிலைபோல்'
சுற்றத்தை நீக்கிமனந் தூரநிற்ப தெக்காலம்?

(போ - ரை) பிரபஞ்ச சம்பந்தமான பொருள்களினிடத்து ஆசை நீங்கப்பெற்று, தாமரை யிலையானது நீரில் ததும்பிக்கொண்டிருந்தும் அந்நீரின் பற்றற்று இருப்பதுபோலச் சுற்றத்தாரினின்று நீங்கி மனம் தாக்குதலற்று வாழ்வ தெப்போது? 54

சல்லாப லீலையிலே தன்மனைவி செய்தசுகம்
சொல்லாரக் கண்டெனக்குச் சொல்வதினி யெக்காலம்?

(போ - ரை) சரசத்தோடுங் கூடிய கலவிக்காலத்துத் தனது மனைவியினிடத்து, அடைந்த கலவி சுகத்தைப்போன்று திருவருட் கலப்பினு லுண்டாகும் பேரின்ப சுகத்தை அடியேனுக்கு எடுத்துச் சொல்வது எப்போது? 55

'மருவ வயற்புருடன் வருநேரங் காணுமல்
உருகுமனம் போ'லெனுள முருகுவது மெக்காலம்?

(போ - ரை) கள்ளநாயகனைக் காணுது உருகும் காரிகையைப் போலத் தேவரீரினிடத்து மனம் கசிவதெனக் கெப்போது? 56

'தன்கணவன் றன்சுகத்திற் றன்மனம்வே றனதுபோல்,'
என்கருத்தி லுன்பதத்தை யேற்றுவது மெக்காலம்?

(போ - ரை) சொந்த நாயகன் சையோகத்தில் வேறு இஷ்ட நாயகனிடத்துச் செல்லுமனம்போலப், பிரபஞ்சபோகத்தி லிருக்கிற போதும் என் மனத்தின்கண் தேவரீருடைய திருவடியைத் தியானித்துப் போற்றுவது எப்போது? 57

'கூடிப் பிரிந்துவிட்ட கொம்பனையைக் காணுமல்
தேடித் தவிப்பவன்போல்' சிந்தைவைப்ப தெக்காலம்?

(போ - ரை) வெகு காலமாகக் கூடியிருந்து திடீரெனப் பிரிந்த தனது மனைவியைக் காணுது எங்கும் தேடி வருந்துவதுபோன்று தேவரீரிடத்து மனம் வைப்பது எப்போது? 58

'எவ்வனத்தின் மோகம் எப்படியுண் டப்படிபோல்'
கவ்வனத் தியானம் கருத்துவைப்ப தெக்காலம்?

(போ - ரை) யௌவன வயதுடைய மாதரிடத்துண்டாகும் மோகம்போல, மனத்தியானத்தில் பரமனை நெஞ்சில் வைப்பது எப்போது? 59

கண்ணு லருவி கசிந்துமுத்துப் போலுதிரச்
சொன்ன பரம்பொருளைத் தொகுத்தறிவ தெக்காலம்?

(போ - ரை) கண்ணீரும் கம்பலையுமாக அதாவது கண்களி ஞல் ஆனந்தக் கண்ணீரானது அருவியினைப் போன்று கசியப் பெற்று முத்தினைப்போன்று சிந்த, சிவபரம்பொருளை யாராய்ந்தறிவ தெப்போது? 60

ஆக மிகவுருக, அன்புருக, என்புருகப்,
போக வனுபூதி பொருந்துவது மெக்காலம்?

(போ - ரை) உடல் புளகிக்க, அன்பு மேலிட, என்பு நெக் குருகச் சிவானுபூதி நிலையினைப் பொருந்துவது எப்போது? 61

'நீரிற் குமிழிபோ னிலையற்ற வாழ்வை,விட்டுன்
பேரிற் கருணைவெள்ளம் பெருக்கெடுப்ப தெக்காலம்?

(போ - ரை) நீர்க்குமிழியை யொத்த நிலையற்ற வாழ்வை வெறுத்து தேவரீர்மீது சிவானந்த வெள்ளம் என்னிடத்துத் ததும்பு வது எப்போது? 62

அன்பை யுருக்கி, அறிவையதன் மேற்புகட்டித்,
துன்பவலைப் பாசத் தொடக்கறுப்ப தெக்காலம்?

(போ - ரை) அன்பைப் பெருக்கி, அதன்வழியே யறிவைச் செலுத்தி, மாயாவலையின் சம்பந்தத்தை யொழித்துக்கொள்வ தெப்போது? 63

கருவின் வழியறிந்து கருத்தைச் செலுத்தாமல்
அருவி விழிசொரிய அன்புவைப்ப தெக்காலம்?

(போ - ரை) பிறப்பினுக்கு ஆதாரமாயுள்ள நெறியினைக் கண்டு அதன் வழியே மனத்தைச் செலுத்தாமல் கண்களினின்றும் ஆனந்த

நீரானது அருவியினைப்போன்று பொழிய, தேவரீரிடத்து ஆனந்த அன்பு பூணுவ தெப்போது? 64

தெளியத் தெளியத் தெளிந்தசிவா னந்தத்தேன்
பொழியப் பொழியமனம் பூண்டிருப்ப தெக்காலம்?

(போ - ரை) மனந்தெளிந்து சிவானந்தத் தேனுண்டு சுகிப்ப தெப்போது? 65

ஆதார மூலத் தடியிற் கணபதியைப்
பாதார விந்தம் பணிந்துநிற்ப தெக்காலம்?

(போ - ரை.) முக்கோண வடிவமாகிய மூலாதாரத்தின் மத்தியி லெழுந்தருளி யிருக்கும் கணபதியின் திருவடித்தாமரைகளைப் பணிவ தெப்போது? 66

மண்வளைந்த நற்கீற்றில் வனைந்திருந்த வேதாவைக்,
கண்வளைந்து பார்த்துள்ளே கண்டிருப்ப தெக்காலம்?

(போ - ரை) நாற்கோண வடிவத்தோடுங் கூடிய சுவாதிட்டா னத்தின் மத்தியில் எழுந்தருளிருக்கும் பிரமாவை, உள்ளே கண்டு தரிசித்து மனமகிழ்ந்திருப்ப தெப்போது? 67

அப்புப் பிறைநடுவே யமர்ந்திருந்த விட்டுணுவை,
உப்புக் குடுக்கையுள்ளே யுணர்ந்தறிவ தெக்காலம்?

(போ - ரை) மூன்றாம் பிறைபோன்ற மணிபூரகத்தின் மத்தி யில் எழுந்தருளியிருக்கும் விட்டுணுவை, உப்புக் குடுக்கைபோன்ற தேகத்தினுள்ளே தெரிந்துகொள்வ தெப்போது? 68

மூன்று வளையமிட்டு முனைத்தெழுந்த கோணத்தில்
தோன்று முருத்திரனைத் தொழுதுநிற்ப தெக்காலம்?

(போ - ரை) முக்கோண வடிவாகிய அனுகதத்தின் நடுவில் எழுந்தருளியிருக்கும் உருத்திரமூர்த்தியைத் தொழுவ தெப்போது?

வாயுவறு கோணமதில் வாழு மகேச்சுரனைத்,
தோயும் வகைகேட்கத் தொடங்குவது மெக்காலம்?

(போ -ரை) அறுகோண வடிவாயுள்ள விசுத்தியின் மத்தியில் எழுந்தருளியிருக்கும் மகேச்சுரனைத் தரிசித்து அவனுடன் கலக்கும் வழியை ஆராய்ந்து தொடங்குவது எப்போது? 70

வட்ட வழிக்குள்ளே மருவுஞ் சதாசிவத்தைக்
கிட்டவழி தேடக் கிருபைசெய்வ தெக்காலம்?

(போ - ரை) வட்டவடிவாகிய ஆஞ்ஞையின் நடுவில் எழுந்தருளியிருக்கும் சதாசிவத்தினைத் தேடிக் கிருபையடைவ தெப்போது? 71

உச்சிக் கிடைநடுவே யோங்கு குருபதத்தை
நிச்சயித்துக் கொண்டிருந்து நேர்வ தினி யெக்காலம்?

(போ - ரை) ஆறு தாரங்களுக்கும் மேற்பட்டிராநின்ற உச்சியில் விளங்கும் குருவின் திருவடியை மனத்தில் தியானித்துக்கொண் டிருந்து பொருந்துவ தெப்போது? 72

பாராகிப் பார்மீதிற் பஞ்சவர்னந் தானாகி
வேராகி நீமுளைத்த வித்தறிவ தெக்காலம்?

(போ - ரை) பிருதுவியாகியும், அதுமுதல் ஐம்பூதமாகியும், அவற்றையும் கடந்து வேறுபொருளாகியும் தேவரீர் உதித்துள்ள தன்மையினை யறிவ தெப்போது? 73

கட்டறுக்க வொண்ணாக் கருவிகர ணாதியெல்லாஞ்
சுட்டறுத்து நிட்டையிலே தூங்குவது மெக்காலம்?

(போ - ரை) பிரித்தற் கியலாத புறக் கருவிகளையும், அந்தக் கரண முதலியவைகளின் சேஷ்டைகளையு மொடுக்கிச், சிவயோக நிட்டையிலே கூடியிருப்ப தெப்போது? 74

கள்ளக் கருத்தையெல்லாங் கட்டோடு வேரறுத்திங்
குள்ளக் கருத்தை யுணர்ந்திருப்ப தெக்காலம்?

(போ - ரை) வஞ்சகத்தோடுங் கூடிய எண்ணங்களை யெல்லாம் அடியோடு ஒழித்துச் சத்தியக் கருத்தை யறிந்து வாழ்வ தெப்போது? 75

அட்டகா சஞ்செலுத்து மவத்தைச் சடலத்துடனே
பட்டபா டத்தனையும் பகுத்தறிவ தெக்காலம்?

(போ - ரை) வீணான அட்டகாசங்களைச் செலுத்திக்கொண் டிருந்த துன்பத்திற்கு ஏதுவான சரீரத்திலிருந்து அநுபவித்த துன்பங்களை ஆராய்ந்துபார்த்து உண்மையறிவது எப்போது? 76

அறிவுக் கருவியுட னவத்தைபடும் பாட்டையெல்லாம்
பிறியவுட னிருத்திப் பெலப்படுவ தெக்காலம்?

(போ - ரை) அறிதற்கு ஏதுவாயுள்ள தத்துவங்களுடன் துன்பங்களை அநுபவிக்கும் செயல்களையெல்லாம் ஒழித்து திருவருளில் நிலைபெறச் செய்து ஆதாரப்படுவது எப்போது? 77

பூதம் பொறிகரணம் போந்தவிந்து நாதமுமாய்ப்
பேதம் பலவிதமும் பிறித்தறிவ தெக்காலம்?

(போ - ரை) ஐம்பூதம், ஐம்பொறி, நாற்கரணம், விந்து நாதம் முதலியவாகப் பேதப்பட்ட அனைத்தையும் வெவ்வேறாகப் பகுத்தறிந்து உண்மையினை அறிவ தெப்போது? 78

தோன்றாசை மூன்றுந் தொடர்ந்துவந்து சுற்றாமல்,
ஊன்றாசை வேரையடி யூடறுப்ப தெக்காலம்?

(போ - ரை) மண், பெண், பொன் ஆகிய மூன்று ஆசைகளும் தொடர்ந்துவந்து சூழ்ந்துகொள்ளாமல், ஷெ ஆசைகள் உண்டாதற்கு ஏதுவாயுள்ள அராகமென்னும் தத்துவத்தின் அடியினை முற்றும் ஒழிப்ப தெப்போது? 79

புன்சனனம் போற்றுமுன்னே புரிவட்டம் போகிவினி
என்சனனம் மீண்டேறு மென்றறிவ தெக்காலம்?

(போ - ரை) தூலதேகமுள்ளபோதே சிவபெருமானைத் துதி செய்வதற்கு முன்னர் சூக்குமதேகம் நீங்கிவிடின் இனி எந்த ஜென் மத்தினைக்கொண்டு அருளடைவதெனத் தெரிவ தெப்போது? 80

நட்ட நடுவினின்று நற்றிரோ தாயியருள்
கிட்டவழி காட்டிக் கிருபைசெய்வ தெக்காலம்?

(போ - ரை) ஆன்மாவின் இருதயத்திலேயிருந்து பின்னர் அருளை விளக்கும் நல்ல திரோதாயி என்னும் சத்தியானது சிவ பெருமானை யடையப்பெறும் திருநெறியினைக் காட்டித் தெளிவித் துக் கிருபைசெய்வ தெப்போது? 81

நானேநா னென்றிருந்தேன்; நடுவினிற் கட்டழகி
தானே வெளிப்படுத்தித் தருவனென்ப தெக்காலம்?

(போ - ரை) ஆன்மாவாகிய நானே பிரமமென்றிருந்தேன். அப்போது என்னுடைய இருதயத்தில் திருவருட்சத்தியானது வெளிப்பட்டு அருள்மயமான முதல்வனை கூட்டிவைப்பன் என்பது எப்போது? 82

அடர்ந்த மனக்காட்டை யஞ்செழுத்தாம் வாளாலே
தொடர்ந்து தொடர்ந்து வெட்டிச் சுடுவதினி யெக்காலம்?

(போ - ரை) என்னை நெருங்கிச் சூழ்ந்துள்ள அஞ்ஞானத்தோடும்கூடிய மனமாகிய வனத்தினைப் பஞ்சாக்கரம் என்னும் வாளால் அடிக்கடி வெட்டி மீண்டும் தலையெடாதபடி சிவத்தியானத்தினால் கொளுத்துவ தெப்போது? 83

ஐந்து பொறிவழிபோ யலைந்துமிந்தப் பாழ்மனதை
வெந்துவிழப் பார்த்து விழிப்பதினி யெக்காலம்?

(போ - ரை) பஞ்சேந்திரியங்களின் வழியே சென்று அலையும் இந்த பாழாகிய மனத்தை யடக்கித் திருவருளில் விழித்திருப்பது எப்போது? 84

இனமாண்டு, சேர்ந்திருந்தோ ரெல்லோருந் தான்மாண்டு,
சினமாண்டு போகவருள் சேர்ந்திருப்ப தெக்காலம்?

(போ - ரை) பிரபஞ்ச சம்பந்தமான இனத்தாரெல்லாம் மாண்டொழிய, என்னோடு சேர்ந்திருந்த தத்துவக் கூட்டங்களெல்லாம் ஒடுங்க, கோபமுங் கெட்டுப்போகத் திருவருளிற் கலந்திருப்ப தெப்போது? 85

அமையா மனதமையு மானந்த வீடுகண்டங்
கிமையாம னோக்கி யிருப்பதினி யெக்காலம்?

(போ - ரை) எக்காலத்தும் ஒடுங்காத மனம் சிவானந்த வீட்டைக் கண்டு இமையாது தரிசித்து வாழ்ந்து கொண்டிருத்த லெப்போது? 86

'கூண்டுவிடுஞ் சீவன்வெள்ளக் கொட்டாவி கொண்டாற்போ
மாண்டுவிடு முன்னேனுன் மாண்டிருப்ப தெக்காலம்? [ல்'

(போ - ரை) தேகத்தை விட்டு உயிர் நீங்குமுன்னம் ஜீவனு னது மெதுவாகக் கொட்டாவிவிடுவது போன்று, யான் என்னுடைய தேகத்தைவிட்டுப் புறப்பட்டு வெளியே போகுமுன் தேகசேஷ் டையை யொழித்து என்னை மறந்திருப்ப தெப்போது? 87

ஊனிறைந்த காய முயிரிழந்து போகுமுன்னம்
நானிறந்து போகவினி நாள்வருவ தெக்காலம்?

(போ - ரை) மாமிசத்தோடுங் கூடிய தேகத்தினின்றும் உயிர் நீங்குமுன்னர் யான் அகங்காரமற்று வாழ்நாள் அடைவ தெப்போது?

கெட்டுவிடு மாந்தர் கெர்விதங்கள் பேசிவந்து
சுட்டுவிடு முன்னென்னைச் சுட்டிருப்ப தெக்காலம்?

(போ - ரை) வீணே காலங்கழித்துக் கெடுகின்ற மனிதர் இறுமாப்பான வார்த்தைகளைப் பேசிக்கொண்டு வந்து என்னைக் கொளுத்திவிடு முன்னர், நான் அந்தர்முகமாக என்னுள்ளே குறித்து நோக்கிக்கொண்டிருப்ப தெப்போது? 89

தோலேணி வைத்தேறித் தூரநடந் தெய்க்காமல்,
நூலேணி வைத்தேறி நோக்குவது மெக்காலம்?

(போ - ரை) உடலாகிய ஏணியினை யாதாரமாகக் கொண்டு பலதேயஞ் சஞ்சரித்து இளைக்காமல் சாஸ்திரமாகிய ஏணியினை மூலமாகக்கொண்டு திருவருளைத் தரிசிப்ப தெப்போது? 90

வாயோடு கண்மூடி மயக்கமுற்று நில்லாமல்,
தாயோடு கண்மூடி தழுவிநிற்ப தெக்காலம்?

(போ - ரை) வாயையும் கண்ணையுமாத்திரம் மூடிக்கொண்டு மனம் அடங்காததினால் மயக்கமுற்று வாழாமல், திருவருட்சத்தி யுடன் அறிவாகிய கண் மூடி அருளை யநுபவிப்ப தெப்போது? 91

காசினியெ லாநடந்து காலோய்ந்து போகாமல்
வாசிதனி லேறி வருவதினி யெக்காலம்?

(பொ - ரை) நான் இந்த உலகமனைத்தும் நடந்து அதனால் காலோய்ந்து வாடாமல் வாசியினையடக்கி வாழுவ தெப்போது? 92

ஒலிபடரும் குண்டலியை யுன்னியுணர் வாலெழுப்பிச்
சுழுமுனையின் ருள்திறந்து தூண்டுவது மெக்காலம்?

(பொ - ரை) நாதமாத்திரையாக விளங்காநின்ற சுத்த மாயா ரூபமாகிய குண்டலிசத்தியைத் தியானித்து, அறிவைக்கொண்டு உயர எழச்செய்து அது சுழுமுனைவரையில் சென்று, ஆங்கு மறைவு நீங்கப்பெற்றுத் திருவருளைத் தரிசிப்ப தெப்போது? 93

இடைபிங் கலைநடுவே யியங்குஞ் சுழுமுனையில்
தடையறவே நின்று சலித்திருப்ப தெக்காலம்?

(பொ - ரை) இடைகலை, பிங்கலையாகிய இருகலைகளுக்கும் நடுவே நின்று விளங்கும் சுழுமுனைநாடியில் சுவாச மிரண்டினையும் விடாது உள்ளே யிழுத்து அசைவற்றிருப்ப தெப்போது? 94

மூல நெருப்பைவிட்டு மூட்டிநிலா மண்டபத்தில்
பாலை யிறக்கியுண்டு பசியொழிவ தெக்காலம்?

(பொ - ரை) மூலாதாரத்திலுள்ள அக்கினியை யெழுப்பிச் சந்திரமண்டலத்தைத் தாக்கும்படிசெய்து அந்நிலாவினிடத்தினின்றும் அமுதத்தினை யிறக்கச்செய்து உண்டு பசிதீர்ந்திருப்பது எப்போது? 95

ஆக வெளிக்குள்ளே யடங்காப்புரவி செல்ல
ஏக வெளியி லிருப்பதினி யெக்காலம்?

(போ - ரை) தேகத்தினுள் இருதயாகாயத்திலிருந்து வாசியாகிய குதிரையானது வெளியே போகாதபடியிருந்து உள்ளே செல்லச் சிதாகாய தரிசனஞ் செய்வ தெப்போது? 96

பஞ்சரித்துப் பேசும் பலகலைக்கெட் டாப்பொருளில்
சஞ்சரித்து வாழ்ந்து தவம்பெறுவ தெக்காலம்?

(போ - ரை) சொற்சாலங்களால் விஸ்தாரமாகப் பேசும் பல வகையாயுள்ள நூல்கட்கு மெட்டாத உண்மைப்பொருளாகிய திருவருளில் கலந்து வாழ்ந்து தவமடைவது எப்போது? 97

மலமுஞ் சலமுமற்று, மாயையற்று, மானமற்று,
நலமுங் குலமுமற்று, நானிருப்ப தெக்காலம்?

(போ - ரை) மலம், சலம், மாயை, மானம், நலம், குலம் ஆகிய தேகசேஷ்டைகளும் தேகாபிமானமும் அறவே யொழித்து நான் தனித்திருக்கப்பெறுவது எப்போது? 98

ஓடாம லோடி யுலகைவலம் வந்துசுற்றித்
தேடாம லென்னிடமாய்த் தெரிசிப்ப தெக்காலம்?

(போ - ரை) அன்போடுங் கூடி யாத்திரை செய்யாமல், வேடிக்கையார்த்தமாகத் தலயாத்திரை செய்து பூமிமுழுதும் சுற்றி முதல்வனை நாடாமல், எனது சிதாகாயத்திலே முதல்வனைத் தரிசிப்ப தெப்போது? 99

அஞ்ஞானம் விட்டே, யருண்ஞானத் தெல்லைதொட்டு,
மெய்ஞ்ஞான வீடுபெற்று, வெளிப்படுவ தெக்காலம்?

(போ - ரை) பிரபஞ்சப்பற்றாகிய அஞ்ஞானம் நீங்கப்பெற்று, அருண்ஞான மேலிட்டு, மெய்ஞ்ஞானத்தைப் பயப்பிக்கும் மோக்ஷ சாம்பிராஜ்ஜியத்தினை யடையப்பெறுவ தெப்போது? 100

வெல்லுமட்டும் பார்த்து, வெகுளியெலாம் விட்டகன்று,
செல்லுமட்டுஞ் சிந்தை செலுத்துவது மெக்காலம்?

(போ - ரை) தத்துவங்களைச் செயிக்கும் வரையில் செயித்துக் கோபமெலலாம் நீங்கப்பெற்று, திருவருளினை அடையும் வரையில் மனத்தை விடுவ தெப்போது? 101

மேலாம் பதந்தேடி, மெய்ப்பொருளை யுள்ளிருத்தி,
நாலாம் பதந்தேடி, நான்பெறுவ தெக்காலம்?

(போ - ரை) திருவருளை விசாரித்து, முதல்வனை மனத்திருத்திச், சிவசாயுச்சியத்தினை நாடி அதனை யான் அடைவ தெப்போது?

எண்ணாத தூரமெல்லா மெண்ணியெண்ணிப் பாராமல்,
'கண்ணாடிக்குள் ளொளிபோற்' கண்டறிவ தெக்காலம்?

(போ - ரை) அறிவிற்கு அதிதூரமாக இருக்கும் சாஸ்திரங்களைக் கொண்டு வீணே சிந்திக்காமல், கண்ணாடிக்குள் ஒளியினைப் போல மனத்தினிடத்தே சந்தேகமின்றித் தெரிசிப்ப தெப்போது?

என்னை யறிந்துகொண்டே யெங்கோமா னோடிருக்கும்
தன்மை யறிந்து சமைந்திருப்ப தெக்காலம்?

(போ - ரை) என்னுடைய தன்மையை அதாவது ஆன்மாவைத் தரிசித்து, பரமான்மாவுடன் கலந்திருக்கும் தன்மையினைத் தெரிந்து அங்ஙனமே ஐக்கியமாயிருக்கும் நிலைமையினை யடைத லெப்போது?

ஆறாதாரங் கடந்த வானந்தப் பேரொளியை
வேறாகக் கண்டுநான் பெற்றிருப்ப தெக்காலம்?

(போ - ரை) ஆறு ஆதாரங்களையும் கடந்த சிவானந்த சொரூபமாயுள்ள அருட்பெருஞ் சோதியை யான் அடையக்கூடிய பாக்கியமாகத் தரிசித்து அதனை அடையப்பெறுவ தெப்போது? 105

ஆணவ மாயத்தா லழிந்துடலம் போகாமுன்
காணுதலா லின்பமுற்றுக் கண்டறிவ தெக்காலம்?

(போ - ரை) ஆணவ மலத்தா லுடலழியு முன்னர் சிவதரிசனத்தால் பேரின்ப மடைந்து உண்மை தெரிந்துகொள்வது எப்போது? 106

மும்மலமுஞ் சேர்ந்து முளைத்தெழுந்த காயமிதை
நிர்மலமாய்க் கண்டுவினை நீங்கிருப்ப தெக்காலம்?

(போ - ரை) ஆணவம், காமியம், மாயை ஆகிய மும்மலம் சேர்ந்ததால் உண்டாகிய இச் சரீரத்தைப் பரிசுத்தமாக்கி அதாவது சீவகரணங்களைச் சிவகரணங்களாக்கி நிர்ம்மலமடைத லெப்போது?

முன்னை வினைகெடவே, மூன்றுவகைக் காட்சியினால்
உன்னை வெளிப்படுத்தி யுறுவதினி யெக்காலம்?

(போ - ரை) பிராரத்துவ நீங்கத், தத்துவதரிசனம் ஆன்மதரிசனம் சிவதரிசனம் ஆகிய மூன்றுவகைக் காட்சியினால் தேவரீரைத் தரிசிப்ப தெப்போது? 108

கண்ணினொளி பாய்ந்ததுவுங், கருத்தறிந்து கொண்டதுவும்
விண்ணினொளி கண்டதுவும், வெளிப்படுவ தெக்காலம்?

(போ - ரை) கண்ணினிடமாகச் சிற்றொளியானது பாவியிருப்பதையும், மனமானது விஷயங்களைத் தெரிந்துகொண்டதையும்.

ஆகாயத்தில் அருட்சோதியைத் தரிசித்ததுவும் ஆகிய இவற்றி னுண்மை எனக்கு வெளிப்படுவ தெப்போது? 109

கனவுகண்டாற் போலெனக்குக் காட்டிமறைத் தேயிருந்த
நினைவைப் பரவெளிமேல் நிறுத்துவது மெக்காலம்?

(போ - ரை) கனவு கண்டு உடனே அதனை மறந்துவிடுந் தன்மைபோல், அடியேனுக்குத் திருவருளினை வெளிப்படுத்தி, அதனை மறந்திருத்தற் கேதுவாகிய நினைவை அங்ஙனம் மறவாது சதா சிதாகாயத்துறுவ தெப்போது? 110

ஆரென்று கேட்டதுவும், அறிவுவந்து கண்டதுவும்,
பாரென்று சொன்னதுவும், பகுத்தறிவ தெக்காலம்?

(போ - ரை) தத்துவ விசாரணை செய்துகொண்டே போனதும், விசாரணை முடிவில் ஆன்ம தரிசனம் செய்ததும், அவ்வான்மா தனக்கு அன்னியமாக முதல்வன் ஒருவனுளன், அவனைத் தரிசிப்பாயாக என்று கூறிய உண்மையினைப் பகுத்தறிவ தெப்போது? 111

நினைக்கு நினைவுதொறுநுமாகிய நிறைந்தபரி பூரணத்தை
முனைக்குமேற் கண்டுகண்ணில் முளைத்தெழுப்பதெக்காலம்

(போ - ரை) நினைவில் வியாபகமான சிவத்தைச் சுழுமுனைக்கு மேலே தரிசித்து, ஞானக்கண்ணில் தோன்றுமாறு தரிசிப்ப தெப்போது? 112

முப்பாழும் பாழாய், முதற்பாழுஞ் சூனியமாய்,
அப்பாழும் பாழா யன்புசெய்வ தெக்காலம்?

(போ - ரை) பிரகிருதி, அசுத்தமாயை, சுத்தமாயை, விந்து நாதம் முதலியவற்றைச் சூனியமாக்கிச் சிவத்திற்கு அன்பு செய்வ தெப்போது? 113

சீயென் றெழுந்து தெளிந்துநின்ற வான்பொருளை
நீயென்று கண்டு நிலைபெறுவ தெக்காலம்?

(போ - ரை) பிரபஞ்சத்தைச் சீயென வெறுத்து, மனத்துதித்த உயர்ந்த பரம்பொருளைச் சிவமென அறிந்து திடமுறுவது எப்போது? 114

வவ்வெழுத்து மவ்வெழுத்தும் வாளாகுஞ் சிவ்வெழுத்தும்
யவ்வெழுத்தி னுள்ளே யடங்கிநிற்ப தெக்காலம்?

(போ - ரை) சத்தி எழுத்தினையும், மல எழுத்தினையும், அஞ்ஞானத்திற்கு வாளாயுதம் போன்றுள்ள சிகர வெழுத்தினையும், ஆன்ம சொரூபமாகிய யகரவெழுத்தி லடக்கி நிற்குந் தன்மை எனக்குத் தோன்றப்பெறுவ தெப்போது? 115

எழுத்தெல்லா மாண்டிறந்தே யேகமாய் நின்றதிலே
அழுத்தமாய்ச் சிந்தையைவைத் தன்புகொள்வ தெக்காலம்?

(போ - ரை) அபரஞான மனைத்தும் ஒழியப் பரஞானத்தே தனியே நின்ற சிவத்திலே அசையாதபடி நினைவை நிறுத்தி அன்பு கொள்வ தெப்போது? 116

அருவா யுருவாகி, ஆதியந்த மாகிநின்ற
குருவாகி வந்தெனையாட் கொண்டருள்வ தெக்காலம்?

(போ - ரை) நிஷ்களமாகியும், சகளமாகியும், எவற்றிற்கும் முதன்மையும் முடிவும் ஆகின்ற சிவம், குருமூர்த்தமாக எழுந்தருளி வந்து அடியேனை ஆட்கொள்வது எப்போது? 117

நானென் றறிந்தவனை நானறியாக் காலமெல்லாம்
தானென்று நீயிருந்த தனையறிவ தெக்காலம்?

(போ - ரை) நான் என்பது இன்னதென்று அறிந்துகொண்ட ஆன்மாவை நான் அறியுமுன்னரே அந்த ஆன்மாவே தானாக என்னுடனே அத்துவிதமாக விருந்ததனை யறிவ தெப்போது? 118

என்மயமாய்க் கண்டதெல்லா மெண்ணியெண்ணிப் பார்த்தபின்பு, தன்மயமாய்க் கொண்டதிலே சார்ந்துநிற்ப தெக்காலம்?

(போ - ரை) உலக முழுவதும் ஆன்மசொரூபமாகக் கண்டதெல்லாம் ஆலோசித்து ஆலோசித்துத் திருவருளை முன்னிட்டுப் பார்த்தபோது, அவை யனைத்தும் பரமான்ம சொரூபமாகக் கண்டு அதிலே சார்ந்திருப்ப தெப்போது? 119

'ஒளியி லொளியா முருப்பிறந்த வாறதுபோல்'
வெளியில் வெளியான விதமறிவ தெக்காலம்?

(போ - ரை) பூதவெளியில் அருளொளி தோன்றுமாறு, பூதாகாயத்தில் சிதாகாயந் தோன்றும்விதமறிவ தெப்போது? 120

ஒளியிட்ட மெய்ப்பொருளை யுள்வழியி லேயடைத்து,
வெளியிட்டுச் சாத்திவைத்து, வீடுறுவ தெக்காலம்?

(போ - ரை) அருட்சோதியை மனத்தே நிறுத்தி, மவுன மடைந்து, சிவதரிசனம் செய்வ தெப்போது? 121

'காந்தம் வலித்திரும்பைக் கரத்திழுத்துக் கொண்டதுபோல்,' பாய்ந்து பிடித்திழுத்துன் பதத்தில்வைப்ப தெக்காலம்?

(போ - ரை) இரும்பைக் காந்தமானது தன்வசம் இழுத்துக் கொள்வதுபோலத், தேவரீர் என்னைத் தேவரீருடைய திருவடிகளில்

என்னுடைய மனத்தை இழுத்துப் பிடித்து வைத்து அடியேனை யாட்கொள்வ தெப்போது? 122

பித்தாயங் கொண்டு பிரணவத்தை யூடறுத்துச்
செத்தாரைப் போலே திரிவதினி யெக்காலம்?

(போ - ரை) பற்றற்ற பைத்தியத்தால் பிரணவ தியானங் கொண்டு, நடைப்பிணம்போல் பற்றற்று சஞ்சரிப்ப தெப்போது? ()

ஒழிந்த கருத்தினைவைத் துள்ளெலும்பு வெள்ளெலும்பாய்க்
கழிந்தபிணம் போலிருந்து காண்பதினி யெக்காலம்?

(போ - ரை) உலக வாசனை நீங்கிய மனத்தை நிலையாக வைத்துச், சரீரத்தின்கண்ணேயுள்ள எலும்புகளனைத்தும் வெள்ளெலும்பாகத் தோன்றும் சவநிலையில் வாழ்ந்து தேவரீரைத் தரிசிப்ப தெப்போது? 124

ஆதி கபிலர்சொன்ன வாகமத்தின் சொற்படியே
சாதிவகை யில்லாமற் சஞ்சரிப்ப தெக்காலம்?

(போ - ரை) பூர்வகாலத்தில் கபிலதேவர் அருளிய கபிலாகவலின்படிச் சாதிபேதம் பாராட்டாமல் எல்லாம் ஒன்ருகக் கொண்டு சஞ்சரிப்பது எப்போது? 125

சூதுங் களவுந் தொடர்வினையுஞ் சுட்டிடக்காற்
றாதுந் துருத்தியைப்போட் டுனையடைவ தெக்காலம்?

(போ - ரை) வஞ்சனை, திருடு, தொடர்ந்துவரும் வினை இவற்றை நீக்கிக்கொண்டு, உலைக்களத்திலே வைத்து ஊதப்பெற்ற தோற்பையினைப் போன்ற இவ்வுடனீங்கித் தேவரீரை யடையப் பெறுவது எப்போது? 126

ஆசைவலைப் பாசத் தகப்பட்டு மாயாமல்
ஓசைமணித் தீபத் தொன்றிநிற்ப தெக்காலம்?

(பொ - ரை) உலக ஆசையாகிய பாசவலையில் அகப்பட்டு மடியாமல், மணிபோல் சத்திக்கும் நாததத்துவமாகிய அருட்சோதியிற் கலப்ப தெப்போது? 127

கல்லாய், மரமாய்க், கயலாய்ப், பறவைகளாய்ப்,
புல்லாய்ப் பிறந்தசென்மம் போதுமென்ப தெக்காலம்?

(பொ - ரை) கல்லாகவும், மரமாகவும், மச்சமாகவும், பட்சியாகவும், புல்லாகவும் பிறந்தது போதுமென்ப தெப்போது? 128

தக்கும்வகைக் கோர்பொருளும் சாராம லேநினைவில்
பக்குவமா நின்னருளைப் பார்த்திருப்ப தெக்காலம்?

(பொ - ரை) திருவருளானது எனக்குக் கிடைக்கும் விதமாக உலக சம்பந்தமான ஒரு பொருளினுந் தாக்காமல் மனத்தின்கண்ணே பக்குவத்தோடும் நின்னருளைத் தரிசித்துக்கொண்டிருப்ப தெப்போது? 129

தூறோ டிசைந்து சுழன்றுவருந் தத்துவத்தை
வேரோ டிசைந்து விளங்குவது மெக்காலம்?

(பொ - ரை) உலகச்சேற்றி லழுந்தி எப்போதும் விஷயங்களிலேயே உழன்றுகொண்டிருக்கிற தத்துவத்தினை வேரோடு நீக்கி நினது திருவருளின்கண் பிரகாசிப்ப தெப்போது? 130

பாசநடு வேறிப் பயந்தெழுந்த சித்திரத்தை
ஏசநடு மூலத் திருத்துவது மெக்காலம்?

(போ - ரை) நமசி என்கின்ற வடிவின் நடுவேயுள்ள மகாமாகிய பாசத்தினால் உண்டான பிரபஞ்சமாகிய சித்திரத்தை வெறுத்து நீக்கி, மற்றைய இரண்டையும் மூலாதாரத்தில் வைத்துத் தியானிப்ப தெப்போது? 131

ஓரின்பங் காட்டு முயர்ஞான வீதிசென்று
பேரின்ப வீடுகண்டு பெற்றிருப்ப தெக்காலம்?

(போ - ரை) ஒப்பற்ற பேரின்பத்தினைக் கொடுக்காநின்ற இன்பமயமான சித்தாந்த ஞானவீதியிலே சென்று திருவருளின்ப மாகிய மோக்ஷவீட்டினைக் கண்டு அதனை யடையப்பெறுவது எப்போது? 132

காரணமாய் வந்தென் கருத்தி னுறைந்ததெல்லாம்
பூரணமாக் கண்டு புகழ்ந்திருப்ப தெக்காலம்?

(போ - ரை) பக்குவத்தில் என்னுள்ளே நுழைந்து போதித்த எல்லாவற்றையு மனுபவித்துத் தேவரீரைத் தோத்தரித்துக்கொண் டிருப்ப தெப்போது? 133

ஆயுங் கலைகளெல்லா மாராய்ந்து பார்த்ததற்பின்
நீயென்று மில்லா நிசங்காண்ப தெக்காலம்?

(போ - ரை) எல்லா நூல்களையு மாராய்ந்து பார்த்தபிறகு தேவரீர் எனக்கன்னியமில்லாத உண்மையினை யறிவ தெப்போது?

குறியாகக் கொண்டு குலமளித்த நாயகனைப்
பிரியாமற் சேர்ந்து பிறப்பறுப்ப தெக்காலம்?

(போ - ரை) இலட்சியமாக என்னை யடியனாக்கிச், சிவனடி யார்களிடத்திற் சேர்ந்திருக்கும்படி செய்த எனது நாயகனைப் பிரி யாது சேர்ந்திருந்து பிறப்பறுப்ப தெப்போது? 135

'மத்தடுத்து நின்று மருளாடு வார்போலே'
பித்தடுத்து நின்னருளைப் பெற்றிருப்ப தெக்காலம்?

(பொ - ரை) மயக்கத்தை யடைந்து மருள்கொண்டவர்கள்' ஆடுவதுபோன்று உன் விஷயமாகப் பிடித்துப் பிடித்து உன்னுடைய திருவருளை யடைவ தெப்போது? 136

சாவாமல் செத்திருந்து சற்குருவின் பொன்னடிக்கீழ்
வேவாமல் வெந்திருக்க வேண்டுவது மெக்காலம்?

(பொ - ரை) உயிர் நீங்கப்பெற்ற பிணமாகாமல் நடைப்பிணம் போலிருந்து, ஆசாரியரது திருவடியின்கீழ்ப் பூதாக்கினியினல் வெந்துபோகாமல் ஞானக்கினியால் வேகவேண்டுவ தெப்போது. ()

என்னை யறியாம லிருந்தாட்டுஞ் சூத்திரநின்
தன்னை யறிந்து தவம்பெறுவ தெக்காலம்?

(பொ - ரை) யான் சிறிதும் அறிந்துகொள்ளாதவாறு இருந்து உலகில் என்னை யாட்டுவிக்கும் கன்மமாகிய சூத்திரமானது உன்னை யறியும்படிச் செய்து தவத்தினைப் பெறுவ தெப்போது? 138

உள்ள மறியா தொளித்திருந்த நாயகனை
கள்ள மனந்தெளிந்து காண்ப தினி யெக்காலம்?

(பொ - ரை) இதுகாறும் திரோதானத்தால் மனத்தின்கண்ணே மறைந்திருந்த சிவத்தைக் கள்ளமனத்தில் திரோதான சத்தி நீங்கப் பெற்றுத் தரிசிப்ப தெப்போது? 139

வாசித்துங் காணமல், வாய்விட்டும் போகாமல்,
பூசித்துந் தோன்றாப் பொருள்காண்ப தெக்காலம்?

(போ - ரை) வாசிப்பினாலும், மவுனத்தினாலும், பூசித்தலினாலும் காணப்படாத பொருளானது இனி காணப்படுவ தெப்போது? 140

பன்னிரண்டு காற்புரவி பாய்ந்துசில்லலந் தப்பாமல்
பின்னிரண்டு சங்கிலிக்குட் பிணிப்பதினி யெக்காலம்?

(போ - ரை) பன்னிரண்டங்குலம் செல்லும் வாயுவினை ஆரவாரம் செய்யவிடாமல் பின் இரண்டு சங்கிலிகளாகிய இடைகலை பிங்கலையாற் கட்டிச்சேர்ப்ப தெப்போது? 141

நாட்டுக்கா லிரண்டும்விட்டு, நடுவுக்கா லூடேபோய்,
ஆட்டுக்கா லிரண்டினுள்ளே யமர்ந்திருப்ப தெக்காலம்?

(போ - ரை) இரண்டு கால்களாகிய இரேசக பூரகங்களை யொழித்து நடுவே ஒரு காலாகிய கும்பத்தின் மூலஞ்சென்று, அங்கு நடிக்கும் முதல்வனது இரண்டடிகளி னடுவிலிருப்ப தெப்போது?

பாற்பசுவைப் பூட்டிப் பதியில்வைத்துச் சீராட்டிக்
காற்பசுவை யோட்டியதிற் கட்டிவைப்ப தெக்காலம்?

(போ - ரை) இதுகாறும் என்னிடத்துப் பாசத்தன்மையினால் வாய்ந்த பசுத்துவம் நீங்கிப், பதித்தன்மையிலிருந்து சீராட்டி பிராணவாயுவை யுள்ளே நடத்தி இருதயத்தில் கட்டுவ தெப்போது? 143

பலவிடத்தே மனதைப் பாயவிட்டுப் பாராமல்
நிலவரையி னூடேபோய் நேர்படுவ தெக்காலம்?

(போ - ரை) என்னுடைய மனதைப் பலவிடங்களிலும் செலுத்தி விஷயங்களை நாடிக்கொண்டிராமல் குகையில் வாசஞ்செய்து தரிசிப்ப தெப்போது? 144

காமக் கடல்கடந்து கரையேறிப் போவதற்கே
ஓமக் கனல்வளர்த்தி யுள்ளிருப்ப தெக்காலம்?

(பொ - ரை) ஆசையாகிய கடலைக் கடந்து முத்தியங்கரையிற் சேரும்பொருட்டுச் சிவாக்கினியை உள்ளே வளர்த்தி உன் திருவடி நிழலுக்குள் இருப்ப தெப்போது? 145

உதயச் சுடர்மூன்று முள்வீட்டி லேகொளுத்தி
இதயத் திருநடன மினிக்காண்ப தெக்காலம்?

(பொ - ரை) ஆகவனீயம், தட்சணக்கினியம், காருகபத்தியம் என்னும் மூன்று அக்கினிகளையும் உடலுக்குள்ளே வளர்த்தி, இருதயத்தின்கண் விளையும் நடனத்தினைத் தரிசிப்ப தெப்போது? 146

வேதாந்த வேதமெல்லாம் விட்டேறி யேகடந்து
நாதாந்த மூல நடுவிருப்ப தெக்காலம்?

(பொ - ரை) வேதவேதாந்தங்களைக் கடந்து அப்பாற் சென்று நாதாந்தத்தில் விளங்காநின்ற மூலப்பொருளில் தங்குவ தெப்போது?

'பட்டமற்றுக் காற்றிற் பறந்தாடுஞ் சூத்திரம்போல்'
விட்டுவெளி யாக விசுவசித்த லெக்காலம்?

(பொ - ரை) காற்றாடியையிழந்த கயிறானது காற்றினிடத்தே அசைவதுபோலப், பிரபஞ்ச விஷயங்களினின்று நீங்கிச் சிதாகாயத்தில் வசிப்ப தெப்போது? 148

அட்டாங்க யோகமதற் கப்பாலுக் கப்பாலாய்
கிட்டாப் பொருள்தனைக் கிட்டுவது மெக்காலம்?

(போ - ரை) அட்டாங்கயோக மார்க்கங்களையுங் கடந்து அதீத மாகிய தற்போத அறிவிற்குக்கிட்டாமல் விளங்கும் சிவத்தை அடைவ தெப்போது? 149

ஒட்டாம லொட்டிநிற்கு முடலுமுயி ரும்பிரித்தே
எட்டாப் பழம்பதிக்கின் கேணிவைப்ப தெக்காலம்?

(போ - ரை) திருவருள் சம்பந்தமின்றித் தத்துவங்களால் சம் பந்தப்பட்டிருக்கும் உடலையும் உயிரினையும் பிரித்துத், தற்போதத் தினு லடைதல் கூடாத சிவபதத்திற்குத் திருவருளாகிய எணியினைச் சாத்துவ தெப்போது? 150

பாசத்தை நீக்கிப் பசுவைப் பதியில்விட்டு
நேசத்தி னுள்ளே நினைந்திருப்ப தெக்காலம்?

(போ - ரை) மல சம்பந்தமாயுள்ள பாசங்களை முற்றும் ஒழித் துப், பசுவைப் பதியிற் கலப்பித்து, உன் திருவடிகளில் வாஞ்சையோ டுறைவது எப்போது? 151

ஆசார நேய வனுட்டான மும்மறந்து
பேசாமெய்ஞ் ஞானநிலை பெற்றிருப்ப தெக்காலம்?

(போ - ரை) ஆசாரம், விருப்பம், அனுஷ்டானம் இவற்றை விட்டு மௌனமாகிச் சிவஞான நிலைமையினை யடைவதெப்போது?

பல்லா யிரங்கோடிப் பகிரண்ட மும்படைப்பே
அல்லாது வேறிலையென் றறிவதினி யெக்காலம்?

(போ - ரை) பல்லாயிரக் கோடிகணக்கான பகிரண்டங்களு முதல்வனுல் சிருஷ்டிக்கப்பட்டதே யல்லாமல் நிலையாக இருப்ப தன்று என்னு முண்மையினை யறியப்பெறுவது எப்போது? 153

ஆதிமுத லாகினின்ற அரியென்ற வட்சரத்தை
ஓதி யறிந்துள்ளே யுணர்வ தினி யெக்காலம்?

(போ - ரை) எழுத்துகளுக்கு முதலாயுள்ள அரியென்னும் அக்ஷரத்தினை ஓதி அதனதிஷ்டான மூர்த்தியாகிய விஷ்ணுவை யுணர்ந்து, மணிபூரகமென்னும் மூன்றாவது ஆதாரத்திலே தியானித்துக்கொண்டிருப்ப தெப்போது? 154

சாத்திரத்தை சுட்டுச் சதுர்மறையைப் பொய்யாக்கிச்
சூத்திரத்தைக் கண்டு துயரறுப்ப தெக்காலம்?

(போ - ரை) சாத்திரங்களையும் சதுர்மறைகளையு மறுத்துச் சிவஞானசூத்திரத்தைப் படித்துத் துன்பமொழிவ தெப்போது? 155

அல்லும் பகலுமென்ற னறிவையறி வாலறிந்து
சொல்லு முறைமறந்து தூங்குவது மெக்காலம்?

(போ - ரை) இரவும் பகலுமாக எனது அறிவினைத் திருவருளாலறிந்து, பேசுவதை யொழித்து, யோகநித்திரைசெய்வ தெப்போது?

இயங்குஞ் சராசரத்தி லெள்ளுமெண்ணெ யும்போல
முயங்குமந்த வேத முடிவறிவ தெக்காலம்?

(போ - ரை) சர அசர பதார்த்தங்களில் எள்ளு மெண்ணெயும் போல விளங்கும் அந்த வேதமுதல்வனை யறிவ தெப்போது? 157

ஊனாகி யூனி லுயிராகி யெவ்வுலகுந்
தானாகி நின்ற தனையறிவ தெக்காலம்?

(போ - ரை) உடலை யசைவித்தும், உயிருக் கறிவித்தும் எங்கும் வியாபியாயுள்ள முதல்வனை யறிவ தெப்போது? 158

என்னைவிட்டு நீங்காம லென்னிடத்து நீயிருக்க
உன்னைவிட்டு நீங்கா தொருப்படுவ தெக்காலம்?

(போ - ரை) தேவரீர் என்னை விட்டு எப்போதும் பிரியாமல் அத்துவிதமாகக் கலந்திருப்பதுபோல, யானும் தேவரீரை விட்டு நீங்காமல் கலந்திருக்க எண்ணுவது எப்போது? 159

இன்னதென்று சொலவொண்ணா வெல்லையற்ற வான் பொருளைச், சொன்னதென்று நானறிந்து சொல்வதினி யெக்காலம்?

(போ - ரை) இன்னவிதமென்று வாக்காற் சொல்லற்கரிய அளவிறந்த உயர்ந்த பொருளை ஆசாரியர் எனக்கு உபதேசித்தா ரென்று தெரிந்து சொல்வது எப்போது? 160

மனதையொரு வில்லாக்கி, வான்பொறியை நாணாக்கி,
எனதறிவை யம்பாக்கி யெய்வதினி யெக்காலம்?

(போ - ரை) என்னுடைய மனதை வில்லாகவளைத்துப் பெரிய ஐம்பொறிகளை நாணாகப் பூட்டி, எனது அறிவை யம்பாகச் செய்து ஆணவாதி மலங்களின்மேற் பிரயோகிப்ப தெப்போது? 161

என்னை யிறக்கவெய்தே யென்பதியை யீடழித்த
உன்னை வெளியில்வைத்தே யொளித்துநிற்ப தெக்காலம்?

(போ - ரை) என்னைப் பேசவொட்டாதபடி செய்து, யான் ஆதாரவாகக் கொண்டிருந்த பிரபஞ்சத்தை எனக்குத் தோன்றாவாறு செய்து அதாவது அகங்கார மமகாரங்களை யழித்துத், தேவரீரை யான் சிதாகாயத்தில் வைத்து உன்னுடன் கலந்திருப்ப தெப்போது?

'கடத்துகின்ற தோணிதனைக் கழைகள்குத்தி விட்டாற்போ
நடத்துகின்ற சித்திரத்தை நானறிவ தெக்காலம்? [ல்'

(போ - ரை) மீகாமனுல் கடலில் செலுத்தப்படுகின்ற கப்பலை அதிலுள்ள மூங்கில் துளைத்துவிட்டதுபோல, ஆன்மாவானது உலகில் செலுத்தும் உடலை அவ்வுடலின்கண் உள்ள வினைகள் கெடுத்து விட்ட விசித்திரத்தினை யான் அறிவதெப்போது? 163

நின்றநிலை பேராமல், நினைவிலொன்று சாராமல்
சென்றநிலை முத்தியென்று சேர்ந்தறிவ தெக்காலம்?

(போ - ரை) தியானத்திலிருந்து அசையாமலும், மனத்தின் கண் பிரபஞ்ச விஷயங்கள் ஒன்றும் சாராமலும், சித்தாந்த வழியே சென்ற மார்க்கமானது முத்தியெனத் திருவருளைச் சேர்ந்தறிவ தெப்போது? 164

பொன்னும்வெள் ளியும்பூண்ட பொற்பதத்தை யுள்ளமைத்
மின்னு மொளிவெளியே விட்டடைப்ப தெக்காலம்? [து

(போ - ரை) வேதங்களையே பொன் வெள்ளிச் சிலம்புகளாகத் தரித்த அழகிய திருவடிகளை உள்ளத்தின்கண்ணே நிறுத்தித், தியானத்தால் உண்டாகும் சோதியில் கலப்ப தெப்போது? 165

'கூட்டிலடைப் பட்டபுழு குளவியுருக் கொண்டதுபோல்'
வீட்டிலடைப் பட்டருளை வேண்டுவது மெக்காலம்?

(போ - ரை) குளவியினுல் கூட்டில் அடைக்கப்பட்ட புழுவானது குளவியின் வடிவத்தைப் பெற்றதுபோல, உடலி லடைக்கப் பட்ட உயிர் அருண்மயமாவ தெப்போது? 166

'கடலி லொளித்திருந்த கனலெழுந்து வந்தாற்போல்'
உடலி லொளித்தசிவ மொளிசெய்வ தெக்காலம்?

(போ - ரை) சமுத்திரத்தில் மறைந்திருந்த வடவாமுகாக்கினி வெளிவந்தவாறுபோல, உடலின்கண் திரோதான சக்தியால் மறைபட்டிருந்த சிவம் வெளிப்படுவ தெப்போது? 167

'அருணப் பிரகாச மண்டமெங்கும் போர்த்ததுபோல்'
கருணைத் திருவடியிற் கலந்துநிற்ப தெக்காலம்?

(போ - ரை) சூரியனுடைய பிரகாசமானது உலகமுற்றும் வியாபித்ததுபோன்று, திருவருள் வியாபகத்தில் திருவடியில் கலந்திருப்ப தெப்போது? 168

'பொன்னிற் பலவிதமாம் பூஷணமுண் டானதுபோல்'
உன்னிற் பிறந்ததுன்னி லொடுங்குவது மெக்காலம்?

(போ - ரை) பொன்னினின்றும் பலவிதயான பூஷணங்கள் காரிய காரணமாவதுபோல, உன்னிடத்திலே பிறந்து மீண்டும் உன்னிடத்திலே ஒடுங்கும்படியான அதாவது மாயையில் காரணகாரியமாகும் உண்மை தெரிவ தெப்போது? 169

நாயிற் கடைப்பிறப்பாம் நான்பிறந்த துன்பமற
'வேயிற் கனலொளிபோல்' விளங்குவது மெக்காலம்?

(போ - ரை) நாயினுங் கடைப்பட்ட யான் எடுத்த ஜன்மம் ஒழியும்பொருட்டு மூங்கிலினின்றும் தோன்றிய அனலானது அம்மூங்கிலினை அனல்மயமாக்கி விடுவதுபோன்று, என் சரீரத்தினின்றும் அருள் வெளிப்பட்டு, என்னுடலம் அருட்பிரகாசத்தில் விளங்குவ தெப்போது? 170

'சூரிய காந்தியொளி சூழ்ந்துபஞ்சைச் சுட்டதுபோல்'
ஆரியன் றோற்றத் தருள்பெறுவ தெக்காலம்?

(போ - ரை) சூரியனுடைய காந்தியினால் கண்ணாடியின் மூல மாகப் பஞ்சு நாசமாவதுபோல, ஆசாரியனருளால் மலநாசமாகிய அருளடைவ தெப்போது? 171

'இரும்பிற் கனன்மூட்டி யிவ்வுருபோ யவ்வுருவாய்க்'
கரும்பிற் சுவைரசத்தைக் கண்டறிவ தெக்காலம்?

(போ - ரை) இரும்பினிடத்து அக்கினியைமூட்ட, இரும்பின் தோற்றம்போய் அக்கினி உருவமாக விளங்குதல்போன்று, திருவருளானது இச்சரீரத்தை எரிக்க, இவ்வுடலமானது திருவருளுருவமாக விளங்க, அக்காலத்தில், கரும்பின்கண் உண்டாகும் சுவையோடுங் கூடிய இரசத்தினையும் போன்ற அருளுருவமாகிய சிவானந்தத்தேன் உண்ப தெப்போது? 172

'கருக்கொண்ட முட்டைதனைக் கடலாமை தானினைக்க
உருக்கொண்ட வாறதுபோ' லுனையடைவ தெக்காலம்?

(போ - ரை) கடல் ஆமையானது முட்டையினைக் கடற்கரையில் விட்டு மறுபடியு மதனை நினைத்துப் பொறிப்பதுபோலக், குரு எனை நினைத்து ஆளாக்குவ தெப்போது? 173

'வீடுவிட்டுப் பாய்ந்து வெளியில் வருவார்போல்'
கூடுவிட்டுப் பாயுங் குறிப்பறிவ தெக்காலம்?

(போ - ரை) தாம் வாழ்கின்ற, உலகவீட்டினை விட்டு வெளி வருவதுபோல, உடல்வீட்டை விட்டு வெளிவந்த நாளில் திருவருட் குறிப்பை யறிவ தெப்போது? 174

'கடைந்தவெண்ணெய் மோரிற் கலவாத வாறதுபோல்'
உடைந்து தமியே னுனைக்காண்ப தெக்காலம்?

(போ - ரை) மோரினின்றும் கடைந்து எடுக்கப்பட்ட வெண்ணெயானது மறுபடியும் மோரில் கலவாததுபோல, மலத்தினின்றும் வெளிப்பட்ட நான் மீண்டும் அம்மலத்திற் கலவாமல் தேவரீரைத் தரிசிப்ப தெப்போது? 175

'இருளை வெளிவிழுங்கி யேகவுருக் கொண்டாற்போல்'
அருளை விழுங்குமிரு ளகன்றுநிற்ப தெக்காலம்?

(போ - ரை) பூத இருளைச் சூரிய ஒளியானது கெடுத்து ஒளிமயமாக இருப்பதுபோன்று, அருள் ஆணவமலத்தினைக் கெடுப்ப தெப்போது? 176

'மின்னெழுந்து மின்னொடுங்கி விண்ணி லுறைந்தாற்போல்'
என்னுணின்ற தென்னுள்ளே யானறிவ தெக்காலம்?

(போ - ரை) ஆகாயத்தில் மின்ன லுண்டாகி ஆகாயத்தி லொடுங்குவதுபோல, அருள் என்னிடம் வெளிப்பட்டு என்னிட மொடுங்குவ தெப்போது? 177

'கண்ட புனற்குடத்திற் கதிரொளிகள் பாய்ந்தாற்போல்'
கொண்ட சொரூபமதைக் கூர்ந்தறிவ தெக்காலம்?

(போ - ரை) பாண்டங்கள்தோறும் சூரியவொளி பிரகாசிப்பது போல், பிரபஞ்ச பதார்த்தங்கள்தோறும் மாயை நிறைவதினியுறிவ தெப்போது? 178

பூணுகின்ற பொன்னணிந்தாற் பொன்சுமக்கு மோவுடலைக்
காணுகின்ற வென்கருத்திற் கண்டறிவதெக்காலம்?

(போ - ரை) பூண்ட பொன்னாபரணத்தை உடல் சுமக்குமே யன்றி, உடலாற் சுமக்கப்பட்ட பொன்னைப் பொன் சுமக்காதவாறு

போல, நான் திருவருளினைத் தாங்குமாறு தெரிந்துகொள்வ தெப்போது? 179

'செம்பிற் களிம்புபோற்' சிவத்தை விழுங்குமிக
வெம்பிணின்ற மும்மலத்தை வேறுசெய்வ தெக்காலம்?

(போ - ரை) செம்பினைக் களிம்பு மறைப்பதுபோலச் சிவம் தோன்றாதவாறு என்னை மறைத்துத் துன்பத்துடனின்ற ஆணவம், காமியம், மாயையென்னும் மும்மலங்களையும் என்னினின்றும் பிரிப்பதெப்போது? 180

'ஆவியுங் காயமும்போ' லாத்துமத்து நின்றதனைப்
பாவி யறிந்துமனம் பற்றிநிற்ப தெக்காலம்?

(போ - ரை) உயிரும் உடலும் அபேதமாகக் கலந்திருப்பது போல, அருளும் நானுங் கலந்திருத்தலைப் பாவியாகிய நான் தெரிந்து மனம் பற்றுக்கொண்டு வாழ்வதை யறிவ தெப்போது? 181

ஊமைக்க ணுக்கண் டுரைக்கறியா வின்பமதை
நாமறிந்து கொள்வதற்கு நாள்வருவ தெக்காலம்?

(போ - ரை) ஊமையானவன் கனவுகண்டு (அதனைப் பிறருக்குச்) சொல்ல வகையற்றுச் சந்தோஷிப்பதுபோல், நான் திருவருளடைந்து வெளியிடக்கூடாத சுகத்தினை யனுபவிப்பதற்குப் பாகம் வருவ தெப்போது? 182

சாகாச் சிவனடியைத் தப்பாதா ரெப்போதும்
போகா வுடலகன்று போவரென்ப தெக்காலம்?

(போ - ரை) நித்தியனாகிய சிவபெருமான் திருவடியைத் தியானித்தலினின்றும் நீங்காதவர்கள் எக்காலத்திலும் தேகம் மண்ணில் வீழாது மோட்சமடைவ ரென்பதை அறிவ தெப்போது? 183

நிட்டைதனை விட்டு, நினைவறிவு தப்பவிட்டு,
வெட்ட வெளியில் விரவிநிற்ப தெக்காலம்?

(போ - ரை) உபாசனைப்பல னடைந்தபின்னர் நிஷ்டைவிட்டு, முன்னிலைச் சுட்டுமற்றுச், சிதாகாயத்தில் கலப்ப தெப்போது? 184

வெட்ட வெளிதன்னில் விளைந்தவெம் பாதத்தை
திட்டமுடன் கண்டு தெளிவதினி யெக்காலம்?

(போ - ரை) சிதாகாயத்தி லிருந்துகொண்டு ஆணவத்தின் உண்மையினை யறிந்து அதனினின்று நீங்கியிருப்ப தெப்போது?

எங்கும் பரவடிவா யென்வடிவு நின்வடிவாய்க்
கங்குல்பக லின்றியுனைக் கண்டிருப்ப தெக்காலம்?

(போ - ரை) எங்கும் சிவமயமாய், என்னுடைய ஜீவசொரூபம் சிவசொரூபமாய்ச், சகல கேவல மற்று உன்னைத் தியானித்துக் கொண்டிருப்ப தெப்போது? 186

உண்டதுவு மாதருடன் கூடிச்சேர்ந் தின்பங்
கண்டதுவு நீயெனவே கண்டுகொள்வ தெக்காலம்?

(போ - ரை) பிரபஞ்ச போகத்தினை யனுபவித்ததும், மாதர்களோடு சேர்ந்து இன்பமனுபவித்ததும் நீரே கூட்டிவைத்தீரென்னு முண்மையினை அறிந்துகொள்வ தெப்போது? 187

ஈமென்று கேட்டதுவு மென்னுள்ளே நின்றதுவும்
ஓமென்று சொன்னதுவு முற்றறிவ தெக்காலம்?

(போ - ரை) யான் நிஷ்டையிலிருக்குங் காலத்தில் என் செவியில் ஈம் என்ற சப்த முண்டானதும், பிறகு என் உள்ளத்தின் கண்ணே குண்டலி சத்தியானது நிலையுற்றதும், பின்னர் அது

ஒங்காரத்துடன் சப்தித்ததும் ஆகிய இவற்றின் உண்மையினைச் சிந் தனைசெய் தறிவது எப்போது? 188

சத்தம் பிறந்தவிடந் தன்மயமாய் நின்றவிடஞ்
சித்தம் பிறந்தவிடந் தேர்ந்தறிவ தெக்காலம்?

(போ - ரை) நாத உற்பத்திக்குக் காரணமாயுள்ள மூலாதாரத் தையும், திருவருள் மயத்தையும், மனோற்பத்தியின் ஆதாரத்தையும் விசாரித் தறிவது எப்போது? 189

போக்கு வரவும் புறம்புள்ளு மாகிநின்றும்
தாக்கு மொருபொருளைச் சந்திப்ப தெங்காலம்?

(போ - ரை) சகலத்திலுள்ள போக்குவரவினையும், வெளிப் பொருளாகியும் - உட்பொருளாகியும் - எவ்விடத்தும் வியாபகமாகியு முள்ள உன்னை யான் தரிசிப்பது எப்போது? 190

நானெனவு நீயெனவு நாமிரண்டு மற்றொன்றும்
நீயெனவே சிந்தைதனி னேர்படுவ தெக்காலம்?

(போ - ரை) நான் நீ என்னும் பேதத்தன்மை இரண்டும் நீங்கி என்னிடத்தில் அபேதமாகப் பொருந்தி யிருப்பது தேவரீர் எனவே என் உள்ளத்தில் தெளிந்தறிவ தெப்போது? 191

அறிவையறி வாலறிந்தே யறியு மறிவுதனில்
பிறிவுபட நில்லாமல் பிடிப்பதினி யெக்காலம்?

(போ - ரை) ஆன்ம அறிவைத் திருவருளா லறிந்து, அவ்வாறு அறிந்த அறிவினில் வேறுபட்டிருக்காமல் தாதான்மியமாய் நிற்ப தெப்போது? 192

நீடும் புவனமெல்லாம் நீறைந்துசிந் தூரமதாய்
ஆடுந் திருக்கூத்தை யறிவதினி யெக்காலம்?

(போ - ரை) சகல பிரபஞ்சத்தினும் வியாபித்து, அவை முற்றும் (சர்வ சங்கார காலத்தில்) நீறுகும்படி நடஞ்செய்யும் அழகிய தரிசனத்தின் (உண்மையினை) அறிந்துகொள்வ தெப்போது? 193

தித்தியென்ற கூத்துத் திருச்சிலம்பி னோசைகளும்
பத்தியுட னேகேட்டுப் பணிவதினி யெக்காலம்?

(போ - ரை) தித்தியென்ற தாள ஒத்துடன் ஆடும் குஞ்சித பாதச் சிலம்பினோசைகளைப் பக்தியுடன் கேட்டு வணங்குவ தெப்போது? 194

நயனத் திடைவெளிபோய் நண்ணும் பரவெளியில்
சயனித் திருந்து தலைப்படுவ தெக்காலம்?

(போ - ரை) இரண்டு நேத்திரங்கட்கும் நடுவிலுள்ள கோதண்டத்தானத்தில் தியானித்துச் சிதாகாயத்தில் யோகநித்திரை செய்து, உன்னுடனே வாழ்ந்திருத்தல் எப்போது? 195

அருவி மலைநடுவே யாயிரக்கால் மண்டபத்தில்
திருவிளையா டற்கண்டு தெரிசிப்ப தெக்காலம்?

(போ - ரை) அமுததாரை யோடிவரும் சந்திரமண்டலத்திலே பிரமாந்திர மண்டபத்தில் தெய்வத் திருவிளையாட்டினைத் தரிசிப்ப தெப்போது? 196

'மீனைமிக வுண்டுநக்கி விக்கிநின்ற கொக்கதுபோல்'
தேனிரம்ப வுண்டு தெவிட்டிநிற்ப தெக்காலம்?

(போ - ரை) மீன்களை அதிகமாக உண்டு கொக்கு விக்கிக்கொள்வதுபோலச், சிவானந்தத் தேனை மிகுதியாக வுண்டு தேக்கெறிந்திருப்ப தெப்போது? 197

பொல்லாத காயமதைப் போட்டு விடுக்குமுன்னே
கல்லாவின் பால்கறப்பக் கற்பதினி யெக்காலம்?

(போ - ரை) தீவினை சம்பந்தமாகக் கிடைத்த உடலைக் கிடத்தி விடு முன்னமே ஆன்மபசுவில் ஞானப்பாலினைக் கறப்பதற்கு (வேண்டிய சாதனங்களை) அறிந்துகொள்ளுத லெப்போது? 198

வெட்ட வெளிக்குள்ளே விளங்குஞ் சதாசிவத்தைக்
கிட்டவரத் தேடிக் கிருபைசெய்வ தெக்காலம்?

(போ - ரை) சிதாகாயத்தில் பிரகாசித்துக்கொண்டிராநின்ற சதாசிவத்தினைக் கிட்டிக் கிருபையடைவ தெப்போது? 199

பேரறிவி லேமனதை பேராம லேயிருத்தி
ஓரறிவி லென்னாளு மூன்றிநிற்ப தெக்காலம்?

(போ - ரை) பெரிய திருவருள்மயமான அறிவினிடத்தே மனத்தை அசையாதவாறு நிறுத்தி, ஒப்பற்ற அறிவினிடத்தில் எப்போதும் நிலையுறுவ தெப்போது? 200

அத்துவிதம் போலுமென்ற னாத்துமத்தி னுள்ளிருந்து
முத்தி தரநின்ற முறையறிவ தெக்காலம்?

(போ - ரை) ஒன்றிரண்டென்னப் பிரிக்கக்கூடாத அத்துவிதம்போன்று, என்னுடைய ஆத்மாவின்கண்ணே கலந்திருந்து, மோக்ஷத்தைக் கொடுக்கும்படி எழுந்தருளியிருந்த வகையை அறிந்துகொள்வ தெப்போது? 201

நானின்ற பாசமதி னனிருந்து மாளாமல்
நீநின்ற கோலமதிற் நிரவிநிற்ப தெக்காலம்?

(போ - ரை) எனது மலத்தில் நானிருந்து அழியாமல், நின் திருவருளி னிறைவில் கலந்திருப்ப தெப்போது? 202

'எள்ளுங் கரும்பு மெழுமலரும் காயமும்போல்'
உள்ளும் புறம்புநின்ற துற்றறிவ தெக்காலம்?

(போ - ரை) எள்ளி லெண்ணெயும், கரும்பிலிரசமும், மலரில் வாசனையும், உடலில் உயிரும்போல என்னிடத்து நீயிருந்த தன்மையை யறிவ தெப்போது? 203

'அன்னம் புனலைவகுத் தமிர்தத்தை யுண்பதுபோல்'
என்னைவகுத் துன்னை யினிக்காண்ப தெக்காலம்?

(போ - ரை) அன்னப்பட்சியானது பாலினின்றும் நீரைப் பிரித்து உண்ணுமாறுபோலப், பசுஞானத்தினின்றும் பதிஞானத்தைப் பிறித்தறிவ தெப்போது? 204

'அந்தரத்தி னீர்பூத் தலர்ந்தெழுந்த தாமரைபோல்'
சிந்தைவைத்துக் கண்டு தெரிசிப்ப தெக்காலம்?

(போ - ரை) ஆகாய கங்கையில் பூத்து மலர்ந்த தாமரை போன்று, நினது திருவருட் பெருக்கத்தில் எனதிதய தாமரைமலர்வ தெப்போது? 205

பிறப்பு மிறப்புமற்றுப், பேச்சுமற்று, மூச்சுமற்று,
மறப்பு நினைப்புமற்று மாண்டிருப்ப தெக்காலம்?

(போ - ரை) பிறப்பு இறப்புகளுக்கு ஏதுவாயுள்ள சுகதுக்க மற்று, மவுனமாகிப், பிராணவாயுவை யியக்காமல், கேவல சகல நீங்கித் தற்போத மொழிவ தெப்போது? 206

மன்னும் பரவெளியை மனவெளியி லடைத்தறிவை
என்னு மொருநினைவை யெழுப்பிநிற்ப தெக்காலம்?

(போ - ரை) நிலைபெற்ற சிதாகாயவெளியைஇருதயஆகாயத்தி டக்கித், திருவருளை நினைத்துக்கொண்டிருப்ப தெப்போது? 207

ஆசைகொண்ட மாத ரடைகனவு நீக்கியுன்மேல்
ஓசைகொண்டு நானு மொடுங்குவது மெக்காலம்?

(போ - ரை) விருப்பம் வாய்ந்த மாதர் சம்பந்தமாக வரும் கனவினை யொழித்து, நினது தியானங்கொண்டு அடியேன் உறங்குவ தெப்போது? 208

'தன்னுயிரைக் கொண்டு தான்றிரிந்த வாறதுபோல்'
உன்னுயிரைக் கொண்டிங் கொடுங்குவது மெக்காலம்?

(போ - ரை) என்னுயிரைக் கொண்டு உலகத்தில் யான் சுதந்தரனாகத் திரிந்ததுபோல, நினது திருவருளை யாதரவாகக் கொண்டு இவ்வுலகில் ஜீவன்முத்தனாய் வாழ்வ தெப்போது? 209

சேற்றிற் கிளைநாட்டுந் திடமா முடலையினிக்
'காற்றிலுழல் சூத்திரமாய்' காண்ப தினி யெக்காலம்?

(போ - ரை) சேற்றில் நட்ட கம்பமானது திடங்கொண் டிராததுபோலப், பிராணவாயுவில் நிலைத்த தேகத்தின் உண்மை யறிவ தெப்போது? 210

என்வசமுங் கெட்டிங் கிருந்த வசமுமழிந்து
தன்வசமுங் கெட்டருளைச் சார்ந்திருப்ப தெக்காலம்?

(போ - ரை) உடல், உலகு, ஆன்மா இவைகளின் சுதந்தர நீங்கித் திருவருளின் சுதந்தரத்தில் வாழ்ந்திருப்ப தெப்போது? 211

தன்னை மறந்து தலத்துநிலை மறந்து
கன்ம மறந்து கதிபெறுவ தெக்காலம்?

(போ - ரை) உடல், உலகம், கன்மம் இவைகளினால் நேரும் செயல்களை மறந்து மோட்சமடைவ தெப்போது? 212

என்னையென்னி லேமறைந்தே யிருந்த பதியுமறந்து
தன்னையுந்தா னேமறந்து தனித்திருப்ப தெக்காலம்?

(பொ - ரை) உடல், பூமி, ஆன்மா இவற்றை மறந்து தனித் திருப்ப தெப்போது? 213

தன்னையுந்தா னேமறந்து, தலைவாசற் ருழ்போட்டே
உன்னை நினைந்துள்ளே யுறங்குவது மெக்காலம்?

(போ - ரை) ஆன்மாவைக்கொண்டு ஆன்மாவை மறந்து, மன வாயிலை யடைத்துத் தேவரீரைத் தியானஞ் செய்துகொண்டு சிவ யோக நித்திரை செய்வ தெப்போது? 214

'இணைபிரிந்த போதலறி யின்பமுறு மன்றிலைப்போல்'
துணைபிரிந்தபோ தருணூல்தொடர்ந்துகொள்வ தெக்காலம்?

(போ - ரை) ஒன்றைவிட்டு ஒன்று பிரிந்தபோது கூச்சலிட்டு இன்பமுற்று நாடும் அன்றிற் பட்சிகளைப்போல, ஆசிரியனைப் பிரிந்த போது சாஸ்திரவிசாரம் பண்ணுவ தெப்போது? 215

ஆட்டமொன்று மில்லாம லசைவுசற்றுங் காணமல்
தேட்டமற்ற வான்பொருளைத் தேடுவது மெக்காலம்?

(போ - ரை) சலனம் சிறிதும் இல்லாமல், சோர்வு சிறிதும் தோன்ருமல், சிறிதுஞ் சலனமில்லாத உயர்ந்ததிருவருளினைத்தேடுவ தெப்போது? 216

முன்னைவினை யாலறிவு முற்ருமற் பின்மறைந்தால்,
அன்னைதனைத் தேடி யமுதுண்ப தெக்காலம்?

(போ - ரை) பூர்வஜன்மத்தின் காரணமாக அறிவு அழுந்தாமல் திரோதான சத்தியால் மறைவு நேரிடினும் திருவருட்சத்தி மூலமாக ஞானமிர்த மடைவ தெப்போது? 217

கள்ளுண் டவர்போற் களிதருமா னந்தமதாற்
றள்ளுண்டு நின்றாடித் தடைபடுவ தெக்காலம்?

(போ - ரை) கள்ளினை யுண்டு மயங்குவார்போன்று, நானும் சிவானந்தத்தை யனுபவிப்பதால் தள்ளாடிப் பிரபஞ்சந்தோன்றாதபடி மயங்குவ தெப்போது? 218

தானென்ற வாணவமுந் தத்துவமுங் கெட்டொழிந்தே
ஏனென்ற பேச்சுமிலா திலங்குவது மெக்காலம்?

(போ - ரை) தான் என்கின்ற ஆணவமும், தத்துவங்களின் காரியப்பாடும் தலையெடாதபடி, ஏன் என்கிற சொல்லும் இல்லாதபடி மவுனமுறுவ தெப்போது? 219

நானவனாய்க் காண்பதெல்லா ஞானவிழி யாலறிந்து
தானவனாய் நின்று சரணடைவ தெக்காலம்?

(போ - ரை) முதல்வன் பிரேரகத்தால் நானறிவதெல்லாம் சிவோகம்பாவனையில் முதல்வனாகவிருந்து காண்ப தெப்போது? 220

தானந்த மில்லாத தற்பரத்தி னூடுருவி
ஆனந்தங் கண்டே யமர்ந்திருப்ப தெக்காலம்?

(போ - ரை) ஆன்மாவாகிய தான் முடிவற்ற திருவருளில் முழுகிச் சிவானந்த முண்டு பொருந்திருப்ப தெப்போது? 221

உற்ற வெளிதனிலே உற்றுப்பார்த் தந்தரத்தே
மற்றமற மாய்கை மாள்வதினி யெக்காலம்?

(போ - ரை) பொருந்திய சிதாகாயத்தை நோக்கி யதிலேயிருந்து மாய்கை யொழிவ தெப்போது? 222

ஏடலர்ந்த பங்கயமு மிருகருணை நேத்திரமுந்
தோடணிந்த குண்டலமுந் தோன்றுவது மெக்காலம்?

(பொ - ரை) புறவிதழ் விரியப்பெற்ற தாமரைபோன்ற திருமுகமும், கருணை பொழியாநின்ற இரண்டு நேத்திரங்களும், வளையந் தரித்த குண்டலங்கள் பொருந்திய செவிகளும் கூடிய திருவுருவுடன் உமது காட்சியைக் கொடுப்ப தெப்போது? 223

ஐயாறு மாறு மகன்று வெறுவெளியில்
மையிருளில் நின்றமன மாள்வதினி யெக்காலம்?

(பொ - ரை) முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்த சிதாகாயத்தில் (கலந்து) ஆணவமலத்தில் கட்டுண்டிருந்த மன மொடுங்குவ தெப்போது? 224

காட்டு மருண்ஞானக் கடலிலன்பு கப்பல்விட்டு
மூட்டுங் கருணைக்கடலின் மூழ்குவது மெக்காலம்?

(பொ - ரை) ஆசாரியரால் காட்டப்பெற்ற திருவருளாகிய ஞானசமுத்திரத்தில் அன்பான கப்பலை நடத்திக், கருணைசமுத்திரத்தில் மூழ்குவ தெப்போது? 225

நானுமோ நீயாரோ நன்றும் பரமான
தானுமோ வென்றுணர்ந்து தவமுடிப்ப தெக்காலம்?

(பொ - ரை) என்னையும், உன்னையும், இடையிலுள்ள திருவருளையும் தெரிந்து தவத்தினை முடிப்ப தெப்போது? 226

எவரெவர்க ளெப்படிகண் டெந்தப்படி நினைத்தார்
அவரவர்க் கப்படிநின் றுமென்ப தெக்காலம்?

(பொ - ரை) எவரெவர்கள் முதல்வனை எவ்விதம் கருதுவரோ அவ்விதம் அவரவர்கட்கு அனுக்கிரகம் செய்யு முண்மையறிவ தெப்போது? 227

உற்றுற்றுப் பார்க்க வொளிதருமா னந்தமதை
நெற்றிக்கு நேர்கண்டு நிலைப்பதினி யெக்காலம்?

(பொ - ரை) இலக்காக மனதை வைத்து நோக்க அவ்விடத்துத் தோன்றும் அருட்பெருஞ்சோதியைப்புருவமத்தியமாகிய கோதண்ட தானத்தில் நேரே தரிசித்து நிலைத்திடுவ தெப்போது? 228

'விளங்குகின்றதார்கையை வெய்யோன் மறைத்தாற்போல்'
களங்கமற வுன்காட்சி கண்டறிவ தெக்காலம்?

(பொ - ரை) விளங்காநின்ற நட்சத்திரங்களைச் சூரியன் மறைத்தாற்போல, எனது மாயாசம்பந்தமான மலத்தினை ஞானமறைப்ப தெப்போது? 229

என்னையே நானறியே னிந்தவண்ணஞ் சொன்னதெல்லா
முன்னையோர் கைக்கொள்ள வுன்பணிவ தெக்காலம்?

(பொ - ரை) ஆன்மாவி னுண்மையைச் சிவஞானிகள் மூலமாகத் தெரிந்துகொண்டு உன்னைப் பணிவது எப்போது? 230

ஐஞ்சு கரத்தானை யடியிணையைப் போற்றிசெய்து
நெஞ்சிற் பொருந்தி நிலைபெறுவ தெக்காலம்?

(பொ - ரை) ஐந்து திருக்கரங்களோடுங் கூடிய விநாயகமூர்த்தியினுடைய இரண்டு திருவடிகளைத் துதிசெய்து, அவரது திருவுருவத்தை மனத்தில் பதியவைத்துத் திருவருளை யடைவது எப்போது?

பத்திரகிரியார் மெய்ஞ்ஞானப்புலம்பல்
முற்றுப்பெற்றன.

கவனிப்பு:—இந்நூலில், 74-76-பக்கங்களில் கோயிற் றிருவகவல் என்றிருப்பதை நான்காவது கச்சித்திருவக லென்று, திருத்தி வாசித்துக்கொள்ளவும்.

உ

திருச்சிற்றம்பலம்.

## பட்டினத்துப்பிள்ளையார்

# திருப்பாடலகராதி.

**பட்டினத்துப்பிள்ளையார்**

*திருப்பாடலகராதி*

**முற்றுப்பெற்றன.**

சிவமயம்.

பத்திரகிரியார்

# மெய்ஞ்ஞானப்புலம்ப லகராதி

பத்திரகிரியார்

மெய்ஞ்ஞானப்புலம்ப லகராதி

முற்றுப்பெற்றன.

---

திருமகள்விலாச அச்சியந்திரசாலை, சென்னை—1928.

# ஸ்ரீபகவத் கீதை

## திராவிட மஹா வியாக்கியானம்

[ராயல் **1×8** சைஸ் 650-பக்கங்கள் கொண்டது
படங்களுடன் அழகான காலிகோ பைண்டுசெய்தது:
விலை ரூபா **3-8-0**.]

இந்த பகவத்கீதையின் மகிமையை அன்னிய தேசத்தாரே அறிந்துகொண்டாடும்போது இதை நம்மவர்களுக்கு எடுத்து சொல்ல வேண்டுமா? அருமையான ஞானத்தோடு கூடிய இந்த மனுஷ்ய ஜன்மத்தை அடைந்திருக்கும் நாம் இப்போதேஇதைக்கொண்டு இந்த ஜனனமரணமாகிய ஸம்ஸார ஸமுத்திரத்தில்இருந்து கரையேறும் பொருட்டு மஹாகாருண்ய மூர்த்தியாகிய அந்த பகவான் கிருஷ்ணாவதாரஞ் செய்து ஸகல வேதாந்த சாஸ்திரங்களையும் திரட்டி சுலபமாக முக்தியடைய வழியை இந்த கீதாசாஸ்திரத்தில் உபதேசித்திருக்கிறார்.

ஆனால் இந்த பகவத்கீதையும் அதன் அருமையான பொருளை உணர்த்தும் பாஷ்யங்களும், வியாக்கியானங்களும் தேவபாஷையாகிய ஸம்ஸ்கிருதத்தில் இருப்பதால் அவற்றை எல்லோரும் வாசித்து அறிவது இக்காலத்தில் வெகுஸாத்திய சிரமமாய் இருப்பதை உத்தேசித்து இப் புஸ்தகத்தில் பதம் பதமாய் சுலோகங்களைப் பிரித்து அவைகளுக்குத் தமிழில் அர்த்தமும் அதனடியில்பாஷ்யங்களின் கருத்தை அத்வைதாவதானம் **ஸ்ரீமான் திருவேங்கிட சுவாமிகளால்** தெளிவாயும் எல்லோரும் அறியும்பொருட்டு இனிமையான தமிழில்விரிவாய் எழுதப்பட்டிருக்கிறது.

# பட்டினத்துப் பிள்ளையார்

திருவாய்மலர்ந்தருளிய

# பிரபந்தத்திரட்டின் விருத்தியுரை

[பட்டினத்தடிகள் திருவுருவப்படத்துடன்

உயர்ந்த காலிகோ பைண்டு செய்தது:

விலை ரூபா **3-8-0.**]

பட்டினத்தடிகளால் ஆங்காங்கு எம்மனோரை யுய்விக்குமாத்திரையானே திருவாய் மலர்ந்தருளப்பெற்று நம்பியாண்டார் நம்பிகளால் பதினொருந் திருமுறையிற் சேர்க்கப்பட்டுள்ள பிரபந்தங்களாகிய **கோயினான்மணிமாலை, திருக்கழுமல மும்மணிக்கோவை, திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, திருவேகம்பமுடையார் திருவந்தாதி, திருவொற்றியூ ரொருபாவொருபஃது** என்பனவற்றிற்கும், கோயிற்றிருவகவல், திருவேகம்பமாலை, திருவிசைப்பா, பொது, முதல்வன் முறையீடு, அருட்புலம்பல், இறந்தகாலத் திரங்கல், நெஞ்சொடு புலம்பல், பூரணமாலை, நெஞ்சொடு மகிழ்தல் என்னு மிவைகளடங்கிய **திருப்பாடற்றிரட்டு, உடற்கூற்றுவண்ணம்** என்பனவற்றிற்கும் அநேகர் பதவுரையும் பொழிப்புரையும் சிற்சிலவற்றிற்கு எழுதி யிருக்கின்றனர். அவைபோல் அல்லாது சென்னை பச்சையப்பன் கல்விச்சாலைத் தமிழ்ப்பண்டிதர் ம-ா-ா-ஸ்ரீ, **ஆ. சிங்காரவேலு முதலியார்** அவர்களால் பதவுரையும், **விசேடம்**, உதாரணம் இன்னும் இவைகளமைந்த விருத்தியுரையையும் எடுத்துக்காட்டி, பெரியோர்களுடைய ஞானசாத்திரங்களிலிருந்து மேற்கோட்பாக்கள் உதகரிக்கப்பட்டிருக்கின்றன.